# சங்க இலக்கியத்தில்
# புள்ளின விளக்கம்



ஆசிரியர்:

திரு பி எல் சாமி, பி எசி



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1.

1976

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LIMITED.

கிளைகள் :

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சிராப்பள்ளி-2

கழக வெளியீடு : கடுகக

முதற்பதிப்பு : மே 1976



SANGA ILAKKIATTHIL
PULLINA VILAKKAM

அப்பர் அச்சகம், சென்னை-600001. (I/2)

# பதிப்புரை

ஒரு பொருளைப் பற்றிய செய்திகளைப் பிறர்கூறக் கேட்டோ அல்லது கண்ணால் கண்டோ அதன் பருப் பொருளை மட்டில் அறிந்து கொள்ளும் பொதுஅறிவு வேறு; அங்ஙனம் கண்டு, கேட்ட செய்திகளைத் தன் நுண்மாண் நுழைபுலங்கொண்டு அவற்றுள் பொதிந்து கிடக்கும் கருப்பொருளை அறிந்துகொள்ளும் பகுத்தறிவு வேறு. இதைத்தான் "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்பது அறிவு" என்றார் வள்ளுவர்.

இதனையே உற்று நோக்கி ஆராய்தல் (observation) என்பர் அறிவியலார். இங்ஙனம் உற்றுநோக்கி ஆராய வேண்டிய அறிவியல் (Science) உண்மைகள் பல நம் தமிழ்ச் சங்க இலக்கியங்களுள் பொதிந்து கிடக்கின்றன. ஆனால், சங்க இலக்கியங்களைப் பயில்வோர் அத்துணைப் பேரும் அவற்றை அறிவியற்கண் கொண்டு பார்க் கின்றனரா எனில், பெரும்பாலோர் அகம்-புறம்-இலக்கிய நயம் என்ற அளவிலே நின்று விடுகின்றனரே யன்றி, அறிவியல் உண்மைகளை அகழ்ந்தெடுப்போர் மிகச் சில ராகவே இருக்கக் காண்கின்றோம். அவர்களுள் அறிஞர் பி. எல். சாமி அவர்கள் தனிச்சிறப்புடையவராவர்.

ஆசிரியர் திரு. சாமி அவர்கள் அறிவியலில் உயிர் நூற்புலமை பெற்றவர். அத்துடன் அருந்தமிழும் ஆசறக் கற்றவர். ஆகவே அவ்விரண்டின் துணை கொண்டு, சங்க இலக்கியம் என்னும் ஆழ்கடலுள் மூழ்கிச் "சங்க இலக் கியத்தில் செடி கொடி விளக்கம்", "சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்" என்னும் அரிய முத்தனைய நூல்களை உருவாக்கித் தந்துள்ளமை தமிழகம் நன்கு அறிந்ததே. அவரே ஈண்டுச் "சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்" என்னும் இந் நூலினை இயற்றித் தந்துள்ளார்.

அடுத்துச், 'சங்க இலக்கியத்தில் நீரின விளக்கம்' என்னும் நூல் உருவாகி வருகின்றது.

பற்றி நன்கு தெரிந்துகொண்டுள்ளனர். படித்தவர்களுக்குப் பல பறவைகளின் பெயர்களும் தெரியாது. பறவைகளைப் பிரித்து இனங் காணும் சக்தி நகர்ப்புறமக்களுக்கு இல்லை. சங்க நூல்களில் கூறப்பட்டுள்ள பறவைகளைப் பற்றிப் புரிந்து கொள்ள எனக்கு நாட்டு மக்களிடம் பழகித் தெரிந்த செய்திகள் மிகவும் துணை புரிந்தன.

இந்த நூலை எழுத எல்லா வகையிலும் ஊக்குவித்து உதவிய கழக ஆட்சியாளர்க்கு எனது நன்றி உரித்தாகுக. இந்த நூலையும் அறிவுசான்ற தமிழுலகம் வரவேற்கு மென்று நம்புகிறேன்.

பி. எல். சாமி

# உள்ளுறை

# சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்

## க. சங்க நூல்களில் பறவைகள்

சங்க நூல்களில் பறவை யென்ற பெயர் பறக்கும் உயிர்கள் எல்லாவற்றிற்கும் வழங்கியிருப்பினும் பெரும் பாலும் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் புள்ளினத்திற்கே வழங்கியுள்ளது. தும்பி, வண்டு முதலியவற்றுக்கும் பறவை என்ற பெயர் வழங்கினும் அது சிறுபான்மை வழக்கேயாகும். புள் என்ற பெயரும் பெரும்பாலும் தற்காலம் பறவைகளெனக் கருதப்படுபவைக்கே சங்க நூல்களிலும் வழங்கியுள்ளது. பறப்பனவற்றில் முட்டை யிட்டுக் குஞ்சு பொரிக்காது குட்டிபோட்டுப் பால் கொடுக்கும் வௌவாலினம் விலங்கினமாகக் கொள்ளப் பட்டது. பலகோடி ஆண்டுகளுக்குமுன் ஊர்வனவாக இருந்த உயிரினங்களில் சில பறக்க முயன்று பறந்தன. இப்படிப் பறந்தவை பறவைகளாக மாறின என்று அறிவியலார் கூறுவர். ஆகவே பறவைகளானவை பறக்கும் சிறப்புத்தன்மை பெற்ற ஊர்வன என்று கூறுவர். விலங்கினத்திற்கும் பறவையினத்திற்குமுள்ள முக்கிய வேற்றுமை அவற்றின் இனப்பெருக்க முறையில் காணப் படுகின்றது. விலங்குகள் குட்டிபோட்டுப் பால் கொடுக்கும். பறவைகள் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும்.

பறவைகளைப் பற்றிப் பழங்காலத்து மனிதன் எப்படித் தெரிந்து கொண்டான் என்பதை ஆராய்ந்துள்ளனர்.

மிகப் பழங்காலத்து மனிதன் பறவைகளைப் பார்த்து நிமித்தம் கண்டான் என்று மன்பதை ஆராய்ச்சியாளர் கூறுவர். இலத்தீன் மொழியில் நல்ல நிமித்தத்தைக் குறிக்கும் சொல் (Auspicious) பறவைகளைக் காணல் என்ற பொருளில் வந்திருப்பதைக் கவனிக்க வேண்டும். பறவைகள் பறக்கும் திசையைக் கண்டும், வெளியிடும் குரலைக் கேட்டும், பறவைகளின் குடல் முதலிய உள்ளுறுப்பு களை ஆராய்ந்தும் பழங்கால மனிதன் பின்னால் நிகழப் போவதை முன்னால் கூறினான். சங்க காலத்திலும் பறவை களின் குரலைக் கேட்டு நன்னிமித்தம் காணும் வழக்கம் இருந்ததென்பது தெரிகின்றது. இதன் காரணமாகப் புள் என்ற சொல்லிற்கு நன்னிமித்தம் என்ற பொருளும் சங்க காலத்திலேயே தோன்றியது.

> "புலரி விடியற் புள்ளோர்த்துக் கழிமின்"
>
> —மலைபடுகடாம் 448

> "புள்ளும் ஓராம் விரிச்சியு நில்லாம்"
>
> —குறுந்தொகை 218

> "வேதின வெரிநி னோதி முதுபோத்து
> ஆறுசென் மாக்கள் புட்கொளப் பொருந்தும்"
>
> —குறுந்தொகை 140

> "புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை
> உள்ளிச் சென்றோர்ப் பழியல ரதனாற்" —புறம் 204

சங்கப் பாடல்களில் சொல்லப்பட்ட 'புள் ஓர்த்து' செல்லுதல் என்பது பறவைகளின் குரலைக் கேட்டு நிமித்தம் கண்டு செல்வதாகும். வழிப்போக்கர் 'புட்கொளப்' பொருத்தம் பார்த்ததைக் குறுந்தொகை கூறியுள்ளது. பழங்குடிமக்களில் புள்ளின் குரலைக்கேட்டு ஆராய்ந்து நிமித்தம் கூறும் பூசாரிகள் உண்டு. கொண்டைக்கரிச்சான் என்று வழங்கும் ஒருவகைக் கரிக்குருவியின் குரலைக்கேட்டுப் புள் பொருத்தம் பார்த்துச் சொன்ன 'புட்குரல் ஆண்டகை' யைப்பற்றிப் பெருங்கதை கூறியுள்ளதைக் கவனிக்க

வேண்டும். பிற்கால நூல்களில் காணப்படும் பறவைகளைப் பற்றிய சகுனம் பார்க்கும் செய்திகள் சங்க நூல்களில் காணப்படவில்லை. சங்க நூல்களில் பறவைகளைப் பற்றி வரும் இயற்கைச் செய்திகளே மிகுதி.

சங்க நூல்களில் விலங்குகளைவிடப் பறவைகள் மிகுதியாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. சங்க நூல்களில் முப்பத்தைந்து விலங்குகள் சொல்லப்பட்டுள்ளன. ஆனால், ஏறக்குறைய ஐம்பத்தெட்டுப் பறவைகளின் பெயர்கள் சங்க நூல்களில் காணப்படுகின்றன. சங்க மருவிய நூல்களையும் சேர்த்துக் கணக்கிட்டால் அறுபத்தினாலு பறவைகளுக்கும் மேற்பட்ட பெயர்கள் காணப்படுகின்றன. பறவைகளைப் பற்றிச் சங்க நூல்களில் பல இயற்கைச் செய்திகள் கூறப்பட்டுள்ளன. இச் செய்திகள் அறிவியற் செய்திகளோடு ஒத்துக் காணப்படுகின்றன. பறவை நூலறிவோடு சங்க நூல்களில் கூறப்பட்ட பறவைச் செய்திகளை ஆராய்ந்தால் அவை உண்மைச் செய்திகளாகவும் இயற்கைச் செய்திகளாகவும் காணப்படுகின்றன. கற்பனைச் செய்திகள் மிகவும் குறைவு. நுண்ணிய, அரிய செய்திகளும் கூறப்பட்டுள்ளன. ஐந்திணைப் பாகுபாட்டில் கூறப்பட்டுள்ள பறவைகள் இயற்கையில் காணப்படும் நிலப்பாகுபாடு, சூழ்நிலை, சுற்றுச் சார்பு ஆகியவற்றை ஒத்தே சொல்லப்பட்டுள்ளன. நெய்தலில் மட்டும் காணக்கூடிய கடற்காக்கையை மருதத்திலோ, குறிஞ்சியிலோ, பாலையிலோ கூறவில்லை. நீர்ப்பறவைகள் மருதத்திணையிலோ அல்லது நெய்தற்றிணையிலோ கூறப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. மருத நிலத்திலும் நெய்தல் நிலத்திலும் காணக்கூடிய சில நீர்ப் பறவைகள் இருதிணையிலும் கூறப்பட்டிருப்பது இயற்கையோடொத்துக் காணப்படுகின்றது. குறிஞ்சி நிலத்தில் காணப்படும் பறவைகள் வேறு நிலத்தில் கூறப்படவில்லை. பறவைகள் வாழும் சூழ்நிலையையும் இருப்பிடங்களையும் நன்கு கண்டுணர்ந்தே சங்கப் புலவர்கள் இச் செய்திகளைக் கூறியுள்ளனர். கவிச்சுவை நிறைந்த பாக்களைப் பாடிய சங்கப் புலவர்கள்

உயிரினங்களில் அழகியதான பறவையினத்தைக் கூர்ந்து கவனித்துப் பாடினதில் வியப்பிற்கிடமில்லை. பறவைகளைப் பற்றிக் கூறிய செய்திகள் சங்கப்புலவர்கள் கூர்ந்து கவனித்துக் கண்டுபிடித்த செய்திகளாக உள்ளன.

ஆள் உயரமிருக்கும் நீர்ப்பறவையிலிருந்து உள்ளான் போன்ற சிறிய பறவை வரை ஏறக்குறைய இருபத்திரண்டு நீர்ப்பறவைகளைப் பற்றிச் சங்க நூல்களில் கூறியுள்ளனர். புருவினத்தில் ஐந்து வகைப் புருக்களைப் பற்றிச் சொல்லி யுள்ளனர். வல்லூறு இனத்தில் மூன்று வகைகளும் காக்கையினத்தில் இருவகைகளும் கூறப்பட்டுள்ளன. ஆந்தையினத்தில் ஆறு வகைகள் நுட்பமாகப்பிரித்துணரப் பட்டுள்ளன. கழுகினத்தில் இருவகைகளும், பிணந் தின்னிக் கழுகினத்தில் மூன்று வகைகளும் சொல்லப் பட்டுள்ளன. அரிய பறவைகளான பூநாரை, போகில், நீலக்கோழி, தாமரைக் கோழி முதலியவை பற்றியும் சங்க நூல்களில் செய்திகள் வருவது குறிப்பிடத்தக்க தாகும். கருப்பொருள் விளக்கமாகவும் உள்ளுறை விளக்க மாகவும் வரும் பறவைகள் பற்றிய செய்திகள் புள்ளினங்கள் பற்றிய அறிவியல் விளக்கமாகவும் அமைவதைக் காண லாம். பின்வரும் கட்டுரைகளில் சங்க நூல்களில் கூறப் படும் பறவைகள் பற்றிய செய்திகள் அறிவியல் அடிப் படையில் விளக்கப்படும்.

## உ. நாரையும் கொக்கும்

## (Grey Heron and Pond Heron)

தற்காலம் பெரும்பாலும் யாவருக்கும் தெரிந்த நீர்ப் பறவைகளான நாரையும், கொக்கும் சங்க நூல்களில் பல பாடல்களில் கூறப்படுகின்றன. பறவை நூற்படி நாரையும் கொக்கும் எவை என்று அறியவேண்டும். பிற்காலத்தில் உரையாசிரியர்கள் நாரையும் கொக்கும் ஒரே வகைப் பறவையைக் குறிப்பதுபோல் மயங்கி உரையெழுதியுள்ளனர். பறவை நூற்படி நாரையும் கொக்கும் ஒரே இனப் பறவைகளாயினும் (Herons) வெவ்வேறு பறவைகளாகும். நாரை என்ற பெயர் சங்க நூல்களில் தனியாக ஒரு வகைப் பறவையைக் குறித்துவழங்கிற்று. ஆனால், அதே பெயர் செவ்வரி



நாரை

நாரை, பெருநாரை, செங்கால் நாரை என்ற பெயர்களில் பொதுப் பெயராகவும், இனப்பெயராகவும் வழங்கினதையும் காண்கிறோம். நாட்டு மக்களிடையே நாரை என்ற பெயர் இன்றும் வழங்குவதால் இந்தப் பறவை எதுவென்று எளிதில் கண்டுகொள்ள முடியும். சாம்பல் நாரையென்று பல இடங்களில் இந்த நாரையை அழைப்பர். இந்த நாரையைக் கண்டுகொள்ளச் சாம்பல் நிற உடல்தான் முக்கிய அடையாளம். அதனால் இப்

பறவையை ஆங்கிலத்திலும் (Grey Heron) என்று சாம்பல் நிறப்பெயரை அடைகொடுத்து வழங்குகின்றனர். இதை நரையான், நாராயன் என்றும் சில இடங்களில் அழைப்பர். வேடந்தாங்கலில், நாராயணப் பட்சி யென்றும் அழைக்கின்றனர். தெலுங்கிலும் இப்பெயர் காணப்படுகின்றது. நாரையென்ற பெயரே நாராயன் என்று மாறியுள்ளது. மடையான் என்று ஒரு பறவைப் பெயர் வழங்குவதுபோல் இப்பெயர் தோன்றியிருக்கலாம். இந்தப் பெயர் நாட்டு மக்கள் வாயில் நாராயணப்பட்சி யாக மாற்றுருவம் எய்திற்று. நாராயணனுக்கும் நாரைக்கும் எந்தவகைத் தொடர்பும் இல்லை. நாரை யென்ற பெயரே ''நரை'' என்ற சொல்லிலிருந்து தோன்றியிருக்கலாம். நரை என்ற சொல் சாம்பல் கலந்த வெள்ளை நிறத்தைக் குறித்துச் சங்ககாலத்தில் வழங்கிற்று. நரைமயிர் என்ற வழக்கைக் காண்க. நரை நிறமுடைய (Grey) பறவையை நரையான், நாரை என்றழைத்தனர் என்று கருத வேண்டும். நரையான் என்ற பெயர் நரை நிறமுடைய மாட்டைக் குறிப்பிடுவதுபோல் நாரை என்ற பெயரும் வழங்கிற்று. நாரையெருது என்றும் கருநரை யென்றும் இந்த மாட்டை நூல்கள் குறிப்பிடும்.

நாரையை நீர் நிலைகளில்—முக்கியமாக—கடற்கரைக் கழிகளில் எளிதில் பார்க்கலாம். நெட்டையான சாம்பல் நிறமான பறவையாகும். தலையும் கழுத்தும் வெண்மையாகக் காணப்படும். உடல் சாம்பல் நிறமாகத் தெரியும். பெரும்பாலும் தனியாக நிற்கும். சிறு கூட்டமாகவும் நீர் நிலைகளில் காண்பதுண்டு. நீண்ட கால்களும் நீண்ட கழுத்தும் இந்தப் பறவையை நெட்டையாகக் காட்டுகின்றது.

"அடும்பவி முணிமலர் சிதைஇமீ னருந்தும்
தடந்தா ணாரை யிருக்கு மெக்கர்த்
தண்ணந் துறைவற் றொடுத்து நங்நலம்"

—குறுந்தொகை 349.

"கடல்சேர் கானற் குடபுல முன்னிக்
கூவற் றுழந்த தடந்தா ணாரை
குவியிணர் ஞாழன் மாச்சினைச் சேக்கும்"
—பதிற். 51 : 3-5.

"முடந்தை நெல்லின் விளைவயற் பரந்த
தடந்தா ணாரை யிரிய வயிரைக்
கொழுமீ னார்கைய மரந்தொறுங் குழாஅலின்"
—பதிற். 29 : 3-5.

"தடந்தா ணாரை படிந்திரை கவரும்
முடந்தை நெல்லின் கழையமல் கழனிப்"
—பதிற். 32 : 12-13.

தடந்தாள் நாரையென்று இந்த நாரை அழைக்கப்படுவதைக் காணலாம். வளைந்த காலையுடைய நாரை என்று உரை கூறியுள்ளனர். ஆனால், தட என்ற சொல் பெருமைப் பொருளுமுடையதால் பெரிய நீண்ட காலையுடைய நாரை என்று பொருள் கொள்வதே பொருத்தமானது.

"இருங்கழி துழைஇய ஈர்ம்புற நாரை
இறகெறி திவலையிற் பனிக்கும் பாக்கத்து"
—நற்றிணை. 127.

"பழனப் பாகல் முயிறுமூசு குடம்பை
கழனி நாரை உரைத்தலிற் செந்நெல்"
—நற்றிணை. 180.

"..................................இரைவேட்டுக்
கடுஞ்சூல் வயவொடு கானலெய் தாது
கழனி ஒழிந்த கொடுவாய்ப் பேடைக்கு
முடமுதிர் நாரை கடல்மீன் ஒய்யும்" —நற்றிணை. 263.

"பழனப் பன்மீ னருந்த நாரை" —ஐங்குறுநூறு. 70.

"ஆர லருந்த வயிற்ற
நாரை மிதிக்கு மென்மக ளுதலே"
—குறுந்தொகை. 114.

"குணகடற் றிரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் றொண்டி முன்றுறை
அயிரை யாரிரைக் கணவந் தாங்குச்"
—குறுந்தொகை. 128.

"தண்கடற் படுதிரை பெயர்த்தலின் வெண்பறை
நாரை நிரைபெயர்ந் தயிரை யாரும்
ஊரோ நன்றுமன் மரந்தை" —குறுந்தொகை. 166.

"பொய்கை நாரை போர்விற் சேக்கும்
நெய்தலங் கழனி நெல்லரி தொழுவர்" —புறம். 209.

"வயலமர் கழனி வாயிற் பொய்கைக்
கயலார் நாரை யுகைத்த வாளை" —புறம். 354.

நாரைகளைக் கடற்கரைக் கழிகளிலும் பொய்கைகளிலும், மருத நிலத்துக் கழனிகளிலும், பழனங்களிலும் கண்டு பாடியுள்ளனர். கழனி நாரை, பழன நாரை என்றும் அழைக்கின்றனர். நாரைகள் அயிரை, கயல், வாளை, இரு முதலிய பல மீன்களையும் உண்பதாகச் சொல்லியிருக்கின்றனர். நற்றிணை 91 ஆம் பாடலில் நாரை சிறிய கண்ணையுடைய சிவந்த வால் பாகத்தையுடைய சிறு மீனைத் தின்றதாகக் கூறியுள்ளதைக் காணலாம். நாரை எந்த மீனைத் தின்கின்றது என்பதைக்கூட நுண்ணிதாகக் கண்டு கூறியுள்ளனர் என்பது தெரிகின்றது. நாரைகள் கூடுகட்டி வாழ்வதும் குஞ்சுகளுக்கு இரை தேடித் தருவதும் சங்க நூல்களில் கூறப்பட்டுள்ளன.

"செவ்வீ ஞாழல் கருங்கோட் டிருஞ்சினைத்
தனிப்பார்ப்பு உள்ளிய தண்பறை நாரை
மணிப்பூ நெய்தல் மாக்கழி நிவப்ப" —அகம். 240.

"இனமீன் அருந்தும் நாரையொடு பனைமிசை
அன்றில் சேக்கும் முன்றிற் பொன்னென"
—அகம். 360.

"பாடுநர்த் தொடுத்த கைவண் கோமான்
பரியுடை நற்றேர்ப் பெரியன் விரியிணர்ப்

புன்னையங் கானற் புறந்தை முன்றுறை
வம்ப நாரை யினமொலித் தன்ன'' —அகம். 100.

"பொதும்பில் புன்னைச் சினைசேர்பு இருந்த
வம்ப நாரை இரிய ஒருநாள்'' —அகம். 190.

"வாடை தூக்க வணங்கிய தாழை
யாடுகோட் டிருந்த வசைநடை நாரை'' —கலித். 128.

நாரை புன்னைமரத்திலும், பனைமரத்திலும், ஞாழல் மரத்திலும், கடற்கரை யோரத்தில் தங்குவதாகக் கூறியுள்ளனர். நாரைகள் மருத நிலத்தில் மருத மரத்திலும் பலா மரத்திலும் கூடுகட்டுவதாகவும் கூறியுள்ளனர்,

"பாடிமிழ் பனிக்கடல் துழைஇப் பெடையோடு
உடங்கிரை தேரும் தடந்தாள் நாரை
ஐய சிறுகண் செங்கடைச் சிறுமீன்
மேக்குயர் சினையின் மீமிசைக் குடம்பைத்
தாய்ப்பயிர் பிள்ளை வாய்ப்படச் சொரியும்
கானலம் படப்பை ஆறு வண்மகிழ்ப்'' —நற்றிணை. 91.

"கழனி யாரல் கவுளகத் தடக்கிப்
பழன மருதிற் பார்ப்புவாய் சொரிந்து
கருங்கா ஞரை நரன்றுவந் திறுப்பத்''
—பெருங். 3-7 : 29-31.

நாரை தன் பெடையோடு இரை தேடுவதையும், மேலேயிருந்த உயர்ந்த கிளைகளில் கட்டிய கூட்டில் இருந்து தாயைக் கூப்பிடும் பிள்ளைகளுக்கு வாயில் இரையைச் சொரிந்ததையும் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். நாரை தன் பெடையோடு கூடு கட்டுவதும் இரை தேடுவதும் இரையைக் குஞ்சுகளுக்கு ஊட்டுவதும் பறவை நூலார் கூறியுள்ளனர். நாரையின் குஞ்சுகள் கத்திக்கொண்டே நாரையின் அலகைக் கவ்வி இரை கேட்குமெனக் கூறுவர். நாரையின் அலகிலிருந்து நேராகவே குஞ்சுகள் தங்கள் வாயில் இரையைப் பெறுவது வழக்கம் என்றும் கூறுவர். நாரை பெரிய

பறவையாயினும் கனமற்றதாகையால் உச்சியில் உள்ள மெல்லிய கிளைகளில் கூட அமர முடியும் என்று பறவை நூலார் கூறுவர். 'கழனி மருதின் சென்னி சேக்கும்' என்று ஐங்குறுநூறு கூறுவதைக் காணலாம்.

நாரை மீனைப் பிடித்து உண்பதைப் பற்றியும் பறவை நூலார் கவனித்து எழுதியுள்ளனர். ஆடாது அசையாது நீர் நிலையருகில் நின்றுகொண்டே யிருக்கும். தன்னுடைய மூக்கினால் குத்திப் பிடிக்கக்கூடிய தூரத்தில் ஏதாவது மீன் வந்தால் உடனே கழுத்தை நீட்டிப் பிடிக்கும். சங்கப் பாடல் ஒன்று நாரை மீன்பிடிக்கும் வழியை அழகாக விளக்கியுள்ளது.

> "நீளிரும் பொய்கை யிரைவேட் டெழுந்த
> வாளை வெண்போத்து உணீஇய நாரைதன்
> அடியறிவு உறுதல் அஞ்சிப் பைப்பயக்
> கடியிலம் புகூஉங் கள்வன் போலச்
> சாஅய் ஒதுங்குந் துறைகேழ் ஊரனொடு"
>
> —அகம். 276.

பொய்கையில் வாளை மீனை உண்ணப்போன நாரை தன் அடிகளின் ஓசையை மீன்கள் உணர்ந்து கொள்ளுமென்று அஞ்சி மெது மெதுவாக அடியெடுத்து வைத்துச் செல்லுமென்று அகநானூறு கூறுவது உண்மை நிகழ்ச்சியை அப்படியே கண்டு படம் பிடித்ததுபோல் உள்ளது. டாக்டர் சலீம்அலி என்ற பறவைநூல் அறிஞர் இதேபோல நாரை வேட்டையாடுவதைப்பற்றிக் கூறியுள்ளதைக் காணலாம். (Sometimes the bird will stalk its prey stealthily or shift to a new vantage point, lifting up and putting down each foot noiselessly and with studied deliberation). சலீம்அலி அவர்கள் நாரை திருட்டுத்தனமாகத் தனது இரையைப் பிடிக்க நடந்து செல்வதை வர்ணித்துள்ளார். ஓசை கேட்காதபடி எப்படிக் கால்களை எடுத்து வைக்குமென்றும் விளக்கியுள்ளார். அகநானூறும் காப்புடைய இல்லத்தில் திருடப்

போகும் கள்வனைப்போல் அடியோசை கேட்பதற்கு அஞ்சி மெல்ல மெல்ல நாரை நடக்கும் என்று கூறியிருப்பதைக் கவனிக்கவேண்டும். பெரிய திருமொழியில் 'கள்ள நாரை' என்று அழைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். நாரையின் பார்வையை 'கூழைப்பார்வை' என்று பெரிய திருமொழியில் கூறப்பட்டுள்ளது. வஞ்சகப் பார்வையையே கூழைப் பார்வை என்று கூறப்பட்டுள்ளது. நாரை 'சாய் ஒதுங்கும்' என்று அகநானூறு கூறுவது ஆராயத்தக்கது. பெருங் கதையிலும் இந்த வழக்கு கையாளப்பட்டுள்ளது.

*"என்ன வாயினு மன்னது விழையா*
*தொடுங்கி யிருந்தே யுன்னியது முடிக்கும்*
*கொடுங்காற் கொக்கின் கோளின மாகிச்*
*சாய்ப்பிட மாகப் போர்ப்படை பரப்பி"*

—பெருங்கதை. 3 : 17 : 60—63.

பெருங்கதையில் வரும் சாய்ப்பிடமாக என்பதற்குப் பின்வாங்கற் குறிப்பாக என்று பொருள் கூறப்பட்டுள்ளது. ஆனால், நாரையும் கொக்கும் பின்வாங்குதல் இல்லை. இரையைப் பார்க்காததுபோல் தலையை ஒருபக்கமாகச் சாய்த்துக் கவனிக்கும் பழக்கத்தை ஆராய்ச்சி செய்து கண்டுள்ளனர். இவ்வாறு நாரையினப் பறவைகளெல்லாம் நீரில் சாய்த்துப் பார்ப்பதாக (Tilt their necks at a sharp angle) கண்டுள்ளனர். இப்படிப் பார்ப்பதால் நீரில் விழும் கதிரவனின் வெளிச்சத்தால் ஏற்படும் கண் மயக்கத்தைத் தடுத்து மீனைச் சடுதியில் பிடிக்க முடிகின்றது என்பதை ('The Hindu', Vol. 97, No. 19) அண்மையில் கண்டுபிடித்துள்ளனர். இப்படித் தலையைச் சாய்த்து ஓசையின்றி மெதுவாகக் காலை எடுத்துவைத்து நடத்தலையே சாய் ஒதுங்கும் என்ற தொடர் குறிப்பிடுகின்றது. ஒதுங்கும் என்ற சொல் மெதுவாக அடியெடுத்து வைத்தல் என்ற பொருளில் வழங்கியுள்ளது.

தடந்தாள் நாரைக்கு மூங்கிலின் உள்ளே காணப்படும் மென்மையான தொலியைப் பிசைந்தாற் போன்ற

பொருள் உள்ள தூவியிருப்பதாக நற்றிணை கூறியுள்ளது அரிய, நுட்பமான செய்தியாகும்.

> "ஆடமை ஆக்கம் ஐதுபிசைந்து அன்ன
> தோடமை தூவித் தடந்தாள் நாரை
> நலனுணப் பட்ட நல்கூர் பேடை
> கழிபெயர் மருங்கின் சிறுமீன் உண்ணாது
> கைதையம் படுசினைப் புலம்பொடு வதியும்"
>
> —நற். 178.

நாரைக்கும் அதன் இனமான பறவைகளுக்கும் (Herons) மார்புப் பக்கத்திலும், பின் பக்கத்திலும் இறகுகளில் மிகச் சிறிய நுண்ணிய தூவிகள் உள்ளன. இவற்றிலிருந்து மென்மையான பொடி அல்லது தூள் வெளியாகின்றது. இந்தத் துய்ப்பொடிகளைத் (Powder-down) தெளித்து நாரை தனது கலைந்த நனைந்த இறகுகளைக் கோதி உலர்த்திக்கொள்ளும் என்று பறவை நூலார் கூறுவர். (On the sides of the breast and rump of the herons and egrets the birds of the family have concealed under the feathers, patches of peculiar, specialised feathers known as 'Powder-down' which give off a powdery substance used in preening their feathers). சேவலின் சேர்க்கையால் நலனுணப்பட்ட பெண் நாரை கலைந்த தனது தோடமை தூவியை மூங்கிலின் தொலி ஐது பிசைந்தது போன்ற பொடியால் உலர்த்திக் கொண்டதாக நற்றிணைப் பாடல் கூறியுள்ளது. நாரையின் குரலைக் 'கனைகுரல்' என்றும், பிளிறும் குரல் என்றும் கூறியுள்ளனர்.

> "தண்ணுமை வெரீஇய தடந்தாள் நாரை
> செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண்ணை
> அகமடற் சேக்குந் துறைவன்" —அகம். 40.

> "கதிர்த்ததண் பூணி கம்புடாழ் பீலிக்
> கனைகுர லுரைவண் டானம்"
>
> —சீவகசிந்தாமணி. 2108.

சிறு சின்னம் போலும் செறிந்த குரலையுடைய நாரை யென்று சீவகசிந்தாமணி கூறுகின்றது. இது போன்றதொரு குரலை யுடையதென்றே (Resonant quaarnk) பறவை நூலாரும் எழுதியுள்ளனர். நாரைகள் நரலும் (croak) என்றும் கூறியுள்ளனர்.

சாம்பல் நாரையைப் போலவே செந்நாரை யென்னும் ஒரு பறவை தமிழ்நாட்டில் காணப்படுகின்றது. இதையும் சங்க நூல்களில் சில பாடல்கள் குறிப்பிடுகின்றன என்று கருத இடமுண்டு. தடந்தாள் நாரை கடறகரையிலே காணப்படுவதாகக் கூறப்பட்டுள்ளதால் இது (Purple heron) என்ற நாரையாக இருக்கலாம்.

"காணிய சென்ற மடநடை நாரை
பதைப்ப வொழிந்த செம்மறுத் தூவி"

—ஐங்குறுநூறு. 156.

"சிறுமீன் கவுட்கொண்ட செந்தூவி நாராய்
இறுமென் குரலவின் பிள்ளைகட்கே யாகி"

—ஐங். எழுபது. 66.

செம்மறுவுடைய தூவியுடைய நாரை, செந்தூவியுடைய நாரை யென்று கூறுவதால் உடலில் பெருபளவு சாம்பல் நிறமாகவும் சிறிதளவு செம்மை நிறமாகவும் மார்பில் காணப்படும் செந்நாரை என்று கொள்ளவேண்டும். மறுப்போலச் சிறிது சிவந்த நிற முடைய தூவிகளை யுடையது இந்தச் செந்நாரையேயாகும். உருவிலும் பழக்க வழக்கத்திலும் சாம்பல் நாரையைப்போலவே செந்நாரை இருக்கும். சாம்பல் நாரையை Eastern grey heron என்று ஆங்கிலத்தில் அழைப்பர். இதன் அறிவியற் பெயர் Ardea Cinerea rectirostris என்பதாகும். செந்நாரையை ஆங்கிலத்தில் (Eastern purple Heron) என்றழைப்பர். மலையாளத்தில் நாரையைச் 'சாரமுண்டி' என்றழைப்பர். சார நிறம் சாம்பல் நிறத்தைக் குறிக்கும். செந்நாரையைத் தெலுங்கில் 'எர்ர நாராயண பக்சி'

என்றழைப்பர். மலையாளத்தில் நாரைக்கும் இதன் இனமான பறவைகளுக்கும் வழங்கும் 'மூண்டி' என்ற சொல் தமிழிலோ பிற திராவிட மொழிகளிலோ காணப் படவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. பிற மொழி களிலும் இப் பெயர் இல்லை. 'எழில் நரையான்' வலத்தே கண்டால் நாடுவது கைகூடும் என்று மதுரகவிராயர் என்ற பிற்காலப் புலவர் கூறியுள்ளார்.

**கொக்கு:**

கொக்கு என்ற பறவையை நாட்டு மக்கள் நன்கு அறிவர். இதைக் குளக்கொக்கு என்றும், நுள்ளைமடை யான் என்றும், குருட்டுக்கொக்கு என்றும் அழைப்பர். கொக்குப் போல வெள்ளை என்று ஒப்பிடுவதுண்டு ஆனல், கொக்கு முற்றிலும் வெள்ளை நிற முடையதன்று. வெள்ளைக் கொக்கு என்றழைக்கப்படும் வெண்குருகுகள் உடல்



கொக்கு

முழுவதும் தூய வெள்ளையாகக் காணப்படும். ஆனல், கொக்கிற்கு அடிப்பாகந்தான் தூய வெள்ளையாகக் காணப் படும். எனினும் கொக்கு பறக்குங்கால் வெண்மையாகக் காணப்படுவதால் கொக்கை வெள்ளை நிறமுடையதென்று கருதுகின்றனர். சங்க நூல்களில் கொக்கின் நிறத்தை வெள்ளை நிறமென்று கூறவில்லை. கொக்கு அமர்ந்

திருக்கும்போது மண்ணின் நிறமாகக் காணப்படும். பழுப்பு நிறம் மிகுந்து காணப்படும். வாலும் முன் கழுத்தும் முன் சிறகும் வெண்மையாகக் காணப்படும்.

> "மாரிச் சுதையின் ஈர்ம்புறத் தன்ன
> கூரற் கொக்கின் குறும்பறைச் சேவல்" —அகம். 346.

> "மாரி யாம்பல் அன்ன கொக்கின்
> பார்வ லஞ்சிய பருவரல் ஈர்ஞெண்டு" —குறுந். 117

> "மீன்உண் கொக்கின் தூவி அன்ன
> வானரைக் கூந்தன் முதியோள் சிறுவன்" —புறம். 277

மாரிக்காலத்தில் சுண்ணும்பு பூசிய ஈரமான சுவர் பழுப்பு நிறமாகிக் காணப்படுவதுபோல் கொக்கின் நிறம் இருந்த தாக அகநானூறு கூறுகின்றது. மழைக்காலத்தில் மழையின் ஈரம் பட்டுச் சுண்ணும்புச்சுவர் நிறம் மாறுவது இயற்கையே. அப்படி நிறம் மாறின சுண்ணும்புச்சுவர் போலக் குளக்கொக்கின் உடல் நிறம் இருந்ததாகக் கூறியது அழகிய உவமையாகும். மாரிக் காலத்து ஆம்பற் பூவின் இதழ்கள் வெண்மை நிறத்தை இழந்து பழுப்பாக மழுங்கித தோன்றும். அது போன்றே கொக்கின் உடலின் நிறம் இருந்ததாகக் கூறியதைக் கவனிக்க வேண்டும். புறநானூற்றில் முதியவளின் நரைத்த கூந்தலைப் போலக் கொக்கு இருந்ததாகக் கூறியிருப்பதைக் காணலாம். இப் பாடல்களில் கொக்கு வெண்மையானது என்று வர்ணிக் காமையைக் கவனிக்க வேண்டும். கொக்கின் நிறத்தை நன்கு கண்டுணர்ந்தே பாடியுள்ளனர்.

> "கொக்கினுக்கு ஒழிந்த தீப்பழங் கொக்கின்
> கூம்புநிலை அன்ன முகைய ஆம்பல்" —நற்றிணை. 280

> "பைங்காற் கொக்கின் புன்புறத் தன்ன
> குண்டுநீ ராம்பலுங் கூம்பின வினியே" —குறுந். 122

> "..............................வள்ளுகிர்
> மாரிக் கொக்கின் கூரலகு அன்ன
> குண்டுநீ ராம்பல் தண்துறை யூரன்" —நற்றிணை. 100

ஆம்பல் குவிந்திருந்தபோது தோன்றும்நிலை கொக்கின் கூம்புநிலைபோல இருந்ததாகச் சங்கப் புலவர்கள் உவமித்துள்ளனர். கொக்கின் கூம்பு நிலையென்றது இந்தக் கொக்கு தன் கழுத்தைச் சுருக்கிக் குனிந்து குறுகி உட்கார்ந்திருப்பதால் என்றுணர வேண்டும். கூரல் கொக்கு என்று இந்த நிலையை அகநானூறு கூறும். கொக்கின் இந்தக் கூம்பு நிலையை, கூரல் நிலையை (Standing hunched up and motionless) பறவை நூலார் குறிப்பிட்டுள்ளனர். இந்த நிலையில் இதன் உடல் நிறத்தில் வெண்மையே தெரியாது. சாம்பல் சலந்த பழுப்பு நிறந்தான் தெரியும். இதனால் ஆம்பலின் முகைக்கு ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது. கொக்கின் உடலில் காணப்படும் மேல் நிறத்தைப் 'புன்புறம்' என்று குறுந்தொகை கூறுகின்றது. கொக்கின் கூரலகும் ஆம்பல் முகைபோல இருந்ததாகவும் கூறப்பட்டுள்ளது. இனஞ்சேருங் காலத்தில் குடுமி போன்ற மூன்று அல்லது நான்கு தூவிகள் கொக்கின் தலையில் தோன்றுகின்றன.

"குடுமிக் கொக்கின் பைங்கால் பேடை" —அகம். 290

இதையே 'குடுமிக்கொக்கு' என்று அகநானூறு கூறுகின்றது. (A nuchal crest of three or four long narrow white feathers develops) கொக்கின் கால்விரல் நகங்கள் நெல்லின் சோறுபோல் இருந்ததாக உவமித்துள்ளனர்.

"பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த
கொக்குகிர் நிமிரல் மாந்தி எற்பட" —நற்றிணை. 258

"கொக்குகிர் நிமிர லொக்க லார" —புறம். 398

"பெருஞ்செய் நெல்லின் கொக்குகிர் நிமிரல்"
—புறம். 395

கொக்கின் விரல் நகங்களைக்கூடச் சங்கப்புலவர்கள் உற்று நோக்கி உவமை தேடிக்கூறியுள்ளனர். கொக்கின் நகங்கள் நீண்டு, மெல்லியதாய், (long and thin claws) காணப்படு மென்பார் கால்களின் நிறத்தைக்கூடக் குறிப்பிட்டுள்ளனர்.

"பைங்காற் கொக்கின் மென்பறைத் தொழுதி
யிருங்களி பரந்த வீர வெண்மணல்"
—நெடுநல். 15-16.

"பைங்காற் கொக்கின நிரைபறை யுகப்ப" —அகம். 120

"குடுமிக் கொக்கின் பைங்கால் பேடை" —அகம். 290.

இதன் கால்கள் பச்சை நிறமாக இருக்குமென்று (legs and feet dull green) அறிஞர் கூறுவர். கொக்கு இரை தேடு வதைக் குறித்துச் சில புலவர்கள் பாடியுள்ளனர்.

"மாரிச் சுதையின் ஈர்ம்புறத் தன்ன
கூரற் கொக்கின் குறும்பறைச் சேவல்
வெள்ளி வெண்டோ டன்ன கயல்குறித்து
.......................................
வருத்திக் கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை
மீதழி கடுநீர் நோக்கிப் பைப்பயப்
பார்வல் இருக்கும் பயங்கேழ் ஊர" —அகம். 346.

"நீரறன் மருங்கு வழிப்படாப் பாகுடிப்
பார்வற் கொக்கின் பரிவேட் பஞ்சாச்
சீருடைத் தேஎத்த முனைகெட விலங்கிய
நேருயர் நெடுவரை யயிரைப் பொருந"
—பதிற். 21 : 26-29.

"கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து" —திருக்குறள். 490.

உழவர்கள் நெல் வயல்களுக்குத் தண்ணீர் பாய்ச்சச் செய்த அணையின் மேலே தேங்கி வழியும் கடிய நீரினைப் பார்த்து மெல்ல மெல்லச் சென்று நோக்கியிருக்கும் கொக்கு என்று அகநானூறு கூறுகின்றது. நெல் வயல் களில் நீர்மடைகளில் கண்டதையே சங்கப் புலவர் பாடி யுள்ளார். இவ்வாறு நீர்மடைகளில் இந்தக் கொக்கு காணப்படுவதால் இதை 'மடையான்' என்றழைக் கின்றனர். பொறுமையாக நெடுநேரம் மீனிற்காக நீரைப்

பார்த்துக்கொண்டிருக்கும் கொக்கையே "பார்வல் கொக்கு" என்று பதிற்றுப்பத்து கூறுகின்றது. பாகுடி என்ற சொல் கூர்மையான பார்வையைக் குறிக்கின்றது. பரிவேட்பு என்பது கொக்கு நின்ற நிலையில் வேட்டையாடுவதைக் குறிக்கின்றது. கொக்கு வேட்டையாடும் முறையைக் குறள் பாட்டு மிகத் தெளிவாக, அழகாகக் கூறுகின்றது. அதற்குப் பரிமேலழகர் கூறிய உரை மிகவும் சிறந்து உள்ளது. "மீன் கோடற் கிருக்கும் வழி அது வந்தெய்தும் துணையும் முன்னறிந்து தப்பாமற் பொருட்டு உயிரில்லது போன்றிருக்கு மாகலானும் எய்தியவழிப் பின்றப்புவதற்கு முன்பே விரைந்து குத்துமாகலானும் இருப்பிற்கும் செய லிற்குங் கொக்கு உவமையாயிற்று" என்று பரிமேலழகர் விளக்கங் கூறியுள்ளார். உயிரில்லது போன்றிருக்கு மென்று கூறியதைக் கவனிக்க வேண்டும். பறவை நூலாரும் இப் பறவை ஆடாது அசையாது நின்று கொண்டு வேட்டையாடும் என்பர். (It spends most of its time standing in shallow water, or by its edge, its body nearly horizontal and neck retracted, intently watching for the approach of any unwary fish. While thus engaged it is very inconspicuous, its drab mantle concealing the white wings which flash out with startling effect when the bird flies.) சங்க நூல்களிலும் நீர் குறைந்த இடத்தில் கரையில் கூம்பிய உடலோடு கூரிய பார்வையோடு பார்த்துக்கொண்டிருக்கும் என்று கூறி யுள்ளனர். கூம்பு நிலையைச் சங்க நூல்களில் குவிந்த ஆம்பலுக்கும், கொக்கிற்கும், கூறியதுபோல வள்ளுவரும் சங்க நூல் மரபில் அரசனுனவன் கொக்கு கூம்புமாறு போலக் கூம்பியிருக்க வேண்டுமென்றூர். இந்த முறை யாகக் கூம்பியிருக்கும்போது இந்தக் கொக்கு இதன் சூழலுடன் ஒன்றித்து இருப்பதால் இதைப் பிரித் துணர்வது கடினம். வேட்டையாடச் சென்றேர் இதை நன்கு உணர்வர். இந்தக் கொக்கு ஆடாது அசையாது இருந்து தன் சூழ்நிலையில் இதன்

நிறத்தின் காரணமாக மறைவதால் மனிதனைக் குருடாக்கும் கொக்கு என்ற பொருளில் குருட்டுக் கொக்கு என்று பெயர் பெற்றது. குருட்டுக் கொக்கு என்பதற்கு நேரான பொருளான கண்குருடான கொக்கு என்று கொண்டால் அது தவறாகும். கூர்மையான கண்ணுடைய கொக்கை எப்படிக் குருடாக்க முடியும்! குருட்டுக் கொக்கு என்ற பொருளிலேயே இதைக் காணுக் கொக்கு என்று ஈழத்தில் அழைக்கின்றனர். இந்தியிலும் இப்பொருளில் இதன் பெயர் (Andha Bagla) வழங்குகின்றது. இதை நொள்ளைமடையான் என்றழைக்கின்றதும் இதே காரணத்தால்தான். கொக்கின் தலையில் வெண்ணெய் வைத்துப் பிடிப்பதுபோல் என்றொரு பழமொழி உள்ளது. கொக்கை அதன் சூழ்நிலையில் கண்டு பிடிப்பது கடினம், அதனிலும் கடினம் கொக்கை நெருங்கி அதன் தலையில் வெண்ணெய் வைப்பது. ஏனென்றால் கொக்கு கூர்ந்த பார்வையுடையது. வெண்ணெய் வைக்கும் நேரத்தில் அதைப் பிடித்துவிடலாம். இந்தப் பழமொழி கொக்கு குருடு அன்று என்பதைக் காட்டுகின்றது. 15ஆம் நூற்றாண்டில் தோன்றிய நூலான திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழில் 'குருடு' என்றே கொக்கு அழைக்கப்படுவதைக் காணலாம். இந்தக் கொக்கைக் குளத்துக் கொக்கு என்றும் அழைப்பர். மலையாளத்தில் குளமுண்டி என்றழைக்கப்படும். நற்றிணை 230ஆம் பாடலில் 'கயக்கணக் கொக்கு' என்றழைக்கப் பட்டுள்ளது. ஆதலின் குளக்கொக்கு என்றழைக்கப் படுவது சங்க நூல் மரபை ஒட்டியதாகும். ஆரல் மீனின் முட்டையைத் தின்பதாகப் புறநானூறு கூறுகின்றது.

> ''பைங்காற் கொக்கின் பகுவாய்ப் பிள்ளை
> மென்சேற் றடைகரை மேய்ந்துண் டதற்பின்
> ஆர லீன்ற வையவி முட்டை
> கூர்ந விறவின் பிள்ளையொடு பெறூஉம்''—புறம். 342.

மெல்லிய சேறு நிறைந்த கரையில் மேய்ந்து ஆரல் மீன் இட்ட முட்டைகளையும் இறால் மீனின் குஞ்சையும் தின்னும்

என்று கூறியுள்ளார். கடற்கரைக் கழிகளில் மேய்வதால் 'கொக்கார் கொடுங்கழி' என்று கைந்நிலை (55) கூறுகின்றது.

கொக்கு கூடுகட்டி அதன் பிள்ளைகட்கு இரை தருவதும் கூறப்பட்டுள்ளது.

> "கொழுஞ்சுளைப் பலவின் பயங்கெழு கவாஅன்
> செழுங்கோள் வாங்கிய மாச்சினைக் கொக்கின்
> மீன் குடை நாற்றந் தாங்கல்செல் லாது
> துய்த்தலை மந்தி தும்மும் நாட" —நற்றிணை. 326.

> "குடுமிக் கொக்கின் பைங்கால் பேடை
> இருஞ்சேற்று அள்ளல் நாட்புலம் போகிய
> கொழுமீன் வல்சிப் புன்தலைச் சிறாஅர்
> நுண்ணாண் அவ்வலைச் சேவல் பட்டென
> அல்குறு பொழுதின் மெல்கிரை மிசையாது
> பைதற் பிள்ளை தழீஇ ஒய்யென
> அங்கட் பெண்ணை யன்புற நரலுஞ்" — அகம். 290.

பலாவின் செங்குத்தான கிளையில் கூடுகட்டி மீனைக் கொண்டு வந்து உண்ட நாற்றத்தைத் தாங்க முடியாது மந்தி தும்மியதாக நற்றிணை கூறுகின்றது. பனைமரத்தில் பிள்ளைகளைத் தழுவிக் கொக்கின் பேடையிருந்ததாக அகநானூறு கூறுகின்றது. சிறுவர்கள் கொக்கின் சேவலை நுண்ணிய வலைபோட்டுப் பிடித்ததையும் கூறியுள்ளது. கொக்குகள் 'இருஞ்சேற்று அள்ளலில்' இரை தேடிச் சென்றதாகக் கூறப்பட்டுள்ளது. காய்ந்துபோன நீர் நிலைகளில் ஈரமான சேற்றில் மீன்களைத் தின்னக் கொக்குகள் கூட்டமாக இருப்பதைக் காணலாம். கொக்குகள் கூட்டமாகப் பறக்கும்போதும், இரைதேடித் தின்று திரும்பும்போதும் V என்ற எழுத்துப்போல வரிசையாகச் செல்லுமென்று பறவை நூலார் கூறுவர். "கொக்கொழுங்குபட ஓடி" என்று தக்கயாகப் பரணி இதன் வரிசையைக் கூறும்.

"நெடுவேள் மார்பி னாரம் போலச்
செவ்வாய் வானந் தீண்டிமீ னருந்தும்
பைங்காற் கொக்கின நிரைபறை யுகப்ப
வெல்லை பைப்பயக் கழிப்பிக் குடவயிற்
கல்சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு" —அகம். 120.

நெடுவேளின் மார்பில் ஆரம் இருந்ததுபோல மீனைத் தின்ற கொக்குகள் செந்நிறமான அந்திவானில் வரிசையாக இறக்கைகளை அடித்துச் சென்ற மாலை என்று அகநானூறு கூறுவது கவனிக்கத்தக்கது. மார்பில் ஆரம் V என்ற எழுத்துப் போல இருப்பது கொக்கின் வரிசைக்கு ஏற்ற உவமை யென்பதைக் காட்டுகின்றது. கொக்கைக் கொன்று உரித்துப் பார்த்தால் எப்படியிருக்கும் என்பதைக் கலித்தொகை கூறுகின்றது. எலும்புகள் தெரியும் கூனியின் உடல் கொக்கைத் தோலுரித்தாற்போன்று இருந்ததாகக் கூறுகின்றது.

"நல்லாய்கேள் உக்கத்துமேலு நடுவுயர்ந்து வாள்வாய
கொக்குரித் தன்ன கொடுமடாய் நின்னையான்"
—கலி. 94.

கொக்கைத் தோலுரித்துப் பார்க்குங்கால் அதன் முதுகு உயர்ந்தும் கழுத்து சுருங்கியும் கூனிக் குறுகிக் காணப் படும். கொக்கு உட்கார்ந்து இருக்கும்போது கழுத்தை உள்ளடக்கிக் கூனிக் குறுகி இருப்பதால் உரித்த கொக்குப் போலக் கிழவியான கூனியிருப்பதாகக் கலித்தொகை கூறியது மிகவும் அழகான நுட்பமான உவமையாகும். பறவை நூலாரும் கொக்கு கூனிக் குறுகி (hunched) அமர்ந்திருப்பதை விளக்கிக் கூறியுள்ளனர். சங்க நூல் களில் வரும் கருப்பொருள் உவமைகளின் பொருத் தத்தையும் நுட்பத்தையும் உணர எந்த அளவு இயற்கைச் செய்திகளைப்பற்றிய அறிவு இன்றியமையாதது என்பது இதிலிருந்து விளங்கும்.

கொக்கு என்ற பெயர் இதன் கொக்கி போன்ற வளைந்த கழுத்தின் காரணமாக வந்ததென்று தெரி

கின்றது. கொக்கின் கழுத்தும் இதன் இனமான நாரை முதலிய பறவைகளின் கழுத்தும் நடுவில் வளைந்து S என்ற எழுத்துப்போல இருக்கும். ஆனால் இந்த வளைந்த கழுத்தைக் கொக்கு தன் உடலில் சுருக்கிக்கொள்வதால் வெளியே தெரிவதில்லை. இரை தேடும்போது இரையைக் கண்டால் இந்தக் கொக்கி போன்ற கழுத்து வெளியே வருகின்றது. திடீரென்று கொக்கிபோன்ற கழுத்தை நீட்டி இரையைப் பிடிக்கின்றது. கொக்கு தெலுங்கு மொழியில் 'குட்டிகொங்கா' என்றழைக்கப்படும். குருட்டுக் கொக்கு என்பதே இதன் பொருள். கொக்குகளைக் 'கொங்கா' என்றழைப்பதைக் காணலாம். கோண்டி மொழியிலும் 'கொங்க' என்ற சொல் கொக்கைக் குறிக் கின்றது. சிங்கள மொழியிலும், மலையாள மொழியிலும் கொக்கு என்ற சொல் பலவகை நீர்ப்பறவைகளைக் குறித்து வழங்குகின்றது. மராத்தியில்கூட 'ராத்கொக்கு' என்று வக்காவை அழைக்கின்றனர். கொக்கு என்ற பெயர் திராவிட மொழிகளில் வழங்கிய பழங்காலத்திய சொல் என்று கருதலாம். இதை மடையான் என்று இக் காலத்தில் அழைப்பர். மடையிலே இருந்து உணவு தேடுமாதலால் மடையான் என்றனர். 'மடைத்தலையி லோடுமீ னோட உறுமீன் வருவளவும் வாடி யிருக்குமாங் கொக்கு' என்று மூதுரை கூறும். மடைவாய்க் கொக்கு போல என்ற பழமொழி உண்டு. மடையன் என்ற பெயர் வந்த காரணம் எளிதில் விளங்கும். கொக்கின் பெயர் ஆங்கிலத்தில் (Pond Heron) அல்லது (Paddy Bird) என்பனவாகும். பறவை நூலில் (Ardeola grayii) என்றழைப்பர்.

# ௬. குருகு
## (GREY PELICAN)

சங்க இலக்கியத்தில் குருகு என்ற ஒரு பறவையைப் பற்றிப் பல செய்திகள் வருகின்றன. குருகு என்ற பெயர் ஒரு குறிப்பிட்ட பறவை வகையைக் குறித்தும், பொது வாகச் சிலவகைப் பறவைகள் சேர்ந்த தொகுதியைப் பற்றியும், சங்க நூல்களில் வழங்குவதைக் காண்கிறோம்.



குருகு

நாரை என்ற பெயர் சிறப்பாக, குறிப்பாக ஒரு வகைப் பறவையைப் பற்றி வழங்கிஹும், (Grey heron) பொதுவாக அதன் இனமாகக் கருதப் பட்ட சிலவகைப் பறவைகளையும் குறித்துச் சங்க நூல்களில் வழங்குவதைக் காணலாம். நந்து நாரை, தடந்தாள் நாரை, செவ்வரி நாரை என்ற நாரை வகைகளையும் நாரை என்று பொதுவாக அழைப்பதைக் காணலாம்; அது போன்றே குருகு என்ற சொல்லும் சிறப் புப் பெயராகவும், பொதுப் பெயராகவும், வழங்கக் காண் கிறோம். குருகு என்ற பெயர் சிறப்பாக, கொய்யடி நாரை, வண்டானம் என்று அழைக்கப்படும் ஒரே பறவை வகையைக் குறித்து வழங்கியதை நிகண்டுகள் வாயிலாக அறிகிறோம். வண்டானத்தைத் தற்காலத்தில் கூழைக்

கடா என்றழைக்கின்றனர். குருகு என்று வழங்கும் சங்க இலக்கியப் பறவை தற்காலம் கூழைக்கடா என்றழைக்கப் படும் பறவை என்பதில் ஐயமில்லை. குருகு என்ற பறவைக்கு வழங்கிய பெயர்கள் எல்லாம் ஏதாவது ஒரு குறிப்பிட்ட காரணத்தை அடிப்படையாகக் கொண்டு வழங்கின. குருகு என்ற பெயர் இப் பறவையின் தனித் தன்மை பொருந்திய அலகின் காரணமாக வந்தது. குருகு என்பதற்குக் கொல்லன் உலைமூக்கு, துருத்தி என்ற பொருள் உண்டு. கொல்லன் உலைமூக்குப் போல இப் பறவையின் மூக்கு இருந்ததால் குருகு என்ற பெயர் இப் பறவைக்குத் தோன்றியது இதன் அலகு நீண்டு பெரி தாக இருக்கும், கீழலகு தொங்கிய தோற்பை போலத் தோலால் ஆனது. (flattened bill from the whole length of which beneath hangs a pouch of very elastic skin) இதன் காரணமாகவே தோலால் ஆன கொல்லன் உலை மூக்கோடு ஒப்பிடப்பட்டு, குருகு என்ற பெயரால் இப் பறவை அழைக்கப்பட்டது. இப் பறவை வெயிற்காலத் தில் உட்கார்ந்திருக்கும்போது இந்தத் தோற்பை போன்ற கீழலகு மேலும் கீழும் இயங்கி இதன் உடலில் உள்ள சூட்டைக் குறைக்கின்றது. கொல்லன் உலைமூக்கில் உள்ள தோற்பகுதி உப்பியும், குறைந்தும் இயங்குவ துடன் இப்பறவையின் கீழலகின் செய்கை ஒப்பிடப்பட்டுக் கொல்லன் உலைமூக்கின் பெயரான குருகு என்ற சொல் இப் பறவைக்குப் பெயராக வழங்கியதாகத் தெரிகின்றது. சில அறிஞர்கள் வெண்மை நிறம் காரணமாகக் குருகு என்ற பெயர் வழங்கினதாகக் கருதுகிறார்கள். ஆனால், இப் பறவையின் நிறம் வெண்மையன்று. மற்றும் வெண்மையான பறவை வகைகள் பலவுண்டு. வெண் குருகு என்று சங்க நூல்களில் ஒரு வகைப் பறவை கூறப் பட்டுள்ளது. ஆதலின் வெண்மை காரணமாகக் குருகு என்ற பெயர் தோன்றியிருக்க முடியாது.

"ப்ருஅக் குருகி னுயிர்த்தலு முயிர்த்தனன்"

—கலி. 54

"பருஅக் குருகி னுயிர்த்தவன் போயபின்"
மணிமேகலை 19 : 28.

கலித்தொகையிலும், மணிமேகலையிலும், பறவாத குருகு என்று கொல்லன் உலை மூக்கு அழைக்கப்படுவதால் குருகு என்ற பறவையையும், கொல்லன் உலை மூக்கையும் ஒப்பிட்டுப் பார்த்து வந்தனர் என்பது தெரிகின்றது. வேங்கை மரத்தையும், வேங்கைப் புலியையும் ஒப்பிட்டு வந்த வழக்கால் பாயா வேங்கை என்ற வழக்குத் தோன்றியதை இது சார்பாக எண்ணிப் பார்க்கலாம். ஆதலின் குருகு என்ற பறவையின் பெயர் அதன் மூக்கைக் கொல்லன் உலை மூக்கோடு ஒப்பிட்ட காரணத்தால் தோன்றியது என்பதில் ஐயமில்லை. குருகு என்ற பறவை எதுவென்று அறிய இந்தச் சான்றே போதுமானது. பிற சான்றுகளும் உள்ளன.

குருகின் மறுபெயராகக் கொய்யடி நாரை என்ற பெயரை எல்லா நிகண்டுகளும் கூறுகின்றன. கொய்யடி என்ற சொல் இந்தப் பறவையின் கால் விரல்களின் இடையே உள்ள சவ்வுத் தோலைக் குறித்து வழங்கியுள்ளது. கொய்சகத்தை மடிப்பது போல் விரல்கள் இடையே மடிப்புத்தோல் காணப்படுவதால் 'கொய்யடி' என்றழைக்கப்பட்டது. இப் பறவைக்கு அகன்ற மடிப்புத் தோல் விரல்களுக்கிடையே இருக்கிறதைப் (Broadly webbed feet) பறவை நூலார் விளக்கியுள்ளனர். தற்காலம் மகளிர் இடையில் கட்டும் புடைவையை மடித்துச் சொருகுவதைக் 'கொசுவம்' என்றழைக்கின்றனர். கொய்சகம் என்பதே கொசுவம் ஆயிற்று. கொய் என்ற சொல் மடிப்பு என்ற பொருள் தருவதைக் காணலாம். கொய்யடி நாரை என்ற பெயர் இப் பறவையின் அகன்ற மடிப்புத் தோலுடைய கால் விரல்கள் காரணமாக வழங்கிற்று என்பது தெளிவாகின்றது. நாரை என்ற சொல் நரை நிறத்தை அஃதாவது சாம்பல் நிறத்தைக் குறித்து வழங்கியுள்ளது. கொய்யடி நாரை சாம்பல் நிறமானது (grey) என்பதில் ஐயமில்லை. சிந்தாமணி

திலும், பிற்கால நூல்களிலும், இப் பறவை வண்டானம் என்றழைக்கப்பட்டுள்ளது.

> "கதிர்த்ததண் பிணி கம்புடாழ் பிவிக் கனேக்குர
> ரைவண் டானம்
> எதிர்த்ததண் புனல்கு ழின்னதிக் கரைமே லிளேயவ
> ரயாவுயிர்த் தெழுந்தார்." —சிந்தாமணி 2108.

மேருமந்தர புராணத்திலும், கம்பராமாயணத்திலும் வண்டானம் என்ற பெயர் வழங்குகின்றது.

> "அன்னஞ்செல் விரும்வண் டானம்செல்வீரும்
> தொழுதிரந்தேன்
> முன்னஞ்செல் வீர்கள் மறவேல் மினேகண்ணன்
> வைகுந்தனே."
> —திருவிருத்தம், 2507.

நம்மாழ்வார் பாடிய திருவிருத்தத்தில் வண்டானமும் அன்னமும் தனித்தனியே கூறப்பட்டிருப்பதைக் காண லாம். வண்டானம் பின்னம் செல்லும் வழக்கமுடைய தாகையால் முன்னஞ் செல்வீர்கள் என்று நம்மாழ்வார் கேட்டுக் கொண்டார் என்பது தெரிகின்றது. பிற்காலத்து நூல்களான பாண்டிக்கோவையிலும் நந்திக்கலம்பகத் திலும் வண்டானம் என்ற பெயரே வழங்குகின்றது. ஞானசம்பந்தர் திருவுசாத்தானப் பதிகத்தில் 'கொண்டி ரைக் கொடியொடுங் குருகினின் நல்லினம்' என்று கூறும் வரியில் கூழைக் கடாவையே குறிப்பிட்டுள்ளார். வண்டானம் என்ற பெயர் அன்னத்தோடு கூழைக் கடாவை ஒப்பிட்டுக் கூறியதால் வந்ததாகும். அன்னமும் கூழைக்கடாவும் உருவில் ஒற்றுமையுடையன. அன்னத்தைப்போலக் குருகும் காலில் தோலடியை உடை யது. வளவிய அன்னம் என்ற பொருளில் வண்டானம் எனப்பட்டது. வண்டாழ்ங்குருகு என்ஞெரு பறவையை நச்சினார்க்கினியர் மதுரைக்காஞ்சி உரையில் குறிப்பிட் டுள்ளார். இந்த வண்டாழ்ங்குருகு வண்டானமாகவே

இருக்கலாம். வள்ளிய தாழ்புடைய குருகு வண்டாழ்ங்குருகு ஆக அழைக்கப்பட்டிருக்கலாம். அகநானூற்றில் (187) கோழியின் கழுத்தில் தொங்கும் சதைமணிகளை 'அணல் தாழ்பு' என்று கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். வாய்க்குக் கீழே தொங்கும் சதையைத் தாழ் என்று கூறுவது வழக்கம். கூழைக்கடாவிற்கு அத்தகைய தொங்கும் சதை கீழலகில் உள்ளது. வளவிய தாழ்பு அல்லது தாழ் உடைய அழகிய குருகு என்ற பொருளில் வண்டாழ்ங்குருகு என்று பெயர் வந்திருக்கும். பிற்காலக் கல்வெட்டுகளில் வண்டாழஞ்சேரி என்று வரும் ஊர் இப் பறவைகள் நிறைய வாழ்ந்த ஊராக இருக்கலாம். வண்டாழஞ்சேரியே பின்னர் வண்டுவாஞ்சேரியாயிற்று.

இப் பறவையைத் தற்காலம் கூழைக்கடா என்றழைக்கின்றனர். பெரிய பறவையான இதற்கு வால் மிகவும் குட்டையானது. உருவிலும் குள்ளமானது. இக் காரணங்களால் கூழைக்கடா என்றழைக்கப்பட்டதென்று கருதலாம். கடா என்ற பெயர் இப் பறவைகள் சில சமயங்களில் எருமைபோலக் கனைகுரல் எழுப்புவதால் தோன்றியிருக்கலாம். கூழைக்கடா என்ற பெயர் வாலில்லாத எருமைக் கடாவைக் குறித்து வழங்குவதும் நோக்கத்தக்கது. (Adults usually silent, rarely uttering throaty grunts or croaks likened to the grunt of a buffalow). இப் பறவைகள் தண்ணீரில் நீந்திச் சென்று மீன்களை வேட்டையாடும் முறை கவனிக்கத்தக்கது. இவை பல சேர்ந்து கூடிக் கூட்டுறவாக மீன்களை வேட்டையாடும். நீர்நிலையில் அரைவட்டமான வரிசையாக இருந்து மீன்களை மடக்கிக் கொள்ளும். இறக்கைகளை அடித்து அடித்து மீன்களைக் கரையோரமாக விரட்டி மடக்கித் தங்களுடைய பை போன்ற கீழ் அலகுகளில் மீன்களை வாரிக்கொண்டு உண்டு விடும். (The Method of fishing is by co-operative effort, a flottilla of birds swimming in a semicircle vigorously splashing on the water with their large wings to drive a school of fish into the shallows.)

தமிழில் காணப்படும் பரத சாத்திரத்தில் ''கொக்கு கோழி கூழைக் கடாமுகம்'' என்று வரும் வரியில் ''கூழைக் கடாமுகம்'' என்ற பெயர் இப் பறவையைக் குறித்து வழங்கியதாகத் தெரிகின்றது. படைமுகத்தில் கடைசி அணி எதிரிகளின் படையை வளைத்துக் கொள்வதைப் போன்று கூழைக்கடாப் பறவைகள் மீன்களை வளைத்துக் கொள்வதால் ''கூழைக்கடாமுகம்'' என்று அழைக்கப் பட்டதாகத் தோன்றுகின்றது. படையின் பின்னணிக்குக் கூழை என்று கூறுவது சங்ககால வழக்காகும். திரு வாசகத்தில் 'கடைக் கூழைச் செல்மின்கள்' என்று திண்டிறல் சித்தர்களை மாணிக்கவாசகர் விளித்துக் கூறி யுள்ளார். கடைக்கூழை ஒரு படையணி வகுப்பாகும். இந்தக் கூழை அணிபோலக் கூழைக்கடாக்கள் மீன்களை மடக்கிக் கொள்வதால் கூழைப் படைமுகத்துடன் ஒப்பிடப் பட்டது. கூழைக் கடைமுகம் என்ற பெயரே கூழைக்கடா என்று மாறியதாகவும் இருக்கலாம். நாஞ்சில் நாட்டிலும், திருநெல்வேலியில் சில பகுதியிலும் நாட்டுமக்கள் இப் பறவையைக் 'கொதும்பன்னம்' என்றழைக்கின்றனர். கொதும்பு என்ற சொல்லிற்கு மலையாளத்திலும், நாஞ்சில் நாட்டுப் பேச்சுத் தமிழிலும் தென்னம்பாளை என்பதே பொருள். தென்னம்பாளை படகு போன்ற உருவில் காணப்படும். இந்தத் தென்னம்பாளை குருகின் கீழலகு போல உருவில் ஒத்துக் காணப்படுவதால் கொதும்பை யுடைய அன்னம் என்று பெயர் பெற்றிருக்கலாம்.

> *''..............................தெங்கிளம் பாளையை*
> *நாரை யென்றிளங் கெண்டை நடுங்குவ.''*
>
> —கம்பராமாயணம். கிட்கிந்தா காண்டம்—909.

தென்னம்பாளையை நாரையென்று எண்ணிக் கெண்டை நடுங்குவதாகக் கூறியுள்ளதைக் காணலாம். தென்னம் பாளையைப் போல் உருவுடைய நாரை கொய்யடி நாரை எனப்படும் குருகுதான். அதன் காரணமாகவே கொதும் பன்னம் என்றழைக்கப்படுகின்றது. இப் பறவையின்

அலகு பருமனானது, கனமானது என்ற பொருளில் தேவாரத்தில் 'பாரல்வாய்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

> "ஆரலாஞ் சுறவுமேய்ந் தகன்கழிச் சிறகுளர்த்தும்
> பாரல்வாய்ச் சிறுகுருகே"
> —தேவாரம்—சம்பந்தர். 321—5.

தேவாரத்தில் பிறிதோரிடத்தில் 'பாரல் வெண்குருகு' என்றும் அழைக்கப்படுகின்றது. இது கொய்யடி நாரையாகவே இருக்கலாம்.

குருகிற்குக் "கொய்யடி" இருப்பதால் நீரில் நன்றாக நீந்தக்கூடியது.

> "காய்ந்துசெலற் கனலி கல்பகத் தெறுதலின்
> நீந்து குருகுருகும் என்றூழ் நீளிடை
> ......................................
> ......................................
> ஊதுலைக் குருகின் உள்ளுயிர்த் தசைஇ
> வேவது போலும் வெய்ய நெஞ்சமொடு" —அகம் : 55.

நீந்துகுருகு என்று கூறப்பட்டதிலிருந்து இந்தப் பறவை நீரில் நீந்துவதைக் குறிப்பாகத் தெரிந்து கூறினர் என்பது தெளிவு. ஏனென்றால் சங்க நூல்களில் கூறப்படும் 'கருங்கால் வெண்குருகு', 'வெள்ளாங் குருகு' ஆகிய குருகுகள் நீந்த முடியாதவை. நீர்நிலைகளில் ஆழமற்ற இடங்களில் நடக்குமேயொழிய நீந்தாதவை. அக் குருகுகளிலிருந்து பிரித்துரைக்கவே இது 'நீந்து குருகு' எனப்பட்டது. நீந்து குருகுக்கும், ஊதுலைக் குருகுக்கும் உள்ள ஒப்புமையும் அவற்றை ஒரே பாட்டில் கூறி உய்த்துணர வைக்கப்பட்டுள்ளது. 'கொய்யடி' என்ற சொல்லை அறிவியற் சொல்லாகச் சவ்வுத் தோல்விரல்களுக்கு இடையே உள்ள காலைக் குறித்து (webbed feet) வழங்கலாம். குருகுகள் விண்ணில் பறக்கும் ஒழுங்கையும், முறையையுங்கூடச் சங்கப் புலவர்கள் கண்டு கூறியுள்ளனர். குருகு உருவிலும் கனத்திலும் பெரிய பறவையாகினும்

ஆகாயத்தில் நன்ருக வெகுநேரம் பறக்கக் கூடியதாகும் என்று பறவை நூலார் கூறுவர். வெயிற்காலத்தில் நண்பகலில் ஆகாயத்தில் வெகு உயரத்தில் கழுகு, நாரை முதலிய பறவைகளுடன் வெகுநேரம் வட்டமிடுவதைப் பார்க்கலாம். குருகுகள் பறக்கும்போது V எழுத்துப் போன்ற வரிசையிலும் அல்லது அலைவரிசை போன்ற ஒரே வரிசையாகவும் பறக்குமென்று பறவை நூலார் கூறுவர். (Pelicans fly either in V-shaped echelons of geese or in long wavy lines with a wide front. The birds are much given to soaring on thermals and flocks may commonly be seen in the middle of a hot day sailing on outspread motionless wings in graceful circles high up in the blue by themselves or in company with storts.)

குருகுகள் நெடிய வரியாக long, wavy lines) பறந்து செல்லும் என்பதைப் பதிற்றுப்பத்து கூறியுள்ளது.

> "கோடுதணர்ந் தன்ன குருகொழுக் கெண்ணி
> எல்லை கழிப்பினம் ஆயின் மெல்ல" —நற்றிணை 159.

> "சுடர்சினந் தணிந்து குன்றம் சேர
> நிறைபறைக் குருகினம் விசும்புகந்து ஒழுக"
> —நற்றிணை 369.

> "கார்மழை முன்பிற் கைபரிந் தெழுதரும்
> வான்பறைக் குருகி னெடுவரி பொற்பக்
> கொல்களி றுமிடைந்த பஃறோற் றொழுதியொடு
> நெடுந்தேர் நுடங்குகொடி யவிர்வரப் பொலிந்து"
> —பதிற்றுப் பத்து 83 : 1-4.

குருகுகள் வரிசையாகப் பறந்து செல்வதைப் படைகளின் அணியொடு ஒப்பிட்டுக் கூறியதைக் காணலாம். குருகுகள் ஆகாயத்தில் ஒழுங்காகப் பறந்து செல்வதை நற்றிணைப் பாடல்களும் கூறுகின்றன. பறவை நூலாரும் அவ்வாறே படையணியோடு (echelons) ஒப்பிட்டுக் கூறுவது வழக்கம்.

குருகுகள் பருமனுன பறவையாயிருந்தாலும், ஆகாயத்தில் மிகவுயரத்தில் வட்டமடித்துப் பறக்கக் கூடியவை. விண்ணில் உயரத்தில் நிலவும் காற்றுச் சுழற்சியில் மிதந்து இறக்கையை அடிக்காது வட்டமிடும் என்று பறவை நூலார் கூறுவர்.

> "குருகு மிருவிசும் பிவரும் புதலும்
> வரிவண் டூத வாய்நெகிழ்ந் தனவே"
>
> —குறுந்தொகை. 260.

> "புதல்மிசை நுடங்கும் வேழ வெண்பூ
> விசும்பாடு குருகிற் றோன்று மூரன்"
>
> —ஐங்குறு நூறு. 17.

> "குருகு நாரையொடு கொட்பாறு
> விரிதிரை நீர் வியன்கழனி"
>
> —யாப்பருங்கல விருத்தி-மேற்கோள்.

குருகு ஆகாயத்தில் 'இவர்வதாகக்' கூறியிருப்பதைக் காணலாம். காற்றின் மேலேறிப் பறந்து வட்டமிடுவதையே 'இவரும்' என்று குறுந்தொகை கூறுகின்றது. ஐங்குறுநூறு குருகு விசும்பில் வட்டமிடுவதைக் கூறியுள்ளது குருகு நாரையொடு சுற்றிச் சுற்றி வட்டமிடுவது 'கொட்பாறு' என்ற சொல்லால் குறிப்பிடப்பட்டுள்ளது.

குருகுகள் பெரும்பாலும் கூட்டமாகக் காணப்படும் என்று கூறுவர். கூட்டமாக மீன்களைப் பிடித்து உண்டபின் இறக்கைகளை விரித்துக் கோதிக்கொண்டு காணப்படுவதாகப பறவை நூலார் கூறுவர். மணல் மேட்டிலே அல்லது பாறையிலே ஏறி இறகுகளைக் கோதி உலர்த்திக் கொண்டிருக்குமென்று கூறுவர்.

> "வீழ்தாழ் தாழை பூழுறு கொழுமுகை
> குருகுள ரிறகின் விரிபுதோ டவிழும்
> கான லண்ணிய சிறுகுடி முன்றிற்"
>
> —குறுந்தொகை. 228.

"நீனிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப
மீனார் குருகின் மென்பறைத் தொழுதி
குவையிரும் புன்னைக் குடம்பை சேர" —அகம். 40.

"யாரணங் குற்றனை கடலே பூழியர்
சிறுதலை வெள்ளைத் தோடுபரந் தன்ன
மீனார் குருகின் கானலம் பெருந்துறை"
—குறுந்தொகை. 163.

"வதிகுரு குறங்கு மின்னிழற் புன்னை"
—குறுந்தொகை. 5.

"குருகுடைத் துண்ட வெள்ளகட் டியாமை
அரிப்பறை வினைஞ ரல்குமிசைக் கூட்டும்"
—ஐங்குறுநூறு. 81.

"..........................இருங்கழி
இரையார் குருகின் நிரைப்பறைத் தொழுதி
வாங்குமடற் குடம்பைத் தூங்கிருள் துவன்றும்
பெண்ணை ஓங்கிய வெண்மணற் படப்பைக்"
—நற்றிணை.

"எவன்குறித் தனள்கொல் அன்னை கயந்தோறு
இறவார் இனக்குரு கொலிப்பச் சுறவங்
கழிசேர் மருங்கில் கணைக்கால் நீடிக்" —நற்றிணை. 27.

குருகுகள் கடற்கழிகளிலும், கயங்களிலும் காணப் பட்டதாகச் சங்க நூல்கள் கூறியுள்ளன. கடற்கழி களிலும் நன்னீர்க் குளங்களிலும் குருகுகள் மீன்பிடிக்கும் என்று பறவை நூலார் கூறுவர். குருகுகள் புன்னை மரத் திலும் பனைமரத்திலும் கூடுகட்டி வாழ்வதாகச் சங்க நூல்கள் கூறுகின்றன. பனைமரத்தில் குருகுகள் கூடு கட்டுவதைப் பறவை நூலாரும் பார்த்துள்ளனர். குருகுகள் பூழியர் நாட்டில் காணப்பட்ட வெள்ளாட்டு மந்தைகள் போலக் கூட்டமாகக் காணப்பட்டதாகக் கூறி யிருப்பதைக் காணலாம். குருகினம், குருகுக்கிளை, இனக் குருகு என்று சங்க நூல்கள் குருகுக் கூட்டத்தைக் குறித்

துள்ளன. சங்கப் பாடல்களில் குருகின் உணவாக மீனேயும், இறவையும் கூறியுள்ளனர். ஐங்குறுநூற்றுப் பாடலில் (81) குருகு ஆமையை உடைத்து உண்டதாகக் கூறியுள்ள செய்தி ஆராயத்தக்கது. குருகுகள் இரையை வாரி உட்கொள்ளும். குருகுகள் சில இடங்களில் தங்கி வாழ்வதுண்டு. ஆனால், பொதுவாக இடத்திற்கிடம் சென்றுகொண்டிருக்கும் குணமுடையவை. குறுந்தொகையில் 'வதிகுருகு' என்று ஒரே இடத்தில் தங்கி வாழும் குருகுகளைப் பற்றிக் கூறியிருப்பதைக் காணலாம். தமிழ் நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்திலும், வேடந்தாங்கலிலும் குருகுகள் தங்கி முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கின்றன.

குருகு என்பதற்கு நாரை, அன்னம் என்று சில உரையாசிரியர்களும், உ. வே. சாமிநாதையரும் பொருள் கொண்டனர். நாரைபோன்று சாம்பல் நிறமானதாயினும் குருகு வேறு, நாரை வேறு என்பதை உணரவேண்டும். நாரை நெடிய பறவை. குருகு குள்ளமான பறவை. பருமனன பறவை. அன்னம் என்ற பறவையைவிடக் குருகு பருமனனது. அன்னத்தைவிட அகன்ற விரல்களும் விரிந்த மடிப்புத் தோலும், விரல்களுக்கிடையில் உடையது. முக்கியமாக இதன் கீழலகு தோற்பை போலத் தொங்குவது நாரைக்கும், அன்னத்திற்கும் கிடையாது. சங்க நூல்களில் சில இடங்களில் குருகு என்பது பொதுப் பெயராக நீர்ப்பறவைகளில் சிலவற்றைத் தொகுதியாகக் குறித்து வழங்கியிருப்பினும் பெரும்பாலும் தனிப்பெயராக வண்டானத்தையே—கொய்யடி நாரையையே குறித்து வழங்கியது. நாரை, அன்னம், குருகு ஆகியவற்றை ஒரே பாடலில் பிரித்துக் கூறிய பாடல்களும் பிற்காலத்தில் காணப்படுகின்றன. குருகை Spotted billed Pelican or grey pelican என்றழைப்பர். பறவை நூலார் Pelecanus Phillipensis என்றழைப்பர்.

குருகு சிறகை உளர்வதாகக் குறுந்தொகையிலும் வேறுசில நூல்களிலும் கூறப்பட்டுள்ளது.

> "வீழ்தாழ் தாழை பூழுறு கொழுமுகை
> குருகுள ரிறகின் விரிபு தோ டவிழும்
> கானல் நண்ணிய சிறுகுடி முன்றில்"
>
> —குறுந்தொகை, 228.

சிறுகால் மீன்களை அடித்துவிரட்டி அலகுப் பைகளில் முகந்து உண்ட குருகுகள் கரையில் ஏறித் தங்கிச் சிறகுகளை விரித்து உலர்த்தி ஓய்வு எடுப்பது வழக்கமென்பதைப் பறவை நூலார் கூறியுள்ளனர். இச் செய்தியையே குறுந் தொகைப் பாடல் கூறுகின்றது. 'படப்பை யெல்லாம் குருகினங்கள் கூடியாங்கே கும்மலித்து சிறகுலர்த்த' என்று வரும் தேவாரப் பாட்டு வரியிலும் கூழைக்கடா சிறகுலர்த்துவது கூறப்பட்டுள்ளது. கூழைக்கடாவின் அலகு மீன்களை முகந்து உண்பதற்குமன்றி உடலைக் குளிர வைக்கும் கருவியாகவும் உதவுகின்றது. தரையிலோ, மரத்திலோ கூழைக்கடா ஓய்வெடுக்கும்போது வாயைத் திறந்து அலகின் அடிப்பையை அழுத்தி விரித்துக் காற்றை வெளியிட்டு உடலைக் குளிரச் செய்கின்றது. சிந்தாமணி உரையில் இச்செய்தியை நச்சினார்க்கினியர் குறிப்பாகக் கூறியிருப்பதாகத் தெரிகின்றது. சிந்தாமணி 346ஆம் பாட்டில் தூவியஞ்சிறை அன்னமும் தோகையும் முதலியவை ஆற்ருது ஆவித்து அழுதிட்டதாகக் கூறப் பட்டுள்ளது. அன்னம் முதலியவற்றிற்குக் கொட்டாவி விடுதல் வழக்கமென்று கூறப்பட்டிருக்கின்றது. ஆனல், இவ்வாறு கொட்டாவி விடுவதுபோல வாயைத் திறந்து கீழலகுப்பையால் காற்றை அடித்து வெளியேற்றும் பறவை வண்டானம் எனும் கூழைக்கடாவேயாகும். கொல்லன் உலைமுக்குத் தோலை எப்படி அழுத்தி அழுத்திக் காற்றைச் செலுத்தி வேலை செய்கிருனே அதுபோலவே கூழைக் கடாவின் கீழலகும் செய்வதைக் கண்டே சங்க காலத்தில் கொல்லன் உலைமுக்கின் பெயரான குருகு என்ற பெயரால் கூழைக்கடாவையும் அழைத்தனர் என்பது தெளிவாகின்றது.

———

## ௨. கருங்கால் வெண்குருகும், வெள்ளாங் குருகும் சிறுவெள்ளாங் குருகும் (LARGE EGRET, MEDIUM EGRET AND LITTLE EGRET)

சங்க இலக்கியத்தில் குருகு என்றழைக்கப்படும் பறவை எது என்பது விளக்கப்பட்டது. குருகு என்ற பெயர் சிறப்புப் பெயராக வழங்குங்கால் தனிப்பட்டதொரு



கருங்கால் வெண்குருகு

பறவையைக் குறித்து வழங்கியதும் விளக்கப்பட்டது. 'கருங்கால் வெண்குருகு' என்ற அடைமொழியுடன் பல

பாடல்களில் ஒரு குருகு வழங்கப்பட்டுள்ளது. 'வெள்ளாங் குருகு' என்றும், 'வெண் குருகு' என்றும் அழைக்கப்படும் பறவைகளும் சங்க இலக்கியத்தில் வருகின்றன. இவை பறவை நூற்படி எவை என்பதை ஆராயவேண்டும். 'கருங்கால் வெண் குருகு' என்ற பெயர் பல புலவர்களால் அப்படியே பல பாடல்களில் கையாளப்பட்டுள்ளது. ஆதலின் அப்பெயர் குருகினத்தில் ஒரு குறிப்பிட்ட பறவை வகையைக் குறிப்பிடுகின்றது என்பதை அறிய லாம். கரிய காலையும் வெண்மை நிறத்தையும் இப் பறவையைத் தெரிந்து கொள்ளப் பயன்படுத்திய அறிகுறி களாகக் (Diagnostic) கொள்ளலாம்.

*"வளைநீர் மேய்ந்து கிளைமுதற் செலீஇ*
*வாப்பறை விரும்பினை ஆயினும் தூச்சிறை*
*இரும்புலா அருந்துநின் கிளையொடு சிறிதிருந்து*
*கருங்கால் வெண்குரு கெனவ கேண்மதி"*

(நற்றிணை. 54)

*"..........................................சகடம்*
*மணல்மடுத் துரறும் ஓசை கழனிக்*
*கருங்கால் வெண்குருகு வெரூஉம்*
*இருங்கழிச் சேர்ப்பிற்றம் உறைவின் ஊர்க்கே"*

(நற்றிணை. 4)

*"இறவருந்தி யெழுந்த கருங்கால் வெண்குருகு*
*வெண்குவட்டு அருஞ்சிறைத் தாஅய்க் கரைய"*

(நற்றிணை. 67)

*"கழிதேர்ந் தசைஇய கருங்கால் வெண்குரு*
*கடைகரைத் தாழைக் குழீஇப் பெருங்கடல்*
*உடைதிரை யொலியிற் றுஞ்சுந் துறைவ"*

(குறுந்தொகை-303)

*"கருங்கால் வெண்குருகு மேயும்"*
*பெருங்குள மாயிற்றென் னிடைமுலை நிறைந்தே"*

(குறுந்தொகை-325)

"கருங்கால் வெண்குருகு கணைதுயில் மடியும்
இடுகுதுறை அகன்கழி இனமீன் மாந்தி
ஓங்கிருங் குனிகோட் டிருஞ்சினை உறையும்"
(யாப்பருங்கல விருத்தி—மேற்கோள்)

"ஓதஞ் சென்ற உப்புடைச் செறுவின்
கொடுங்கழி மருங்கின் இரைவேட் டெழுந்த
கருங்கால் குருகின் கோளுய்ந்து போகிய
முடங்குபுற இறவின் மோவாய் ஏற்றை
எறிதிரை தொகுத்த எக்கர் நெடுங்கோட்டுத்
துறுகடல் தலைய தோடுபொதி தாழை
வண்டுபடு வான்போது வெரூஉந்
துறைகெழு கொண்கன் துறந்தனன் எனவே."
(நற்றிணை. 211)

நற்றிணை உரையாசிரியரான பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் 211ஆம் பாடலுக்கு உரை கூறும்போது கருங்கால் வெண்குருகு என்பதற்கு 'நாரையின் பகுதியாகிய நெடலை, வக்கா முதலாயின, இவையே தாழம் மோத்தை போலிருப்பன' என்று சொல்லியிருப்பதைக் கவனிக்க வேண்டும். இவர் கூறிய பொருள் பழையதொரு மரபை ஒட்டி எழுதப்பட்டதாகத் தெரிகின்றது. பறவை நூலறிவோடு கருங்கால் வெண்குருகு எதுவென்று ஆராய்ந்தால் தற்காலம் பெரிய வெள்ளைக் கொக்கு என்றழைக்கப்படும் பறவையேயென்று தெரிகின்றது. இது பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் சொல்லிய நெடலைக்கும் சிறிது பெரியதாகும். நெடலை என்று நாட்டு மக்களால் அழைக்கப்படுவது நடுத்தரமானதாகும். இதற்கும் சிறியதைச் சிறிய வெள்ளைக் கொக்கு என்று நாட்டுமக்கள் அழைக்கின்றனர். சிறிய வெள்ளைக் கொக்கைப் பார்க்குங் கால் இது நெடியதாகையால் நெடலை என்றழைத்தனர். இவை மூன்றும் தூய வெண்மையான சிறகுடைய ஒரே இனப்பறவை வகைகளாகும். கருங்கால் வெண்குருகைச் சங்கப்பாடல்களில் தனியே காணப்பட்டதாகவே கூறி

யுள்ளதைக் கூர்ந்து நோக்கவேண்டும். பறவை நூலறிஞர்கள் மற்ற இரண்டு வகைகளும் கூட்டமாகக் காணப்படுவதையும் கருங்கால் வெண்குருகு பெரும்பாலும் தனித்தே இயற்கையில் நீர்நிலைகளருகில் காணப்படுவதையும் கண்டு எழுதியுள்ளனர். ஆதலின் தனித்தே காணப்படும் (Solitary) கருங்காலையுடைய வெண்குருகு தற்காலம் நாட்டுமக்களால் குறிப்பிடப்பெறும் பெரிய வெள்ளைக் கொக்கே (Large egret) என்று கொள்ள வேண்டும். கருங்கால் வெண்குருகு தனியாகக் குளத்திலும், கழிகளிலும், உப்புடைப் பாத்தியிலும் காணப்பட்டதாகச் சங்க நூல்கள் கூறுகின்றன. சிலசமயங்களில் சிறு கூட்டமாகவும் காணப்படலாம். கருங்கால் வெண்குருகு கிளையுடன் மேய்ந்ததை நற்றிணையில் ஒரு பாடல் (54) குறிப்பிடுகின்றது. வெள்ளைக் கொக்கு என்று தற்காலம் கிராம மக்களால் அழைக்கப்பெறும் பறவை வகைகளையே சங்கநூல்கள் 'வெண்குருகு' என்று அழைத்தன. கருங்கால் வெண்குருகு எதுவென்பது மேலே விளக்கப்பட்டது. சங்க நூல்களில் 'வெள்ளாங் குருகு' 'சிறுவெள்ளாங் குருகு' என்ற இரு வெண்குருகு வகைகளும் சொல்லப்பட்டுள்ளன. வெண்குருகு இனத்திற்கு உடற்சிறகுகள் தூயவெள்ளையாக இருக்கும். வெண்குருகினத்தில் (Egrets) மிகநெடியதைக் 'கருங்கால் வெண்குருகு' என்றும் நடுத்தரமான உயரமுடையதை 'வெள்ளாங்குருகு' என்றும், சிறியதைச் 'சிறு வெள்ளாங் குருகு' என்றும் சங்க நூல்கள் அழைக்கின்றன. ஐங்குறுநூற்றில் வெள்ளாங் குருகுப்பத்து என்ற தலைப்பில் வரும் பத்துப்பாடல்களிலும் முதல் இரண்டு வரிகள் "வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக் காணிய சென்ற மடநடை நாரை" என்று ஒரே முறையாக உள்ளன. வெள்ளாங் குருகின் பிள்ளை இறந்ததைக் காணச்சென்ற நாரை என்று பொருள் கூறப்பட்டுள்ளது. ஆனால் செத்த என்ற சொல் சங்க இலக்கியத்தில் இறந்த என்ற பொருளுடன் ஆளப்பட்டதைக் காண்பது அரிது. செத்த என்ற சொல்

போல என்ற பொருளுடன் வழங்கியுள்ளது. பறவை நூலறிவோடு இந்த இயற்கைச் செய்தியை ஆராய்ந்தால் உரை எழுதினவர் கூறிய பொருள் பொருத்தமற்ற தென்பது தெரிகின்றது. வெள்ளாங்குருகின் பிள்ளையைத் தன் பிள்ளையென்று கருதிக் காணச் சென்ற மடநாரை என்று பொருள்கொள்வது பொருத்தமாக இருக்கும். நாரையினப் பறவைகளும் வெள்ளாங்குருகு வகைகளும் ஒரே மரத்தில் ஒரே சூழலில் மிக நெருக்கமாகக் கூடுகட்டி முட்டையிட்டுக் குஞ்சு பொரிப்பது வழக்கமாகும். இதை வேடந்தாங்கலில் இன்றும் காணலாம். கூடுகள் மிக நெருங்கியிருப்பதால் வெள்ளாங்குருகின் குஞ்சை நாரை தன் குஞ்சு என்று மயங்குவது இயற்கையில் நடக்கக் கூடியதே. இங்கே உள்ளுறைப் பொருளும் மாறும். தலைவியின் பிள்ளையைப் பரத்தை கண்டு மயங்குவதும் இவனும் உன் பிள்ளைதான் என்று தலைவி கூறுவதும் சங்கப் பாடல்களில் வரும் செய்தியாகும். வெள்ளாங் குருகிற்குப் பிள்ளைகள் பலவே என்று ஒரு பாடல் கூறு கின்றது.

> *"வெள்ளாங் குருகின் பிள்ளையும் பலவே*
> *அவையினும் பலவே சிறுகருங் காக்கை*
> *அவையினும் அவையினும் பலவே குவிமடல்*
> *ஓங்கிரும் பெண்ணை மீமிசைத் தொடுத்த*
> *தூங்கணங் குரீஇக் கூட்டுவாழ் சினையே"*
>
> *(தொல்காப்பியம்—பொருளதிகாரம் மேற்கோள்)*

வெள்ளாங் குருகுகள் கூட்டமாக ஒரே மரத்தில், சூழலில் பல கூடுகள் கட்டி வாழ்வதால் வெள்ளாங் குருகு களுக்குப் பிள்ளைகள் பல காணப்படுவது இயற்கையே. இதை வேடந்தாங்கலில் பார்க்கலாம். வெள்ளாங் குருகின் பிள்ளைகளைவிடச் சிறுகருங் காக்கைகள் பலவே என்று கூறியது உண்மைச் செய்தியே யாகும். தூக்கணாங் குருவிகள் ஒரே மரத்தில் பல கூடுகள் கட்டிக் குஞ்சு பொரிக்கும். ஒரே சூழலில் நிறையக் கூடுகள் கட்டுவதால்

குஞ்சுகளும் நிறைய இருக்கும். ஆதலால் தூக்கணங் குருவிகளின் கூடுகளில் வாழும் குஞ்சுகள் சிறுகருங் காக்கைக் கூட்டத்தை விட மிகவே என்று கூறப்பட்



வெள்ளாங் குருகு

டுள்ளது. பறவைகளின் குஞ்சுகளையும் கூட்டத்தையும் நன்கு ஆராய்ந்தே இந்தப் பாடல் பாடப்பெற்றுள்ளது.

> "கருங்கோட்டுப் புன்னைக் குடக்குவாங்கு பெருஞ்சினை
> விருந்தின் வெண்குருகு ஆர்ப்பின் ஆஅய்"
>
> - (நற்றிணை, 167)

"இனமீன் ஆர்ந்த வெண்குருகு மிதித்த
வறுநீர் நெய்தல் போல" (நற்றிணை. 183)

"கடிதிடி வெரிஇய கமஞ்சூல் வெண்குருகு
தீங்குலை வாழை யோங்குமடல் இராது
நெடுங்கால் மாஅத்துக் குறும்பறை பயிற்றுஞ்"
(அகம். 141)

"இலங்குபூங் கரும்பி னேர்கழை இருந்த
வெண்குருகு நரல வீசும்" (அகம். 13)

"வேப்புநனை யன்ன நெடுங்கண் ணீர்ஞெண்டு
இரைதேர் வெண்குருகு அஞ்சி அயலது" (அகம். 176)

வெண்குருகு மீனையும் இருவையும் நண்டையும் உண்ட தாகக் கூறப்பட்டுள்ளது. வெண்குருகு என்ற பெயர் வெள்ளைக் கொக்கிற்குப் பொதுப் பெயராக வழங்கிற்று என்று கருதலாம். அடைமொழியற்ற குருகு என்ற பெயர் வண்டானத்தை—கூழைக்கடா என்ற பறவையைக் குறிக்கு மென்பதை முன்னரே செல்வியில் விளக்கியுள் ளேன். குருகு சாம்பல் நிறமானது. அதனின்றும் பிரித் துக் கூறவே வெண்குருகு என்றும் வெள்ளாங்குருகு என்றும் சங்க நூல்களில் பாடியுள்ளனர். இதை யறியாது பிற்காலத்தில் குருகுகள் எல்லாம் வெண்மையென்றும், வெண்மை நிறம் காரணமாகவே குருகு என்ற பெயர் வந்ததாகவும் கருதினர்.

சிறுவெள்ளாங் குருகை (Little Egret) ஒரு நற்றிணைப் பாடல் மிக அழகாக வர்ணித்துள்ளது.

"சிறுவெள்ளாங் குருகே சிறுவெள்ளாங் குருகே
துறைபோ கறுவைத் தூமடி யன்ன
நிறங்கிளர் தூவிச் சிறுவெள்ளாங் குருகே
யெம்மூர் வந்தெம் மொண்டுறை துழைஇச்
சினைக்கெளிற் றார்கையை யவரூர்ப் பெயர்தி
யனையவன் பினையோ பெருமற வியையோ

ஆங்கட் டெம்புன லிங்கட் பரக்கும்
கழனி நல்லூர் மகிழ்நர்க்கென்
இறைநெகிழ் பருவரல் செப்பா தோயே''

(நற்றிணை. 70)

சிறிய வெள்ளாங்குருகை விளித்து நன்றி மறவாமல் தலைவனுக்கு என்னுடைய நோயைச் சொல்வாயா என்று தலைவி கேட்பதாக அமைந்துள்ளது இந்த நற்றிணைப் பாடல். நீர்த்துறையில் அழுக்குப் போகத் துவைக்கப் பட்ட தூய வெள்ளையான துணிபோல வெள்ளை நிறம் மிளிரும் தூவியையுடைய சிறிய வெள்ளாங்குருகே என்று கூறியுள்ளது கவனிக்கத்தக்கது. இங்குக் கூறிய உவமை மிகவும் அழகானது. பொருத்தமானது. இயற்கைச் செய்திகளை நுண்ணிதாக ஆராய்ந்து எழுதியுள்ள இக்கால அறிஞர் (M. Krishnan) இதே உவமையைச் சிறு வெள்ளாங் குருகின் நிறத்தை வர்ணிக்கும்போது பயன் படுத்தி யிருப்பது எண்ணி இன்புறத்தக்கது. மாட்டுக் கொக்கின் பழுப்பு கலந்த வெண்மை நிறத்தையும் சிறு வெள்ளாங் குருகின் தூய வெண்மை நிறத்தையும் வேறுபடுத்திக் கூறும்போது இந்த உவமையை விளக்கத்திற்குப் பயன்படுத்தி யிருக்கின்றார். (The white colour of the cattle egret is not the cold,


சிறு வெள்ளாங் குருகு

dazzling white of the little egret and the medium egret but somewhat warm yellowish white. This distinction may be seen slight on paper but it is quite obvious in the field being *the difference between well laundered white clothes glisterring with just a squeeze or the last rinse* and the colour of old cream laid paper) இந்த அறிஞர் கூறியுள்ளது போலவே 'நிறங்கிளர் தூவி' (Dazzling) என்று கூறியதைக் கவனிக்க வேண்டும். சங்கநூற் புலவர்கள் இயற்கையிலிருந்து உவமைகளை எவ்வளவு நுண்மையாக, பட்டறிவோடு எடுத்தாண்டுள்ளனர் என்பது விளங்கும்.

வெள்ளாங் குருகுகளுக்குக் குஞ்சு பொரிக்கும் காலத்தில் அழகான, நுண்ணிதான, பனிக்கூட்டம் போன்ற வெண்மையான தூவிகள் (Diaphanous, lacelike, filamentous plumes) தோன்றும். இந்தத் தூவிகள் காணப்படுவதாலே வெண்குருகை அசையும் கரும்பின் பூவிற்கும், வேழத்தின் பூவிற்கும் ஒப்பிட்டு ஐங்குறுநூற்றுப் பாடல்கள் கூறுகின்றன. குருகுபோல வெண்மையென்று கூறும் வழக்குப் பின்னர்த் தோன்றியது. ''குருகினும் வெளியோய் தேளத்துப், பருகுபாலன்னவென் சொல்லுந் தேனே'' என்ற வரியைப் பேராசிரியர் மேற்கோளாகக் காட்டியுள்ளார். 'கச்சியிற் காக்கை கரிது, கொற்கையில் குருகு வெளிது' என்று இரு பாடல்கள் கூறுகின்றன. இங்கெல்லாம் குருகு என்பதற்கு வெண்குருகு, வெள்ளாங் குருகு என்றே பொருள் கொள்ள வேண்டும். கொற்கைக் கடலோரத்தில் வெள்ளாங் குருகுகள் அக்காலத்தில் நிறைய இருந்திருக்கலாம். வெண்குருகை வெண்கூதாளப் பூவோடு ஒப்பிட்டு அகநானூறு கூறுகின்றது.

> ''விசும்பு விசைத்தெழுந்த கூதளங் கோனதயிற்
> பசுங்கால் வெண்குருகு வாப்பறை வனஇ''
>
> (அகம். 273).

*"பைம்புதல் நளிசினைக் குருகிருந் தன்ன*
*வண்பிணி யவிழ்ந்த வெண்கூ தாளத்து"* (அகம். 178)

வெண் கூதாளப்பூ ஒளிவிடும் வெள்ளை நிறமாகக் காணப் படும். முறுக்கு அவிழ்ந்து மலரும் பூ வெண்குருகு இருந் ததுபோலத் தோன்றியதாகக் கூறியுள்ளது அழகிய உவமையாகும். இந்த வெண்கூதாளத்தைச் சிறுதாளி என்று தற்காலத்தில் அழைப்பர். பழைய அகராதிகளில் குருகுதாளி என்றழைக்கப்பெற்றுள்ளது. கூதளஞ் செடிக்குக் குருகுதாளி என்ற பெயர் அதைக் குருகிற்கு ஒப்பிட்டுக் கூறும் சங்கநூல் வழக்கால் தோன்றியிருக்கும். சங்க நூல்களில் குருகைக் கூதளம்பூவிற்கு ஒபபிட்டுக் கூறியது வழக்காக மாறிப் பின்னர்க் குருகுதாளி என்ற பெயர் தோன்றியது என்று கருதலாம். இதுபோன்றே குருவி நாணலின் பூ (Arundo Donax) குருகுபோல இருப்ப தாக ஐங்குறுநூறு கூறுவதைக் காணலாம்.

*"புதன்மிசை நுடங்கும் வேழ வெண்பூ*
*விசும்பாடு குருகிற் றோன்று மூரன்"*

—ஐங்குறுநூறு, 17

குருவிநாணல் என்று தற்காலம் அழைக்கப்படும் நாணல் சங்ககாலத்தில் வேழம் என்று அழைக்கப்பட்டதாகத் தெரிகின்றது இதுவே கொறுக்காந் தட்டையாகும். இந்தக் குருவிநாணல் என்ற பெயர் குருகுநாணல் என்று இருந்திருக்கலாம். பின்னர் குருவிநாணல் என்று மக்கள் வாயில் மருவி வழங்கிற்று என்று கொள்ள வேண்டும். கரும்பின் பூவையும், வேழத்தின் பூவையும் குருகிற்கு ஒப்பிட்டுக் கூறுவது சங்கநூல் வழக்காகும். சிறு வெள்ளாங் குருகிற்குக் கால் பசுமையாகவும் அடி கருமை யாகவும் இருக்குமென்று பறவை நூலார் கூறுவர். ஆனல் கருங்கால் வெண்குருகிற்குக் கால் கருமையாகவும் அடியும் கருமையாகவும் இருக்குமென்று கூறுவர். தேவாரத்தில் 'கருவடிய பசுங்கால் வெண்குருகென்று' சிறுவெள்ளாங் குருகு கூறப்பட்டுள்ளது. இந்தச் சிறுவெள்ளாங்

குருகின் கால் முட்டையிடும் காலத்தில் சிவப்பாக மாறு மென்று பறவை நூலார் கூறியுள்ளனர். 'செங்கால் நல்வெண்குருகு பைங்கானல் இரை தேரும்' என்று தேவாரத்தில் கூறப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கதாகும்.

முன்னர்க் காட்டப்பட்ட நற்றிணை 211ஆம் பாடலில் கருங்கால் குருகின் குத்துக்குத் தப்பித்த இருல்மீன் தாழையின் வெள்ளிய பூவைக் கண்டு குருகென்று பயந்த தாகக் கூறியதைக் காணலாம். குருகையும் தாழையின் பூவையும் ஒப்பிட்டுக் கூறும் வழக்கு பிற்கால நூல்களான தேவாரம், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், கல்லாடம் ஆகியவற்றிலும் காண்கிறோம். பிற்கால நூல்களில் சிலவகைக் குருகுகள் தாழைப் புதரில் வாழ்வதாகக் கூறுவதைக் காணலாம். 'தாழை வெண்பூக் குருகென மலரும்' என்று குறுந்தொகை (226) கூறியுள்ளது.

*"முருகுவாய் மூட்டாழை நீண்முகைபார்ப் பென்றே*
*குருகுவாய்ப் பெய்திரை கொள்ளா—துருகிமிக*
*இன்று வெயில்சிற கான்மறைக்குஞ் சேர்ப்ப! நீ"*
*—திணைமாலை நூற்றைம்பது, 36.*

*"சேவன்மண் டலித்துச் சினையடை கிடக்குங்*
*கைதைவெண் குருகெழ மொய்திரை யுகளு*
*முளைகடற் சேர்ப்ப னளிவிடந் தணிப்ப"*
*—கல்லாடம், 92 : 12—14.*

*"மீனுண வுள்ளி யிருந்தவெண் குருகெனச்*
*சோறுநறை கான்ற கைதைய மலருங்"*
*—கல்லாடம், 21 : 17—18.*

*"பிணர்முடத் தாழை விரிமலர் குருகென*
*நெடுங்கழிக் குறுங்கய னெய்தலுண் மறைந்தும்"*
*—கல்லாடம், 72 : 17—18.*

*"வெள்ளிற வுண்ண விழைந்து புகு குருகினங்*
*கருங்கழி நெய்தலைக் காவல்செய் கண்ணென*
*வரவெயிற் றணிமுட் கைதையு ளடங்கியும்"*
*—கல்லாடம், 72 : 26—28.*

"கருங்கழி கொடுக்கும் வெள்ளிற வருந்தக்
கைபார்த் திருக்கு மடப்பெடைக் குருகே
பெடைக்குரு கணங்கின் விடுத்தவெண் சினையொடு
காவலடை கிடக்கும் கைதையம் பொழிலே"

—கல்லாடம், 23 : 6—9.

'நெய்தற் குருகு தன் பிள்ளையென்றெண்ணி நெருங்கிச் சென்று கைதைமடல் புல்கு கழிப்பாலை' (106-1) என்று அப்பர் கூறுகின்றார். வெண்குருகு தன் பெடையென்று கருதித் தாழை வெண்மடலைப் புல்குவதாகச் சம்பந்தர் பாடியுள்ளார். தாழையின் நீண்ட முகையைத் தன்னுடைய குஞ்சென்று குருகு கருதுவதாகத் திணைமாலை கூறுகின்றது. இந்த உவமையைக் கையாள்வதன் காரணம் சிலவகைக் குருகுகள் தாழைமரச் சூழலில் காணப்பட்டதாலேயாகும். பறவை நூலறிஞர்களும் சிலவகைக் குருகுகள் (Yellow bittern, Black bittern, Chestnut bittern) தாழைப்புதரில் கூடுகட்டுவதையும் பதுங்கி யிருப்பதையும் கூறியுள்ளார்கள். தாழையின் சூழ்நிலையிலேயே அடிக்கடி இந்தக் குருகுகள் காணப்பட்டதால் தாழைமடல் போலவும் தாழையின் மடல் பொதிந்த பூப்போலவும் இருந்தனவாக உவமிக்கப்பட்டன. கல்லாடத்தில் சோறு போல மகரந்தம் உள்ள தாழம்பூ வெண்குருகு போல மலர்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது. மற்றும் குருகுகள் கைதையுள் அடங்கும் என்றும் கூறப்பட்டுள்ளது. கருங்கழி ஓரம் கைதையம்பொழிலில் பெடைக்குருகு வெள்ளை முட்டை யிட்டுக் காவல் காக்கும் என்றும் கல்லாடம் கூறுவதைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். இந்தக் கல்லாடப் பாடல்களில் காணும் செய்திகளை ஒத்துக் கம்பர் ஓர் அரிய செய்தியைக் கூறியுள்ளார்.

"கருந்தகைய தண்சினைய கைதைமடல் காதல்
தருந்தகைய போதுகிளை யிற்புடை தயங்கப்
பெருந்தகைய பொற்சிறை யொடுக்கியுடல் போராது
இருந்தகுரு கின்பெடை பிரிந்தவர்க ளென்ன"

—4—10—78.

கைதை மடலில் சிறையொடுக்கி உடல் பேராது குருகின் பெடை இருந்ததாகக் கம்பர் கூறியுள்ள செய்தி மிக அரிய இயற்கைச் செய்தியாகும். கருங்குருகு கைதை மடலில் இருப்பதைக் கம்பர் கூறியுள்ளார். கருநிறமாயிருப்பதைக் 'கருந்தகைய' என்று கூறிப் பெற வைத்துள்ளார். குளிர்ச்சியான முட்டைகளை விட்டிருந்ததைத் 'தண்சினைய' என்று கூறினர். கல்லாடத்தில் 'விடுத்த வெண்சினை யொடு' என்று கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். ''காதல் தருந்தகைய போதுகிளையிற் புடைதயங்க'' என்றுவரும் மூன்ருவது வரிக்கு ஆசையூட்டு மலர் புறவிதழ் களின் பக்கங்களோடு சூழ்ந்து விளங்க என்று பொருள் கூற வேண்டும். ஆனல், 'கிளையிற் புடை தயங்க' என்பதற்கு நாரைக்குச் சுற்றம் விளங்க என்று பொருள் கொண்டு உரை கூறியிருப்பதைக் காணலாம். 'கிளையிதழ் பறியா' என்று குறிஞ்சிப்பாட்டில் வருகின்ற இடத்தில் புறவிதழ் பறித்து என்று நச்சினர்க்கினியர் பொருள் கூறி யிருப்பதைக் காணலாம். தாழைமலரின் 'புறவிதழ்கள்' நன்கு திறக்காது சிறிது திறந்து பக்கங்களில் சூழ்ந்து விளங்கினதையே அழகிய சிறகுகளை யொடுக்கி உடல் பேராது இருந்த குருகின் பெடைபோல இருந்தது என்று கம்பர் கூறுகின்ருர். இங்குதான் கம்பர் கூறும் உவமை நயம் மிகச் சிறப்பாக உள்ளது. நாரைகளில் ஒருவகை எப்போதும் நீர் நிறைந்த கால்வாய், கழிகளின் ஓரங்களில் உள்ள செடிப்புதர்களில் வாழும். பகலில் பதுங்கியிருந்து சாயங்காலத்தில் உணவு தேட வெளிவரும். இந்த இன நாரைகளை பிட்டெர்ன் (Bittern) என்று பறவை நூலில் கூறுவர். இவற்றில் மஞ்சள் நாரை, தவிட்டு நாரை, கருப்புநாரை என்று மூன்று வகைகளைப் பிரித்துக் கூறுவர். இந்த மூன்று வகைகளில் கருப்புநாரையையே கம்பர் கூறியுள்ளார். இந்தக் கருப்புநாரை பெரும்பாலும் கைதையம் பொழிலில், தாழைமரப்புதரில் காணப்படுவ தால் மலையாளத்தில் 'கைதைக் கொக்கு' என்றழைத்தனர். அசாமி மொழியிலும் தாழைக்கொக்கு என்ற பொருளில்

இதன் பெயர் வழங்குகின்றது. இந்த நாரை கருப்பு நிறமானது. கம்பருங் கருந்தகைய என்று இதன் நிறத்தைக் கூறியுள்ளார். கைதைமடலில் இருப்பதையும் கூறியுள்ளார். கைதையில் முட்டை யிட்டதையும் கூறியுள்ளார். இந்தக் கருத்த நாரைக்கும் இதன் இனமான பிட்டெர்ன் (Bittern) பறவைகளுக்கும் ஓர் அரிய குணம் உண்டு என்று பறவை நூலார் கூறியுள்ளனர். ஆபத்துக் காலத்தில் அவை பறந்து செல்வதில்லை. அப்படியே ஆடாது அசையாது தங்களைச் சுற்றியுள்ள இலைபோல, கிளைபோல மாறிவிடும். உடலை நீட்டிவைத்து, அலகை மேல்நோக்கி நீட்டிக்கொண்டு, அதன் சூழ்நிலையில் உள்ள செடி, செத்தைபோல மாறிவிடும். இந்தக் காரணத்தால் இதைக் கண்டுபிடிப்பது எளிதன்று. (All the Bitterns are tawny brownish birds-blackish birds-their soft feathers richly sheathed and speckled to resemble the reeds in which they live. Bitterns depend on their camouflage instead of flight when danger threatens. They have an uncanny knack of freezing into reed-like pose with body and bill pointed skyward. This blends into their surroundings. The bittern seems to know which side of his body is most concealingly coloured and will turn slowly to keep its striped front facing the intruder. In a windy day they will even sway slightly as if with the breeze). இந்த நாரைகள் சூழ்நிலையைப் போலிருப்பதுடன் தன்னுடைய உடலின் எந்தப் பக்கத்தைத் திருப்பிக் காட்டிச் சூழலில் உள்ள செடிபோல இருந்து மறைந்துகொள்ளலாம் என்பதை உணர்ந்து அந்தப் பக்கத்தையே காட்டுந் திறமும் உடையது. மற்றும் ஆடாது அசையாது இருந்து காற்றில் கிளை ஆடும்போது தானும் கிளைபோலவே அசைந்துகொடுக்கும் என்று ஒரு பறவை நூலாசிரியர் கூர்ந்து கவனித்து எழுதியுள்ளார். இச் செய்தியைக் குறித்தே 'சிறையொடுக்கி உடல் பேராது இருந்த குருகின் பெடை' என்று கம்பர் கூறியிருப்பதைக்

காணும்போது கம்பர் சிறந்த உயிர்நூல் புலவர் என்பது விளங்கும். குறுந்தொகையிலேயே தாழைமடல்போலக் குருகின் சிறகு இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. சங்க நூல்களிலும் கல்லாடத்திலும் தாழையில் குருகு தங்கு வதைக் கூறியுள்ளனர். இது மற்ற நாரை யினங்கள் போலக் கூட்டமாக இராது. இந்தக் கருப்புநாரை ஆணும் பெண்ணுமாகவே இருக்கும் என்பர். ஆணும்பெண்ணு மாக இருப்பதைக் கம்பர் கூறியுள்ளதைக் காணலாம். இந்தக் கருப்புநாரையை மழைக்காலத்தில்தான் பார்க்க முடியும் என்றும் மழைக்காலத்தில்தான் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் என்றும் பறவை நூலார் கூறியுள்ளனர். கருப்புநாரை கடற்கரைக் கழியில் காணப்படாது உள் நாட்டில் காணப்படும் என்று கூறுவர். கம்பர் கறுப்பு நாரையைப்பற்றிச் சொன்ன செய்திகளும் அதன் இயற்கைச் செய்திகளுடன் ஒத்தே காணப்படுகின்றன.

சங்கப்புலவர்கள் தாழைப்புதரில் இந்தவகைக் குருகு களைக் காண முடியாது ஏமாந்து பின்னர் நெருங்கிக் கண்டு இந்த உவமையைக் கண்டுபிடித்தனரோ என்று நினைக்க வேண்டியுள்ளது. இக்கால அறிஞர்கள் கண்ட ஒப்பு மையையே சங்ககாலப் புலவர்கள் உவமையில் கற்பனை யையும் கூட்டிப் பயன்படுத்தியிருப்பது எண்ணி மகிழத் தக்கது. இதுசார்பாகப் பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் கூறிய விளக்கத்தையும் நினைவு கூர வேண்டும். தாழையின்பூ (ஆண்பூ) நெடலை, வக்கா போலிருப்பதாக விளக்கியுள்ளதைப் பார்க்கலாம். இந்த வக்கா (Night heron) போன்ற பறவைகளே, அதற்கு நெருங்கிய இனமான பறவைகளே தாழைமரச் சூழலில் வாழும் சில வகைக் குருகுகளாகும். இதில் ஒருவகையைக் கைதைக் கொக்கு என்று மலையாளத்தில் அழைக்கின்றனர். இந்த மலையாளப் பெயர் கல்லாடம் கூறும் கைதை வெண்குருகு போன்றுள்ளது. அப்பர் கூறிய நெய்தற் குருகும் இந்த வகைக் குருகே என்று கொள்ள வேண்டும். தாழை மடலில் வாழ்வதாகக் கூறும் குருகுகள் மூன்றுவகை.

உள்ளன என்பதையும் அறிய வேண்டும். இவற்றுக்கெல்லாம் குருகு என்ற பெயர் பொதுவாக வழங்கியுள்ளது. கைதைக்குருகு என்றும், நெய்தற்குருகு என்றும் பிரித்தும் இருவகை காட்டப்பட்டுள்ளது. 'செங்கால் நல்வெண்குருகு', 'பசுங்கால் கருவடிய குருகு' என்றும் தேவாரத்தில் குருகுகள் அழைக்கப்பட்டுள்ளன. குருகுகளின் கால்கள் குஞ்சு பொரிக்கும் காலத்தில் சிவப்பு நிறமாகவும் பசுமையாகவும் மாறுவதுண்டு. பசுங்காலும் கரிய அடியும் உடைய வெண்குருகு நெடலி எனப்படுவதாகும்.

கலைக்களஞ்சியத்தில் வெள்ளாங்குருகு என்பது சிறப்பாக Ibis என்ற பறவை என்று கூறியிருப்பதைக் காணலாம். ஆனல், சங்கநூற் செய்திகளை நன்கு ஆராய்ந்து பார்த்தால் அது தவறே என்று தெரிகின்றது. கலைக்களஞ்சியம் குறிப்பிடும் பறவையைத் தற்காலத்தில் வேடந்தாங்கலில் 'அரிவாள்மூக்கன்' என்றழைப்பர். இந்த வெள்ளை அரிவாள்மூக்கன் என்ற பறவைக்குத் தலை கருமையாகக் கழுத்துவரை இருக்கும். ஆதலின் முற்றிலும் வெண்மையாகக் கூறப்படும் வெண்குருகோ, வெள்ளாங்குருகோ இதுவாக இருக்கமுடியாது. மற்றும் அரிவாள்மூக்கன் வகையில் முற்றிலும் கருமையானதொரு வகையும் உள்ளது. இதைக் கலைக்களஞ்சியம் கருங்குருகு என்று கூறியுள்ளது. கருங்குருகு என்ற பெயர் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை. இந்த அரிவாள் மூக்கன் , பறவை வகைகளில் கரண்டியைப்போன்ற தட்டையான மூக்குள்ள பறவையும் வேடந்தாங்கலில் காணப்படுகின்றது. இதை அங்கே 'மண்வெட்டிவாயன்' என்றழைக்கின்றனர். ஆங்கிலத்தில் Spoon-billed ibis என்று கரண்டிமூக்குடையதாகப் பெயர் சொல்லி அழைப்பர்.

குருகு வேறு நாரை வேறு என்பதை உணராது சங்கப் பாடல்களுக்கு உரை கூறுங்கால் குருகை நாரை

யென்று கொள்ளுதல் வழக்கமாக உள்ளது. சங்கநூல்கள் குருகையும் நாரையையும் வேறுபடுத்தியே பாடியுள்ளன. குருகுப்பெயர்க்கு அடைமொழி கொடுத்துக் குருகின் வகைகளையும் கூறியுள்ளன. தூய வெள்ளையான வெண்குருகையும் சாம்பர் நிறமான நாரையையும் ஒரே பறவையாகக் கருத இடமில்லை. சங்க இலக்கியத்தில் வெண்குருகிலே மூன்றுவகைகள் விளக்கப்பட்டுள்ளன. இவை கருங்கால் வெண்குருகு, வெள்ளாங் குருகு, சிறுவெள்ளாங் குருகு (Large egret, Small egret, Little egret) ஆகிய பறவைகளாகும். இவற்றை இந்தக் காலத்தில் நாட்டுமக்கள் பெரிய வெள்ளைக்கொக்கு, நெடலி, சிறிய வெள்ளைக்கொக்கு என்றழைக்கின்றனர்: பறவை நூலில் Egretta alba, Egretta intermedia, Egretta garzetta என்றழைப்பர்.



## ரு. அன்றில்
## (NIGHT HERON)

அன்றில் என்றதொரு பறவை சங்க இலக்கியத்தில் அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை முதலிய நூல்களில் கூறப்படுகின்றது. நெய்தற்றிணைக்குரிய கருப்பொருளாகப் பேசப்படுகின்றது. நெய்தற்குரிய பறவையாக இது கூறப்படுவதிலிருந்து இப் பறவை கடலுக்கருகாமையில் அமைந்த சூழ்நிலையில் (Littoral traet) வாழ்ந்ததாகத் தெரிகின்றது. சங்க இலக்கியத்தில் கூறப்படும் கடற்கரைச் சூழ்நிலை விளக்கம் அக் காலத்தில் இருந்ததை உள்ளபடியே கூறுவதாகும். சங்க இலக்கியத்தில் கூறப்படும் சில இயற்கை பற்றிய செய்திகள் தற்காலம்கூட உண்மையாக இருப்பதைக் காணலாம்.



அன்றில்

அன்றில் எனும் பறவை பனைமரத்தில் வாழ்ந்ததாகச் சங்க நூல்களில் பல இடங்களில் புலவர்கள் கூறியுள்ளனர். பனைமரங்கள் கடற்கரையிலும், கடற்கரைச் சிற்றூர்களிலும் அக்காலத்தில் நிறைய இருந்திருக்கின்றன.

> "...............கானல்
> ஆடரை புதையக் கோடை யிட்ட
> அடும்பிவர் மணற்கோ டூர நெடும்பனை
> குறிய வாகுந் துறைவனைப்
> பெரிய கூறி யாயறிந் தனளே".

என்ற குறுந்தொகை(248)ப் பாடலில் மேற்காற்று குவித்த மணல்மேட்டினால் பனைமரத்தின் அடிப்பாகம்

மறைந்து குறும்பனையாகத் தோன்றுவதாகக் கூறப்பட்டிருப்பது இன்றும் கடற்கரையில் காணக்கூடிய காட்சியாகும். அடிமரம் மத்தளம்போற் பெருத்து, 'முழவுமுதலரைய தடவுநிலைப் பெண்ணை'யாகக் காணப்படுவது இன்றும் கடற்கரைச் சிற்றூர்களில் பார்க்கக்கூடியதாகும். கடற்கரையில் பனைமரத்தில் அன்றில் கூடுகட்டுவதாகப் பல சங்கப்புலவர்கள் பாடியுள்ளனர்.

*"..................எல்லி*
*மனைசேர் பெண்ணை மடல்வாய் அன்றில்*
*துணையொன்று பிரியினுந் துஞ்சா காணெனக்"*
—அகம். 50.

*"பெண்ணை ஓங்கிய வெண்மணற் படப்பை*
*அன்றில் அகவும் ஆங்கண்*
*சிறுகுரல் நெய்தலெம் பெருங்கழி நாட்டே"*
—அகம். 120.

*"இனமீ னருந்து நாரையொடு பனைமிசை*
*யன்றில் சேக்கு முன்றிற் பொன்னென"* —அகம். 360.

*"செக்கர் தோன்றத் துணைபுணர் அன்றில்*
*எக்கர்ப் பெண்ணை அகமடல்சேரக்"* —அகம். 260.

*"பராரைப் பெண்ணைச் சேக்கும் கூர்வாய்*
*ஒருதனி அன்றில் உயவுக்குரல் கடைஇய"* —அகம்.305.

*"கடவுள் மரத்த முள்மிடை குடம்பைச்*
*சேவலொடு புணராச் சிறுகரும் பேடை*
*இன்னாது உயங்குங் கங்குலும்"* —அகம். 270.

*"தமியேன் கேட்குவென் கொல்லோ*
*பரியரைப் பெண்ணை அன்றிற் குரலே"*
—நற்றிணை. 218.

*"தொன்றுஉறை கடவுள் சேர்ந்த பராரை*
*மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத்*
*துணைபுணர் அன்றில் உயவுக்குரல் கேட்டொறும்"*
—நற்றிணை. 303.

"மையிரும் பனைமிசை பைதல உயவும்
அன்றிலும் மென்புறம் நரலும்"

—நற்றிணை. 335.

"முழவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணைக்
கொழுமட லிழைத்த சிறுகோற் குடம்பைக்
கருங்கா லன்றிற் காமர் கடுஞ்சூல்
வயவுப்பெடை யகவும் பானாட் கங்குல்
மன்றம் போழும் இனமணி நெடுந்தேர்"

—குறுந்தொகை. 301.

"ஏங்குவயி ரிசைய கொடுவா யன்றில்
ஓங்கிரும் பெண்ணை யகமட லகவ"

—குறிஞ்சிப்பாட்டு. 219—220.

"மன்றவம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை
அன்றிலும் பையென நரலும்"

—குறுந்தொகை. 177.

"நெருப்பி னன்ன செந்தலை யன்றில்
இறவி னன்ன கொடுவாய்ப் பெடையொடு
தடவி னோங்குசினைக் கட்சியிற் பிரிந்தோர்"

—குறுந்தொகை. 160.

மேலே காணும் பாடல்களில் அன்றில் வாழும் சூழ்நிலையைப் பற்றிச் சில செய்திகள் கூறப்பட்டிருக்கின்றன. இதில் முதன்மையானது அன்றில் பனை மரத்தில் வாழ்வதாகும். இப் பாடல்களில் வரும் பிற செய்திகளையும் பறவை நூலறிவொடு 'Ornithology' ஆராயுங்கால், அன்றில் பறவை நூலில் கூறப்படும் 'Night heron' என்பதே என்று தெளியலாம். பறவை நூலார் இப் பறவை சிறு கோல்களால் அடர்ந்த மரங்களில், யாரும் எளிதில் காணமுடியாதபடி இலை, மட்டை முதலிய மறைவான சூழலில் கூடு கட்டுவதாகக் கூறுகின்றனர். இதைப் 'பெண்ணைக் கொழுமட லிழைத்த சிறு கோற் குடம்பை' என்ற குறுந்தொகைச் செய்தியிலிருந்து உணரலாம். 'பெண்ணை வாங்கு மடற் குடம்பை',

'பெண்ணை மடல்வாய் அன்றில்' என்ற வரிகளில் மடலில் மறைவாக அன்றில் கூடு கட்டுவது கூறப்பட்டுள்ளது. இப் பறவை கடற்கரைக் கழி ஓரங்களிலும், கடற்கரை ஊர்களிலும், மனிதர் இடையூறு செய்யாவிடில் உள்ளூர் மரங்களிலும் கூடுகட்டி வாழ்வதாகப் பறவை நூலார் கூறுவர். இதே இயற்கைச் சூழ்நிலையையே சங்கப் பாக்களும் கூறுகின்றன. 'சிறுகுரல் நெய்தலெம் பெருங் கழி நாட்டிலும்', 'நெடுநீர் இருங்கழியிலும்' அன்றில் வாழ் வதாக அகம்-120ஆம், 50ஆம் பாடல்கள் பகருகின்றன. 'கடவுள் மரத்த முள்மிடைக் குடம்பை', 'தொன்றுறைக் கடவுள் சேர்ந்த பராரை மன்றப் பெண்ணை' என்று பேசப் படுவதிலிருந்தும் கடவுளுக்குரிய பனைமரத்திலும், பொது மன்றத்திலிருந்த பனையிலும் இப் பறவை கூடுகட்டி வாழ்ந்ததாகத் தெரிகின்றது. கடவுள் உறையும் மரத் திலும், மன்றப் பனையிலும் மனிதர் இடையூறு இல்லை யாதலால் அன்றில் அங்கே கூடு கட்டி வாழ்வதை வழக்க மாகக் கொண்டிருக்க வேண்டும். இவ்வாறு இடையூறில் லாமல் கூடுகட்டி வாழ்வதைத் தமிழ்நாட்டில் சில ஊர் களில் காணலாம். இது பறவை நூலில் காணப்படும் செய்தியோடு ஒத்திருக்கின்றது. பனைமரத்தில் இப் பறவை காணப்படுவதாகக் கூறப்பட்ட செய்தி சிறிது காலத்திற்கு முன் நாட்டுப்புற இயற்கைச் சூழ்நிலை பற்றி எழுதப்பெற்ற* ஒரு புத்தகத்திலும் காணப்படுகின்றது. ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் கண்டு கூறப்பட்ட செய்தி இன்றும் ஓரளவு உண்மையாக இருப்பது வியப்பைத் தருவதாகும். இதை இன்று சில இடங்களில் பனங்கிளி என்றழைப்பதும் கவனிக்கத் தக்கது.

அன்றில் பனையிலிருக்குஞ் செய்தியைச் சங்கப் புலவர்கள் கூறியதைக் கண்ட பிற்காலப் புலவர்களும்

*Another useful bird is the night-heron, found nesting on palmyra and other tall trees. It has a black head with a crest on it. —Rural Science.

அச் செய்தியைப் போற்றித் தங்கள் பாடல்களிலும் பயன் படுத்தினர். இலக்கண உரையாசிரியர்களும் இச் செய்தியை விடவில்லை. மயிலைநாதரும், சங்கர நமச் சிவாயரும் இச் செய்தியை எடுத்துக் காட்டாகக் கையாண் டிருக்கின்றனர். ஏழன் உருபான 'கண்' இருகிழமைப் பொருளில் பொருளிடமாகி வருவதற்குப் 'பனையின்க ணன்றில்' என்பதை உரையாசிரியர்கள் காட்டியிருக் கின்றனர். 'பனையின்க ணன்றில்' என்பதில் பிறிதின் கிழமையைப் புரிந்து கொள்வது எளிது. ஆனால், அதன் தற்கிழமையை மேற்காட்டப்பட்ட சங்க நூற்பாடல் வரி களோடு படித்தால்தான் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியும். தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் சேனு வரையர் ஆறும் வேற்றுமைக்கண் பொருட் பிறிதின் கிழமைக்குக் 'காட்டதியானை'யைக் கூறியிருக்கின்றார். 'காட்டதியானை' வாழ்ச்சிக் கிழமையாகவும் கொள்ளப் படுகின்றது. இந்த வாழ்ச்சிக்கிழமை,

> "ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்கு
> ஏழும் ஆகும் உறைநிலத் தான"

என்ற தொல்காப்பியச் சூத்திரப்படி 'காட்டின்கண் யானை' என்று ஏழாம் வேற்றுமை உருபு விரிந்தும் அமையும். நற்றிணை 218ஆம் பாட்டில் வரும் 'பெண்ணை அன்றில்' என்பதைப் பெண்ணையதன்றில் என்றும் பெண்ணையின்கண் அன்றில் என்றும் இரு வேற்றுமை உருபும் விரித்துக் கூறினும் அமைவதைக் காணலாம். ஆதலின் 'பனையின்கணன்றில்' என்பது வாழ்ச்சிக் கிழமைக்கும் சிறந்த எடுத்துக் காட்டாகும். தற்கிழமை யென்றது தன்னோடொற்றுமையுடைய பொருள் என்று சேனவரையர் கூறுகின்றார். பனைக்கு ஒற்றுமையுடைய பறவை அன்றில் என்பது நெடுங்காலமாகச் சங்கப் புலவர்களும், பிற புலவர்களும் கண்ட செய்தியாகும்.

அன்றிலைப் பற்றிச் சங்க நூல்களில் கூறப்படும் பிற செய்திகளும் பறவை நூலிற் சொல்லப்படுபவற்றோடு

ஒத்தே காணப்படுகின்றன. பறவை நூலில் இப் பறவை பகலில் வெளியே போகாது இரவில் இரை தேடப் போவதாகக் கூறப்படுகின்றது. பகலெல்லாம் வெளியே போகாதிருப்பதால் இரவில் துணையைப் பிரிந்திருக்க வேண்டியதாகின்றது. இதைப் பார்க்கச் சங்கப் புலவர்கள் இரவில் அன்றிற் பறவை தனித்திருப்பதாகவும், துணைக்கு ஏங்கிக் குரலிடுவதாகவும் கூறி யிருக்கின்றனர். ஆனால், இப் பறவைகள் இரவில் குரலிடுவதற்குக் காரணம் துணையைப் பிரிவதால் ஏற்படும் துன்பமன்று. இரவில் இரை தேடப் போகும்போது ஒன்றிற்கொன்று தொடர்பு வைத்துக் கொள்ளவே 'க்வாக்', 'க்வாக்' என்று குரலிட்டுச் செல்லும். இதையே அன்றில் துணைக்கு ஏங்குவதாகக் கற்பனையாகக் கூறினர். நெய்தலில் தலைவி காத்திருந்து ஏங்குவதாகக் கூறுவதே உரிப் பொருளாதலின், அதற்கேற்பக் கருப் பொருளில் நிகழும் உண்மைச் செய்தியில் கற்பனையை ஏற்றிக் கூறியிருக்கின்றனர். அன்றிலின் குரலைப் புலம்பு குரலாகவும், விளரிக் குரலாகவும் நாலாயிரத்திவ்விய பிரபந்தத்தில் கூறப்பட்டுள்ளது. இன்னுது உயங்கும் என்றும் ஏங்கு வயிரிசை போன்று குரலிடும் என்றும் பைதல உயவும் என்றும் பையென நரலும் என்றும் சங்க நூல்கள் கூறும். இதன் ஏங்கும் குரலை ஒரு புகழ் பெற்ற வேட்டைக்காரரும் கூறியுள்ளார். (A night heron wailed in despair from the bed of some dry stream and this was answered by a companion further down the valley. The companion raised a wailing plaintive cry.—Kenneth Anderson in 'This is the jungle'.)

அன்றிலின் குரல் அழுவது போலவும் ஏங்குவது போலவும் இருந்ததை வெளிநாட்டு வேட்டையாளர் கூறியுள்ளார், அதே போன்றுதான் சங்க நூல்களும் கூறியுள்ளன என்பதைக் கூர்ந்து கவனிக்க வேண்டும்.

'ஏங்குவயி ரிசைய கொடுவா யன்றில்', 'இறவினன்ன கொடுவாய் பெடையொடு' என்ற வரிகளில் அன்றிலின் வாய் விளக்கப்பட்டிருக்கின்றது. அன்றிலின் அலகு தடித்துக் கூர்மையானதாகவும், சிறிது வளைந்தும் இருக்கும். சிறுகரும்பேடை என்று அழைக்கப்பட்டிருப்ப தால் சாம்பல் நிறமானது என்பது தெளிவாகின்றது. சிறிது கருமையென்ற சொல் சாம்பல் நிறத்தைக் குறிக்கின்றது. அன்றில் பறவையின் உடல் பொதுவாகச் சாம்பல் நிறமானதேயாகும். அன்றிலைப்பற்றிக் கூறப் பட்டுள்ள மற்றொரு செய்தியும் ஆராயத்தக்கது. 'நெருப்பி னன்ன செந்தலை யன்றில்' (குறுந்தொகை 160). 'எரிய கைந் தன்ன செந்தலை யன்றில்' (தொல், மேற்) என்று வரும் சங்கப் பாடல்களில் அன்றிலின் தலை செம்மை நிற மாக இருப்பதாகவும், செப்பூப்போல இருப்பதாகவும் கூறப்பட்டுள்ளது. 'பூந்தலை யன்றில்' என்று ஐந்திணை ஐம்பது (41) கூறுகின்றது. உரையாசிரியர்கள் இதற்குச் சிவப்புச் சூட்டுமயிர் இருப்பதாக எழுதியுள்ளனர். ஆனால், பறவை நூலார் அன்றிலுக்குச் சிவப்பான சூட்டுமயிர் இருப்பதாகக் கூறவில்லை. தலையில் தூவிகள் கறுப்பாகவும் வெண்மையாகவும் இருப்பதாகத்தான் கூறியுள்ளனர். அன்றிலின் தலையோ, தலையில் உள்ள சூட்டு மயிரோ சிவப்பாக இருப்பதாகப் பறவை நூலார் கூறவில்லை. அன்றில் பனைமரத்தில் தங்குவதையும் வீட்டுமுற்றத்து மரங்களில் தங்குவதையும் சங்கப் புலவர்கள் கண்டு பாடி யுள்ளனர்; அப்படியிருந்தும் செந்தலை யன்றில் என்ற கற்பனைச் செய்தி எப்படி வந்தது? சங்க நூல்களில் பொதுவாகக் கற்பனைச் செய்தியை இயற்கைச் செய்திக ளோடு சேர்க்கும் வழக்கமில்லை. ஆனால், சங்ககாலத்தி லேயே அன்றிலுடன் வடமொழிக் கற்பனை சேர்க்கப்பட் டிருப்பது தெரிகின்றது. பரிபாடலில் கிரௌஞ்சம் என்ற பறவையாக அன்றில் கூறப்பட்டுள்ளதைக் காண லாம். 'குருகொடு பெயர் பெற்ற மால்வரை' (5 : 9) என்று வரும் பரிபாடல் வரிக்குக் கூறிய உரையில்

கிரௌஞ்சம் என்றும் குருகென்ற அன்றில் என்றும் உரை கூறப்பட்டுள்ளது.

> "ஒன்றில் காலை அன்றில் போலப்
> புலம்புகொண்டு உறையும் புன்கண் வாழ்க்கை"
> —நற்றிணை, 124.

ஒன்று இல்லாதபோது வாழாத அன்றில்போல என்று நற்றிணை கூறுவதைக் கவனிக்கலாம். அன்று + இல் என்பதே அன்றில் ஆனது. பறவை நூலார் இதையும் கற்பனைச் செய்தியே என்று கொள்வர். இந்தக் கற்பனைச் செய்தி வடமொழியில் கிரௌஞ்சத்திற்கு வழங்கியதாகும். வடநாட்டில் கிரௌஞ்சம் என்ற பெயர் சாரசம் என்ற ஒருவகை நாரையைக் குறிக்கும். இந்த நாரை ஆணும் பெண்ணுமாக வாழும். ஒன்று பிரிந்தால் மற்றொன்று உயிர்வாழாது என்று நாட்டுமக்கள் இன்றும் கருதுகின்றனர். இவை ஒன்றோடொன்று மிகவும் அன்பாகவும் இணக்கமாகவும் இருப்பது உண்மையே. இந்தக் குணத்தை வைத்துக்கொண்டு கற்பனையாக ஒன்று இறந்தால் மற்றொன்று வாழாது என்று கருதுகின்றனர். (Sarus pair for life, the faithfulness and devotion of the couple to each other have become legendary in India and popular sentiment is responsible for the universal protection which the bird enjoys) இந்த சாரச நாரையைப்பற்றி, கிரௌஞ்சத்தைப்பற்றி வடநாட்டில் வழங்கிய கற்பனைச் செய்தியையே சங்கப் புலவர்கள் அன்றிற்கும் படைத்துக் கூறினர் என்று கருதலாம். இந்த சாரசப் பறவை வடநாட்டில் மிகுதியாகக் காணப் படுகின்றது. கோதாவரிக்கரை வரையில் இதைக் காண லாம் இதற்குத் தெற்கே காணமுடியாது. தமிழ்நாட்டில் இந்தப் பறவை காணப்படாததால் இதன் தொடர்பான அழகிய கற்பனையைத் தமிழ்நாட்டில் காணப்பட்ட அன்றில் பறவைமேல் வைத்துப் பாடினர். வக்கா என்று இன்று மக்களால் அழைக்கப்படும் அன்றில் சாரசப் பறவைபோல் நெருங்கிய இணக்கமுடையவை அன்று. ஆதலின் கவிச்

சுவைக்காக வக்காவின் மேல் வடநாட்டுக் கற்பனைச் செய்தியை ஏற்றி அதற்கு 'அன்றில்' என்ற பெயரிட்டனர். இந்தப் பெயர்கூடச் சங்கப் புலவர்கள் இந்தக் கற்பனை அடிப்படையாகப் புதியதாகப் படைத்த இலக்கியப் பெயராகலாம். கிரௌஞ்சத்தின் கற்பனையை அன்றில் பறவைக்கும் படைத்ததால் அன்றில் பறவையைக் கிரௌஞ்சத்தினோடு சேர்த்து மயங்கினர். கிரௌஞ்சத்திற்கு இயற்கையில் உள்ள செந்தலையை அன்றிற்கும் கூறினர். கிரௌஞ்சம் எனப்படும் சாரசத்திற்குத் தலையில் மயிரின்றிச் சிவப்பாக இருக்குமென்று பறவை நூலார் கூறுவர், (A huge, long-legged long-necked grey bird with naked red head and upper neck). சாரசத்தின் தலை சிவப்பா யிருப்பதைக் கேட்டறிந்த சங்கப் புலவர்கள் அன்றிற்குச் செந்தலை யிருப்பதாகக்கொண்டு நெருப்பு எரிவதுபோன்ற செந்தலையன்றில் எனவும், பூந்தலையன்றில் எனவும் கூறினர். அன்றிலுக்குச் சிவந்த சூடு இருப்பதாகச் சங்க நூல்கள் கூறவில்லை. தலையிருப்பதாகவே கூறினர். உரையாசிரியர்கள் சூடு இருப்பதாக எழுதினர். அன்றிலும் கிரௌஞ்சமும் முற்றிலும் வேறான பறவைகள். கிரௌஞ்சம் ஓர் ஆள் உயரமிருக்கும் பெரிய பறவை. அன்றில் கொக்குபோன்ற சிறிய பறவை. கிரௌஞ்சப் பறவை தரையில் ஒரு மீட்டர் நீளமுள்ள பெரிய கூட்டைக் கட்டும். அன்றில் பனைமரத்தில் சிறு கோல்களையும், முள்ளையும் வைத்துச் சிறிய கூடு கட்டும். இதைச் சங்க நூல்கள் கூறியுள்ளன. வக்கா என்ற உண்மைப் பறவையின் மேல் ஒன்று பிரிந்தால் மற்றொன்று இறந்துவிடுமென்ற செய்தியும், சிவந்த தலையிருக்கும் என்ற செய்தியும் கற்பனையாக ஏற்றப்பட்டதென்று கருதலாம். பிற்காலத்தில் அன்றில் புராணப் பறவையாக மாற்றப்பட்டது. நிகண்டுகள் அன்றிலைக் கிரௌஞ்சம் என்றே கூறுகின்றன. திராவிடர்கள் வடக்கிலிருந்து தெற்கு நோக்கி மிகப் பண்டைக் காலத்தில் வந்தனரென்று கொண்டால் ஒருவேளை தமிழர் சாரசப் பறவையை வடநாட்டில் வாழ்ந்தபோது அன்றில் என்று அழைத்

திருக்கலாம். தமிழ்நாட்டிற்கு வந்தபோது சாரசப் பறவை இயற்கையில் இங்கு இல்லாததால் அதே பெயரை இங்கிருந்த வக்காவிற்கு வைத்திருக்கலாம். இது மேலும் ஆராய்தற்குரியது. அன்றிலை இக்காலத்தில் நாட்டு மக்கள் 'வக்கா' என்றழைக்கின்றனர். இந்தி மொழியில் 'வாக்' என்றும் 'க்வாக்' என்றும் அழைக்கின்றனர். தெலுங்கிலும் குசராத்தியிலும் தமிழ்ப் பெயர் போன்றே வழங்குகின்றனர். அன்றில் உணவு தேடப் போகும்போது 'வாக்' அல்லது 'க்வாக்' என்று ஓசையிட்டுக்கொண்டே செல்லுமென்பர். இந்தக் குரலின் காரணமாகவே பல மொழிகளிலும் அன்றிலுக்குப் பெயர் அமைந்துள்ளதைக் காணலாம். மராத்தி மொழியில் 'ராத்கொக்கு' என்றும் இந்தி மொழியில் சில இடங்களில் 'கோக்ரால்' என்றும் அழைக்கின்றனர். இந்தப் பெயர்களில் 'கொக்கு' என்ற திராவிடச் சொல்லின் சாயல் தெரிகின்றது. மலையாளத்தில் இதைத் தொப்பிக்கொக்கு என்றழைக்கின்றனர். வக்கா என்ற பெயர் மிகப் பிற்கால நூல்களில்தான் பயில்கின்றது. குறுந்தொகையிலும் ஐங்குறுநூற்றிலும் 'மகன்றில்' என்றொரு பறவை அரிதாகக் கூறப்பட்டுள்ளது.

"பூவிடைப் படினும் யாண்டுகழிந் தன்ன
நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்
பிரிவரி தாகிய தண்டாக் காமமொ
டுடனுயிர் போகுக தில்ல கடனறிந்
திருவே மாகிய வுலகத்
தொருவே மாகிய புன்மைநா முயற்கே"
—குறுந்தொகை. 57.

"யார்கொ லளியர் தாமே வார்சிறைக்
குறுங்கால் மகன்றி லன்ன
உடன்புணர் கொள்கைக் காத லோரே"
—ஐங்குறு. 381.

"அடியோர் மைந்த ரகலத் தகலா
அலர்ஞெமன் மகன்றி னன்னாப் புணர்ச்சி
புலரா மகிழ்மறப் பறியாது நல்கும்."
—பரிபாடல், 8: 43—45.

மகன்றில் என்பது நீர்வாழ்பறவை. மலர்களில் பயில்வன வாதலின் உடனுறையுங் காலத்தில் அப் பூ இடைப் படுதலும் கூடுமாதலால் பூவிடைப்படினும் துன்பத்தை அடையும் தன்மையுடைய மகன்றில் பறவையென்று குறுந் தொகை கூறுகின்றது. குறுந்தொகையில் கூறப்பட்ட இச் செய்தி கிரௌஞ்சத்துக்கு வடநூல்களில் கூறப் பட்டதேயாகும். இந்த மகன்றிலும் கிரௌஞ்சத்தையே குறிப்பதாகத் தெரிகின்றது. ஐங்குறு நூற்றில் மகன்றில் என்பதற்குப் பாடமாற்றமாக 'அகன்றில்' என்ற பெயர் காணப்படுகின்றது. அகன்றில் என்று வழங்கியதே மகன்றில் என்று தவருக ஓலையெழுதுவோரால் எழுதப் பட்டதோ என்று ஐயுறும்படி இடமுள்ளது. அன்று + இல் = அன்றில் ஆனதுபோல் அகன்று + இல் = அகன்றில் ஆகியிருக்கலாம். அகன்றில் என்று கொண்டால் குறுந் தொகையில் கூறப்பட்ட இதன் தன்மைக்கு ஒத்து வருகின்றது. வடமொழியிலும் சாரசம் என்ற கொக்கைப் பற்றி இத்தகைய கற்பனைக் கதைகள் வழங்குகின்றன. கிரௌஞ்சத்தின் புணர்ச்சி விளையாட்டையும் புணர்ச்சியை யும் பறவைநூலார் வர்ணித்துள்ளனர். மகன்றில் என்பது ஆண் அன்றில் என்று பிற்காலத்தில் பொருள் கொண் டதையும் காண்கிறோம். 'உறைந்தன மகன்றிலுடன் அன்றில் உயிர் ஒன்றி' என்று கம்பர் கூறுமிடத்தில் மகன்றில் என்பது ஆண் அன்றிலெனவே தெரிகின்றது. கிரௌஞ்சம் ஆள் உயரமிருப்பதால் மனிதனோடு ஒப்பிட்டு மகன்றில் என்று அழைத்திருக்கலாம். மகன் + அன்றில் = மகன்றில் ஆகியிருக்கலாம். தேவாங்கு என்ற விலங் கைப் பெண்களுடன் ஒப்பிட்டு மகள் + மா = மகண்மா என்று அழைத்ததை இதுசார்பாகக் கவனிக்க வேண்டும். இப் பெயர்களுக்குக் காரணமான கற்பனைச் செய்திகளும் கிரௌஞ்சத்திலிருந்து தமிழில் வந்தவை என்று கொள்க.

———

## கூ. பெருநாரையும், பெருங்குருகும்

## (BLACK-NECKED STORK AND LESSER ADJUTANT STORK)

இறையனார் அகப்பொருள் பாயிரத்தில் முச்சங்க வரலாறு கூறுமிடத்தில் தலைச்சங்கப் புலவர்கள் பாடிய தாகப் பரிபாடலும், முது நாரையும், முது குருகும், களரியா விரையும் கூறப்பட்டுள்ளன. முது நாரை, முது குருகு என்ற இரு பறவைகளின் பெயரால் நூல்கள் இருந்தன வாகக் கூறப்பட்டுள்ளதைக் கவனிக்க வேண்டும். சிலப் பதிகாரத்தில் அடியார்க்கு நல்லார், "இனி இசைத்தமிழ் நூலாகிய பெருநாரை, பெருங்குருகும் பிறவும், தேவ விருடி நாரதன் பஞ்ச பாரதீய முதலாகவுள்ள தொன்னூல் களுமிறந்தன" என்று கூறினர். நம்பியகப் பொருள் பாயிர உரையிலும், முதுநாரை, முதுகுருகு என்று சொல்லப்பட்டுள்ளன. ஆனால், அடியார்க்கு நல்லார் எடுத்தாண்ட பெரு நாரை, பெருங்குருகு என்ற பெயர்களே சரியானவை என்று தோன்றுகின்றது. முது நாரை, முது குருகு என்ற பெயர்கள் முதிய நாரை, முதிய குருகு என்று தவறான பொருள் தரும். சங்க நூல்களில் முது குருகு, முது சிரல் என்ற பெயர்கள் கிழமான குருகு, கிழமான சிரலைக் குறித்து வழங்குவதைக் காணலாம்.

> "வலைவர் தந்த கொழுமீன் வல்சிப்
> பறைதபு முதுகுருகு இருக்கும்
> துறைகெழு தொண்டி யன்னவிவ ளலனே"
>
> —ஐங்குறு, 180.

முதுகுருகு பறக்கமுடியாமல் வலைவர் கொண்டுவந்த கொழுமீனாகிய உணவிற்குத் தங்கியிருப்பதாக ஐங்குறு நூறு கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். ஆதலின் முதுகுருகு என்ற பெயர் சங்க காலத்தில் பெருங்குருகிற்கு

வழங்கியிருக்க முடியாது. பிற்காலத்தில் பெரியது என்ற பொருளில் முதிய என்ற சொல் வழங்கலாயிற்று. கலிங் கத்துப் பரணியில் 'முதுபாம்பு' என்ற சொல் பெரும்பாம்பு என்ற பொருளில் வழங்கியிருப்பதைக் காணலாம். உரை யாசிரியர்கள் காலத்தில் இந்த வழக்கிருந்ததால் பெருங் குருகு, பெருநாரை என்று கடைச் சங்க காலத்திற்கு முற்பட்டு வழங்கிய பெயர் வழக்குகளை முதுகுருகு, முது நாரை என்று வழங்கலாயினர் பெருநாரையையும்,பெருங் குருகையும் முதுநாரை, முதுகுருகு என்றழைத்தது பழ மலையைக் கிழமலை என்று வடமொழியில் மொழிபெயர்த் தது போன்றதேயாகும்.

பெருநாரை என்ற பெயர் ஒரு தனித்த பறவையைக் குறித்து வழங்கினதாகத் தெரிகின்றது. பெருநாரை, போதா, பிநாவும் ஆகும் என்று பிங்கலந்தை, சூடாமணி நிகண்டுகள் கூறுகின்றன. இந்தப் போதா என்ற பெருநாரையைப் பற்றிச் சிலப்பதிகாரத்திலும், பிற நூல்களிலும் குறிப்புகள் உள்ளன. புறநானூற்றிலும் சிலம்பிலும் புதா என்றழைக்கப்படுகின்றது

"கம்புட் கோழியுங் கனைகுர லுரையுஞ்
செங்கா லன்னமும் பைங்காற் கொக்கும்
கானக் கோழியும் நீர்நிறக் காக்கையு
முள்ளு மூரலும் புள்ளு புதாவும்"
—சிலம்பு 10 : 114—117.

அடியார்க்கு நல்லார் 'புதா' என்பதற்குப் பெருநாரை, மரக்காலுரை என்று பொருள் கூறியிருக்கின்றார். ஆதலால் பெருநாரை புதா என்றும், மரக்கால் நாரை என்றும் அழைக்கப்பட்டது விளங்கும். சிலப்பதிகாரத்தில் ஒரே பாட்டில்நாரை கூறப்பட்டதோடு பெருநாரையான புதாவும் கூறப்பட்டதைநோக்க வேண்டும். ஆதலின் பெருநாரை பறவை நாரையில் வேறானது என்பது தெளிவாகின்றது.

"உன்ன நாரை மகன்றில் புதாவுளில்
அன்னங் கோழி வண்டானங்க ளாழிப்புள்

*இன்ன ரங்குரண் டங்கிலுக் கஞ்சிரல்*
*சென்னங் காகங் குணலஞ் சிலப்புயே''*
—கம்ப. சுந்தர. ஊர்தேடு, 151.

''பொன்னியென லாயபுன லா றுமுள போதா
அன்னமுள பொன்னிவளொ டன்பின் விளையாட''
—கம்ப ஆரண்ய. அகத்தியப், 58.

''நீர்திரை மேல் உலவி இரைதேடும் புதா இனங்காள்''
—திருவாய்மொழி : 8 - 638.

கம்பராமாயணத்தில் அகழியில் ஒலித்த பறவைகளுள் ஒன்றாகப் போதா கூறப்பட்டுள்ளது. பொன்னியாற்றின் அருகில் போதா இருந்ததும் கூறப்பட்டுள்ளது. இங்கும் பெருநாரையென்றே பொருள் கூறப்பட்டுள்ளது. பெருநாரையென்பது பறவை நூற்படி எந்தப் பறவை என்று ஆராய்தல் வேண்டும். இந்த நாரையை ஈழ நாட்டில் பெரிய நாரை யென்று தமிழில் இன்றும் நாட்டு மக்கள் கூப்பிடுகின்றனர். இந்த நாரையை ஆங்கிலத்தில் Black-necked Stork என்றழைப்பர். இந்தக் கருங் கழுத்துடைய நாரை ஏறக்குறைய ஓர்ஆள் உயர மிருக்கும். நீண்ட தடித்த கருத்த மூக்கையுடைய பறவை. இதன் கால்கள்தாம் முக்கியமானவை. இதன் நீண்ட கால்களும் அடிகளும் பளபளப்பான பவளம் போன்ற சிவப்பாக இருக்கும். பெரிய நீண்ட கால்க ளிருப்பினும் உடல் இக் கால்களுக்கும், பெரிய மூக்கிற்கும் ஏற்பப் பெரியதாக இல்லை. இது பெரிய ஆறுகளருகிலும், சதுப்பு நிலங்களிலும் ஆளற்ற இடங்களில் தனித்தே பெரும்பாலும் காணப்படும். கூட்டமாகக் காணப்படுதல் அரிது. இதன் கால்கள் நீண்டிருப்பதால் இதை மரக் கால் நாரை என்றழைத்தனர். மரக்கால்களை மனிதன் கால்களில் சேர்த்துக் கட்டி ஆடும் ஒரு வகை நடனத்தை மரக்கால் என்றழைத்தனர். சிலப்பதிகாரத்தில் கடலாடுகாதையில் 'மாயவளாடிய மரக்காலாடல்' கூறப் பட்டுள்ளது. அவுணர் பாம்பும், தேளும் விடத் துர்க்கை மரக்காலின் மேல் நின்றுடினாள் என்று அரும்பத உரை

யாசிரியர் கூறினர். சிலப்பதிகாரத்தில் தெய்வங்கள் ஆடியதாகக் கூறப்படும் கூத்துகள் பலவும் மக்களாடிய கூத்துகள் தாம். அவை தெய்வங்கள் ஆடியதாக வளர்ந்தது பின்னர் ஏற்பட்ட வளர்ச்சியாகும். ஆதலின்



பெருநாரை

மரக்காலாடுதல் பழையதொரு கூத்து என்பதில் ஐய மில்லை. இந்த மரக்கால் ஆட்டம் இந்தப் பெருநாரை யினத்தில் காணப்படும் ஒருவகை ஆட்டத்தைப் பார்த்துப் பழந்தமிழர் பின்பற்றியதாகவும் கருத இடமுண்டு. ஆண்

நாரையும், பெண் நாரையும் இணை சேருவதற்கு முன் ஒரு வகை ஆட்டம் ஆடுகின்றன. இரண்டு நாரையும் எதிராக நின்றுகொண்டு மரக்காலால் நடந்து போவது போன்று நடந்து சந்திக்கின்றன. இரண்டு அடி தூரத்தில் எதிரெதிராக நின்று இறக்கையை விரித்து அடித்துக் கொள்கின்றன. அப்போது ஒன்றின் இறக்கை மற்றொன்றின் இறக்கையைத் தொட்டு மோதுகின்றது. அதே சமயத்தில் தலைகளை நீட்டித் தொட்டுக் கொள்கின்றன. அதோடு மூக்கையும் மூக்கையும் இடித்து ஓசை யெழுப்புகின்றன. பெரு நாரையின் ஆட்டம் ஒரு பறவை நூலறிஞரால் இவ்வாறு விளக்கப்பட்டுள்ளது. (A Pair will gravely stalk up to each other, and when about a yard or two feet apart will stand face to face, extend their long black and white wings, and while they flutter these very rapidly, so that the points of the wings of the one flap against the points of the others' wings, advance their heads till they nearly meet, and both simultaneously clatter their pills like a couple of watchmen's rattles.) இந்த மரக்கால் நாரைகள் போல ஆடினதால் மரக்கால் ஆட்டம் என்று பெயர் வந்திருக்கலாம். நீர்த் திரையிலும் நீண்ட கால்களால் நடந்து உலவிச் செல்லும் என்று திருவாய்மொழி கூறுகின்றது. இத்தகைய ஆட்டம் ஒன்றைப் பிலிப்பைன் நாட்டிலும் ஆடுகின்றார்களாம். நெல் வயல்களிடையே வாழும் நீண்ட கால்களையுடைய 'டினிக்லில்' பறவைகளின் ஆட்டத்தையே பார்த்து இந்த நாட்டியம் செய்யப்படுவதால் இந்த ஆட்டத்திற்கும் இந்தப் பறவையின் பெயரையே வைத்துள்ளனர். இந்த ஆட்டம் பிலிப்பைனில் உள்ள 'லெயிட்' தீவில் கிராமிய நடனமாக நடைபெறுகின்றது. பறவைகளின் இறக்கை போன்று மூங்கில் பிளாச்சுகளால் செய்து அடிக்கப்படும். தாண்டித் தாண்டி ஆடுவர். (கூரியர், மார்ச் 1969). பிலிப்பைன் நாட்டில் வாழும் பெருநாரையைப் பார்த்து இந்த நடனம் ஆடப்படுவதால் இதுவும் மரக்கால் நடனம்

போன்றதே யாகும். ஆங்கிலத்திலும் நாரையினப் பறவைகளை மரக்கால் கட்டி நடப்பவர்களோடு (like a crane or a walker on sticks) ஒப்பிட்டுக் கூறுவது வழக்கம். இந்தப் புதா நாரையைத் தமிழ்நாட்டில் பொறையாற்றில் கண்ட கல்லாடனார் என்ற புலவர் இதைப் பற்றிக் கூறியுள்ளார்.

*"................பெருங்கழி நுழைமீ னருந்தும்*
*துதைந்த தூவியம், புதாஅஞ் சேக்கும்*
*ததைந்த புனனின் செழுநகர் வரைப்பின்"*

—*புறநானூறு, 391*.

காரைக்காலுக்கு அருகில் உள்ள பொறையாற்று கிழானைப் பாடிய கல்லாடனார் அங்கிருந்த பெரிய கடற் கழியில் நுழை மீனைப் புதாக்கள் உண்டு அவனுடைய பொறையாற்றில் தங்கியதாகக் கூறியிருப்பதைக் காண லாம். புதாவிற்குத் தூவிகள் நெருக்கமாக உடலில் இருந்ததாகக் கூறியுள்ளார். இன்றும் பொறையாற்றில் நீர்ப்பறவைகள் மிகுந்து காணப்படுகின்றன. பொறை யாற்றில் புதாவைக் கண்டே கல்லாடனார் கூறியுள்ளார். பெருநாரைக்கு மறுபெயராகப் புதா, பிதா, போதா என்ற பெயர்கள் உள்ளன. பிதா, போதா என்பன புதாவின் மாற்றமே. புதா என்ற பெயரே மரக்காலைக் குறித்து வழங்கியதாகத் தெரிகின்றது. இரண்டாம் நந்திவர் மனின் தண்டந்தோட்டுச் செப்பேட்டில் வரும் வட்டி நாழி, புதா நாழி என்பதற்கு மரக்கால் என்று பொருள் கொள்ள வேண்டும். முகத்தல் அளவைகளின் பெயர் களை நிகண்டுகள் அளவைக்கால் என்று அழைப்பதைக் காணலாம். ஒருவகை மரக்காலைப் புதா என்றழைத்ததால் மரக்கால் நாரையைப் புதா என்றழைத்தனர் என்று கருத வேண்டும். வேள்விக்குடிச் சாசனத்தில் புதான்கோடு என்ற பெயர் காணப்படுகின்றது. புதா என்பது புதான் என்றும் அழைக்கப்படுமென்று தோன்றுகின்றது. புதா என்ற பறவையின் பெயரால் ஒரு மலைக்குப் பெயரிட்டிருக் கலாம். மரத்தின் பெயராலும், விலங்கின் பெயராலும், பறவையின் பெயராலும் இடங்களைப் பெயரிட்டழைப்பது பழந்தமிழ் மரபாகும். இந்தப் பெருநாரை இப்போது

தமிழ்நாட்டில் காணப்படுவது மிக அரிதே. காடுகள் நாடாக்கப்பட்டதாலும், வேட்டையாடி அழித்ததாலும் இந்தப் பறவைகளைக் காண்பது அரிதாகி விட்டது. சிலப்பதிகாரம் எழுதப்பட்ட காலத்தில் தமிழ் நாட்டில் மருதநிலத்தில் பெருநாரை நிறைய இருந்திருக்க வேண்டும். பெருநாரையை ஆங்கிலத்தில் Black-necked Stork என்றழைப்பர். தற்காலத்தில் தலைஞாயிறு பக்கத்தில் காணப்படும் இந்தப் பறவையைக் கருநாரை என்றழைக்கின்றனர்.

பெருங்குருகு என்ற பெயருடைய பறவை பெருநாரையுடன் கூறப்பட்டுள்ளது. இந்தப் பறவையையே சங்க நூல்களில் யானையங்குருகு என்றழைத்தனர். இந்தப் பெருங்குருகு எது என்பதை ஆராயவேண்டும். பெருங்குருகு என்ற பெயர் சங்க நூல்களிலோ அல்லது பிற்கால இலக்கியங்களிலோ காணேம். ஆனால், தெலுங்கு மொழியில் பெருங்குருகு என்ற பெயர் காணப்படுவதாலும் அஃது அந்த நாட்டில் வாழும் பெரிய பறவைக்குப் பெயராக வழங்குவதாலும் தமிழில் பழங்காலத்தில்சுட்டப்பட்ட பெருங்குருகு என்ற பறவை எதுவாயிருக்கும் என்று துணிந்துகூற முடிகின்றது. தெலுங்கில் 'பெக்குரு' (Pegguru) என்ற சொல் ஒரு பெரிய நாரை போன்ற பறவையைக் குறித்து வழங்குகின்றது. பெரு



பெருங்குருகு

+குரு என்பதே பெக்குரு என்று மாறியிருக்குமென்று டாக்டர் எமனோ என்ற சொல்லாராய்ச்சி அறிஞர் கூறி யிருக்கின்றார். குருகு என்ற சொல் குரு என்று தெலுங்கில் குறுகிவிட்டது. மலையாளத்திலும் அவ்வாறு குறுகியுள்ளது. கருவாரக்குரு என்றொரு பறவைப் பெயர் மலையாளத்தில் வழங்குகின்றது. இந்தப் பறவைப் பெயரில் குருகு என்பது மலையாளத்தில் குரு ஆகி யுள்ளது. ஆதலின் பெருகுருகு என்பது பெக்குரு என்று தெலுங்கில் மாறியதில் ஐயமில்லை. தெலுங்கு மொழியில் குறிப்பிடப்படும் பெருங்குருகு (பெக்குரு) பறவை நூலார் கூறும் (Lesser Adjutant Stork) என்ற பறவையேயாகும். இதை ஈழநாட்டு மக்கள் 'மேவாக்கொக்கு' என்றும் 'மாஞ' என்றும் தமிழில் அழைக்கின்றனர். இதற்குத் தமிழ் நாட்டில் சில இடங்களில் நான்முகப்புள் என்ற பெயர் வழங்கிற்று. இந்தப் பறவை பெருநாரையைவிட உயரத்தில் சிறிது குறைந்தது. தலையில் இறகுமயிர்கள் இல்லாமல் அழகற்று இருக்கும். சில மயிர்கள் மட்டும் இதன் தலையில் நீட்டிக்கொண்டிருக்கும். பொதுவில் அழகற்ற பறவை. இந்தப் பறவை மனிதர் நடமாடாத சதுப்பு நிலங்களிலும் காடுகளில் உள்ள நீர் நிலைகளிலும் காணப்படும். தமிழ்நாட்டில் மிக அரிதாகிவிட்ட இப் பறவையை ஆந்திர நாட்டிலும் பழைய சேரநாடான கேரளத்திலும் காணலாம். மலையாளத்தில் 'வயல் நாய்க் கன்' என்றழைக்கப்படுகின்றது. தமிழில் மறைந்துபோன பெருங்குருகின் பெயர் இன்றும் தெலுங்கு மொழியில் இருப்பது வியப்பைத் தருகின்றது. ஈழ நாட்டில் வழங்கும் நெருநாரைப் பெயரிலிருந்தும் தெலுங்கு நாட்டில் வழங்கும் பெருங்குருகுப் பெயரிலிருந்துமே பண்டைக் காலத்தில் தமிழில் பெருநாரை, பெருங்குருகு என்று வழங்கிய பெயர்கள் குறிப்பிடும் பறவைகளைத் தெளி வாகக் கண்டுணர முடிகின்றது.

கூழைக்கடா என்று இன்று அழைக்கப்படும் சங்க காலக் குருகிற்குத் தடித்த அலகு இருப்பதுபோலப் பெருங்

குருகிற்கும் உண்டு. குருகு குட்டையான வயிறு பெருத்த பறவை. குருகைவிட மிகவும் உயரமான பறவையைப் பெருங்குருகு என்றழைத்தனர். நாரைகளில் மிகப் பெரிய, உயரமான நாரையைப் பெருநாரை என்றும் குருகுகளில் மிகப் பெரியதை, உயரமானதைப் பெருங் குருகு என்றும் அழைத்தனர். சங்க காலத்திலேயே பெருங்குருகு தமிழ்நாட்டில் அரிதாகக் காணப்பட்டதால் பெருங்குருகைப் பற்றிச் சங்க நூல்களில் செய்தி கூறப் படவில்லை. இக்காலத்திலும் சேர நாடான கேரளத் திலும் ஆந்திர நாட்டிலும் இது காணப்படுகின்றது. பெருங்குருகின் சாதியைச் சேர்ந்த வேறொரு பெருங் குருகு வடநாட்டில் பரவலாகக் காணப்படுகின்றது. இந்தப் பெருங்குருகின் கழுத்தடியில் தொங்கும் தோலால் ஆன பை கூழைக்கடாவிற்கு உள்ள கீழலகுப்பை போல இருப்பதால் இதையும் குருகோடு ஒப்பிட்டுப் பெருங்குருகு என்றழைத்தனரென்று கருதலாம். ஆதலின் பண்டைத் தமிழர் இந்தப் பெருங்குருகை வடநாட்டில் கண்டபோதே பெருங்குருகு என்று பெயரிட்டிருக்கலாம். தமிழ்நாட்டில் இந்த வடநாட்டுப் பெருங்குருகு (Adjutant Stork) இல்லை யாதலால் தென்னாட்டில் கண்ட அதனுடைய இன மான, அதைவிடச் சிறிது உயரம் குறைந்த பெரிய குரு கையும் (Lesser Adjutant Stork) அதே பெயரால் அழைத் திருக்கலாம். ஆந்திர நாட்டில் வடநாட்டுப் பெருங் குருகையும் 'பெக்குரு' என்றே அழைக்கின்றனர். இதை 'பீனிகல கொங்கா' என்றும் அழைக்கின்றனர். இப் பறவை பிணத்தையும் தின்னுமாதலால் இந்தத் தெலுங்குப் பெயர் வந்தது. தென்னாட்டில் காணப்படும் பெருங் குருகைத் தெலுங்கில் 'பெக்குரு' என்றழைப்பதோடு 'தொட்ட கொங்கா' என்றும் அழைக்கின்றனர். இதன் பொருள் பெரிய கொக்கு என்பதாகும். கம்பர் ஒரு பாட்டில் 'பெருவலி, வயக்குருகு' என்று பாடியுள்ளார். இந்தக் குருகு பழந்தமிழ் நூல்களில் கூறப்பட்ட பெருங் குருகு என்று கருத வேண்டும்.

"ஒருதனிப் பேடைமே லுள்ள மோடலால்
பெருவலி வயக்குரு கிரண்டும் பேர்கில
திருகுவெஞ் சினத்தன தருகட் டீயன
பொருவன கண்டுதன் புருவங் கோட்டினன்" —6-4-31.

கம்பராமாயணத்திலே பெருநாரை என்ற போதா நீர்ப் பறவைகளில் ஒன்றாகக் கூறப்பட்டுள்ளது. பெருங் குருகையே கம்பர் 'பெருவலி வயக்குருகு' என்று சொல்லி யிருக்கவேண்டும். ஏனைய குருகுகள் பெரியவையல்ல. வலிமையுடையன அல்ல.

பெருநாரையைப் பறவை நூலில் Xenorhynchus asiaticus என்றும் பெருங்குருகை Leptoptilos Javanicus என்றுமழைப்பர். வடநாட்டில் வாழும் பெருங்குருகை The Adjutant Stork என்றும் தென்னாட்டில் காணப்படும் பெருங் குருகை The Lesser Adjutant Stork என்றும் கூறுவர்.

பெருங்குருகு என்ற பெயர் சங்கநூல்களில் காணப் படாவிட்டாலும் பெருங்குருகையே சங்கநூல்கள் யானை யங்குருகு என்று கூறியதாகத் தெரிகின்றது. திவாகரம், பிங்கலந்தை நிகண்டுகள் யானையங்குருகைப் பெருங் குருகு என்று சொல்லியிருப்பதைக் காணலாம். மீன் களில் பெரியதாகக் கருதிய திமிங்கிலத்தை யானைமீன் என்று கூறியதுபோல் யானையங்குருகு என்ற வழக்குத் தோன்றியிருக்க வேண்டும். தினையளவை மிகச் சிறிய தாகவும் யானையளவை மிகப்பெரியதாகவும் கொண்டனர். தினைக் குருவி என்றொரு சிறு குருவி உள்ளது. அதைக் காட்டிலும் பல மடங்கு பெரிதான பறவையை யானையங் குருகு என்றனர்.

மதுரை மாநகரில் விடியற்காலையில் நடந்த நிகழ்ச்சி கள் சிலவற்றை மதுரைக்காஞ்சி கூறுகின்றது.

"சூதர் வாழ்த்த மாகதர் நுவல
வேதா ளிகரொடு நாழிகை யிசைப்ப
விமிழ்முர சிரங்க வேறுமாறு சிலைப்பப்
பொறிமயிர் வாரணம் வைகறை யியம்ப

*யானையங் குருகின் சேவலொடு காம*
*ரன்னங் கரைய வணிமயி லகவப்*
*பிடிபுணர் பெருங்களிறு முழங்க முழுவலிக்*
*கூட்டுறை வயமாப் புலியொடு குழும''*
—*மதுரைக்காஞ்சி : 670 - 677.*

பாண்டிய மன்னனை விடியற்காலையில் சூதர் வாழ்த்து கின்றனர். மாகதர் போற்றுகின்றனர். வேதாளிகர் இசைக்கின்றனர். நாழிகைக் கணக்குக் கூறுவோர் நாழி கையைக் கூறுகின்றனர். பள்ளியெழுச்சி முரசு ஒலிக் கின்றது. ஏறுகள் மாறுபட்டு முழங்குகின்றன. சேவல்கள் விடியற்காலை வந்துவிட்டதெனக் கூவுகின்றன. யானை யங்குருகின் சேவலுடன் அன்னச் சேவல்கள் பேடை களைக் கூப்பிடுகின்றன. மயில்கள் அகவுகின்றன. பெரிய ஆண் யானைகள் பிளிறுகின்றன. கூட்டில் உள்ள வலிய விலங்குகள் புலியுடன் முழங்குகின்றன. விடியற் காலை நிகழ்ச்சிகளாக மதுரைக்காஞ்சி கூறியவையுள் யானையங்குருகு அழைப்பதாகக் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். விடியற்காலையில் கோழிச்சேவல் கூவுவது எங்கும் காணக்கூடிய நிகழ்ச்சி. மயில்கள் மதுரை மாநகரில் வீடுகளில் வளர்ந்ததால் மயில்கள் கூவுவதும் எதிர்பார்க்கக் கூடியதே. யானைகள் பிளிறுவதும் இயல்பே. அக் காலத்தில் நாட்டின் தலைநகரில் இன்றுபோலக் கூட்டில் விலங்குகளை அடைத்து வைத்துக் காட்சிப் பொருளாகக் காட்டும் வழக்கம் இருந்ததெனக் கருதலாம். வலிய விலங்கு களுடன் கூட்டில் புலி உறுமுவதும் கூறப்பட்டுள்ளது. ஆனால், யானையங்குருகின் சேவலும், அன்னச் சேவலும் அழைப்பதாகக் கூறியது கவனிக்கத்தக்கது. மதுரை நகரைச் சுற்றிய நீர்நிலைகளில் அன்னப் பறவைகளான காட்டுவாத்துகள் இயற்கையாக வந்திருக்க வேண்டும். யானையங்குருகான பெருங்குருகும் நீர் சூழ்நிலையில் வாழ்ந்திருக்க வேண்டும். அன்னமும் யானையங்குருகும் கரைவதாகக் கூறப்பட்டுள்ளது. இந்த யானையங்குருகைப் பற்றிக் குறுந்தொகையும், அகநானூறும் கூறுவது காண்க

"முஞஅ தியானையங் குருகின் கானலம் பெருந்தோ
டட்ட மள்ள ரார்ப்பிசை வெரூஉம்
குட்டுவன் மரந்தை யன்னவெம்" —குறுந்தொகை, 34.

"..............................களிமயில்
குஞ்சரக் குரல குருகோடு ஆலும்
துஞ்சா முழவின் துய்த்தியல் வாழ்க்கைக்
கூழுடைத் தந்தை இடனுடை வரைப்பின்"
—அகம், 145.

கானலில் பெருங்கூட்டமாக இருந்த யானையங்குருகு மன்னர் ஆர்ப்பிசைக்குப் பயந்ததாகக் குறுந்தொகையில் கூறப்பட்டுள்ளது. மயில்கள் யானையின் குரல்போன்ற ஓசை செய்யும் குருகோடு ஆடும் இடம் என்று அகநானூறு கூறுகின்றது. யானையங்குருகு சேரநாட்டு மரந்தை யென்ற ஊரின்காலில் இருந்ததாகக் கூறியதைக் கவனிக்க வேண்டும். இன்றும் பெருங்குருகு கேரளத்திலேயே காணப்படுகின்றது. தமிழ்நாட்டில் காண்பதரிது மயிலுடன் குஞ்சரக்குரல் குருகு ஆடும் என்று அகநானூறு கூறியுள்ளது. பெருநாரைபோலப் பெருங்குருகும் ஆடும் என்று பறவை நூலார் கண்டுபிடித்துள்ளனர். இணைசேரும் காலத்தில் ஆணும் பெண்ணுமாக ஆடுமென்பர்.

சேந்தன்திவாகரமும், பிங்கலந்தையும் 'யானையுண் குருகு' என்ற குறுந்தொகைப் பாடமாற்றத்தையே பொருத்தமானதாகக் கொண்டதாகத் தெரிகின்றது. சேந்தன்திவாகரத்தில் 'யானையங்குருகு' என்ற பெயர் காணப்படவில்லை.

"நேமிப்புள்ளும் சகோரமும் என்றிவை
ஆருஞ் சக்கர வாகப் பெயரே"

"யானையுண் குருகு பெருங்குரு காகும்"
—சேந்தன்திவாகரம்.

"நேமிப்புள் சக்கர வாகப்புள் சகோரம்"

"யானையுண் குருகு பெருங் குரு கென்ப"
—பிங்கலந்தை, 2325, 2326.

ஆனால் சூடாமணி நிகண்டோ யானையங்குருகு என்றே கொண்டிருப்பதைக் காணலாம்.

> "வெம்பிய நேமிப்புள்ளு விரும்பு சக்கரவாகப்புட்
> கொம்பிய கோகம் யானைக்குருகென்று கூறலாமே"
>
> —சூடாமணி, 53.

முன்னர்த் தோன்றிய இரண்டு நிகண்டுகளும் ஒரு பாடத்தைக் கையாளப் பின்னர்த் தோன்றிய நிகண்டு வேறு பாடத்தைக் கையாள்வதைக் காணலாம். ஏடெழுதினோர் பிழையை ஆராயாது நிகண்டாசிரியர்கள் பிழைபட்ட பாடத்தையும் உண்மையாகக் கொண்டு எழுதினர் என்பது தெளிவாகின்றது. "யானையங்குருகு பெருங்குருகாகும்' என்பதே சரியான திவாகரப்பாட்டாக இருக்க வேண்டும். சேந்தன்திவாகரமும் பிங்கலந்தையும் நேமிப்புள்ளையும் சக்கரவாகத்தையும் ஒருவகைப் பறவையாகவும் யானையுண்குருகை வேறுவகைப் பறவையாகவும் கொண்டதைக் காண்கிறோம். ஆனால், சூடாமணி நேமிப்புள்ளையும் சக்கரவாகப்புள்ளையும் கோகத்தையும் யானையங்குருகையும் ஒரே வகைப் பறவையாகக் கொள்வதைக் காண்கிறோம். சூடாமணியில் பெருங்குருகு என்ற பெயரையே காணோம். சூடாமணி மூன்று பறவைப் பெயர்களையும் ஒரே பறவையாகக் கொண்டது தவறாகும். ஆனாலும் சூடாமணி கொண்ட 'யானைக்குருகு' என்ற பாடம் மிகவும் பொருத்தமானதாகும். திவாகரம், பிங்கலந்தை ஆகிய நிகண்டுகள் கொண்ட 'யானையுண்குருகு' என்ற பாடத்தில் உள்ள பிழையை உணர்ந்து அதைத் திருத்தினதைச் சூடாமணி நிகண்டு காட்டுகின்றது. யானையுண்குருகு என்ற பாடம் தவறு என்பதை மதுரைக்காஞ்சியில் வழங்கும் பெயரிலிருந்தே தெரிந்துகொள்ளலாம். 'யானையங்குருகு' என்ற பெயர் பாடமாற்றமின்றி மதுரைக்காஞ்சியில் வருவதால் குறுந்தொகையில் 'யானையுண்குருகு' என்று வரும் தவறான பாடமாற்றத்தை அடிப்படையாகக்கொண்டு திவாகரம், பிங்கலந்தை நிகண்டுகள் யானையுண்குருகு என்று இல்லாததொரு பறவையை உண்டுபண்ணியதாகக் கருதலாம்.

நிகண்டாசிரியர்கள் யானையைத் தின்னும் பறவையைப் படைத்தனர். பெருங்குருகு பிணத்தையும் தின்னுமென்று பறவை நூலார் கூறுவர். பெருங்குருகு இறந்துபோன ஒரு காட்டுப் பசுவின் பிணத்தைத் தின்றுகொண்டிருந்ததைப் பறவை நூலறிஞர் ஒருவர் கண்டதாகக் கூறியுள்ளார். ஒருவேளை யானையின் பிணத்தைத் தின்பதைக் கண்டு யானையை உண்பதாகக் கொண்டனர் போலும்.

சென்னைப் பல்கலைக்கழக அகராதியில் யானையுண் குருகு என்பதற்குப் பொருள் கூறும்போது ஆனையிருஞ்சிப்புள் என்று பொருள் கூறி அது திவாகர மேற்கோள் என்று காட்டியுள்ளனர். ஆனால், திவாகரத்தில் ஆனையிருஞ்சிப்புள் என்ற பெயரையே காணோம். பல்கலைக் கழக அகராதியில் ஆனையறையும்புள் என்றும், ஒரு பெரும் பறவையென்றும் கொண்டுள்ளனர். ஆனையிருஞ்சிப்புள் என்பது இன்றும் மலையாள மொழியில் நாட்டுமக்களிடையே வழங்குகின்றது. ஆனராஞ்சி என்பது வலியன் குருவியாகும். யானையங்குருகு என்பது ஆனைச்சாத்தனாக இருக்கலாம் என்று பெயரொற்றுமை காரணமாக உ. வே. சாமிநாதய்யர் கருதினர். ஆனால் ஆனைச்சாத்தன் ஒருவகை வலியன்குருவியையே குறிக்கும். யானையுண் குருகைப்பற்றிச் சென்னைப் பல்கலைக் கழக அகராதி ஆனையிருஞ்சிப்புள், ஆனையறையும்புள் என்று கூறி, ஆங்கிலக் குறிப்பில் இது ஒரு புராணப்பறவை, யானையை விழுங்கும் பறவை என்று கூறியுள்ளது. அதே பல்கலைக் கழக அகராதி யானைக்குருகு என்பதற்குச் சக்கரவாகப் பறவை என்று கூறி ஆங்கிலக் குறிப்பில் நாரையைப் போன்ற பறவை என்றும் கூறியுள்ளது. இவையெல்லாம் தவறான நிகண்டுப் பாடல்களைக் கொண்டு எழுதப்பட்ட மயக்கமான பொருள்களாகும். யானையங்குருகே சரியான பாடம். யானையங்குருகே பெருங்குருகாகும். சங்ககாலத்திற்கு முன்னர்ப் பெருங்குருகு என்றும், சங்ககாலத்தில் யானையங்குருகு என்றும் வழங்கி யிருத்தல் வேண்டும்.

---

## எ. நந்துநாரை

## (OPEN-BILL STORK)

*"மருதிமிழ்ந் தோங்கிய நளியிரும் பரப்பின்*
*மணன்மலி பெருந்துறைத் ததைந்த காஞ்சியொடு*
*முருக்குத்தாழ் பெழிலிய நெருப்புற ழடைகரை*
*நந்து நாரை யொடு செவ்வரி யுகளும்*
*கழனி வாயிற் பழனப் படப்பை."*

—பதிற்றுப்பத்து 23 : 18 - 22.

மருதமரமும் காஞ்சிமரமும் முருக்கமரமும் அழகு செய்யும் பொய்கைக் கரையில் நாரையொடு செவ்வரி உகளும் என்று மேலே காட்டிய பதிற்றுப்பத்து வரிகள் கூறுகின்றன. மேலே காட்டிய பதிற்றுப்பத்துப் பாடலில் 'நந்து நாரையொடு செவ்வரி யுகளும்' என்று வரும் 21ஆம் வரியில் நந்து என்ற சொல்லையும் நாரையென்ற சொல்லையும் வெவ்வேறு சொற்களாகக் கொண்டு பழைய வுரை பொருள் கூறு



நந்துநாரை

கின்றது. நந்து என்பதற்குப் பொருள் சங்கு என்று கூறப் பட்டுள்ளது. ஆனால், கூர்ந்து நோக்கினால், பறவை நூலறிவோடு ஆராய்ந்து பார்த்தால் நந்தும் நாரையும் என்று பிரித்துப் பொருள் கொண்டது பொருத்தமன்று

என்பது தெளிவாகின்றது. 'நந்து நாரை' என்பதை ஒரே பெயராகக் கொண்டு அஃது ஒருவகை நாரையினத்தைக் குறிப்பதாகக் கருதவேண்டும். நந்து நாரையொடு வரும் செவ்வரி என்ற சொல்லும் ஒருவகை நாரையைக் குறிக்கு மென்று சங்க நூல்களில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. புறநானூறு 351 பாடலும், நெடுநல்வாடை 17ஆம் வரியும் 'செவ்வரி நாரை' என்றே இந்த நாரையை அழைப்பதைக் காணலாம். ஆதலின் நந்து நாரையொடு செவ்வரி நாரை உகளும் என்பதே நேரான பொருள். நந்து என்ற நத்தையானது நாரையொடும், செவ்வரி யொடும் உகளும் என்று பொருள் கொள்வது பொருத்த மற்றது. நத்தை உகளும் குதிக்கும் என்பது இயற்கைக்கு ஒவ்வாத செய்தியாகும். இந்த நந்தாகிய நத்தையை நீர்ப் பறவைகள் உண்ணும். அதே நத்தை நாரையொடு உகளும் என்று கூறமுடியாது. நத்தையையும் நாரையையும் பிரித்துப் பொருள் கூற, பாட்டுவரியும் இடந்தரவில்லை. நந்து நாரையென்று ஒரே பெயராகக் கொள்வோமானால் அஃது எந்தவகை நாரையைக் குறிக்கும், அது செவ்வரி நாரையிலிருந்து வேறான எந்த நாரைவகை என்பதை யெல்லாம் ஆராய்ந்தறிய வேண்டும். நந்து என்ற தனிச் சொல்லே ஒருவகைப் பறவையைக் குறிக்கும் என்று பிங்கலந்தை நிகண்டில் கூறப்பட்டுள்ளதைக் கவனிக்க வேண்டும். நந்து என்ற சொல் பறவை, நத்தை, சங்கு ஆகிய பொருள்களுடன் வழங்கும் என்று பிங்கலந்தை கூறுகின்றது. ஆதலின் நந்து என்ற பெயருடைய பறவையென்பதே 'நந்து நாரை' என்ற சொல்லின் பொருள் என்று அறியலாம். நத்தையொடு தொடர்பு படுத்திய நாரை தமிழ்நாட்டில் உள்ளதா என்று ஆராய்ந் தால் அரியதோர் உண்மை புலப்படுகின்றது. நத்தைக் குத்தி நாரை என்ற நாரையை இன்றும் தமிழ்நாட்டில் வேடந்தாங்கலிலும் பெரிய ஏரிகளிலும் காணலாம். இந்த நாரை நத்தையைக் குத்தி உண்பதால் நத்தைக்குத்தி நாரையென்று தமிழ்நாட்டிலும், ஈழத்திலும் நாட்டுமக்கள்

வழங்குகின்றனர். இதைப் பறவை நூலார் 'Shell Ibis' என்றும் Openbill Stork என்றும் அழைப்பர். இந்த நத்தைக்குத்தி நாரை பெரும்பாலும் ஒருவகையான பெரிய நத்தைகளையும் கிளிஞ்சல்களையும் தன் வாயலகால் திறந்து உள்ளே உள்ள மெல்லிய சதையைத் தின்னும் என்று டாக்டர் சலீம்அலி முதலிய அறிஞர்கள் கூறியுள்ளனர். நத்தையை உடைக்கவும் கிளிஞ்சலைப் பிளக்கவும் வாய்ப்பாக இதன் கீழ் அலகும் மேல் அலகும் நேராகச் சரிவர ஒன்று சேராமல் இடைவெளி சிறிது விட்டிருக்கும் என்று அறிஞர்கள் கூறுவர். திறந்தவாய் நாரை (Open-billed) என்ற ஆங்கிலப் பெயர் இதன் காரணமாகவே ஏற்பட்டது. மலையாளத்தில் இதைச் 'சேராகொக்கு' என்றழைப்பதும் இந்த காரணத்தினால் தான் என்பதை அறிய வேண்டும். நத்தையைத் தின்னும் நாரையைச் சங்கநூல்கள் நந்து நாரை யென்றழைத்தது மிகவும் பொருத்தமே. (In swamps and along the shore of tanks and lagoons it finds its favourite food, which consists of fresh water snails and mussels. From these it extracts the flesh either by hammering the shell with its powerful beak or in the case of snails by cutting off the operculun; small specimens are crushed between the mandibles G. M. Henry) இந்த நாரை நத்தைகளை அலகால் நசுக்கியோ, அல்லது மூடியைத் திறந்தோ உண்ணும் என்று பறவை நூல் அறிஞர்கள் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். இரட்டை மூடிக் கிளிஞ்சலைத் திறந்து உள்ளிருப்பதை உண்ணும். இஃது உண்ணும் நத்தையைச் சலீம் அலி என்ற பறவை நூல் பேரறிஞர் Pila glabosa என்ற இனத்தைச் சேர்ந்ததென்று கூறியுள்ளார். தமிழ் நாட்டில் இந்த நத்தையினத்தில் மூன்று வகைகள் நன்னீரில் வாழ்வதாகக் கூறுவர். பொய்கையில் வாழும் 'பிணர்மோட்டு நந்து' என்று அகநானூற்றில் (246) கூறியது இந்த நத்தையே என்று அறியலாம். இந்த நத்தை பெரிய ஓட்டுக் கூடுடையது. இதன் வாய் உறுதியான தட்டை யோட்

டால் மூடியிருக்கும். இதை நத்தைகுத்திநாரை திறந்து உள்ளிருக்கும் நத்தை ஊனைத் தின்று வாழ்கின்றது. அகநானூற்றில் (53) கரிமூக்குநொள்ளை என்றொரு நத்தையும் கூறப்பட்டுள்ளது. நத்தைக்கும் இந்த நாரைக்கும் உள்ள தொடர்பை பழைய மலையாள வழக்கி லிருந்தும் தெளிவாக உணர முடிகின்றது. இந்த நாரையை மலையாளத்தில் 'ஞமந்நிப் பொட்டி' என்று அழைப்பர். இந்தப்பெயருக்குப் பொருள் ஞமந்நிக்காய் என்ற நத்தையைப் பொட்டித்து உண்ணும் நாரை எனப தாகும். டாக்டர் குண்டர்ட் மலையாள மொழி அகராதி யில் 'ஞமச்சி' என்ற தமிழ்ச் சொல் இந்த வகை நத்தையைக் குறித்ததாக எழுதியுள்ளார். இதற்கு ஆங்கிலத்தில் Bivalve shell fish found in rice fields என்று விளக்கம் கூறியுள்ளார். பழைய மலையாளப் பெயரும் தமிழ்ப் பெயரும் ஒரே பொருளைத் தருவதைக் காண்கிறோம். சங்ககாலப் பெயரான 'நந்து நாரை' யென்பதற்கு இதன் மூலமாகவும் தெளிவு பெற முடிகின்றது.

சீவகசிந்தாமணி 52-ஆம் பாட்டில் இந்த நாரையைப் பற்றிக் கூறியுள்ளதாகத் தெரிகின்றது.

> "நித்திலப் பந்துட னீன்று பாதிரி
> ஒத்தபூ வுடற்றிய நாவி ஞகினுற்
> றத்துநீர் நாரைமே லெறியத் தண்கடற்
> பைத்தெழு திரையெனப் பறவை யாலுமே"

நித்திலம்போல் முட்டையிடும் நத்தையை வயலில் பாய் கின்ற நீர் நாரைமேல் எறிந்ததாகக் கூறுவதைக் காண லாம் நத்தையை நாரைக்கு உணவாக நீர் எறிந்த தென்றால் இங்குக் கூறப்படும் நாரை நந்துநாரையாகவே இருக்க வேண்டும்.

> "திருநந்து பூம்பொய்கை தேர்ந்துண்ணும் நாராய்
> ஒருநன் றுரைத்தல் தவறோ — கருநந்து

*முத்துப்பர் தீனும் முழங்கருவி நாடற்கென்*
*பத்தினிமை அல்குற் பசப்பு''.*
—முத்தொள்ளாயிரம், யாப்பருங்கல விருத்தி மேற்கோள்.

முத்தொள்ளாயிரப் பாடலில் கருநந்து என்றொரு நத்தையும் நாரையும் கூறப்பட்டுள்ளன. திருநந்தைப் பூம்பொய்கையில் தேர்ந்துண்ணு நாராய் என்றும் கொள்ளலாம். இந்த நாரைக்கு உணவு நத்தை. ஆகவே நத்தைகுத்திநாரை யென்றே கருதலாம். கம்ப ராமாயணத்தில் இதே நாரையைக் கம்பர் ஒரு பாட்டில் கூறியுள்ளார்.

*''கொடிறு தாங்கிய வாய்க்குழு நாரைவாழ்*
*தடறு தாங்கிய கூனிளந் தாழை.''*
—கம்பராமாயணம், 4-15-48.

நத்தைகுத்திநாரையையே 'கொடிறு தாங்கிய வாய்' உடைய நாரை யென்று கம்பர் குறிப்பிட்டுள்ளார். இந்த நாரைகள் கூட்டமாகத் தாழை மரத்தில் தங்கியிருந்ததாகக் கூறியுள்ளார். நீர்நிலைச் சூழலில் தாழைமரங்களில் இன்றும் இந்த நாரைகளைக் காண முடியும். கொடிறு என்பது பற்றுக்குறடாகும் சங்க நூல்களிலும் இந்தப் பொருளில் வருகின்றது.

*''பிடிபிளந்திட்ட நாரில் வெண்கோட்டுக்*
*கொடிறுபோல் காய வாலிணர்ப் பாலைச்*
*செல்வளி தூக்கலி னிலைதிர் நெற்றங்*
*கல்லிழி யருவியி னொல்லென வொலிக்கும்.''*
—நற்றிணை, 107.

கொடிறுபோல் காய என்று நற்றிணை கூறியது போலவே கம்பரும் கொடிறுபோல்வாய நாரை யென்று கூறினர் என்று கொள்ள வேண்டும். பற்றுக்குறடுக்கு இடைவெளி நடுவில் உண்டு. முனை இரண்டும் ஒரு பொருளைப் பற்றும்போது சேரும், இடையில் கூடாது. இது போன்று நத்தைகுத்திநாரையின் அலகு முனைகள் கூடும். இடையில் சேராது இடைவெளி விட்டிருக்கும். ஆதலால் நத்தை

குத்தி நாரையின் அலகிற்குக் கொடிற்றை உவமையாகக் கம்பர் கூறியது மிக அழகிய, பொருத்தமான ஒப்புமை யாகும். பற்றுக்குறட்டை வாயில் தாங்கியதுபோல இருந்த நாரைக்குழுக்கள் என்று கம்பர் கூறியது நத்தை குத்தி நாரைக்கு மிகவும் பொருத்தமானதாகும். கம்ப ராமாயணத்தில் ஒரு பாடலில் (4-15-43) தென்னையின் இளம்பாளை போன்ற நாரையைக் கம்பர் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். இது குருகு எனப்படும் கொய்யடி நாரை, வண்டானம் என்பதை முன்னரே விளக்கி யுள்ளேன். குருகின் வாய் தென்னம்பாளையைப் போலி ருக்கும். நத்தைகுத்திநாரையின் மூக்கு கத்தரிக்கோல் போல் வேலை செய்வதால் 'கத்தரிநாரை' என்று இதை வேடந்தாங்கலில் அழைக்கின்றனர். இந்தப் பெயர் நத்தையைக் கத்தரித்து உள்ளே உள்ள ஊனைத் தின்பதைக் குறிக்கலாம்.

நத்தைகுத்திநாரையை அசாம் மொழியிலும் வேறு சில மொழிகளிலும் நத்தையின் பெயருடன் சேர்த்தே பெயரிட்டழைப்பதைக் காணலாம். ஈழ நாட்டுத் தமிழில் நத்தைகுத்திநாரை யென்ற பெயர் வழங்குகின்றது. நத்தைகுத்தி நாரையைப் பறவை நூலில் (Anastomus oscitant) என்றழைப்பர்.

## அ. செவ்வரி நாரை
## (PAINTED STORK)

"மருதிமிழ்ந் தோங்கிய நளியிரும் பரப்பின்
மணன்மலி பெருந்துறைத் ததைந்த காஞ்சியொடு
முருக்குத் தாழ் பெழிலிய நெருப்புற மடைகரை
நந்து நாரையொடு செவ்வரி யுகளும்
கழனி வாயிற் பழனப் படப்பை."

—பதிற்றுப் பத்து 23 : 18-22.

பதிற்றுப்பத்தில் வரும் 'நந்து நாரையொடு செவ்வரி யுகளும்' என்ற வரியில் 'செவ்வரி' என்பது ஒரு நாரை வகையைக் குறிக்கும் என்பது கூறப்பட்டது. இந்தச்



செவ்வரி நாரை

செவ்வரி'நாரை எதுவென்பதைப் பறவை நூலறிவோடு ஆராய்தல் வேண்டும். பதிற்றுப்பத்து செவ்வரி என்றே குறிப்பிடும் இந்த நாரையைப் புறநானூறும் நெடுநல் வாடையும் செவ்வரி நாரை யென்று அழைக்கின்றன.

''பொய்கை மேய்ந்த செவ்வரி நாரை
தேங்கொள் மருதின் பூஞ்சினை முனையிற்
காமரு காஞ்சி துஞ்சும்''
—புறம்-351.

''பைங்காற் கொக்கின் மென்பறைத் தொழுதி
யிருங்களி பரந்த வீர வெண்மணற்
செவ்வரி நாரையோ டெவ்வாயுங் கவரக்
கயலற லெதிரக் கடும்புனற் சாஅய்ப்
பெயலுலந் தெழுந்த பொங்கல் வெண்மழை''
—நெடுநல்வாடை-15-19.

''செல்ப என்ப தாமே செவ்வரி
மயிர்நிரைத் தன்ன வார்கோல் வாங்குகதிர்ச்
செந்நெலஞ் செறுவின் அன்னந் துஞ்சும்
பூக்கெழு படப்பைச் சாய்க்காட்டு அன்னஎன்.''
—நற்றிணை-73

செவ்வரி நாரை என்று பெயர் பெற்றதன் காரணம் இந்த நாரைக்குச் சிவந்த வரிகள் இதன் உடலில் இருப்பதால் என்று தெரிகின்றது. நாரையினத்தில் செவ்வரியோடு கூடிய நாரையைத் தற்காலம் தமிழ்நாட்டில் செங்கால் நாரையென்றும் ஈழநாட்டில் சங்குவளை நாரையென்றும் அழைக்கின்றனர். இதற்குச் சிவந்த வரிகள் (Delicate rose-pink near the tail) இருப்பதாகப் பறவை நூலார் கூறுவர். இந்தச் சிவந்த வரிகள் இருப்பதால் செவ்வரி எனப்பட்டது. நற்றிணையில் சிவந்த வரிகள் வரிசையாக இருப்பதுபோலத் திரண்ட கதிர்களை உடைய செந்நெல் என்று கூறியிருப்பதைக் காணலாம். சிவந்த நெல்லை யுடைய கதிர்களில் நெல்மணிகள் சிவப்பாகவும், இடையில் வேறு நிறமாகவும் தோன்றுவதுபோல வெண்மையான வால்பாகத்தில் இந்த நாரைக்குச் சிவந்த பொறிகள் காணப்படுகின்றன நற்றிணையில் செவ்வரி என்பதற்குப் பொருள் பறவையென்று கொள்ளாமல் வேறு முறையாக விளக்கங் கொடுத்திருப்பது பொருத்தமாயில்லை. பொய்கை நீரில் செவ்வரி நாரை மேய்ந்து நீரருகே இருந்த காஞ்சி மரத்தில் தூங்கினதாகக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

இரவில் மரங்களின் உச்சியில் இவை தூங்குமென்று பறவைநூலார் கூறுவர். மழைபெய்து நீர் விரைவாக ஓடும் போது, கயல்மீன் நீர் எதிராகப் பாயும்போது களிபரந்த மணலில் செவ்வரி நாரைகள் கொக்குக் கூட்டத்துடன் மீன்களைக் கவரும் என்று நெடுநல்வாடை கூறுகின்றது. மீன்கள் நிறையக் கிடைக்கும்போது இம் முறையாகக் கூட்டமாக மீன்களை வேட்டையாடுவது செவ்வரி நாரை களின் பழக்கம் என்று பறவை நூலார் கூறுவர். (The birds feed gregariously where food is abundant such as where large quantities of fish are washed down by monsoon floods) இந்தப் பழக்கத்தையே நெடுநல் வாடை குறிப்பிட்டுள்ளது.

இந்தச் செவ்வரி நாரையை ஆங்கிலத்தில் (Painted stork) என்றும் பறவை நூலில் (Ibis leucocephalus) என்றும் அழைப்பர். தமிழ்நாட்டில் நந்து நாரை, செவ்வரி நாரைகளைப்போல வண்ணாத்தி நாரையென்று ஒருவகை நாரை இருக்கின்றது. இது பலவண்ணங்களுடன் தெரி வதால் வண்ணத்து நாரை (White-necked stork) என் றழைக்கப்பட்டு வண்ணாத்தி நாரையென்று மக்கள் வாயில் வழங்குகின்றது. வண்ணாத்திக்கும் இந்த நாரைக்கும் யாதொரு தொடர்புமில்லை. இதைப்பற்றிச் சங்க நூல்களில் யாதொரு செய்தியும் காணப்படவில்லை. இது வர்ண நாரையென்றும் அழைக்கப்படும்.

———

## ௯. செங்கால் நாரை

## (WHITE STORK)

செங்கால் நாரையென்ெறாரு நாரை பெருங்கதை யிலும் தொல்காப்பிய உரையிலும் நன்னூல் மயிலை நாதர் உரையிலும் சத்திமுற்றப் புலவர் பாட்டிலும் கூறப் பட்டுள்ளது. இந்தச் செங்கால் நாரையைச் செவ்வரி நாரை யென்று கருதிச் சென்னைப் பல் கலைக்கழக அகராதி இதன் ஆங்கிலப் பெய ரைக் குறிப்பிட்டுள்ளது. ஆனால், இலக்கியத்தில் வழங்கும் செங்கால் நாரை இதுவன்று என்பது தெரி கின்றது. தற்காலம் நாட்டு மக்களிடையே வழங்கும் செங்கால் நாரை யென்ற பெயரைக் கொண்டு பல் கலைக்கழக அகராதி இவ் வாறு கருதியது. ஆனால், செங்கால் நாரை தமிழ் நாட்டிற்கு அரிதில் வலசை யாக வரும் ஒரு வகை நாரையாகும். இஃது ஆங்கிலத்தில் வெள்ளை நாரை யெனப்படும் (White stork) பறவையே என்பது சத்தி முற்றப் புலவர் பாடலில் இருந்து தெளிவாகத் தெரி கின்றது.



செங்கால் நாரை

*"நாராய் நாராய் செங்கால் நாராய்*
*பழம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன*
*பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்*
*நீயும் நின் பெடையும்*
*தென்றிசைக் குமரி யாடி வடதிசைக்*
*காவிரி யாடி ஏகுவி ராயின்*
*சத்திமுற்றத்து வாவியிற் றங்கி."*

பனைமரத்தின் கிழங்கு பிளந்தாற்போலப் பவள நிறமான வாயை உடைய நாரை இதுவே என்பது தெளிவாகின்றது. சத்தி முற்றப்புலவர் கூறிய உவமை மிகவும் அழகானதும் பொருத்தமானதுமாகும். இந்த உவமையின் பொருத்தத்தை எம். கிருஷ்ணன் என்ற பறவை நூலறிஞர் 'இந்து' நாளிதழில் (The Hindu) தெளிவாக்கியுள்ளார். இந்த நாரையின் அலகின் படத்தையும், பனைமரக்கிழங்கின் படத்தையும் எதிரெதிரே காட்டி இந்த உவமையின் பொருத்தத்தையும் சிறப்பையும் காட்டியுள்ளார் இந்த நாரைக்குப் பவள நிறப் பெரிய கூர் வாயும், நீண்ட சிவந்த கால்களுமிருப்பதாகச் சத்தி முற்றப் புலவர் கூறுவதைக் காணலாம். இந்த வர்ணனை செங்காலையுடைய வெண்ணாரைக்கே (White Stork) பொருந்தும். அகராதியில் கூறிய செவ்வரி நாரைக்குப் பொருந்தாது. மற்றும் இந்தச் செங்கால் நாரை தென் திசைக் குமரியிலிருந்து வட திசைக் காவிரிக்கு ஏகுவதாகச் சத்தி முற்றப் புலவர் கூறியிருப்பதால் இது வலசை (Migration) செல்லும் பறவை என்பது தெளிவாகின்றது. ஆதலின் இது செவ்வரி நாரையன்று. ஆங்கிலத்தில் வெண்ணாரையென்றழைக்கப்படுகின்ற நாரையே வலசை போவது. இந்த நாரையே குளிர் காலங்களில் இந்தியாவுக்கு வலசையாக ஐரோப்பாவிலிருந்து வருகின்றன. மணிக்கு 77 கி. மீ. செல்லக்கூடியது. இந்த நாரை நல்ல செய்தி கொண்டுவரும் பறவை யென்று பல நாடுகளில் மக்கள் நம்புகின்றனர். இந்த நம்பிக்கை தமிழ்நாட்டிலும் இருந்ததாலேயே சத்தி முற்றப் புலவர் இதைத்

தம் மனைவிக்குத் தூதனுப்பினர் என்று தெரிகின்றது. இந்த நாரை தமிழ் நாட்டிற்கு மிக அரிதாக வலசை வருகிறதென்று பறவை நூலார் கூறுவர். இந்த நாரையைத் தமிழ்நாட்டில் காண்பது அரிதாகையால் இதைப் பற்றிய செய்தி சங்க நூல்களில் காணப்படவில்லை. பிற் கால நூல்களிலும் அரிதாகக் கூறப்பட்டுள்ளது. பெருங் கதையில் இரை தின்ற செங்கால் நாரை பறப்பதைப் பற்றிச் செய்தி வருகின்றது.

> "இருங்கண் விசும்பக மிறகுறப் பரப்பிக்
> கருங்கயல் கொண்ட கவுள வாகிப்
> பொங்கிரும் புன்னைப் பூம்பொழில் முன்னிச்
> செங்கா ணரை செல்வன காண்மின்."
>
> —பெருங்கதை 40 : 20-23.

பிற்கால இலக்கண உரைகளில் செங்கால் நாரையென்ற பெயர் எடுத்துக்காட்டாகப் பல உரையாசிரியர்களால் கூறப்பட்டுள்ளது. இதை ஆங்கிலத்தில் (White stork) என்றும் பறவை நூலில் (ciconia ciconia ciconia) என்றும் அழைப்பர். பறவை நூலார் இதை நாரை யினப் பறவையென்று கருதுவதில்லை. இதைத் தனியே வேறு இனமாகக் கொள்வார்.

## ௧௦. பூ நாரை

## (FLAMINGO)

பூநாரை என்று இன்றழைக்கப்படும் ஒரு வகை நெடியநாரை கூட்டம் கூட்டமாகக் கோடிக்கரையில் காணப்படுகின்றது. கோடிக்கரைக் கழியில் ஆயிரக்கணக்கான பூ நாரைகள் காலையிலும் மாலையிலும் படைக்கு அணிவகுத்து நிற்பது போல வரிசையாக நிற்பதைக் காணலாம். வேடந்தாங்கல் போன்ற இடங்களிலும் பூநாரையைச் சிறு கூட்டமாகவும் காணலாம். இந்த நாரையைப் பற்றிச் சங்கப் புலவர்கள் தெரிந்திருந்தனர் என்று கருதலாம். இந்த நாரை நான்கு அடி உயரமிருக்கும். கடற்கரைக் கழிகளிலும் ஆழமற்ற நீர் நிலைகளிலும் இந்த நெடிய நாரை நிற்கும்போது நீண்ட கழுத்தை வளைத்து நீரில் தலையை



நாரை

விட்டுத் துழாவிக் கொண்டே இருக்கும். ஆதலின் இந்த

நாரைக்கு மூன்று கால்கள் இருப்பதுபோலத் தோன்றும். இரு கால்களுக்கும் நடுவே குனிந்து கழுத்தைவிட்டு நீர்ப் பரப்பை இரு பக்கமும் துழாவிக் கொண்டே இருப்பது இந்த நாரையின் குணமாகும். (Feeds in shallow water with the slender neck bent down between the legs and head completely submerged). இதையே ஒரு கலித் தொகைப் பாட்டு குறிப்பிட்டிருப்பது வியப்பை அளிக் கின்றது.

> *"பொன்மலை சுடர்சேரப் புலம்பிய விடனோக்கித்*
> *தன்மலைந் துலகேத்தத் தகைமதி யேர்தரச்*
> *செக்கர்கொள் பொழுதினை ஒலிநீவி யினநாரை*
> *முக்கோல்கொ ளந்தணர் முதுமொழி நினைவார்போ*
> *லெக்கர்மே லிறைகொள்ளு மிலங்குநீர்த் தண்சேர்ப்ப"*
>
> *—கலித்தொகை, 126.*

மாலைக் காலத்திலே முக்கோலைக் கொண்ட அந்தணர் முதியமொழியை நினைக்கின்றார் போல இனமான நாரைகள் ஆரவாரத்தைக் கைவிட்டு இடுமணல்மேல் இறுத்தலைச் செய்யும் என்று கலித்தொகை கூறுகின்றது. பெரியநாரை சிறகு சிவந்திருத்தலானும் மூக்கு தரையிலே சென்று குத்துதலானும் அதனை முக்கோலை ஊன்றி யிருந்த அந்தணரோடு ஒப்புரைத்தார் என்று நச்சினார்க் கினியர் கூறிய உரை கூர்ந்து கவனிக்கத்தக்கது. இந்த உரை பூநாரைக்கே பொருந்தும் என்பதைக் காணலாம். அந்தணர் காஷாயம் போர்த்த குழாங்கள் என்பதற் கேற்ப, பூநாரையின் உடலிலும் சிவப்பு நிறம் காணப்படு வதைக் கவனிக்க வேண்டும். எக்கர் மேல் இறை கொள்ளுவதாகவும் (தங்குவதாகவும்) கூறுதலைக் காண்க. நீர்க்கழியில் நின்றுகொண்டே ஓய்வெடுக்குமென்று பறவை நூலார் கூறுவர். கூடு கட்டித் தங்குவதில்லை. இந்த நாரைகள் இனமாக ஒலி நீவி இரை கொண்ட தாகக் கூறப்பட்டுள்ளது. கூட்டமாக இரைதேடும் போது அடிக்கடி ஒரு வகை ஓசை செய்யுமென்று கூறுவர். கலித்தொகைச் செய்திகள் பூநாரைக்குப் பொருந்துவதால்

கலித்தொகை கூறும் இனநாரை, பூநாரையே என்று கருத வேண்டும்.

> "கடும்புன லொழுகித்த நடுங்கலு ரள்ளற்
> கவிரித ழன்ன தூவிச் செவ்வாய்
> இரைதேர் நாரைக் கெவ்வ மாகத்
> தூஉந் துவலைத் துயர்கூர் வாடையும்"
>
> —குறுந்தொகை, 103.

குறுந்தொகைப் பாட்டில் கலியாணமுருக்கின் சிவந்த பூவைப் போன்ற தூவியுடைய சிவந்த வாயுடைய நாரையென்று கூறியிருப்பதைக் காணலாம். இந்தப் பறவைக்கு இறக்கையில் கடுஞ்சிவப்பாக (bright scarlet) தூவியிருக்குமென்று பறவைநூலார் கூறுவர். இதற்கு இளஞ்சிவப்பான அலகு உண்டு. இந்தப் பறவை ஆழமற்ற நீர்ப்பரப்பில் இரை தேடும் என்று கூறியுள்ளனர். சதுப்பும் சேறும் கலந்த உப்பு நீரில் தலையை விட்டுக் கொண்டு துழாவுவதையே முக்கியமாகக் கூறுவர். 'நடுங்கலுர் அள்ளல்' என்ற சேறும் சகதியுமான நீர்ப்பரப்பில் இந்த நாரை காணப்படுவதைக் குறுந்தொகை கூறியுள்ளது.

இதே பூநாரை யினத்தை வேறொரு கலித்தொகைப் பாடலும் குறிப்பிடுவதாகத் தெரிகின்றது.

> "உரவுநீர்த் திரைபொர வோங்கிய வெக்கர்மேல்
> விரவுப்பல் லுருவின வீழ்பெடை துணையாக
> விரைதேர்ந்துண் டசாவிடூஉம் புள்ளின மிறைகொள
> முரைசுசூழ் ளுள்பவர் முரணியோர் முரண்டப
> நிரைகளி றிடைபட நெறியாத்த விருக்கை போற்."
>
> —கலித்தொகை, 132.

கலித்தொகை 132ஆம் பாட்டில் இரையைத் தேடித்தின்று இளைப்பாறும் புள்ளினங்கள் கடலினது திரை வந்து பொருப்படி உயர்ந்த இடுமணலின்மேல் தங்குதல் கொள்ள என்று கூறியிருப்பதைக் காணலாம். கடல்நீர்

வீசும்படியான இடத்து மணலில் தங்கும் புள்ளினங்கள் பூநாரையாகவே இருக்கலாம். இவைதாம் அவ்வாறு தங்கும் குணமுடையனவாகும்.

இதைத் தெலுங்கு மொழியில் 'பூகொங்கா', 'சமுத்திர பூசிலுகா' என்றும் அழைக்கின்றனர். ஈழ நாட்டுத் தமிழில் 'உரியன்' என்றும் அழைக்கின்றனர். பூ என்ற சொல் சிவப்பு என்ற பொருளில் சங்கநூல்களிலேயே வழங்கி யுள்ளது. பூநாரை யென்பதற்குச் சிவப்பு நாரை யென்பதே பொருளாகும். பூவல் என்ற சொல் சிவந்த மண்ணைக் குறித்துச் சங்கநூலில் வழங்குகின்றது. பூத் தலையன்றில் என்ற பெயரில் பூ என்பது சிவப்பு நிறத்தைக் குறிக்கின்றது. மலையாளத்தில் பூங்கோழி, பூவன் என்ற சொற்கள் சிவந்த கொண்டையையுடைய ஆண்கோழிக்கு வழங்குகின்றன. சங்கநூல்கள் நீர்ப்பறவைகளைப் பொது வாகக் குருகு என்று சில பாடல்களில் அழைப்பதைக் காணலாம். ஆயிரக்கணக்கான நீர்ப்பறவைகள் கடற் கரையில் நிற்பதைப் படைகள் அணிநிற்பதற்கு ஒப்பிட்டுக் கூறுவது சங்கநூல் வழக்காகக் காணப்படுகின்றது. பறவைநூலாரும் இவ்வாறு (Echelons of geese) கூறுவ துண்டு.

> ''விரைதிமில் களிறாகத் திரையொலி பறையாகக்
> கரைசேர் புள்ளினத் தஞ்சிறை படையாக
> அரைசுகால் கிளர்ந்தன்ன வுரவுநீர்ச் சேர்ப்ப கேள்''
>
> —கலித்தொகை, 149.

> ''பன்னிறப் புள்ளினம் பரந்தொருங் கீண்டிப்
> பாசறை மன்னர் பாடி போல
> வீசுநீர்ப் பரப்பி னெதிரெதி ரிருக்கும்.''
>
> —மணிமேகலை, 8 : 31-33.

கடற்கரையோரத்தில் ஆயிரக்கணக்காகக் கூட்ட மாகக் கூடிப் படைபோலத் தோன்றும் பறவை என்று கூறப்படும் செய்தி பூநாரைக்கு மிகவும் பொருந்தும். பூநாரையை 'Flamingo' என்று ஆங்கிலத்திலும்

'Phoenicopterus roseus' என்று பறவைநூலிலும் அழைப்பர். பூநாரையில் சிறிது உயரங்குறைந்த சிறிய இனம் இருக்கின்றது. தமிழ்நாட்டில் இராமேசுவரத்தில் இந்த இனம் காணப்படுகின்றது. உப்பு மிகுந்த கழிகளில் காணப்படும் இதை ஆங்கிலத்தில் 'Lesser Flamingo' என்றும் பறவைநூலில் 'Phoeniconaias minor' என்றும் அழைப்பர். இதன் உடல் முழுவதும் இளஞ்சிவப்பாகக் காணப்படும். இதையும் கலித்தொகை குறிப்பிட்டிருக்கலாம். காஷாயம் போர்த்த குழாங்கள் என்பதற்கு இந்த நாரைக் கூட்டம் பொருத்தமாக இருக்கும். பூநாரையைக் கோணமூக்குநாரை யென்றும் அழைப்பர். இதன் மூக்கு நடுவில் ஒடிந்து ஒட்டிவைத்தாற்போன்று இருப்பதால் கோணமூக்கு என்றனர். இதைத் துடும்பநாரை என்றழைப்பதுமுண்டு. துடுப்புப்போல இதன் மூக்கு நீர்ப் பரப்பைத் துழாவுவதால் துடும்பநாரை என்ற பெயர் வந்திருக்கலாம். சில இடங்களில் 'காருவா' என்றும் அழைக்கின்றனர். இந்தப் பறவையை நமிடு, நமுடு என்றும் சில இடங்களில் அழைக்கின்றனர். நமுடு கடிக்கின்றான் என்ற வழக்கு கீழுதடை வளைத்து மேலுதட்டிற்கு அடியில் வைத்துக் கடிப்பதைக் குறிக்கும். இதுபோன்று இப் பறவையின் அலகுகள் பொருந்தியிருப்பதால் நமுடு என்றழைக்கப்பட்டது. கைவிரலால் நெமிட்டுதல் என்று சொல்லுகிறோம். நன்றாகக் கிள்ளுவதை நிமிட்டுதல் என்று கூறுகிறோம். ஞெமிடி என்ற சொல் அகநானூற்றிலேயே வருகின்றது. பூ நாரையின் அலகு நுனியில் உடைந்ததுபோல வளைந்து காணப்படும். பூநாரை உணவு கொள்ளும்போது சேறு நிறைந்திருக்கும் நீரில் அலகைத் தலைகீழாக வைத்துத் துழாவும். மேலலகு கீழாக இருக்கும் அலகின் வழியாக நீர் செல்லும்போது நாக்கை உள்ளேயும் வெளியேயும் இழுத்து நுண்ணிய பூச்சிகளையும் உயிர்களையும் உட்கொள்ளுகின்றது. இவ்வாறு உணவு கொள்ளுவதற்காகவே இதன் மூக்கு நுனி வளைந்து இருக்கின்றது. பெரிய தவளை, மீன், நத்தை ஆகியவற்றை இரைகொள்ளுவதில்லை. நமடு என்ற

பெயர் கோணையாக வளைந்த அலகின் காரணமாக வந்தது. நாலாயிரத்திவ்ய பிரபந்தத்திற்கு எழுதிய ஈட்டில் 'நிமியும் வாயொடு கண்கள் நீர்மல்க' என்று கூறப்பட்ட இடத்தில் நிமிதல் என்ற சொல் நெளிதல் என்ற பொருளில் வழங்கியுள்ளது. கண்ணீர்விட்டு அழும்போது வாய்விட்டு அழுவதைத் தடுக்கக் கீழுதட்டைக் கடிப்பது வழக்கம். இதுவும் நமுடு கடிக்கின்றது போலவேயாகும். நெளிந்த வாயையுடைய பறவை யாதலால் நமிடு, நெமடு எனப்பட்டது. இரண்டாம் திருமொழிக்குக் கூறிய ஈட்டின் விளக்கத்தில் 'மண் தின்று வந்த நகடுபோல அன்றிறே' (ஈடு, 6, 2, ப்ர) என்று கூறப்பட்டிருப்பதைக் கவனிக்க வேண்டும். இங்கு நகடு என்றது நமடு என்ற பறவையைக் குறித்ததேயாகும் நமடு நீர்ப்பரப்பில் சேற்றைத் துழாவுவதால் மண்ணைத் தின்பதாகக் கருதினர். மண்ணைத் தின்றால் சோகை வந்து உடல் வெளுத்துப்போகும் என்று கூறுவர். பின்னர் நகடு என்பதற்குப் பசலைநிறம் என்று பொருள் பெற்றது. மண்ணைத் தின்னும் நமடு என்ற பறவைபோல வெளுத்துப்போவதாகக் கருதினர். நமடு என்பதே நகடு என்று ஈட்டில் அழைக்கப்பட்டது. ஆதலின் ஈட்டில் பூநாரை மண்ணைத் தின்பதாகக் கூறியது அரிய செய்தியாகும் இவ்வாறு பூநாரை மண்ணிலிருந்து நுண்ணிய இரையை அலகினுல் வடிகட்டி எடுத்து உண்பதை வெளிநாட்டு அறிஞர்கள் ஒரு நூற்றாண்டுக்கு முன்னர்த் தான் கண்டுபிடித்தனர்.

———

# கக. அன்னம்
# (WILD DUCKS AND WILD GEESE)

சங்க இலக்கியத்தில் அன்னம் என்ற பறவையைப் பற்றிச் சில செய்திகள் வருகின்றன. இந்தச் செய்திகளை ஆராய்ந்து பார்த்தால் அன்னமென்ற பறவை பிற்காலத்து நூல்களில் கூறப்படும் புராணப் பறவையன்று என்பது தெளிவாகின்றது. அன்னப் பறவை பால் போன்று தூய வெள்ளை நிறமுடையது. நீரிலிருந்து பாலைப்பிரிக்கும் தன்மையுடையது என்று பிற்கால நூல்கள் கூறும் செய்திகள் வடமொழியிலிருந்து வந்த செய்திகளாகும். நீரிலிருந்து பாலைப் பிரித்தெடுக்கும் செய்தி சங்க நூல்களில் சொல்லப்படவில்லை. இந்தச் செய்தியை அறிவியற்படி ஆராய்ந்து பார்த்தால் இயற்கைக்கு முரணானது என்பது தெளிவாகின்றது. நீரிலிருந்து பாலைப் பருகும் பறவை இயற்கையில் இல்லை. வட நூல்களிற் கூறப்படும் பறவை 'Swan' என்பதாகும். இந்தப் பறவை வெளிநாடுகளிலிருந்து குளிர் காலத்தில் வட நாட்டிற்கு வரும் பறவையாகும். மிகுந்த குளிர்ப் பகுதிகளில் இயற்கையாக வாழ்வது. இந்தப் பறவையை உறை பனி வீழும் இமயமலைப் பகுதிகளில் காண முடியுமே ஒழியத் தமிழ்நாட்டில் காணவே முடியாது. இந்தப்



அன்னம் (காட்டுவாத்து)

பறவை தூய வெள்ளையானது. இதன் மேல் ஏற்றிய வடமொழிக் கற்பனைச் செய்திகளையே பிற்காலத் தமிழ் நூல்களில் காண்கிறோம். சங்க நூல்களில் அன்னத்தைப் பற்றி வரும் செய்திகள் பெரும்பாலும் இயல்பான உண்மைச் செய்திகளேயாகும். சங்க நூல்களில் கூறப் படும் அன்னமெனும் பெயர் தாரா, காட்டுவாத்து, கிளுவை, சிறவி என்று தற்காலம் அழைக்கப்படும் பறவைகளைப் பொதுவாகக் குறிப்பிடுவதாகும். இந்தி முதலிய வட மொழிகளிலும் பேச்சு மொழியில் தாரா முதலிய பறவைகளைச் சில அடைமொழிகளுடன் சேர்த்து அன்னம் என்று அழைக்கும் வழக்கு இன்றும் உள்ளது. இந்த மொழிகளிலும் அன்னம் என்ற பெயர் காட்டு வாத்துப் போன்ற பறவைகளுக்குப் பொதுப் பெயராக வழங்குவது கவனிக்கத்தக்கது. இது போன்றே சங்க நூல்களிலும் அன்னம் என்ற பெயர் வாத்துப் போன்ற பறக்கும் பறவைகளுக்குப் பொதுப் பெயராக வழங்கிற்று.

வாத்துப் போன்ற பல பறவை வகைகள் மழைக் காலத்தில் தமிழ்நாட்டில் காணப்படுகின்றன. இந்தப் பறவைகளுக்குப் படகு போன்ற உடலமைப்பு உள்ளது. இவை நீரில் நன்கு நீந்துவன. வானில் நன்றாகப் பறக்கக் கூடியன. இவற்றைத் தமிழ்நாட்டில் தாரா என்றும் காட்டுவாத்து என்றும் அழைப்பர். சங்க காலத்தில் அன்னமென்று அழைக்கப்பட்ட பறவை இனமே சிறிது பிற்காலத்தில் தாரா என்றழைக்கப்பட்ட தாகத் தெரிகின்றது. திணைமாலை நூற்றைம்பதில் தாரா என்ற பெயர் முதன் முதலாக வருகின்றது.

*"மருதோடு காஞ்சி யமர்ந்துயர்ந்த நீழ*
*லெருதோ டுழல்கின்ற ரோதை — குருகோடு*
*தாரத்தோ றுய்ந்தெடுப்புந் தண்ணங் கழனித்தே"*
*—திணைமாலை நூற்றைம்பது-139.*

தாரா என்ற பெயர் தேவாரத்தில் சில பாடல்களில் வருகின்றது. தேவாரத்தில்தான் முதலில் தாரா என்ற

பெயர் பரவலாக வழங்கிற்று. காட்டு வாத்துப் போன்ற பறவைகளே தாரா என்று வழங்கப்பட்டன.

*"கூராரல் இரைதேர்ந்து குளமூலவி*
*வயல்வாழும் தாராவே"* —தேவாரம்

தாரா பூசித்ததால் சண்பை நகரம் "பூந்தராய்" என்று பெயர் பெற்றதாகக் கூறப்படுவதையும் காணலாம். தஞ்சாவூர் மாவட்டத்தில் தாராவினப் பறவைகள் மிகுதியாகக் குளங்களிலும் பொய்கைகளினும் இருந்திருக்க வேண்டும். மருத நிலத்துக்கு உரிய பறவையாகத் தாரா பிற்கால இலக்கண நூல்களில் கூறப்பட்டது. சங்க நூல்களில் அன்னம் கழிகளில் துழவுவதாகவும், கடற்கரை மணலில் இறகுகளைக் கோதுவதாகவும், மழைக் காலத்தில் மிக விரைவாக வானில் பறப்பதாகவும் கூறப்பட்டுள்ளது.

*"நெடுங்கழி துழைஇய குறுங்கால் அன்னம்*
*அடும்பமர் எக்கர் அஞ்சிறை உளரும்*
*தடவுநிலைப் புன்னைத் தாதணி பெருந்துறை."*
—அகம்-320.

தமிழ்நாட்டுக் கடற்கரைக் கழிகளில் துழாவியதாகக் கூறப்படும் அன்னம் 'கழியன்' என்று அழைக்கப்படும் தாரா வினப் பறவைகளே யென்பது தெளிவாகும். கழிகளில் மேய்வதால் நாட்டு மக்கள் இந்த வகைப் பறவைகளைக் கழியன் என்றழைப்பது வழக்கம். மார்க்கழியன், செங்கழியன், குறுங்கழியன், வெள்ளைக்கண்கழியன் என்று தாரா வினப் பறவைகளைத் தமிழ்நாட்டில் பல இடங்களில் அழைக்கின்றனர். கழியன் என்பது களியன் என்றும் வழங்கும். அகநானூற்றுப் பாடலில் கழிகளைத் துழாவுவதாகக் கூறிய செய்தியைக் கழியன் என்று நாட்டு மக்கள் வாயில் வழங்கும் பெயருடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

*"துதிக்கா லன்னந் துணைசெத்து மிதிக்கும்*
*தண்கடல் வளையினு மிலங்கு மிவள்"*
—ஐங்குறுநூறு-106.

*"நெடுங்கரை யிருந்த குறுங்கா லன்னத்து*
*வெண்டோ டிரியும் வீததை கானற்*
*கைதையந் தண்புனற் சேர்ப்பனொடு"*

—குறுந்தொகை-304.

*"மின்னுச்செய் கருவிய பெயன்மழை தூங்க*
*விசும்பா டன்னம் பறைநிவந் தாங்குப்"*

—குறுந்தொகை-205.

*"செல்ப என்ப தாமே செவ்வரி*
*மயிர்நிரைத் தன்ன வார்கோல் வாங்குகதிர்ச்*
*செந்நெலஞ் செறுவின் அன்னந் துஞ்சும்*
*பூக்கெழு படப்பைச் சாய்க்காட்டு அன்னஎன்"*

—நற்றிணை-73.

*"கார்பயம் பொழிந்த நீர்திகழ் காலை*
*நுண்ணயிர் பரந்த தண்ணய மருங்கில்*
*நிரைபறை அன்னத்து அன்ன விரைபரிப்*
*புல்லுளைக் கலிமா மெல்லிதிற் கொளீஇய"*

—அகம். 234.

*"கழங்குறழ் ஆலியொடு கதழுறை சிதறிப்*
*பெயலொடு ங் கின்ருல் வானம் வானின்*
*வயங்குசிறை அன்னத்து நிரைபறை கடுப்ப*
*நால்குடன் பூண்ட கானவில் புரவிக்*
*கொடுஞ்சி நெடுந்தேர் கடும்பரி தவிராது*
*இனமயில் அகவுங் கார்கொள் வியன்புனத்து."*

—அகம்-334.

அன்னத்திற்குக் கால்கள் குறியன வென்று சங்க நூல்கள் கூறுகின்றன. உடலைப் பார்க்கில் அன்னத்தின் கால்கள் மிகக் குறுமையானவையே. அன்னத்தின் கால்களின் விரல்கள் இடையே மடிப்புடைய சவ்வுத்தோல் உள்ளது. இதையே 'துதிக்கால்' என்று ஐங்குறுநூறு (106) கூறுகின்றது. யானையின் தும்பிக்கை நுனியில் இது போன்ற ஒரு சவ்வுத்தோல் உள்ளதால் அதைத் துதிக்கை என்றனர். துதிக்கால் (Webbed foot) என்ற

சொல்லையே கலைச் சொல்லாகப் பயன்படுத்தலாம். அன்னங்கள் கூட்டமாக மிகுந்த விரைவுடன் பறக்கும் என்று சங்க நூல்கள் கூறும் செய்தியும் உண்மையே. குதிரைகள் கடுவிரைவில் செல்வதை அன்னப்பறவைகள் வரிசையாக விரைவாகப் பறப்பதற்கு ஒப்பிட்டுக் கூறியிருப்பதைக் காணலாம். அன்னப் பறவைகள் வானத்தில் 'V' என்ற வரிசையில் வெகு விரைவில் பறந்து செல்லும் என்று பறவை நூலார் கூறுவர். இந்த அன்னப் பறவையினத்தில் மார்க்கழியன் (Pintail) என்ற வகைப் பறவைகள் தமிழ்நாட்டிற்கு சைபீரியா, ஐரோப்பா முதலிய நாடுகளிலிருந்து குளிர் காலத்தில் வலசை வருகின்றன. மாமல்லபுரத்தில் உள்ள அர்ச்சுனன் தவம் என்னும் புடைப்புச் சித்திரத்தில் இதன் உருவம் செதுக்கப்பட்டுள்ளதாகத் தெரிகின்றது. இந்த மார்க்கழியன் தாரா மிகமிக விரைவாக (Tearing haste) வானத்தில் பறந்து செல்லும் என்று கூறுவர். சங்க நூல்களில் அன்னத்தின் விரைவு கூறப்பட்டிருப்பதால் இந்த அன்னம் மார்க்கழியன் என்றழைக்கப்படும் பறவையாகவும் இருக்கலாம் இது தமிழ்நாட்டில் வேடந்தாங்கல் முதலிய இடங்களில் காணப்படுகின்றது. கடற்கழிகளிலும், முகத்துவாரப் பகுதிகளிலும் காணப்படும்.

அன்னப்பறவை தமிழ்நாட்டிலிருந்து இமயத்துக்குச் செல்வதாக இரு பாடல்கள் சங்க இலக்கியத்தில் கூறுகின்றன.

> "சிலம்தாழ் மருங்கின் தெண்கடல் மேய்ந்த
> விலங்குமென் தூவிச் செங்கால் அன்னம்
> பொன்படு நெடுங்கோட் டிமயத்து உச்சி
> வானர மகளிர்க்கு மேவல் ஆகும்
> வளராப் பார்ப்பிற் கல்கிரை ஒய்யும்
> அசைவில் நோன்பறை போலச் செல்வர்"
>
> —நற்றிணை-356

> "அன்னச் சேவ லன்னச் சேவல்
> ........................................

.......................................
குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி
வடமலைப் பெயர்குவை யாயி னிடையது
சோழநன் னாட்டுப் படினே கோழி
உயர்நிலை மாடத்துக் குறும்பறை அசைஇ
.......................................
.......................................
ஆந்தை யடியுறை யெனினே மாண்டநின்
இன்புறு பேடை யணியத்தன்
னன்புறு நன்கல நல்குவ னினக்கே.'' —புறம்-67.

அன்னப்பறவைகள் வலசை (Migration) போவதை ஓரளவு தெரிந்தே சங்கப் புலவர்கள் இப்படிப் பாடியுள்ளனர் என்று தெரிகின்றது. இவை நெடுந்தொலைவு போவதை யறிந்து கற்பனையைக் கலந்து அன்னத்தைத் தூதனுப்பிப் புலவர்கள் பாடினர். அன்னப்பறவையினத்தில் சில இமயமலையைக் கடந்து சைபீரியா முதலிய நாடுகளுக்குச் செல்கின்றன. வெயிற்காலந் தொடங்கியதும் இவை தமிழ்நாட்டை விட்டுச் செல்கின்றன. ஒருவகை அன்னம் (Mallard) தமிழ்நாட்டில் எப்போதாவது தவறி வருவதுண்டு. இதற்குச் சிவந்த கால்கள் உண்டு. இஃது இமயமலையில் காசுமீரப் பள்ளத்தாக்கில் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கின்றது. தற்போது எங்கும் காணப்படும், வளர்க்கப்படும் நாட்டுவாத்தின் மூதாதையே இந்த 'மல்லார்டு' என்ற பறவை யென்பர். வளர்க்கப்பட்டதால் நாட்டு வாத்துப் பறக்கும் தன்மையை இழந்துவிட்டதென்பர். நற்றிணை, புறநானூற்றுப் பாடல்களில் இமயமலைக்குச் செல்வதாகக் கூறப்படும் அன்னம் இந்தச் சாதிக் காட்டு வாத்தாகலாம். அன்றுடம் தெண் கடலில் மேய்ந்து இமயமலையில் இருந்த தன் வளராத குஞ்சுகளுக்கு இரையூட்டிச் சென்று வந்ததாகக் கூறுவது புலவரின் கற்பனையேயாகும். வான்ர மகளிருடன் வளராப் பார்ப்பைத் தொடர்புபடுத்துவதால் அது கற்பனை யென்பது தெரிகின்றது. ஆனால், வளராப் பார்ப்பு இமய

மலையில் இருந்ததாகக் கூறியது முக்கிய செய்தியாகும். அங்கு இந்த இனப்பறவைகள் இமயமலைப் பள்ளத் தாக்கில் முட்டையிட்டுக் குஞ்சு பொரிப்பதைப் பறவை நூலார் கண்டுள்ளதால் வளராப் பார்ப்பு இமயமலையில் இருந்ததாகக் கூறிய செய்தி பொருத்தமானதே. புற நானூற்றுப் பாடலில் குமரித்துறையிலிருந்து இமய மலைக்கு வலசை போகும் அன்னத்தின் செய்தி கூறப் பட்டுள்ளது. அன்ன இனப் பறவைகளில் சிலவகை வலசை செல்லுங்கால் இமயமலைப் பகுதிகளில் பிடிபட் டுள்ளன. சங்க காலத்தில் அன்னப்பறவைகள் இமய மலைக்குச் செல்வதாகப் பொதுவாக ஒரு கருத்து நிலவி வந்ததாகத் தெரிகின்றது. நற்றிணையில் தெண்கடல் என்பதைத் 'தென்கடல்' என்று பாடம் கொண்டால் புற நானூற்றுச் செய்தியொடு ஒத்திருக்கும்.

அன்னப்பறவை யினத்தில் சிலவகை தமிழ்நாட்டி லேயே தங்கி முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கின்றன. பெரிய தாரா அல்லது ராமச்சிறவி (Grey or spotbill duck) என்ற பறவை தமிழ்நாட்டில் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கின்றது. இதற்கும் சிவப்புக் கால்கள் இருக் கின்றன. இந்த வகை அன்னத்தையும் சங்க நூல்கள் பாடியிருக்கலாம்.

அன்னப்பறவையின் வயிற்றடியிலிருந்த தூவியை அதன் மென்மைக்காகப் படுக்கையணைகளில் பயன் படுத்தினர்.

> "மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்படத்
> துணைபுண ரன்னத் தூநிறத் தூவி
> யிணையணை மேம்படப் பாயணை யிட்டு"
>
> —நெடுநல்வாடை, 131-133.

> "இணைபட நிவந்த நீலமென் சேக்கையுட்
> டுணைபுண ரன்னத்தின் றூவிமெல் லணையசைஇ"
>
> —கலி-72.

"இணைபுணர் எகினத் திளமயிர் செறித்த
துணையணைப் பள்ளித் துயிலாற்றுப் படுத்தாங்கு"
—சிலப். 27 : 208-9.

"அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம்." —குறள்-1120.

நற்றிணையில் (356) 'விலங்கு மென்தூவி' என்று வயிற்றில் காணப்படும் மெல்லிய தூவி கூறப்பட்டுள்ளது. சிலப்பதிகார உரையில் 'தன்சேவலொடு புணர்ந்த அன்னப்பேடை அப் புணர்ச்சியான் உருகியுதிர்த்த வயிற்றின் மயிர் எஃகிப்பெய்த பலவகை அணை' என்று கூறியிருப்பதைக் காணலாம். புணர்ச்சியால் உருகி யுதிர்த்த தூவி என்று சொல்லப்பட்டிருப்பது ஓரளவுதான் உண்மையான செய்தி. முட்டையிடும் அன்னப்பறவை தன் வயிற்றிலுள்ள மெல்லிய தூவியைப் பிய்த்து முட்டைகளின்மேல் மூடிப் பாதுகாக்கின்றது. கூட்டிலும் நிறையத் தூவிகளை அணைபோல் வைக்கின்றது. இதன் காரணமாகவே புணர்ச்சியின்போது உதிர்த்த தூவியென்று கருதினரென்று தெரிகின்றது. சங்க நூல்களில் மழைக் காலத்தில் வானில் அன்னங்கள் பறப்பதாகக் கூறிய செய்தியும் உண்மையே. செப்டம்பர் முதல் இவை தமிழ்நாட்டிற்கு வரத் துவங்குகின்றன. சாய்க்காட்டில் நெல் கழனியில் அன்னங்கள் உறங்கினதாகக் கூறப்பட்டதைக் காணலாம். சங்ககாலத்தில் காவிரிப்பூம் பட்டினத்தருகில் இருந்த சாய்க்காட்டில் அன்னங்கள் நிறைய இருந்திருக்கலாம். பிற்கால நூல்களில் அன்னத்தைப்பற்றிக் கற்பனை நிறைந்த செய்திகளைக் காணலாம்.

"கோலப் பாசடைப் பால்சொரிந் தன்ன
தூவெள் ளருஞ்சிறைச் சேவலொ டுளரிப்
பள்ளி யன்னம் பகலிற் றுயிலா"
—பெருங்கதை-உஞ் சை. உவந். காட்டல். 53-55.

"மணிக்க ணன்ன மணித்தகு பெடையைப்
பயிலிதழ்ப் பனிநீர்ப் பக்க நீக்கி
வெயில்செழு வெள்ளிடை விட்டி சி னுங்கு"
—பெருங்கதை. இலா-கக. தேவிக்கு விலாவித்தது. 150-152

அன்னம் பால்போல் வெண்மையாக இருக்குமென்று கூறப்பட்டுள்ளது. அன்னம் பயிலும் பனிநீர்ப் பக்கத்திலிருந்து அதை நீக்கி வெயில் நிறைந்த வெள்ளிடையில் விட்டால் அது வாழாது என்பதைப் பெருங்கதை கூறுகின்றது. மிகுந்த பனியுள்ள குளிர்ந்த இடங்களில் வடமொழியில் வரும் அன்னம் வாழும் என்பதை உணர்ந்துள்ளனர். இந்த அன்னம் (Swan) சங்க நூல்கள் தமிழ்நாட்டில் காணப்பட்டதாகக் கூறும் அன்னமாக (Wild Ducks) இருக்க முடியாது என்பது தெளிவாகும். சங்க காலத்தில் அன்னமென்று சொல்லப்பட்ட பறக்கும் வாத்து இனத்தை கி. பி ஐந்து, ஆறும் நூற்றாண்டுகளில் தாரா என்றழைத்தனரென்பது ஏற்கெனவே குறிப்பிடப்பட்டது. நிகண்டுகளில் அன்னத்தின் வேறு பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றில் சில வடமொழிப் பெயர்கள். எகினம், உன்னம் என்பவை அன்னத்தின் பிற தமிழ்ப் பெயர்களாகத் தெரிகின்றன. உன்னம் என்ற பெயர் நீர்ப் பறவைகளின் பொதுப் பெயரென்று சூடாமணி நிகண்டு குறிப்பிட்டுள்ளது. அன்னம் என்ற சங்க காலப் பெயர் உன்னம் என்ற பெயரிலிருந்து


சில்லை

மாறியதா அல்லது வடமொழிப் பெயரான ஹம்சத்தின் வழி வந்ததா என்பதைத் தெளிவாகக் கூற முடியவில்லை. எகினம் என்ற பெயர் அன்னப் பெயருக்கு முன் வழங்கி யிருக்கலாம். எஃகி வெப்பப்படும் தூவியுடையதால் எகினம் எனப்பட்டது. தக்கயாகப்பரணியில் அங்கிசம் என்று வரும் அன்னத்தின் பெயர் அம்சத்தின் மரூஉப் பெயராகும்.

**சில்லை :**

அன்ன இனப் பறவைகளில் சில்லை என்றொரு வகையை நிகண்டுகள் கூறுகின்றன. இந்தச் சில்லை என்பது பகண்டை எனவும் அழைக்கப்படும் என்று நிகண்டுகள் கூறும். 'எழுந்து வீழ் சில்லை' யென்று மணிமேகலை இதைக் குறிப்பிடுகின்றது. இந்தப் பகண்டை நிறைய வாழ்ந்த குளமிருந்த ஊர்கள் பகண்டை என்று தமிழ்நாட்டில் அழைக்கப்படுவதை இன்றும் காண லாம். இந்தச் சில்லை அல்லது பகண்டை என்ற பறவை தற்காலத்தில் தமிழ்நாட்டிலும், ஈழ நாட்டிலும் 'சில்லித் தாரா' என்றழைக்கப்படுகின்றது. சில்லை என்பதே 'சில்லி' என்று நாட்டு மக்கள் வாயில் வழங்குகின்றது. சில்லை, சில்லி என்ற பெயர்கள் அதன் ஓசையின் காரண மாக வந்தவையாகும். சிள் வீட்டின் பெயர் சிதடி, நெடி, சில்லிகை என்று நிகண்டுகளில் கூறப்பட்டுள்ளது. சிள் ளென்ற ஓசையை அடிக்கடி விடும் ஒரு வகைப் பூச்சியைச் சில்லிகை என்றழைத்ததைக் காணலாம். இந்தப் பூச்சியைச் சுவர்க் கோழி (Cicada) என்று தற்காலத்தில் அழைப்பர். சில்லென்று அடிக்கடி ஓசையிட்டுக் கொண்டு பறப்பதைக் கண்டு (Shrill wheezy whistling notes constantly uttered on the wing is leading Clue to its identity) இதைச் சில்லித் தாரா, சில்லை யென்றனர். சில்லித் தாராவானது கிளுவை (Teal) வகையைச் சேர்ந்தது. தலைநாயறு முதலிய ஊர்களில் சில்லித் தாராவைச் சீட்டித்தாரா சீழ்க்கைச் சிறவி என்றும் செங் கிளுவை என்றும் அழைப்பர். ஆங்கிலத்திலும் இதன் பெயர் சீட்டியடிக்கும் தாரா (Whistling Teal) என்ற

பொருளில் வழங்குகின்றது. சிவப்பு நிறமாயிருப்பதால் செங்கிளுவை யென்று சில்லித் தாரா அழைக்கப்பட்டது. கீச்சுக் கிளுவை யென்றும் அழைக்கப்படும். கிளுவையைச் சிறவி என்று மழைப்பர். சிறகி என்பதே சிறவி, செறவி ஆனதாகக் கூறுவர். சிங்கள மொழியில் 'செறுவா' என்றழைக்கப்படுகின்றது. கிளுவைகளில் மூன்று வகை தமிழ்நாட்டிற்கு மழைக் காலத்தில் வருகின்றன. அவை பெரிய சிறவி, பூனைக்கண் சிறவி, தாமரை அல்லது அல்லிச் சிறவி (Blue - winged Teal, Common Teal, Cotton Teal) என்று நாட்டு மக்களால் அழைக்கப்படுகின்றன. கீச்சுக் கிளுவை என்றழைக்கப்படும் சில்லை தமிழ்நாட்டிலேயே வாழ்வது. வெளி நாட்டிலிருந்து வருவதன்று. கிளுவை வகைகள் எல்லாம் சங்க இலக்கியத்தில் அன்னம் என்ற பொதுப் பெயரால் அழைக்கப்பட்டன.


பூணி

**பூணி :**

பிற்காலத் தமிழ் இலக்கியத்தில் சில்லையைத் தவிர வாத்துப் போன்ற வேறு சில பறவைகளும் கூறப்பட்டுள்ளன. பூணி என்றொரு பறக்கும் வாத்து இனப் பறவையைப் பெருங்கதையும் சிந்தாமணியும் குறிப்பிட்டுள்ளன.

> "கருங்காற் குருகுங் கம்புளுங் கழுமிப்
> பெரும்பூட் பூணியும் பேழ்வாய்க் கொக்கும்

*குளிவையும் புதாவுந் தெளிகயக் கோழியும்*
*அன்றிலும் நாரையுந் துன்றுபு கெழீஇ"*
—பெருங்கதை—நர்மதை கடந்தது—68-72.

"புதுக்கலம் போலும் பூங்கனி யாலும்
பொன்னிணர்ப் பிண்டியும் பொருந்தி
மதுக்கலந் தாழ்த்துச் சிலம்பிவீழ்
வனபோன் மலர்சொரி வகுள மயங்கிக்
கதிர்த்ததண் பூணி கம்புடாழ் பிலிக்
கலைகுர ரைவண் டானம்
எதிர்த்ததன் புனல்சூ ழின்னதிக் கரைமே
வினையவ ரயாவுயிர்த் தெழுந்தார்."
—சிந்தாமணி-2108.

பூணி, கம்புளென்பன இறந்த வழக்கு என்று நச்சினார்க்கினியர் கூறினர். ஆனால், அப் பறவைகளின் பெயர் இறந்துபட்டதே யொழிய அப் பறவைகள் இன்றும் தமிழ் நாட்டில் உள்ளன. இன்று வேறு பெயர்களுடன் வழங்குகின்றன. சிந்தாமணியில் 'கதிர்த்ததண் பூணி' என்று சொல்லப்பட்டிருப்பதைக் கவனிக்கலாம். கொண்டையுடைய சேவலை 'கதிர்த்த சென்னி' என்று அகநானூறு (103) கூறுகின்றது. கதிர் போன்று மேலெழும்பிய பூணையுடையது இந்தப் பறவை என்று தெரிகின்றது. இந்த வகையான பூணையுடைய பறவை காட்டு வாத்து இனத்தில் ஒன்று உள்ளது. இதைத் தற்காலத்தில் மூக்கன் தாரா என்று தமிழில் அழைக்கின்றனர். இதன் அலகின் மேல் நுனியில் மூக்குப் போன்று ஒரு தசையாலான பாகம் உள்ளது. இஃது அலகுக்கு மேல் நுனியில் பூண் வைத்தாற் போலிருப்பதாகக் கூறுவதும் பொருத்தமே. இந்தப் பூண் குஞ்சு பொரிக்கும் காலத்தில் பெரியதாய் வளருகின்றது. (A curious fleshy knob or comb on base of bill at forehead becoming greatly swollen in breeding season). இப்படி வளர்ந்த பூண் இதன் அலகில் இருப்பதாலேயே 'கதிர்த்த தண் பூணி' என்று சிந்தாமணியும் 'பெரும்பூட் பூணி' என்று

பெருங்கதையும் இப் பறவையை அழைத்தன. பூணி என்றாலே பூணையுடையது என்று பொருள். பூணி என்பது அந்தப் பறவையின் பெயராக வழங்கிவிட்டதால் மேலும் அதன் அரிய உறுப்பை விளக்குவதற்காகப் பெரும் பூணையுடைய பூணி என்றும் கதிரையுடைய பூணி என்றுங் கூறியுள்ளார். இந்தப் பறவையைத் தெலுங்கில் 'ஜுட்டு சிலுவா' (சூட்டுக் கிளுவை) என்றழைக்கின்றனர். கிளுவை என்பது தெலுங்கில் சிலுவா என்றழைக்கப்படுகின்றது. சூடு-அஃதாவது உச்சிக் கொண்டை உள்ள கிளுவை என்பது பொருள். சூடு என்பதே தமிழில் பூண் என்று அழைக்கப்படுகின்றது. இந்தப் பறவையின் நிறம் கிளுவையைப் போலிருப்பதால் தெலுங்கில் சூட்டுக்கிளுவை எனப்பட்டது. இந்தப் பறவை மரத்தில் காணப்படும் துளைகளில் கூடு கட்டுகிறது. நீருள்ள குளத்திலும், தடாகங்களிலும் பழகும். இதற்கு அலகில் பூண் இருப்பதால் ஆங்கிலத்திலும் இதை 'Comb duck' என்றழைத்தனர். இதை 'நாக்கி அன்சு' என்று ஒரிசா மாநிலத்தில் அழைப்பர். மூக்கையுடைய அன்னம் என்பதே இதன் பொருள். வடநாட்டு மொழிகளில் இதன் மூக்கைச் சுட்டியே இதன் பெயர்கள் வழங்குகின்றன. இப் பெயர்கள் தமிழ்நாட்டில் இன்று வழங்கும் மூக்கன் தாரா என்ற பெயருடன் ஒப்புமை உடையன. இதை ரப்பர் மூக்குத் தாரா என்று வேடந்தாங்கலில் அழைப்பர். இரப்பர் (Rubber) போன்று அலகின்மேல் தசை வளர்ந்திருப்பதால் இந்தப் பெயர் வந்தது. பூணி என்ற இறந்துபட்ட இதன் பெயரைத் திரும்ப இந்தப் பறவைக்குக் கலைச் சொற் பெயராகப் பயன்படுத்துவது நல்லது. இதைச் செண்டு வாத்து என்றும் அழைப்பர்.

**கோகம் :**

சூடாமணி நிகண்டிலும் இரதவம்சத்திலும் சொல்லப்படும் கோகம் என்ற பறவையும் ஒரு வகைப் பறக்கும் வாத்தேயாகும். இதை நிகண்டுகள் சக்கரவாகம்

என்றும் நேமிப்புள் என்றும் அழைக்கும். 'கோகங்க ளெல்லைப் போதிற் றணந்திட' என்று தமிழ் இரகுவம்சம் (247) கூறுகின்றது. இதைத் தாரா என்றுமழைப்பர். சக்கரவாகம் என்ற பெயர் இதற்கு வட நாட்டில் வழங்குவதாகும். இந்தி, மராத்தி மொழிகளில் இப் பெயர் வழங்குகின்றது. தெலுங்கில் பாப்பனசிலுவா (பார்ப்பனக் கிளுவை) என்ற பெயர் இதற்கு வழங்குகின்றது. இதன் ஆங்கிலப் பெயர் போல (Brahminy Duck) இப்பெயர் உள்ளது. இஃது இளஞ்சிவப்பு நிறமாயிருப்பதால் 'பிராமண வாத்து' என்று ஆங்கிலத்தில் அழைக்கப்பட்டது. சக்கரவாகமும் நேமியும் ஒரே பொருள் தருவதால் நேமிப்புள் என்ற பெயரும் வழங்கியது. கம்பர் சக்கரவாகம் என்ற பறவையைப் பற்றிச் சில பாடல்களில் கூறியுள்ளார். சிலர் இதைப் புராணப் பறவையென்று கருதுவர். இந்தப் பறவையும் அன்றில் பறவையைப் போன்று ஆண்பெண்ணாகக் கூடி வாழ்ந்து பிரியின் இறந்துவிடும் என்று கூறும் கற்பனை வடமொழியில் உள்ளது. இதன் பெயர் வட மொழியிலிருந்து வந்தது. இந்தப் பறவை வட்டமாகவும் உருண்டையாகவும் மகளிரது மார்பகங்கள் போல இருக்கும் என்று கூறுவர்.



கோகம்

"அங்கொர் பாகத்தி னஞ்சன மணிசிழ லடையப்
பங்குபெற்றொளிர் பதுமரா கத்தொளி பாயக்
கங்குலும்பக லும்மெனப் பொலிவெய்து கரைய
மங்கை மார்தட முலையெனப் பொலிவன வாளம்"

—4-1-21.

'வரிவளம் பொரும் கலசம் ஒக்கும்', 'பகலின் வந்த சக்கரவாகமென்பென்' என்றெல்லாம் கம்பர் மகளிரின் மார்பைச் சக்கரவாகப் பறவையுடன் ஒப்பிட்டுள்ளார். சக்கரவாகப் பறவையின் உடல் திரண்டு உருண்டு பெருத்து இருக்கும். பரிதி யென்று இரகுவம்சம் என்ற நூலில் இந்தப் பறவை அழைக்கப்பட்டுள்ளது. "தண் கோட்டகம் பரிதியில் குடிங்கு கூடுமே" (நாட்டுப்படலம்-40) என்று வருகின்றது. பரிதி என்ற சொல் வட்டவடிவைக் குறிக்கும். இந்தப் பறவையை இன்றும் பரிசைத்தாரா என்று அழைக்கின்றனர். பரிதித்தாரா என்பதே பரிசைத்தாரா என்று மக்கள் வாயில் மாறியது. பரிதி என்பதற்குச் சகோடப்புள் என்று பொருள் கூறப்பட்டுள்ளது. சகோடயாழ் என்பது வட்டிவடிவானது. வட்டவடிவான புள்ளிற்கும் சகோடப்புள் என்று பெயரிட்டனர். 'சக்கரவாளத்திளம் பேடைகாள் சேவல்காள்' என்று தேவாரத்தில் ஆண் பெண்களை விளித்துக் கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். இதன் அறிவியற் பெயர் (Ruddy Shelduck, Tadarna ferruginea) என்பதாகும்.

சங்க காலத்தில் பறக்கும் வாத்து இனப் பறவைகளை அன்னம் என்று வழங்கினர். பிற்காலத்தில் அவற்றை ஓரளவு பிரித்தும் உணர்ந்தனர். தாரா, சிறவி, கிளுவை, பகண்டை என்ற பெயர்கள் இதன் வகைகளுக்கு நாட்டு மக்களிடையே வழங்குகின்றன. கழியன் என்ற பெயரும் வழங்குகின்றது. நாட்டுமக்களிடையே நெருங்கிப் பழகித் தெரிந்து கொண்டவர்களுக்குத்தான் இந்தப் பெயர்கள் எந்தவகைப் பறக்கும் வாத்துகளைக் குறிக்கின்றன என்று கண்டுகொள்ள முடியும். சங்க இலக்கியத்தில் வரும் அன்ன மென்ற பெயரில் கிளுவை, தாராவகைப் பறவைகளும், பூணியும், சில்லையும், கோகமும் அடங்கும்.

———

# கஉ. நீர்க்கோழியும் கம்புளும் நீலக்கோழியும் தாமரைக் கோழியும்
## (THE WATER-HENS AND JACANAS)

சங்க இலக்கியத்தில் நீரருகில் வாழும் சிலவகைப் பறவைகள் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. நீர்க் கோழி, கம்புட்கோழி, நீலக் கோழி, ஆகிய பறவைகள் சங்க நூல்களில் கூறப்பட்டுள்ளன. இவை வீட்டுக் கோழியைப் போன்று உருவ முடையன. நீரில் நன்கு நீந்தக் கூடியன. குளங்களிலும், குட்டைகளிலும் ஓரத்தில் உள்ள நாணல் முதலிய புற்புதர்களில் மறைந்து வாழும். இவை புற்புதர்களில் அடிக்கடி ஓசையிட்டுக் கொண்டேயிருக்கும்.



நீர்க்கோழி

நீர்க் கோழி :

"மணிக் கோழிப் பைம்பயி ரினனே
கானக் கோழிக் கவர்குரலொடு
நீர்க் கோழிக் கூய்ப் பெயர்க் குந்து"  —புறம் 395

"கருங்கால் குருகுங் கம்புளுங் குழுமி
பெரும்பூட் பூணியும் பேழ்வாய்க் கொக்கும்
குளிவையும் புதாவும் தெளிகயக் கோழியும்"
—பெருங்கதை-நருமதை கடந்தது-68-72

புறநானூற்றில் நீர்க்கோழி என்ற பெயரில் கூறப்பட்டிருக்கும் கோழியே தண்ணீர்க்கோழி என்றும், கானங் கோழி என்றும் இன்று நாட்டுமக்களிடையே வழங்கு

கின்றது. இந்த நீர்க்கோழி காலையிலும் மாலையிலும் 'கிர்ரிக், கிரெக்' என்று கத்திக்கொண்டேயிருக்கும். இதையே குறிப்பிட்டு நீர்க் கோழி 'கூய்ப் பெயர்க்குந்து' என்று புறநானூறு கூறுகின்றது. மனைக் கோழி காலையில் கூப்பிடுவதையும், கானக் கோழி [காட்டுக் கோழி] குரலிடு வதையும், நீர்க் கோழி கூக்குரலிடுவதையும் புறநானூறு கூறுவதிலிருந்து மூன்று வகைக் கோழிகளையும் வேற்று மைப்படுத்தி அறிந்திருந்ததைக் காணலாம். இந்த நீர்க் கோழியை மலையாளத்தில் குளக்கோழி என்றழைக் கின்றனர். பெருங்கதையில் 'தெளிகயக் கோழி' என்று வருவதைக் காணலாம். நல்ல தண்ணீர்க் குளங்களில் காணப்படுவதால் 'தெளிகயக் கோழி' என்றழைக்கப் பட்டது. இந்த நீர்க் கோழியை ஆங்கிலத்தில் 'The Indian Moorhen' என்றும், பறவை நூலில் 'Gallinula Chloropus' என்றும் அழைப்பர். இதை இந்தி முதலிய வட மொழிகளிலும் நீர்க் கோழி என்ற பொருளில் பெய ரிட்டு வழங்குகின்றனர். மணிபுரி மாநிலத்தில் குளக் கோழி என்ற பொருளில் இதன் பெயர் வழங்குகின்றது. நீர்க்கோழி என்ற பெயர் இதன் இனமான மற்றப் பறவை களுக்கும் நாட்டு மக்களிடையே வழங்குகின்றது.

**கம்புட் கோழி :**


கம்புள்

நீர்க் கோழியைப் போன்ற மற்றொரு பறவை யான 'கம்புள்' சங்க இலக் கியத்தில் சில பாடல்களில் கூறப்பட்டுள்ளது. பூணி, கம்புள், என்ற பெயர்கள் மறைந்து போன வழக்குகள் என்று நச்சினார்க்கினியர் கூறி யுள்ளார். ஆனால், கம்புள் கோழி என்ற பெயரே சம்பங் கோழி என்று மாறி இப்போது தமிழ் நாட்டில் வழங்குவதாகத் தெரிகின்றது.

"வெண்ணுதற் கம்பு ளரிக்குரல் பேடை
தண்ணறும் பழனத்துக் கிளையோ டாலும்"
—ஐங்குறுநூறு-85

"பழனக் கம்புள் பயிர்ப்பெடை யகவும்
கழனி யூரனின் மொழிவ லென்றும்"
—ஐங்குறுநூறு-60

"கம்புள் இயவன் ஆக விசிபிணித்
தெண்கட் கிணையிற் பிறழும் ஊரன்" —அகம் 356

"வண்டிறை கொண்ட கமழ்பூம் பொய்கைக்
கம்புட்சேவ லின்றுயி லிரிய
வள்ளை நீக்கி வயமீன் முகந்து"
—மதுரைக் காஞ்சி-253-255

"களைமுதிர் சாடி நறவின் வாழ்த்தித்
துறைநனி கெழீஇக் கம்பு ளீனும்
தண்ணடை பெறுதலு முரித்தே" —புறம் 297

"கரைசின் ருலு மொருமயி றனக்குக்
கம்புட் சேவற் கனைகுரன் முழவாக்"
—மணிமேகலை-4 : 11-12

"கழனிச் செங்நெற் கரும்புசூழ் மருங்கிற்
பழனத் தாமரைப் பைம்பூங் கானத்துக்
கம்புட் கோழியுங் கனைகுர லுரையும்
செங்கா லன்னமும் பைங்காற் கொக்கும்
கானக் கோழியும் நீர்நிறக் காக்கையும்"
—சிலப்பதிகாரம் 10 : 112-116

"கருங்காற் குருகுங் கம்புளுங் குழுமி."
—பெருங்கதை-நருமதை கடந்தது-68

கம்புள் என்பதற்கு ஐங்குறு நூற்றின் பழைய உரையிலும் நிகண்டுகளிலும் 'சம்பங்கோழி' என்று பொருள் கூறப்பட்டுள்ளது. சம்பங்கோழி என்ற பெயர் இன்றும் இப் பறவைக்கு வழங்குகின்றது. இதைக் 'காணுங்கோழி' என்றும் நாட்டுமக்கள் அழைப்பர். கம் என்றால் நீர்

என்று பொருள். நீர்ப்புள் என்ற பொருளில் கம்புள் என்று வந்திருக்கலாம். சம்பங்கோழி என்ற பெயர் கம்புள்கோழி என்ற பெயரிலிருந்து மாறிவந்ததாகக் கருதலாம். கண்பு என்பது சங்க நூல்களில் கூறப்படும் ஒருவகைக் கோரைப் புல்லாகும். இது சண்பு என்று தேவாரகாலத்தில் வழங்கிற்று. கணம்புல் என்றும் வழங்கிற்று. கண்புக்குள் காணப்பட்ட புள்ளே கம்புள் என்று பெயர் பெற்றதாகத் தெரிகின்றது. சண்புக்குள் காணப்பட்ட கோழி சம்பங் கோழி என்று நாட்டுமக்கள் வாயில் மாறிற்று. 'கண்பகத்தின் வாரணமே' என்று திருஞான சம்பந்தர் தோணிபுரத்தைப் பற்றிப் பாடிய 60ஆம் பதிகத்தில் (646) ஒரு வகை நீர்க்கோழியை அழைக்கின்றார். சிலப்பதிகாரத்தில் கானவாரணம் என்று காட்டுக்கோழி சொல்லப்பட்டது போல, கண்பு என்ற புல்லின் அகத்தில் வாழும் வாரணமே என்று சம்பந்தர் அழைக்கின்றார். சண்பு நிறைய இருந்த சீர்காழி சண்பை என்றழைக்கப் பட்டது. சண்பில் இருந்த கோழியும் சண்பங் கோழி, சம்பங் கோழி எனப்பட்டது. ஆதலின் கண்பு+புள் என்பதே கம்புள் ஆயிற்று என்பது தெரிகின்றது. கண்பு என்ற சொல்லே முதலில் கண்புல் என்று வழங்கியிருக்க வேண்டும். கரும்புல் என்ற சொல் கரும்பு ஆகியது போல கண்புல் என்பது கண்பு, கணம்புள், சண்பு, சம்பு என்றெல்லாம் மக்கள் வாயில் மாறிற்று. 'சம்பு அறுத்து ஆர்க்கைக்குப் போக வேண்டுமோ' என்று திருவாய்மொழி ஈட்டில் கூறப்பட்டதிலிருந்து சம்பு என்ற பெயர் வழங்கியது தெரிகின்றது. சம்பங் கோழியைச் சண்பங்கோழி என்றும் சில இடங்களில் அழைப்பர். சம்பங் கோழியைத் தெலுங்கு மொழியில் ஜம்புக்கோடி யென்பர். இது சண்புக் கோழி யென்பதன் மறு உருவமே. இப் பெயர் வேடந்தாங்கலிலும் வழங்குகின்றது.

சணப்பங் கோழி :

சம்பங் கோழியை 'வெண்ணுதல் கம்புள்' என்று ஐங்குறுநூறு கூறுவதைக் காணலாம். இதற்கு வெண்மை

யான தலையும் மார்பும் தெளிவாகத் தெரிவதால் (Prominent white face and breast) 'வெண்ணுதல் கம்புள்' என்று கூறப்பட்டது. கம்புளின் மேற்புறம் கரிய நரைத்த நிறமாக இருக்கும். கம்புள் பழனத்துள்ளும், கழனியுள்ளும், பொய்கையிலும், நீர்த் துறைகளிலும் காணப் பட்டதாகச் சங்க நூல்கள் கூறுவதும் உண்மையான செய்திகளே. நீர் நிறைந்த காலத்தில் இவை வயல்களில் வாழும். நெற்கதிர்களையும் தின்னும். இவை மருத நிலத் திலேயே சங்க நூல்களில் கூறப்படுவதைக் கவனிக்கலாம். இதற்கு 'அரிக்குரல்' இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. கம்புள் வாச்சியக்காரனைப்போல் ஒலித்துக் கொண்டிருந்த தாக அகநானூறு கூறுகின்றது. கம்புட் சேவல் தன் னுடைய பெடையைப் பயிர்ந்து அகவினதாக ஐங்குறுநூறு கூறுகின்றது. கனை குரலையுடையதாக மணிமேகலை கூறு கின்றது. இந்தப் பறவை பெரும்பாலும் புற்புதரில் மறைந்தேயிருப்பதால் எளிதில் காண முடியாது. ஆனால், இதன் குரலிலிருந்து இஃது இருப்பதைக் கண்டுகொள்ள லாம். கனைத்துக் கொண்டு குரலெடுக்கத் துவக்கி அரித்து அரித்து ஒரே ஓசையுடன் கத்திக் கொண்டேயிருக்கு மென்று (Beginning with loud, hoarse grunts, croaks and chuckles settles down to a monotonous metallic Krr-Kwak-Kwak etc.) பறவை நூலார் கூறுவர்.

ஒரே ஓசையை அடிக்கடி தொடர்ந்து வெளியிடுவதால் 'அரிக்குரல்' எனப்பட்டது. நாட்டு மக்களும் 'சணப்பங் கோழிபோல தொண தொணக்கிறே' என்றுகூறும் வழக்கு சம்பங்கோழியின் இந்தக் குரலைத் தெளிவாகச் சுட்டிக் காட்டுகின்றது. முட்டையிடும் காலத்தில் தனது பெடையை ஓயாது குரலிட்டு அழைத்துக் கொண்டேயிருக்கும். பயிர்ப் பெடையகவும் என்று ஐங்குறுநூறு கூறுவதைக் காண லாம். 'சணப்பங் கோழிபோல கத்தருன்' என்று பேச்சு வழக்கில் கூறுவர். துணையை அழைக்கும் குரலிற்கே 'பயிர்' என்ற சொல் சங்க நூல்களில் வழங்குகின்றது. தற்போது பேச்சு வழக்கில் பயிராக்கல் என்ற சொல் சினைப்

படுத்தல் என்ற பொருளில் வருகின்றது. சங்க நூல்களில் இணைசேர அழைக்கும் குரலைக் குறித்த இச் சொல் இணைசேர்தலையே குறித்து இக் காலத்தில் நாட்டு மக்களிடையே வழங்குகின்றது. நீர்த் துறையில் கம்புள் முட்டையிடும் தண்ணடை என்று புறநானூறு கூறுகின்றது. தண்ணடை என்பது பசுமையான இலைகள் என்று பொருள்படும். பசுமையான இலைகளையும் கொடிகளையும் சேர்த்துக் கூடு கட்டி முட்டையிடும் என்று பறவை நூலார் கூறுவர். வள்ளைக் கொடியில் உலாவிய கம்புள் சேவல் என்று மதுரைக் காஞ்சி கூறியிருக்கின்றது. வள்ளை ஒரு நீர்க் கொடியாகும். கம்புள் இணையாகவே வாழுமென்பதைச் சங்க நூல்களும் கூறியுள்ளன. கம்புள் என்பது 'The white breasted waterhen' அல்லது 'Amaurornis Phoenicurus' என்று பறவை நூலார் கூறுவர். கானங்கோழியைப் பொய்யாப்புள் [பொய்கைப்புள்] என்றும் நாட்டுமக்கள் கூறுவர். பொய்யாப்புள் சலாங்கு என்றழைக்கப்படும் என்று பிங்கலந்தை நிகண்டு கூறுகின்றது. இது ஞான சம்பந்தர் கூறிய கோட்டகத்து வாரணமேயாகும்.

நிகண்டுகள் சம்பங்கோழியையும், கானங்கோழியையும் வெவ்வேறாகக் கூறுவதையும் காணலாம். கானங்கோழிக்குக் காதம்பம் என்ற பெயர் இருப்பதாக நிகண்டுகள் கூறும். கானங்கோழி, சம்பங்கோழியென்ற பெயர்கள் வேற்றுமையின்றித் தற்போது எல்லாவகை நீர்க்கோழிகளுக்கும் (Moorhen. coots, rails) வழங்கிவருவதைக் காண்கிறோம். தற்காலத்தில் சம்பங்கோழியையும் கானங்கோழியென்றும் பொதுவாக அழைக்கின்றனர். ஆனால் இலக்கியத்தில் வரும் கானங்கோழி இதனிலும் வேறானது. இந்த வழக்கு சிலப்பதிகாரத்தில் காணப்படுகின்றது. நாடுகாண் காதையில் வரும் கானக்கோழி என்ற பெயர்க்கு அடியார்க்கு நல்லார் கானங்கோழி என்று உரை கூறியுள்ளார். மேலே காட்டப்பட்டுள்ள சிலப்பதிகாரம் நாடுகாண் காதை பாட்டு வரிகளில் கம்புட்கோழி, நாரை, அன்னம், கொக்கு, நீர்க்காக்கை ஆகிய நீர்ப்பறவைகளே

கூறப்பட்டிருப்பதால் இவற்றுடன் கூறப்படும் கானக் கோழியும் நீர்ப்பறவையாகவே இருக்கலாம். பழனம் நிறைந்த பைம் பூங்கானத்து வாழ்வனவாக இப் பறவைகள் கூறப்படுவதால் இந்தக் கானம் குறிஞ்சிக் காடன்று என்பது தெளிவாகின்றது. இந்தக் கானத்தில் தாமரைப் பூக்காட்டில் கண்டதாகக் கூறியது காட்டுக் கோழியன்று, கானுங்கோழியே என்பது தெளிவாகின்றது. தமிழ்நாட்டில் மூன்று, நான்கு வகையான கானுங் கோழிகள் உள்ளன. கம்புட்கோழிக்கு [சம்பங்கோழி] இனமானது; ஆயினும் அதனினும் வேறானது. ஆதலால் கம்புட்கோழியையும் கானுங்கோழியையும் தனியாகப் பிரித்துச் சிலப்பதிகாரம் கூறுவதால் பின்னர்க் கூறப்பட்ட கானுங்கோழி கம்புளின் வேறான அதன் இனமான பறவையே என்று கொள்ளலாம். ஆனால், சங்க காலத்தில் கம்புட்கோழியென்ற பெயர் கானுங்கோழிக்கும் சேர்த்து வழங்கியிருக்கவேண்டும். கானக்கோழி, கானுங்கோழி யென்ற நீர்ப் பறவையைக் குறித்த பெயர்கள் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை. சிலப்பதிகாரத்திலேயே வேட்டுவவரியிலும், காட்சிக் காதையிலும் மற்றும் சங்க நூல்களிலும் கானக்கோழி என்பது காட்டுக் கோழி யையே குறித்து வழங்குவதைக் காணலாம். அடியார்க்கு நல்லாருக்கு முன்னர்க் காட்டுக்கோழி என்று நாடுகாண் காதையில் உரைகொண்டனர் என்பதும் தெரிகின்றது. அது தவறு என்று கருதியே அடியார்க்கு நல்லார் கானுங் கோழி என்று பொருள் கொண்டார். இந்தக் கானுங் கோழி யையே திருஞானசம்பந்தர் 'பண்பழனக் கோட்டகத்து வாட்டமிலாச் செஞ்சூட்டுக் கண்பகத்தின் வாரணமே' என்று திருத்தோணிபுரபதிகத்தில் பாடினார். நீர் நிறைந்த வயல்கள் சூழ்ந்த பொய்கையில் வாழும் சிவந்த உச்சிக் கொண்டையையுடைய கண்புக்குள் வாழும் கோழியே என்று கூறியிருப்பது பொருத்தமான வர்ணனை ஆகும். நீர்க்கோழி இனங்களில் 'நாமக்கோழி' என்று அழைக்கப்படும் இனத்திற்கு, தலையில் சிவந்த கொண்டை உள்ளது. இதையே ஞானசம்பந்தர் குறிப்பாகப் பாடி

யுள்ளார். இதற்குச் சிவந்த கொண்டையும் (Its most striking features are the bright red flesh horn projecting above the crown and the bright red eyes and legs) சிவந்த கால்களும் கண்களும் இருப்பதாகப் பறவை நூலார் கூறுவர். இதையும் இக் காலத்தில் தண்ணீர்க் கோழி யென்றும், நாமக்கோழியென்றும் அழைக்கின்றனர். ஆங்கிலத்தில் Kora (அ) Water-cock என்றழைக் கின்றனர். பறவை நூலார் Gallicrex Cinerea Cinerea என்றழைக்கின்றனர்.

**நீலக்கோழி :**

நீலநிறமான நீர்க்கோழி போன்ற ஒரு பறவை தமிழ் நாட்டில் காணப்படுகின்றது. இதன் உடல் நீலநிறமாகவும், நீண்ட கால்கள் சிவந்த நிறமாகவும் இருக்கும். இதை நீலக்கோழி என்று மலையாளத்தில் இன்றும் அழைக்கின்றனர். தெலுங்கு மொழியில் 'நீலபொல்லிக்கோழி' என்றழைக்கின்றனர். சில வடமொழிகளிலும் நீலக் கோழி என்ற பொருளில் இதன் பெயர் வழங்குகின்றது. தமிழில் சில இடங்களில் குறிப்பாக ஜம்புக்கோழி என்றும், பொதுவாக இதையும் காணுங்கோழியென்றும் அழைப்பர். இதை ஒரு நீர்க் கோழி என்று கருதினர். நீலக்கோழி என்று இதன் பெயர்



நீலக்கோழி

ஐங்குறு நூற்றிலும் சிறு பாணாற்றுப் படையிலும் சொல்லப் பட்டிருக்கின்றது. ஆனால், இந்தச் சங்ககாலப் பெயர் இன்றைய தமிழில் மறைந்து போய்விட்டது. ஆனால், மலையாளத்திலும் தெலுங்கிலும் சங்ககாலப் பெயர் மறையாது வழங்குவது வியப்பை அளிக்கின்றது.

*"நீருறை கோழி நீலச் சேவல்*
*கூருகிர்ப் பேடை வாயா அழர"* —ஐங்குறுநூறு 51

*"புலவுக்கய லெடுத்த பொன்வாய் மணிச்சிரல்*
*வள்ளுகிர் கிழித்த வடுவாழ் பாசடை*
*முள்ளரைத் தாமரை முகிழ்விரி நாட்போது*
*கொங்குகவர் நீலச் செங்கட் சேவன்*
*மதிசே ரரவின் மானத் தோன்று*
*மருதஞ் சான்ற மருதத் தண்பணை."*
—சிறுபாணாற்றுப் படை 181-186

நீரில் உறைகின்ற நீலச் சேவற்கோழி என்று ஐங்குறு நூற்றுப் பழையவுரை கூறுகின்றது. இதன் சங்ககாலப் பெயர் நீலக்கோழி யென்பதாகும். பாட்டில் சேவலைப் பற்றிக் கூறியிருப்பதால் நீலச்சேவல் எனப்பட்டது. இதுவும் ஒரு நீர்க்கோழி இனத்தைச் சேர்ந்தது என்பதைக் காட்டவே 'நீருறைக் கோழி நீலச்சேவல்' என்று அழைக்கப்பட்டது. இதன் சிவந்த கால்களில் நீண்ட விரல்கள் உள்ளன. கால்களின் நகத்தைக் கூருகிர் என்று ஐங்குறுநூறு கூறுகின்றது. நீர்க்கோழிபோல நீலக்கோழியும் அடிக்கடி ஓசையிட்டுக் கொண்டேயிருக்கும்.

நீலச்சேவல் சூலுற்ற தன் பேடையை விரும்பி அழைப்பதை ஐங்குறுநூறு கூறுகின்றது. சிறுபாணாற்றுப் படையில் இதே நீலக்கோழியை நீலச்செங்கண் சேவல்' என்று அழைத்திருப்பதைக் காணலாம். இந்த நீலக்கோழிக்குச் சிவந்த கண்களிருப்பதும் கூறப்பட்டுள்ளது. இந்த நீலக் கோழிக்குச் சிவந்த கண்களிருப்பதைப் பறவை நூலார் குறிப்பிட்டுள்ளனர். நீலச் சேவற்கோழி முள்ளரைத்

தாமரைச் செடியில் பூத்த வெண்மையான மலரில் கொங்கைக் கவர்ந்ததாகச் சிறுபாணாற்றுப் படை கூறு கின்றது. இந்த நீலக்கோழி இலைகளையும் தளிர்களையும் தின்று வாழும் என்று பறவை நூலார் உரைப்பதால் தாமரை மலரின் தாதைத் தின்றதாகக் கூறியதில் கற் பனைச் செய்தி ஏதுமில்லை என்பது தெளிவாகும். ஆயினும் நச்சினார்க்கினியர் 'கொங்கு கவர் நீலச் செங்கண் சேவல்' என்ற வரிக்கு-'தேனை நுகர்கின்ற நீலநிறமுடைய, சிவந்த கண்ணினையுமுடைய வண்டொழுங்கு' என்று பொருத்த மற்ற பொருளை வலிந்து கூறியுள்ளார். வண்டிற்குச் சிவந்த கண் இருப்பதாகக் கூறினது இயற்கையில் காண முடியாதது. வரிசையாக வண்டுகள் தேனைக் கவர்வது மில்லை.

ஐங்குறு நூற்றில் நீலச்சேவல் என்ற வழக்கு உள்ள தாலும் அதற்கு நீருறைக் கோழி என்று அடைமொழி இருப்பதாலும் சிறுபாணாற்றுப்படையிலும் அதே பொருள் கொள்ள வேண்டியிருப்ப நச்சினார்க்கினியர் கற்பனை யானதொரு பொருளைக் கொண்டார். இரண்டு நூல் களிலும் நீலச்சேவல் என்ற பெயர் பயில்வதையும் காண லாம். ஆதலின் சிறு பாணாற்றுப் படையில் கூறியது நீலக் கோழியென்பதில் யாதோர் ஐயமுமில்லை. இந்த நீலக் கோழியை மருத நிலத்தில் இருந்த நீர்நிலையில் தாமரைக் கொடிகள் இருந்த சூழ்நிலையில் இயற்கைக்குப் பொருத்த மாகக் கூறியிருப்பதைக் காணலாம். மதிசேர் அரவில் மானத் தோன்றும் என்ற உவமை வெண்மையான தாமரை மலரைச் சேர்ந்த நீலச் சேவற்கோழிக்கும் பொருந்தும்.

நீலக் கோழியை வடநாட்டு மொழிகளிலும் நீல நிறமுடைய கோழி என்ற பொருளில் வழங்குவதைக் காணலாம். குசராத்தி மொழியில் 'நீல் கூக்கடி' என்று வழங்குகின்றது. நீலக் கோழியை ஆங்கிலத்தில் The purple Moorhen என்றும் பறவை நூலில் 'Propyrio propyrio' என்றும் அழைப்பர்.

**தாமரைக்கோழி :**

நீலக்கோழியைப் பற்றிச் சங்க நூல்களில் அரிதாகச் செய்திகள் கூறப்பட்டது போல தாமரைக் கோழி என்பதைப் பற்றியும் திணைமாலை நூற்றைம்பதில் ஒரே ஒரு பாடலில் ஒரு குறிப்பு வருகின்றது.



தாமரைக் கோழி

> *"தண்கயத்துத் தாமரைநீள் சேவலைத் தாழ்பெடை*
> *புண்கயத் துள்ளும் வயலூர – வண்கயம்*
> *போலுமின் மார்பு புளிவேட்கைத் தொன்றிவள்*
> *மாலுமா றுகோய் மருந்து"* —திணைமாலை 142

நீர்க்கோழியைப் போன்றுள்ளதாயினும் இப் பறவையைப் பறவை நூலார் வேறு இனப் பறவையாகக் கொள்வர். நீர்க்கோழியைப் போன்று நீரின் சூழலில் வாழும் பறவையாதையால் இதையும் தாமரைக் கோழி என்று தமிழில் அழைத்தனர். இதன் மலையாளப் பெயர் இன்றும் தாமரைக் கோழி என்று வழங்குகின்றது. தமிழில் அல்லிக் குருவி என்றும் வழங்குவர். தாமரை, அல்லிச் கொடிகளின் இலைகளின்மேல் நடந்து செல்வதால் இதைத் தாமரைக் கோழி, அல்லிக்குருவி என்றனர். இதை மீவால் என்று ஈழநாட்டில் அழைப்பர். தமிழ்நாட்டில் வால் அல்லிக் குருவி என்றும் மலையாளத்தில் வாலன் தாமரைக்கோழி என்றுமழைப்பர். இணைசேரும் காலத்தில் இந்தப் பறவையின் வால் நீண்டு சிறிது மேல் புறமாக விளைந்து மிக அழகாகக் காணப்படும். இதன் காரணமாகவே 'தாமரை நீள்சேவல்' என்று இதைத் திணைமாலை அழைக்கின்றது. நீளமான வாலிருப்பதால் நீள்சேவல் என்றழைக்கப்பட்டது. தாமரையின்மேல் அடியெடுத்து வைத்து நடந்து தாமரையின் சூழலில் வாழ்வதால் தாமரைச் சேவல் எனப்பட்டது. இதன் வாலைக் குறிப்பாகக்

கண்டறிந்த காரணத்தால் ஈழத்தில் மீவால் என்று தூய தமிழில் அழைத்தனர். வால் அல்லிக்குருவி, வாலன் தாமரைக் கோழி என்ற தமிழ், மலையாளப் பெயர்களும் இக் காரணத்தால் எழுந்தவையே. திணைமாலையில் வந்த 'தாமரை நீள்சேவல்' என்ற பெயரே மலையாளத்தில் போற்றப்பட்டு, தாமரைக்கோழி என்று வழங்குகின்றது. மலையாளத்தில் சங்ககாலப் பெயர்கள் இன்றும் வழங்கு வதிலிருந்து சங்க நூல்களில் கூறப்படும் பறவைகளை அறிய முடிகின்றது. இதன் கால்களில் மிகவும் நீளமான விரல்களும் நீண்ட நகங்களும் (enormously long toes and nails) உள்ளன. தாமரை, அல்லி இலைகளின்மேல் நடக்கும்போது நீண்ட விரல்கள் இலைமேல் பாவியிருப் பதால் கீழே அமுங்காதபடி இப் பறவையைத் தாங்கிப் பிடிக்கின்றது. தாமரை, அல்லிக்கொடிகளைவிட்டு வெளியே இப் பறவையைக் காணமுடியாது. இந்தச் சூழல் இதற்கு மிகவும் இன்றியமையாததாகும். திணைமாலைப் பாட்டில் உண்கயத்தில் தாமரைக் கோழியின் பேடை சேவலை எண்ணியதாகக் கூறியுள்ளதைக் காணலாம். உண்ணும் நீர்தரும் ஊர்க் குளங்களிலும் கோயில் குளங்களிலும் இப் பறவை காணப்படும். பெரிய ஏரிகளிலும் வாழும். தாமரைக் கோழியை ஆங்கிலத்தில் Pheasant-tailed Jacana என்றும் பறவை நூலில் Hydrophasianus Chirurgus என்றும் அழைப்பர். இதற்கு இனமான இன்னொரு பறவையைக் (Bronze-winged Jacana) கருப்பு அல்லிக்குருவி என் றழைப்பர். மலையாளத்தில் இதை ஈர்க் கிலக்காலன் என்பர் ஈர்க்குபோல கால்விரல் இருப்பதால் இந்தப் பெயர் வந்திருக்கலாம். மணிப்பூர் மாநிலத்தில் இதைத் தாமரை இலைமேல் ஓடும் பறவை என்ற பொருளில் பெயரிட்டு அழைக்கின்றனர்.

———

# கசு. உள்ளும் ஊரலும்

## (SNIPES & GREBES)

சிலப்பதிகாரத்தில் நாடுகாண் காதையில் நீர் நிறைந்த பழனங்களில் காணப்பட்ட புள்ளினங்கள் சில கூறப்பட்டுள்ளன. இந்தப் பறவைகள் நீர் நிறைந்த சூழ் நிலைகளில் தமிழ்நாட்டில் காணப்படுவன என்பதைப் பறவை நூல் அறிந்தோர் உணர்வர்.

> "பழனத் தாமரைப் பைம்பூங் கானத்துக்
> கம்புட் கோழியும் கனைகுர லுரையுஞ்
> செங்கா லன்னமும் பைங்காற் கொக்கும்
> கானக் கோழியும் நீர்நிறக் காக்கையும்
> உள்ளு மூரலும் புள்ளும் புதாவும்
> வெல்போர் வேந்தர் முனையிடம் போலப்
> பல்வேறு குழூஉக்குரல் பரந்த வோதையும்"
>
> —சிலப்பதிகாரம் 10 : 113-119

தமிழ்நாட்டில் மருதநிலச் சூழ்நிலையில் காணப்படும் முக்கியமான பறவைகளையே இயற்கைச் செய்திகளுக்கு ஒப்ப உண்மை தவிற்சியுடன் சிலப்பதிகாரம் கூறியிருப் பதைக் காணலாம். சம்பங்கோழி, நாரை, அன்னம் (தாரா) கொகசு, கானங்கோழி, நீர்க்காக்கை (Cormorant) ஆகியவை இன்றும் பெரிய நீர் நிலைகளின் சூழ்நிலையில் காணலாம். இவற்றைப்பற்றி ஏற்கெனவே சில கட் டுரைகளில் செல்வியில் விளக்கியுள்ளேன். இவற்றுடன் உள்ளும், ஊரலும், புள்ளும் புதாவும் கூறப்பட்டுள்ளன. புள்ளென்பதற்கு அடியார்க்கு நல்லார் கணந்துட்புள் என்று பொருள் கூறினர். இந்தக் கணந்துட்புள்ளை ஒரு கட்டுரையில் விளக்கியுள்ளேன். புதா என்பது மரக்கால் நாரை, பெருநாரையாகும். மீதமிருக்கும் உள்ளும் ஊரலும் எவை என்பதைக் காணவேண்டும்.

உள் என்பதற்கு உள்ளான் என்று பொருள் கூறப்பட்டுள்ளது. உள்ளான்களில் பலவகை தமிழ்நாட்டிற்கு மழைக் காலத்தில் வருகின்றன. உள்ளான் என்ற சொல் இந்த இனப் பறவைகளுக்குப் பொதுப் பெயராகத் தமிழ் நாட்டில் வழங்குகின்றது. ஆனால், சிறப்பாக மோர் உள்ளான், உள்ளான் குருவி (Common snipe or Fantail snipe) என்றழைக்கப்படும் உள்ளான் வகைக்கே பெயராக வழங்கும். இந்த உள்ளான் குளங் குட்டைகளின் ஓரங்களிலும் சதுப்பு நிலங்களிலும், அறுவடை செய்யப்பட்ட சகதியான வயல்களிலும் காணப்படும். வயல்களின் உள்ளே பெரும்பாலும் காணப்படுவதால் உள்ளான் என்றழைக்கப்பட்டதாகத் தெரிகின்றது. திருவாய்மொழியில் 'திறங்களாகி எங்கும் செய்களூடுழல் புள்ளினங்காள்' (555) என்று கூறப்பட்டிருப்பதைக் காணலாம். திறம் திறமாக எல்லா இடங்களிலும் வயல்களின் நடுவில் சஞ்சரிக்கின்ற கூட்டமான பறவைகள் என்று ஈட்டில் உரை கூறப்பட்டுள்ளது. வயல்களின் உள்ளே கூட்டம் கூட்டமாகக் காணப்பட்டதால் இந்தப் பறவைக்கு உள்ளான் என்று பெயர் வந்தது எனக் கூறலாம். நிலத்தில் நிற்கும்போது இதன் சூழலில் இருந்து இதைப் பிரித்துணர்வது அரிது. இதன் நிறம் பழுப்பு நிறமாயிருப்பதால் சூழலில் இருந்து கண்டுபிடிக்க முடிவதில்லை. இந்தச் சிறிய பறவை இமய மலையில் கூடுகட்டிக் குஞ்சு பொரிக்கின்றது என்பதை நம்புவதற்குத் தயங்குவர். ஆனால், இப்பறவைகள் இமயமலைப் பகுதியிலிருந்து தமிழ் நாட்டிற்கு வலசை வருகின்றன என்பது உண்மையே. காடை அளவே பருமனுள்ள உள்ளான் தமிழ்நாட்டில் நெல் வயல்களில் எளிதில் காணக் கூடிய பறவையாகும். வாளை மீன் பெரிதாகையால் உள்ளான் அதை உண்ணத் தலைப்படல் முடியாது. "வாளை மீனுள்ளல் தலைப்படலும் மாளல்லான்" என்று திரிகடுகம் (7) கூறுகின்றது. உள்ளான் சிறிய பறவை என்பதையறிந்தே கூறினர். உள்ளானுக்கு உள்ளு என்றபெயர் சிலப்பதிகாரத்தில் காணப்படுகின்றது. திரிகடுகத்தில் 'உள்ளல்' என்று இதன் பெயர் கூறப்

பட்டுள்ளது. அரும்பத உரையாசிரியர் 'உள்ளல்' என்றும் அடியார்க்கு நல்லார் உள்ளான் என்றும் அழைக் கின்றனர்.

> "உன்ன நாரை மகன்றில் புதாவுளில்
> அன்னங் கோழி வண்டானங்க ளாழிப்புள்
> கின்ன ரங்குரண் டங்கிலுக் கஞ்சிரல்
> சென்னல் காகங் குணலஞ் சிலர்புமே"
>
> —கம்பராமாயணம்-சுந்தர காண்டம் 151

கம்பராமாயணத்தில் ஊர்தேடு படலத்தில் அகழியில் ஒலித்த நீர்ப் பறவைகள் சில கூறப்பட்டுள்ளன. இதில் உன்னம் என்பது நீர்ப் பறவைகளுக்குப் பொதுப் பெயராக வந்துள்ளது. நாரை, மகன்றில், புதா, உளில், அன்னம், நீர்க்கோழி, வண்டானம், ஆழிப்புள், கின்னரம், குரண்டம், கிலுக்கம், சிரல், சென்னம், நீர்க்காகம், குணலம் என்ற பறவைகள் கூறப்பட்டுள்ளன. இவற்றில் உளில் என்ற பெயர் உள்ளானைக் குறித்து வழங்கியுள்ளது. கம்பர் கூறும் பறவைகளில் கின்னரம், கிலுக்கம் ஆகியவை கற் பனைப் பறவைகள் போலவே தோன்றுகின்றது. கம்பராமா யணத்துக்கு உரையெழுதியவர்கள் புதாவைக் குருகு என் றும் வண்டானத்தைப் பெருநாரை யென்றும் தலைகீழாகப் பொருள் கூறினதையும் காண்கிறோம். மகன்றில் என் பதற்கு ஆண் அன்றில் என்று பொருள் கூறப்பட்டுள்ளது. கோழி என்பதற்கு நீர்க்கோழி என்று பொருள் கூறப் பட்டுள்ளது. ஆழிப்புள் என்பது நேமிப்புள் எனப்படும் கோகம் என்ற பறவையேயாகும். உள்ளானில் சில வகைகளைக் கோரை உள்ளான் (Fantail), மயில் உள்ளான் (Painted Snipe) என்ற பெயர்களால் நாட்டு மக்கள் அழைப்பர். உள்ளான் இனப் பறவைகளின் வேறான சில இனப் பறவைகளில் சில (Stint, stilt) உள்ளானைப்போல் உருவிலும் தோற்றத்திலும் ஒத்திருப் பதால் அவற்றையும் சில அடைமொழிகளுடன் கூட்டி உள்ளான் என்று அழைப்பது வழக்கமாயுள்ளது.

சிலப்பதிகாரத்தில் உள்ளானுடன் ஊரல் என்ருெரு பறவை கூறப்பட்டுள்ளது. ஊரல் என்பதற்குப் பொருள் குளுவை என்று அடியார்க்கு நல்லார் கூறியுள்ளார். நீர்



ஊரல் (அ) குளிவை

மேலூர்தலின் ஊரல் என்பது ஆகுபெயராக வழங்கின தாகக் கூறியுள்ளார். குளுவையென்ற இப் பறவையைக் குளிவை என்று பெருங்கதை கூறியுள்ளது.

> "கருங்காற் குருகுங் கம்புளுங் கழுமிப்
> பெரும்பூட் பூணியும் பேழ்வாய்க் கொக்கும்
> குளிவையும் புதாவுந் தெளிகயக் கோழியும்
> அன்றிலும் நாரையுந் துன்றுபு கெழீஇ"
>
> —பெருங்கதை—நருமதை கடந்தது 68-72

பெருங்கதையில் கூறப்பட்டவை எல்லாம் நீர்ப் பறவை களே. அவற்றில் ஒன்ருகக் குளிவையும் சொல்லப்பட் டுள்ளது. குளிவை என்பது யாது என்று ஆராயுங்கால் அதற்குக் குளுப்பை என்று வழங்கும் ஈழநாட்டுத் தமிழ்ப் பெயர் துணைபுரிகின்றது. குளுப்பை என்ற ஈழநாட்டுப் பெயர் குளிவை, குளுவை என்ற பெயர்களின் மாற்றமே என்பதில் ஐயமில்லை. ஈழநாட்டில் இந்த இலக்கிய

வழக்குப் பெயர் இன்றும் வழங்கும்போது இப் பெயர் தமிழ்நாட்டில் மறைந்துபோய்விட்டதைக் காண்கிறோம். இதற்குக் குளிவை என்ற பெயர் வந்த காரணமும் எளிதில் புரிந்துகொள்ள முடியும். இதை இன்று தமிழ்நாட்டில் முக்குளிப்பான் என்று அழைக்கின்றனர். நீரில் அடிக்கடி முக்குளித்து எழுவதால் முக்குளிப்பான் என்ற பெயர் பெற்றது. குளித்து என்ற சொல் இலக்கியத்தில் மூழ்கி என்ற பொருளிலே வழங்கியுள்ளது. குளித்து என்பதற்கு நீராடல் என்ற பொருள் பிற்காலத்தில் பேச்சு வழக்கில் தோன்றிய பொருளாகும். அக் காலத்தில் நீர்நிலைகளில் மூழ்கி நீராடலைக் குளித்தல் என்றனர். அதே வழக்கு பிற்காலத்தில் நீர்நிலைகளில் மூழ்கி நீராடாது நீரை அள்ளி உடம்பின் மேலூற்றி நீராடுதலுக்கும் பேச்சு வழக்காயிற்று. நீரில் மூழ்கி எழும் பறவையைக் குளித்து எழும் பறவையைக் குளிவை என்றழைத்தனர். அதையே முக்குளிப்பான் என்றழைத்தனர். முத்துக்குளித்தல் என்ற வழக்கில் மூழ்குதல் பொருளில் குளித்தல் என்ற சொல் வழங்குவதைக் காணலாம். முக்குளித்தல் என்ற சொல் வழக்கு முழுங்கிக் குளித்தல், முங்கிக்குளித்தல் என்ற வழக்கின் மாற்றமாகலாம். முழுங்கு, முங்கு, முழுக்கு ஆகிய சொற்கள் மூழ்கி எழுதலையே குறிக்கும். முக்குளுவான் என்ற பெயரும் இதே அடிப்படையில் தோன்றியதென்பது தெளிவாகும். இதைத் தெலுங்கு மொழியிலும் இதே பொருளில் 'முணு குடி கோடி' என்று வழங்குவதையும் காணலாம்.

மலையாளத்தில் மூழ்கும் கோழி என்ற பொருளில் 'மூங்கான் கோழி' என்றழைக்கின்றனர். இந்தி, வங்காளம் ஆகிய மொழிகளிலும் மூழ்கும் இதன் குணத்தையே குறித்துக் காரணப் பெயர்கள் இதற்கு வழங்குவதைக் காண்கிறோம். இதன் பெயரிலிருந்தே இந்தப் பறவை எதுவென்று அறிந்துகொள்ள முடிகின்றது. குளம், குட்டைகள், ஏரிகள், நீர்நிலைகளில் காணப்படும் இப் பறவை நீரில் நன்முக நீந்தவும், மூழ்கவும் கூடியது.

நீரில் யாதோர் அசைவும் ஏற்படுத்தாமல் மூழ்கி எழக்கூடியது. மேலெழும்பிச் செங்குத்தாகக் குதித்துச் சடுதியில் மூழ்கி மறையக்கூடியதென்று பறவை நூலார் கூறுவர். (Disappears smoothly below the surface without leaving a ripple or takes a little upward leap to plunge vertically with astonishing suddenness) புறநானூற்றுப் பாடலில் (6) குளித்து என்ற சொற்கு 'மேல்விழுந்து உள்புக' என்ற பொருள் அதன் பழையவுரையில் காணப்படுகின்றது. நீரின்மேல் விழுந்து உள்புகும் பறவையைக் குளிவை என்று கூறியது மிகவும் பொருத்தமே. இது உருவில் சிறிய வாத்துபோல இருக்கும். இப் பறவை தரையில் நடப்பதைக் காண்பதரிது. நீரிலேயே பெரும் பாலும் வாழும் வழக்கமுடையது. இஃது எப்போதும் நீரின் மேலே நீந்திக் கொண்டிருப்பதால், ஊர்ந்து கொண்டிருப்பதால் 'ஊரல்' என்றழைக்கப்பட்டது. இப் பறவையை ஆங்கிலத்தில் 'Little grebe or Dabchick' என்றும் பறவை நூலில் 'Podiceps ruficollis' என்றுமழைப்பர்.

சிலப்பதிகாரத்தில் மருத நிலத்தில் காணப்பட்ட முக்கியமான எல்லா நீர்ப் பறவைகளும் கூறப்பட்டது போல மணிமேகலையிலும் மணிபல்லவத்தில் நீர்நிலையில் கண்ட நீர்ப் பறவைகள் கூறப்பட்டுள்ளன.

> "திரைதவழ் பறவையும் விரிசிறைப் பறவையும்
> எழுந்துவீழ் சில்லையும் ஒடுங்குசிறை முழுவலும்
> அன்னச் சேவல் அரசனுகப்
> பன்னிறப் புள்ளினம் பரந்தொருங் கீண்டிப்
> பாசறை மன்னர் பாடி போல
> வீசுநீர்ப் பரப்பின் எதிரெதி ரிருக்குந்
> துறையுந் துறைசூழ் நெடுமணற் குன்றமும்"
>
> —மணிமேகலை-மணிபல்லவத்துத் துயருற்ற காதை 28-34

மணிமேகலையில் கூறப்பட்ட பறவைகளில் திரைதவழ் பறவை என்பது கடற்காக்கை யென்று கருதவேண்டும். கடல் நீரின் அலையில் தவழும் ஒரே பறவை கடற்காக்கை

யென்பது முன்னரே சிறு வெண்காக்கையைப் பற்றி எழுதிய கட்டுரையில் விளக்கியுள்ளேன். ஆதலின் திரை தவழ் பறவை என்று பெயரைக் குறிப்பிடாது விளக்கிச் சொன்ன பறவை கடற்காக்கையே யாகும். விரிசிறைப் பறவை என்று அடுத்துக் குறிப்பிடும் பறவை கடற்கரையில் பறந்து கொண்டேயிருக்கும் ஒருவகைப் பறவையாகலாம். இதற்கு நீண்ட, பெரிய இறக்கைகள் உண்டு. இது நீரில் நீந்துவதோ, தரையில் நடப்பதோ இல்லை. எப்பொழுதும் விரிந்த இறக்கைகளை அடித்துப் பறந்துகொண்டே யிருக்கும். விரிசிறை என்றதால் விரிவான இறக்கைகளை யுடையது என்பது குறிப்பிடப்பட்டது. மணிபல்லவத்தில் இப் பறவை சொல்லப்பட்டிருப்பதால் ஈழநாட்டுப் பறவை என்பது தெரிகின்றது. இந்தப் பறவை ஈழநாட்டிலே காணப்படுவதாகப் பறவை நூலார் எழுதியுள்ளனர். இதை Frigate bird என்று ஆங்கிலத்தில் அழைப்பர். விரிசிறைப் பறவைக்கடுத்து எழுந்துவீழ்சில்லை என்ற பறவை கூறப்பட்டுள்ளது. சில்லையென்ற பறவை எது வென்பதை அன்னத்தைப் பற்றி எழுதிய கட்டுரையில் விளக்கியுள்ளேன். இந்த சில்லை ஊர்க் குளங்களில் மட்டுமின்றிக் கடலிலும் கடற்கரைக் கழிகளிலும் காணப் படுமென்று பறவை நூலார் கண்டுள்ளனர். மணி மேகலையில் கடற்கரைச் சூழ்நிலையில் கடற்கழியில் இப் பறவை கூறப்பட்டுள்ளது பொருத்தமே. இவை நீர் நிலையில் எழுந்து பறக்கும்போது சில்லென்ற ஓசையிட்டுத் திரும்பவும் நீரில் வீழ்வதால் எழுந்துவீழ் சில்லையென்று அழகாக விளக்கப்பட்டது. சில்லைக் கடுத்து 'ஒடுங்கு சிறை முழுவல்' என்ற பெயரில் ஒரு பறவை கூறப்பட்டுள் ளது. கடற்கரைச் சூழலில் கழிகளிலும் நீர்நிலையிலும் இறக்கையை ஒடுக்கி நீரில் முழுகி எழும் பறவை தற்காலம் நீர்க்காகம் எனப்படும் பறவையாகவே இருக்கமுடியும். கடற்கரைக் கழிகளில் முக்குளிப்பான் என்ற பறவையைக் காணமுடியாது. இதுவும் நீரில் மூழ்கக் கூடியதாகிலும் (Diving) இதைக் கடற்கரைத் துறைகளிலும் கழிகளிலும்

காணமுடியாது. உள்நாட்டில்தான் காணக் கூடியது. ஆதலின் மணிமேகலையில் கடற்கரைத் துறையில் கூறப் பட்ட 'ஒடுங்கு சிறை முழுவல்' நீர்க்காகம் (Cormorant) ஆகவே இருக்கமுடியும். ஒடுங்குசிறை என்ற அடை மொழியும் இதற்குத்தான் பொருந்தும். முக்குளிப்பானுக் குப்பொருந்தாது. மணிபல்லவத்துத் துறையில் காணப் பட்டதாகக் கூறிய பறவைகளுடன் கடைசியாக அன்னப் பறவையும் கூறப்பட்டுள்ளது. இதை அரசனுக உவ மித்துக் கூறியுள்ளார். அன்னப்பறவை ஒருவகை வாத்து அல்லது தாரா என்பது முன்னரே ஒரு கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளது. பலநிறமுடைய பறவைகளுடன் இந்தப் பறவைகள் ஒருங்காகச் சேர்ந்து பாசறையில் மன்னர்கள் பாடி போட்டிருந்ததுபோல எதிரெதிராகத் துறைகளில் இருந்தனவென்று மணிமேகலையில் கூறப்பட் டுள்ளது. மணற் குன்றில் துறைகளில் இப் பறவைகள் இருந்தனவாகக் கூறியிருப்பதைக் காணலாம்.

நீர்ப்பறவைகளை மன்னர்களின் படைபோலக் கூட்ட மாயிருந்ததாகக் கூறுவது கலித்தொகையில் காணப்படு கின்றது. பறவை நூலாரும் நீர்ப்பறவை கூட்டமாகக் காணப்படுவதைப் படைக்கு (Echelons) உவமித்துக் கூறுவதுண்டு. மணிமேகலைப் பாட்டில் இயற்கையாகக் காணப்படும் பறவைகளைச் சிறிது கற்பனையுடன் பாட்டிற் கேற்ப நயமுடன் கூறப்பட்டுள்ளது. சங்க நூல்களில் தமிழ்நாட்டில் காணப்படும் முக்கியமான நீர்ப்பறவைகள் எல்லாம் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். அதிலும் அரிய நீர்ப்பறவைகளான பூணி, நீலக்கோழி, தாமரைக் கோழி ஆகியவை கூடக் கூறப்பட்டிருப்பதைக் காண லாம்.

———

## கச. சிறு வெண்காக்கை
## (SEA - GULLS)

தைத்திங்களில் ஒரு நாள் விடியற்காலையில் மேற்குக் கடற்கரையில் ஒரு விசைப் படகில் சென்று கொண்டிருந்தேன். அப்பொழுது கதிரவன் கடலில் எழுந்து கொண்டிருந்தான். கடலில் செல்லுங்கால் கடற்கரையைப் பார்த்த போது ஐந்து, ஆறு வெள்ளிப் பந்துகள் போன்று சில பறவைகள் வெண்மையாகப் பளிச்சென்று கதிரவன் ஒளியில் மிதந்து கொண்டிருப்பதைக் கண்டேன். அவைதாம் கடற்காக்கைகள் என்று மலையாளப் படகோட்டி சுட்டிக்காட்டினன். இந்தப் பறவைகள் கடற்பரப்பில் அலைகள் சுருண்டு சுருண்டு செல்லுங்கால் மிதவைபோலத் திரை மாலைகளின்மேல் ஏறி இறங்குவதைக் காணும்போது வியப்படைந்தேன். நீந்தாது, மூழ்காது ஆடாத பாவை போல அசையாது இந்தக் கடற்காக்கைகள் கதிரவன் ஒளியில் பளபளப்பாகக் காணும் காட்சி அரியதாகும். இக் காட்சியைப் பார்க்கும்போது எனக்கு இது போன்றதொரு காட்சியைச் சங்கப்புலவர் பாடியுள்ளது சடுதியில் நினைவிற்கு வந்தது:



சிறு வெண் காக்கை

"மையற விளங்கிய மணிநிற விசும்பின்
கைதொழு மரபின் எழுமீன் போலப்
பெருங்கடல் பரப்பின் இரும்புறந் தோயச்

*சிறுவெண் காக்கை பலவுடன் ஆடுந்*
*துறை புலம்பு உடைத்தே தோழி பண்டும்''*
*—நற்றிணை 231*

வானத்தில் எழும் மீன்களைப்போலக் கடல் பரப்பில் கடல் நீர் முதுகில் தோயச் சிறு வெண்காக்கைகள் பல ஆடும் என்று சொல்வதைக் காணலாம். கடல் நீர்ப் பரப்பில் மிதந்து கொண்டு வெகுநேரம் தங்கக்கூடிய ஒரே பறவை யினம் சிறு வெண்காக்கை யாகும். சங்க இலக்கியத்தில் வரும் பல பாடல்களிலும் இப் பறவை கடற்கரைச் சூழ்நிலை யிலேயே பாடப்பட்டிருப்பதைக் காணலாம். சிறு வெண் காக்கையைக் ''கடற்காக்கை'' யென்றே நற்றிணை 272 ஆம் பாடலில் கூறுவது கூர்ந்து கவனிக்கத்தக்கது. இதே பெயர் இன்றும் தமிழிலும் மலையாளத்திலும் வழங்கு கின்றது.

*''கடலங் காக்கைச் செவ்வாய்ச் சேவல்*
*படிவ மகளிர் கொடிகொய்து அழித்த.''*
*—நற்றிணை 272*

சிறுவெண் காக்கைக்குச் சிவந்த வாயலகு உண்டு என் பதைப் பறவை நூலாரும் கூறுவர்.

*''சிறுவெண் காக்கைச் செவ்வாய்ப் பெருந்தோடு.''*
*—குறுந்தொகை 334*

குறுந்தொகையும் சிறு வெண்காக்கைக்குச் சிவந்த வாய லகு இருப்பதைக் கூறுவது காணலாம்.

கடற்கரையில் காக்கைக்கு ஓரளவு ஒப்பான ஒரு பறவை கடற்காக்கையைத் தவிர வேறு கிடையாது. காக்கைக்கும் கடற்காக்கைக்கும் உருவிலும், நிறத்திலும் பழக்க வழக்கங்களிலும் ஒப்புமை உண்டு. வடிவிலும் உருவிலும் காக்கையளவு உடையது சிறு வெண்காக்கை. காக்கையைப் போலத் தடித்த குரலில் கடற்காக்கை கத்தும். கடற்காக்கையின் முதுகுப்புறம் கருஞ்சாம்பல் நிறமாகக் காணப்படும். கழுத்தும் அடிப்புறமும் வெண் மையாகத் தோன்றும். நற்றிணை 'இரும்புறம்' என்று

கடற்காக்கையின் முதுகைக் குறிப்பிட்டுள்ளது. சிறிது வெண்மையுடைய காக்கை யென்ற பொருளில் சிறு வெண் காக்கை யென்று அழைக்கப்பட்டது. சிலர் சிறிய வெண்மையான காக்கையென்று பொருள் கொண்டு, காணற்கு அரிதான வெள்ளைக் காக்கை யென்று பொருள் கொண்டனர். இது தவருகும். காக்கையைப் போல மனிதரைக் கண்டு அஞ்சாது படகுகளிலிருந்து விழும் கழிவு மீன்களையும் கடற்கரையில் ஒதுக்கப்பட்ட கழிவுப் பொருள்களையும் உண்ணும் குணம் கடற்காக்கைக்கு உண்டு. ஆதலின் காக்கையொடு ஒப்பிட்டுப் பெயரிட்டது பொருத்தமே. கடற்கரையிலேயே பெரும்பாலும் காணப்படுவதால் கடற்காக்கை யென்று கூறினர்.

> "பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை."
>
> —குறுந்தொகை 246, 313.
>
> —ஐங்குறுநூறு. 161, 166, 168, 170.

கடற்கரையில் காணப்படுவதைப் பல பாடல்கள் கூறுவது கவனிக்கத் தக்கது. கடற்காக்கைகள் தமிழ் நாட்டிற்குச் செப்டம்பர் முதலில் வருகின்றன. மார்ச்சு முடியக் காணலாம். வெளிநாட்டிலிருந்து வரும் இக் கடற்காக்கையை மழைக் காலத்திலும் பனிக் காலத்திலுமே நன்ருகக் காணலாம். இது வலசை (Migration) போகும் பறவையாகும். சைபீரியா, பின்லாந்து முதலிய மிகத் தொலைவான நாடுகளிலிருந்து இந்தியாவிற்கு வரும் பறவைகளில் கடற்காக்கையும் ஒன்ருகும்.

> "பனிபுலர் துறையும் பல்பூங் கானல்"
>
> —குறுந்தொகை. 334.

> "பனிக்கழி துழவும் பானாள் தனித்தோர்"
>
> —குறுந்தொகை. 246.

> "பாயிரும் பனிக்கழி துழைஇப் பைங்கால்".
>
> —நற்றிணை. 31.

பனிக் காலத்திலும், பனி வீழும் கழிகளிலும் துழாவி உணவு தேடுவதாகக் குறுந்தொகையும் நற்றிணையும் கூறுவதைக் காணலாம். பனிக் கால்த்தில் காணப்படுவதைக்

குறிப்பிட்டுக் கூறியது சிறப்பான செய்தியாகும். துழவி உண்பதாகக் கூறியதையும் காணலாம். கடற்காக்கை கடற்கரையிலும் கழிகளிலும் துழாவி மீன், நண்டு, இரு முதலியவற்றைத் தின்பதை இன்றும் மேற்குக் கடற் கரையில் காணலாம்.

"சிறுவெண் காக்கைச் செவ்வாய்ப் பெருந்தோ
டெறிதிரைத் திவலை யீர்ம்புற நனைப்பப்
பனிபுலர் துறையும் பல்பூங் கானல்
விரிநீர்ச் சேர்ப்பன் நீப்பி னொருநம்"

—குறுந்தொகை. 334.

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
நீந்துநீ ரிருங்கழி யிரைதேர்ந் துண்டு
பூக்கமழ் பொதும்பிற் சேக்குந் துறைவனொடு"

—குறுந்தொகை, 313.

"கடலங் காக்கைச் செவ்வாய்ச் சேவல்
படிவ மகளிர் கொடிகொய்து அழித்த
பொம்மல் அடும்பின் வெண்மணல் ஒருசிறைக்
கடுஞ்சூல் வதிந்த காமர் பேடைக்கு
இருஞ்சேற்று அயிரை தேரிய தெண்கழிப்
பூவுடைக் குட்டந் துழவுந் துறைவன்"

—நற்றிணை. 272.

"கானல் கண்டல் கழன்றுகு பைங்காய்
நீல்நிற இருங்கழி உட்பட வீழ்ந்தென
உறுகால் தூக்கத் தூங்கி ஆம்பல்
சிறுவெண் காக்கை ஆவித்து அன்ன
வெளிய விரியுந் துறைவ என்றும்" —நற்றிணை. 345.

"பெருஞ்சேய் இறவின் துய்த்தலை முடங்கல்
சிறுவெண் காக்கை நாளிரை பெறூஉம்
பசும்பூண் வழுதி மருங்கை அன்ன" — நற்றிணை. 358.

"மாயிரும் பரப்பகந் துணிய நோக்கிச்
சேயிரு வெறிந்த சிறுவெண் காக்கை
பாயிரும் பனிக்கழி துழைஇப் பைங்கால்

*தான்வீழ் பெடைக்குப் பயிரிடூஉச் சுரக்குஞ்*
*சிறுவீ ஞாழல் துறையுமா ரினிதே''* —நற்றிணை. 31.

*"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை*
*அறுகழிச் சிறுமீ னார மாந்தும்''* —ஐங்குறுநூறு. 165.

*"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை*
*இருங்கழி யினக்கெடி றுருந் துறைவன்.''*
—ஐங்குறுநூறு. 167.

சிறுவெண் காக்கையைப் பற்றிப் பத்துப் பாடல்கள் ஐங்குறு நூற்றில் வருகின்றன. சிறுவெண் காக்கையை நன்கு தெரிந்தே பல பாடல்களில் சங்கப்புலவர்கள் பாடியுள்ளனர். சிறுவெண் காக்கை கழியில் சிறு மீனையும், கெடிறு, அயிரை மீனையும் உண்பதாகக் கூறியுள்ளது உண்மைச் செய்தியாகும். கடற்பரப்பில் சிவந்த இறு மீனையும் உண்பதாகக் கூறியதும் உண்மை யாகும். கடற்காக்கை கடற்கரை யருகே மரச் சோலைகளில் தங்கும். உள் நாட்டில் சென்று தங்குவது கிடையாது. சங்க நூல்களிலும் கடற்கரை மரங்களான புன்னையிலும், ஞாழலிலும், கடற்கரைப் பொதும்பிலும் தங்குவதாகக் கூறியுள்ளதைக் காணலாம். கிழக்குக் கடற்கரையில் பாண்டியரது மருங்கூர்ப் பட்டினத்தில் கடற் காக்கையைக் கண்டு கூறியதைப் பார்க்கலாம். கடற்காக்கை நீந்தி இரை தேடுவதுண்டு. சில சமயம் பறக்கும்போதே கடற் பரப்பில் 'எறிந்து' இரையைப் பற்றுவதுண்டு. இதையும் சங்கப்பாடல் கூறும்.

*"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை*
*துறைபடி யம்பி யகமனை யீனும்''*
—ஐங்குறுநூறு. 168.

ஐங்குறு நூற்றில் கடற்காக்கை துறையில் படிந்திருந்த படகின் உள்ளே முட்டையிடும் என்று கூறி யிருப்பதைக் காணலாம். ஆனால், பறவை நூலார் கண்டறிந்ததில் கடற்காக்கை கடற்கரை யருகே முட்டை யிடுவது கிடையாது. கடற்காக்கைகள் தொலைவிலுள்ள வெளிநாடுகளுக்குச் சென்று அங்கேயே கூடுகட்டி முட்டையிட்டுக்

குஞ்சு பொரிக்கின்றன. ஒருவகைக் கடற் காக்கைகள் இமயமலைப் பகுதியில் முட்டையிடச் செல்கின்றன.

மலையாளத்தில் கடற்காக்கையைக் 'கடல் பாட்டா' என்றும் 'கடற்காக்கா' என்றும் அழைக்கின்றனர். பாட்டம் என்ற சொல் பிற்காலத் தமிழில் காக்கையைக் குறிக்கும். மலையாளத்தில் 'மத்திக் காக்கை' யென்று கடற்காக்கை போன்றுள்ள ஒருவகைப் பறவையை (Tern) என்று அழைப்பர். இதைத் தமிழில் 'ஆற்றுக் குருவி' என்று அழைப்பதைக் காணலாம். கிழக்குக் கடற்கரையில் சில இடங்களில் இதையும் கடற்காக்கை யென்றழைப்பதுண்டு. சிறு வெண்காக்கை இந்தப் பறவையன்று. ஏனெனில் கடற்காக்கை யொன்றே கடல் பரப்பில் மிதந்து ஓய் வெடுக்கும் பறவையாகும். நீந்தவும் செய்யும். மத்திக் காக்கை யென்பது நீந்தாது. கடலில் மிதக்காது.

> *"திரைதவழ் பறவையும் விரிசிறைப் பறவையும்*
> *எழுந்துவீழ் சில்லையும் ஒடுங்குசிறை முழுவலு"*
> —*மணிமேகலை*, *மணிபல்லவ-காதை 28 - 29,*

மணிபல்லவத்துக் கடற்கரையில் கண்ட பறவைகளைக் கூறு மிடத்துத் 'திரைதவழ் பறவை' முதலில் கூறப்பட்டுள்ளது. திரையில் தவழும் பறவை சிறு வெண்காக்கை யென்பதில் ஐயமில்லை.

சிறு வெண்காக்கையைப் பேராசிரியர் ஒளவை துரை சாமிப் பிள்ளையவர்கள் Little Cormorant என்ற பறவை யென்று கூறினர். இது தவறு. சங்க இலக்கியத்தில் கூறியுள்ள செய்திகள் இதற்குப் பொருந்தா. கடல்நீர்ப் பரப்பில் இதைக் காணவே முடியாது. இதை 'நீர்க்காகம்' என்று கூறுவர். மலையாளத்திலும் 'காக்கா' என்ற பெயருடன் இணைத்துக் கூறுவர்.

> *"செங்கா லன்னமும் பைங்காற் கொக்கும்*
> *கானக் கோழியும் நீர்நிறக் காக்கையும்"*
> —*சிலம்பு*, *10 : 115 - 116.*

சிலப்பதிகாரத்திலும் கம்பராமாயணத்திலும் நீர்க் காக்கை என்று அழைக்கப்பட்டுள்ளது. கம்பராமாயணத்தில் நீர்க் காக்கையினத்தில் காணப்படும் இருவகைகளும் கூறப்பட்டுள்ளன.

"ஒழுகு சாற்றகன் கூனையின் ஊழ்முறை
முழுகி நீர்க்கருங் காக்கை முளைக்குமே" —4-15-49.

"எவ்வம் ஓங்கிய இறப்பொடு பிறப்புஇவை என்னக்
கவ்வு மீனொடு முழுகுவ எழுவன கரண்டம்."
—4-1-16.

நீர்க் கருங்காக்கை என்பது Little cormorant எனப்படும். இதைத் தமிழ்நாட்டில் சில இடங்களில் கடல்காக்கா என்று அழைத்தாலும் கடற்காக்கை இது வன்று. 'நீர்க்காகம்' என்றழைப்பதே சரியானது. இதுபோன்றே சிறிது வேறானதொரு பறவை (Indian Shag) கம்பராமாயணத்தில் 'கரண்டம்' என்று அழைக்கப்பட்டுள்ளது. இரண்டு பறவைகளும் உடல் முழுவதும் கருப்பு நிறமானவை. நீரில் மூழ்கி நீருக்கடியில் நீந்தி மீனைத் துரத்திப் பிடிக்கும். பின்னர் அலகில் மீனொடு எழும்பும். கம்பரும் அழகாக நீர்க்கருங்காக்கை முழுகி முளைக்கும் என்றும், 'கரண்டம் முழுகுவ, கவ்வு மீனொடு எழுவ' என்றும் கூறியுள்ளார். அப்பரும் தேவாரத்தில் 'கரண்ட



நீர்க்காக்கை

மலி தடம்பொய்கை காழியர்கோன்' என்று கூறியுள்ளார். 'கரண்டியின் பெயர் கரண்டம்' என்று பிங்கலந்தை நிகண்டு கூறுகின்றது. கரண்டி போன்ற மூக்குள்ளதால் கரண்டம் என்ற பெயர் வந்திருக்கலாம்.

கடற்காக்கையைச் சில இடங்களில் 'பொந்தா' என்றழைக்கின்றனர். தெலுங்கு மொழியில் பொந்தா என்ற சொல் பெரியது என்ற பொருளில் பொந்தாக்கோழி போன்ற பெயர்களில் வருகின்றது. கடற்காக்கையின் உடல் பருத்திருப்பதால், இந்தப் பெயர் வந்திருக்கலாம். கடற்காக்கையை மாதப்புரு என்றழைப்பதுண்டு. மாரிக் காலத்தில் குறிப்பிட்ட மாதங்களில் வருவதால் மாதப்புரு என்றழைக்கப்பட்டது. ஆனால் இது புரு இனத்தைச் சார்ந்தது அன்று. சிறு வெண்காக்கையைப் பறவை நூலார் Larus brunnicephalus (அ) Larus ridibundus என்றழைக்கின்றனர்.

———

## கரு. சிரல்

## (KING FISHER)

சங்க நூல்களில் மீன் கொத்திக் குருவியைச் சிரல் என்று அழைத்தனர். நீர்ப்பரப்பை நெடுநேரம் நோக்கியிருந்து துடுமெனப் பாய்ந்து நொடிப்பொழுதில் வெள்ளி மீனைச் செம்பொன் அலகில் கௌவிச் செல்லும் நீல மணிப்பறவையைப் பலரும் பார்த்திருப்பர். இதையே இக்காலத்தில் மீன்கொத்தி என்றழைக்கின்றனர். சங்க காலத்தில் இந்தப் பறவையைக் கண்ட புலவர்கள் மிக அழகாக வர்ணித்துள்ளார்கள். சங்க நூல்களில் கூறப்பட்ட மீன்கொத்தி 'சிறுசிரல்' என்று அழைக்கப்படுகின்றது. சிறிய மீன் கொத்தியே தமிழ்நாட்டில் எங்கும் நீர்நிலையருகில் காணப்படுகின்றது. நீலமும் பச்சையும் கலந்த நிறமுடைய மீன்கொத்தி இதுவாகும். ஆதலால் நீலமணிக்கு ஒப்பிட்டுச் சங்க நூல்கள் கூறும். 'மணிச்சிரல்' (பெரும்பாண். 314) 'மணி நிறச் சிறு சிரல்' என்று அழைக்கப்படுகின்றது. இதன் உடல் அழகிய நிறங்களுடன் கூடி இருத்தலையும் குறிப்பிட்டுள்ளனர்.

> "வளிசினை யுதிர்த்தலின் வெறிகொள்பு தாஅய்ச்
> சிரற்சிற கேய்ப்ப வறற்கண் வரித்த
> வண்டு ணறுவீ துமித்த நேமி." —அகம். 324

காற்று வலிமையுடன் அடித்தலால் நறிய பல நிறப் பூக்கள் மணலில் வரித்திருப்பது மீன் கொத்தியின் சிறகுகள்போல இருந்ததாகக் கூறியதைக் காணலாம். மீன் கொத்தியின் உடலில் நீலம், பச்சை, சிவப்பு ஆகிய மூன்று நிறங்களும் இருப்பதைக் காணலாம். மீன் கொத்தியின் வயிற்றுப்பகுதி சிவப்பாயிருக்கும். மீன் கொத்தியின் மூக்கும் சிவப்பாக இருக்கும். மீன்

கொத்தியின் அலகையும் அழகிய உவமையால் விளக்கி யுள்ளனர்.

> "படுமழை பொழிந்த பாறை மருங்கில்
> சிரல்வா யுற்ற தளவிற் பரலவற்." —நற்றிணை 61

> "பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை
> ஆடு சிறைவண் டழிப்ப." —ஐங்குறுநூறு. 447

'சிரல் வாய் வனப்பினவாகி, தளவந் தகைத்தன' என்று கார் நாற்பது (36) கூறுகின்றது. தளவு செம்முல்லை என்றழைக்கப்படும். தளவின் அரும்பு நீண்டு சிவந்து கூர்மையாக இருக்கும். அதுபோன்று சிரலின் வாய் இருந்ததாகச் சங்க நூல்கள் கூறுகின்றன. மீன் கொத்தியின் சிவந்த வாயை அலகைக் கருதியே பிற்காலத்தில் 'பொன் வாய்ப்புள்' என்று பெயர் தந்த னர். தென்னார்க்காடு முதலிய மாவட்டங்களில் 'பொன்னுந்தட்டான்' என்று மீன் கொத்தியை அழைப் பதைக் காணலாம். தட்டான் பூச்சியைப் போன்று நீர் நிலைகள்மேல் பறந்துகொண்டிருப்பதால் தட்டான் என்ற பெயர் பெற்றது. பொன் வாயையுடைய தட்டான் என்பதே இந்தப் பெயரின் பொருளாகும். பெருங்கதை யில் 'பொலம்புள்' என்று மீன்கொத்தி அழைக்கப் பட்டதைக் காணலாம். சிறுபாணாற்றுப் படையும் 'பொன் வாய் மணிச்சிரல்' (181) என்றழைத்திருப்பதை யும் காணலாம். பொலம்புள் என்ற பெயர் மரபிலேயே பொன்னுந்தட்டான் என்ற பேச்சு வழக்கும் அமைந் துள்ளது. சிறிய மீன்கொத்தியை மலையாளத்தில் 'பொடிப் பொன்மான்' என்றழைப்பதைக் காணலாம். மீன் கொத்தியின் பெயராகப் 'பொன்மான்' என்ற பெயர் மலையாளத்தில் வழங்குவது தமிழ் மரபை ஒத்துள்ளது. மீன் கொத்தியின் தலையையும் ஓர் உவமையால் நற்றிணை விளக்கியுள்ளது.

> "பரல்தலை போகிய சிரல்தலைக் கள்ளி
> மீமிசைக் கலித்த வீநறு முல்லை." —நற்றிணை, 169

பரல் நிறைந்த நிலத்தில் திருக்கள்ளி வளர்ந்திருப்பதை இன்றும் காணலாம். திருக்கள்ளியின் நுனியில் காணப்படும் முள்ளோடு கூடிய சதைப்பற்றுள உருண்டையான முறுக்கின தண்டு ஏறக்குறைய மீன் கொத்தியின் தலையைப் போன்று தொலைவில் பார்ப்போருக்குத் தோன்றும். இதையே 'சிரல்தலைக்கள்ளி' என்று நற்றிணை கூறியது.

சங்க இலக்கியத்தில் வரும் பாடல்கள் சிரல்பறவை மீனைக்கொத்திச் செல்வதைப் பற்றியே வருகின்றது.

''குறுங்காற் காஞ்சிக் கொம்பரேறி
நிலையருங் குட்டம் நோக்கி நெடிதிருந்து
புலவுக்கய லெடுத்த பொன்வாய் மணிச்சிரல்
வள்ளுகிர் கிழித்த வடுவாழ் பாசடை''
—சிறுபாண், 179 - 182

''மீன்றேர் கொட்பிற் பனிக்கய மூழ்கிச்
சிரல் பெயர்ந் தன்ன நெடுவெள் ளூசி
நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்''
—பதிற்றுப்பத்து, 5 : 42-2-4

''ஊர்க்குறு மகளிர் குறுவழி விறந்த
வராஅல் அருந்திய சிறுசிரல் மருதின்
தாழ்சினை யுறங்குந் தண்டுறை யூரன்'' —அகம். 286

''குண்டுநீர்க் கிடங்கிற் கெண்டை பார்க்கும்
மணிநிறச் சிறுசிரல் போலநம்
அணிநல் யானைக் கூறளக் கும்மே''
—தகடூர் யாத்திரை

''புனலாடு மகளிரிட்ட பொலங்குழை
இரைதேர் மணிச்சிர லிரைசெத் தெறிந்தெனப்''
—பெரும்பாண். 313 - 314

''செங்கயல் பாய்ந்து பிறழ்வன கண்டாங்
கெறிந்தது பெறாஅ திரையிழந்து வருந்தி
மறிந்து நீங்கு மணிச்சிரல்''
—மணிமேகலை. 4 : 22 - 24.

"அணிநிறக் கெண்டை ஆடிடம் பார்த்து
மணிநிறச் சிறுசிரல் மயங்குநம் பொய்கை"
—தொல்காப்பியம் - இளம்பூரணம் - மேற்கோள்.

"இறைநீ ரகவயிற் பிறழுங் கெண்டையைச்
சிறுசிர லெறியுஞ் செய்கை போல"
—பெருங்கதை. 3 : 26 : 21 - 22

"வயலோ ரெடுத்த கௌவைக் கிருங்கழிக்
கயல்கொள் பொலம்புள் கதுமென வெருவவும்."
—பெருங்கதை. 4 : 2 : 68-69

காஞ்சி மரத்தின் கொம்பில் ஏறி நிலை காண முடியாத ஆழமான குட்டத்தை நோக்கி நெடிய நேரம் காத்திருந்து கயல்மீனை எடுத்துச் சென்ற பொன் வாயை யுடைய மணிபோன்ற சிரல் கிழித்து வடுவாக்கிய பசிய இலையைப்பற்றிச் சிறுபாணாற்றுப்படை கூறும் விளக்கம் அப்படியே இயற்கையில் கண்ட செய்தியைப் படம் பிடித்தது போலிருக்கின்றது. மீன்கொத்திப் பறவை மீனைப் பிடிப்பதைப் பறவை நூலாரும், சிறுபாணாற்றுப் படை கூறினது போலவே சொல்லியிருப்பது குறிப்பிடத் தக்கது. (Hunting by dropping its bill foremost upon its quarry from an overhanging branch.........occasionally hovers on the water surface) காஞ்சி, மருத மரங்கள் நீரருகே வளரும் மரங்கள் என்று செடி நூலார் கூறுவர். இந்த மரங்களிலே இருந்து கவனித்து நீர் நிலையில் மீனைப் பிடிக்கிறதையே சங்க நூல்கள் கூறுகின் றன. மீனைப் பிடிக்க நீர் நிலையில் விழும்போது அலகு கிழித்த தாமரைபோன்ற நீர்க் கொடிகளின் இலையைப் பற்றியும் கூறப்பட்டுள்ளது. கயத்தில் மூழ்கிச் சிரல் எழுகின்றபோது அதன் அலகு வெட்டுப் புண்களைத் தைக்கும் காலத்தில் இரத்தம் தோய்ந்த ஊசியைப் போலிருக்கும் என்று பதிற்றுப்பத்து கூறியுள்ளது. நெடிதாகப் பிளந்த மார்பை நெடிய தோல் தைக்கும் ஊசியால் தைப்பது அக்கால வழக்கம் என்பது தெரி

கின்றது கயல்மீன் நீரில் பிறழ்வதையும் கெண்டை மீன் நீரில் ஆடுவதையும் பார்த்துக் கொண்டிருந்து சிரல் வேட்டையாடுவதையும் கூறியுள்ளனர். மீன் கொத்தி எறிந்து இரையைப் பிடிப்பதாகச் சங்க நூல்கள் கூறும். எறிந்து என்பது விரைவாக வீழ்ந்து கொத்திப் பிடித்தலையே குறிக்கும். மரக்கிளையில் நெடிதிருந்து பார்த்து எறிந்து மீன் பிடித்தல் சிரலின் வழக்கமாகும். இரைலை வயிறு நிறைய அருந்திய சிறுசிரல் மருத மரத்தின் தாழ்ந்த கொம்பில் உறங்குவதை அகநானூறு கூறு கின்றது. நீரின்மேல் காணப்படும் தாழ்ந்த கொம்பில் இருந்து மீனைப் பார்ப்பது மீன் கொத்தியின் வழக்க மென்று பறவை நூலார் கூறுவர். அகநானூற்றில் ஒரு முதிய மீன்கொத்தியின் செய்கை கூறப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கதாகும்.

"எரியகைந் தன்ன தாமரைப் பழனத்துப்
பொரியகைந் தன்ன பொங்குபல சிறுமீன்
வெறிகொள் பாசடை யுணிஇயர் பைப்பயப்
பறைதபு முதுசிர லசைபுவந் திருக்குந்
துறைகே ழூரன் பெண்டுதன் கொழுநனை."

—அகம். 106.

பறக்க முடியாத முதிய மீன் கொத்தி மரக்கிளையிலிருந்து மீனைப் பிடிக்கமுடியாததால் நீரிலிருந்த தாமரை இலையில் மெதுமெதுவாக நகர்ந்து சென்று மீனைப் பிடிக்கப் பார்க் கும் என்று அகநானூறு கூறியுள்ளது. இந்தப் பாடலில் அழகிய உள்ளுறை உவமம் இருப்பதாகக் கூறுவர். பறக்க முடியாத முதுசிரல் நீரிலிருந்த பாசடையில் இருந்தும், மீனைக் கவரமுடியாதிருக்க, பறக்கவல்ல இளஞ் சிரல் மரக் கொம்பிலிருந்தும் பாய்ந்து மீனைக் கவர்ந்து சென்றது போல மனையகத்தே இருந்த முதிய தலைவி, தலைவனைக் கவர முடியாதிருந்தும் சேரியிலிருந்த இளம் பரத்தை தலைவனைக் கவர்ந்து சென்றாள் என்று குறிப் பிடும் உள்ளுறை உவமம் இந்த அகப் பாட்டில் உள்ளது. இந்த உள்ளுறை உவமத்தில் கூறப்பட்ட சிரலைப் பற்றிய

செய்தி இயற்கையில் கண்ட செய்தியாகவே இருக்கலாம். சிலப்பதிகாரத்தில் 'சென்றெறி சிரல்' என்றொரு பகை வரைக் குத்தும் பொறி அரணில் வைக்கப்பட்டிருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. எறிவது என்பதற்குக் குத்துவது என்று பொருள் கூறியுள்ளனர். சில உரையாசிரியர்கள் மீன் குத்திப் பறவை என்று எழுதியுள்ளனர். இதுவே பிற் காலத்தில் மீன் கொத்திப் பறவை எனப்பட்டது. திவாகர நிகண்டில் மீனெறி சிறு பறவை என்று சொல்லப்பட்டிருப் பதைக் காணலாம். மலையகராதி, மீன் கொல்லி, மீனெ றிஞ்சான் என்று மீன் கொத்தியை அழைக்கின்றது. மீன் கொல்லி என்ற பெயர் கன்னடத்திலும் உள்ளது. மீன் கொத்திப்புள் என்று யாழ்ப்பாணத்து அகராதி கூறு கின்றது. 'சிரற்சிற கேய்ப்பச் சிப்பம் விரித்த' என்று பெருங்கதை சிரல் சிறகு விரித்தாற் போன்று சிற்றுல வட்டம் இருந்ததைக் குறிப்பிட்டுள்ளது. இக்காலத்திலும் மயிற் பீலியாலும் மீன்கொத்தி இறகாலும் விசிறி செய்வ துண்டு.

மீன் கொத்தியின் குரலைப் பற்றிப் பிற்கால நூல்கள் குறிப்பிட்டுள்ளன.

> ''சிச்சிலி பூனை குடமுழுக்கஞ் செம்மைத்தாம்
> உச்சிமலை நீர்விழுக்கா டொண்பருந்து—பச்சைகிளி
> வேயினிலை வீழ்ச்சியுடன் வெங்கா னிழற்பறவை
> ஏயுங்கால் ஓசை யியம்பு''

> ''வண்டின் முரியுங் கஞ்ச நாதமுஞ்
> சிரல்வா னிலையுங் கரையில் வீழ்வது
> மருவி யோசையு முழவின் முழக்கமும்
> வலம்புரிச் சத்தமும் வெருவின் புணர்ச்சியும்.''
>
> —கல்லாடம். 21 : 50-53

மீன் கொத்தி மீனைப்பிடிக்க நீர் நிலையின்மேல் பறக்கும் போது ஒருவகை ஓசையை யெழுப்பும். பலவகை இயற்கை யோசைகளைக் கூறுங்கால் சிச்சிலியின் ஓசை கூறப்பட் டிருப்பதைக் காணலாம். திருவிளையாடற் புராணத்தில்

'சிரல் மீன்மேல் வீழ் வீழ்ச்சி போற் பண்பு' என்று கூறப் பட்டதைக் காணலாம். சிரல் மீனைப் பிடிக்க நீர் நிலையில் செல்லும் போது 'சிச்சி' 'சிச்சி' என்று அடிக்கடி ஓசை யிட்டுச் செல்லும். இந்த ஓசையின் காரணமாகவே 'சிச்சிலி' என்ற பெயர் மீன் கொத்திக்கு இடைக்காலத்தில் வழங்கப்பட்டது. இந்தி மொழியிலும், சில வடநாட்டு மொழிகளிலும் மீன்கொத்தியைக் 'கில்கிலா' என்று அழைக் கின்றனர். டாக்டர் எமனோ குர்க்கி மொழியில் உள்ள 'கில்கிலா' என்ற சொல் மரங்கொத்தியைக் குறிப்பதைக் காட்டி அதற்கு ஒத்ததாகச் சிச்சிலி என்ற தமிழ்ப் பெயரைக் குறிப்பிட்டுள்ளனர். தமிழில் சிச்சிலி என்பது சில்சிலி, கில்கிலி, என்று முற்காலத்தில் வழங்கியிருக் கலாம் என்று சொல்லுகின்றார். தமிழில் பேச்சு மொழியில் 'கிக்கிரி' என்று வழங்கப்படுவதையும் பல்கலைக் கழக அகராதி சுட்டிக் காட்டியுள்ளது. தமிழிலும், திராவிட மொழிகளிலும் முற்காலத்தில் 'கில்கிலி' என்று பேச்சு வழக்கில் மீன் கொத்தியின் பெயர் வழங்கி யிருக்கலாம். இதுவே இந்தி முதலிய வடநாட்டு மொழிகளில் சென் றிருக்கலாம். சிரல் என்ற பெயரும் மீன் கொத்தி வெளி யிடும் ஓசையின் காரணமாக வந்தது எனக் கொள்ள வேண்டும். 'பிளிறலும், குளிரலும், பிரற்றலும், சிரற் றலும், அகவலும், எழுத்திலா ஓசை' என்று திவாகர நிகண்டு கூறுகின்றது. 'தோல் புதை சிரற்றடிக் கோ லுடை உமணர்' என்று வரும் அகநானூற்றுப் பாடல் (191) வரியில் 'சிரற்று' என்ற சொல் உமணர் நடக்கும் போது கால் செருப்பு விட்டு விட்டுச் செய்யும் ஓசையைக் குறித்துப் பயில்வதைக் காணலாம் ஆதலின் சிரல் என்ற சொல் மீன் கொத்தி செய்யும் ஓசையால் வந்தது என்பது தெளிவாகும். மீன்கொத்திக்குத் திவாகரம் முதலிய நிகண்டுகளில் 'தித்திரி' என்ற பெயரும் கொடுக்கப்பட் டுள்ளது. இதுவும் ஓசை காரணமாக வந்த பெயராகும். மலையாள மொழியில் இதே 'தித்திரி' என்ற பெயர் ஆள் காட்டிக் குருவிக்கு வழங்குகின்றது. ஆனால், இப் பெயர் வடநாட்டில் இந்த இரண்டினும் வேறான ஒரு பறவைக்கு

வழங்குகின்றது. தமிழில் மீன்கொத்திக்கு வேறு பெயர் களுமுண்டு. மூக்கன் என்றும் விச்சுளி என்றும் அழைப்பர். விச்சுளி என்ற பெயர் வீச்சு என்ற சொல்லிலிருந்து தோன் றியதாகலாம். வீழ்ச்சி என்பதே வீச்சு ஆகி வீச்சுள்ள பறவையான மீன்கொத்திக்கு விச்சுளி என்று வழங்கியது என்று கொள்ள வேண்டும். மீன்கொத்தி வானில் பறந்து நின்று நேர்குத்தாகப் பாய்ந்து மீனைப்பிடிப்பது போல் கழையில் ஏறி நேர்குத்தாகப் பாய்ந்து செய்யும் வித்தைக்கு 'வீச்சுளிக் கூத்து' என்று பெயர் உள்ளதைக் காணலாம். விச்சுளி என்று ஒருவகை மீன் கொத்தியை இன்று தமிழ்நாட்டில் சில இடங்களில் அழைப்பர்.

சிறுசிரல் என்று சங்கநூல்கள் கூறுவதால் அதை விடப் பெரிய சிரலையும் உணர்ந்திருந்தினர் என்று கருத வேண்டும். வெள்ளைமார்புடன் கூடிய பெரிய மீன்கொத்தி தமிழ்நாட்டில் எங்கும் நீர்நிலையருகில் காணப்படும். இதையும்விடப் பெரிய மீன்கொத்தி புருவளவிலும் சிறிது குறைந்த வடிவுள்ளதாக உள்ளது. இந்தப் பெரியவகை மீன்கொத்திகளைப் பார்க்கிலும் சிறியதாகையால் சிறுசிரல் என்று எங்கும் எளிதில் காணப்படும் மீன்கொத்தியைச் சங்ககாலத்தில் அழைத்தனர். இவற்றைத் தவிரக் கறுப்பும் வெள்ளையும் கலந்த நிறமுடைய மீன்கொத்தியும் தமிழ்நாட்டில் உள்ளது. இது நீர்நிலையின் மேல் நெடு நேரம் செங்குத்தாகப் பறந்து வாலின்மேலே நின்றது போல் நிலையுடன் பார்த்துக்கொண்டே இருக்கும். இதைப் பற்றிச் சங்கநூல்களில் செய்தியில்லை. சிறுசிரலை ஆங்கி லத்தில் The common Kingfisher என்று அழைப்பர். பறவைநூலில் Alcedo atthis என்றழைப்பர். பெரிய சிரல்வகைப் பறவைகளை ஆங்கிலத்தில் The white-breasted Kingfisher and the stork - billed Kingfisher என்றழைப்பர்.

மிகப் பெரிய மீன்கொத்தியை மலையாளத்தில் காக்கா மீன்கொத்தி என்றழைக்கின்றனர். பெரிய மீன்கொத்

தியைக் 'குள் ளுலுப்பான்' என்றும் மலைமீன்கொத்தி என்றும் கன்னியா குமரிப் பகுதியில் அழைக்கின்றனர். சிறுசிரலைச் சின்ன மீன்கொத்தி என்றும், அதைவிடப் பெரியதைப் பெரிய மீன்கொத்தி யென்றும், கறுப்பும், வெள்ளையும் கலந்த மீன்கொத்தியைப் பொரிமீன் கொத்தி என்றும் தமிழ்நாட்டில் பேச்சு வழக்கில் இன்றும் அழைப்பதுண்டு. எங்கும் காணப்படும் ஒருவகை மீன் கொத்தியைச் சாத்தன் என்று பெயரிட்டு 'மீன்கொத்திச் சாத்தன்' என்று மலையாளத்தில் அழைக்கின்றனர், இந்த வழக்கு தமிழில் பசுவைச் சாத்தன் எனவும் கொற்றன் எனவும் விரவுப் பெயரிட்டு அழைக்கும் மரபைப்போல் இருப்பது வியப்பைத் தருகின்றது. இன்று பசுவையோ வேறு உயிரையோ அன்பின் காரணமாகச் சாத்தன் என்று அழைப்பதில்லை. சாத்தன் என்றழைக்கும் வழக்கைத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் எடுத்துக்காட்டி யுள்ளனர். ஆனால், முற்காலத்தில் தமிழில் இருந்த சாத்தன் முதலிய விரவுப்பெயர் வழக்கு தற்காலம் மலை யாளத்திலேதான் ஓரளவு காணப்படுவது வியப்பைத் தருகின்றது.

பெரியமீன்கொத்தியைக் கம்பர் இராமாயணத்தில் 'மாச் சிச்சிரல்' என்றழைக்கின்றார். சீதையை எடுத்துச்சென்ற இராவணன்மீது சடாயு பாய்ந்து புடைத்ததை 'மாச்சிச் சிரல் பாய்ந்தென, மார்பினும் தோள்கள் மேலும் ஒச்சிச் சிறகாற் புடைத்தான்' என்று உரைக்கின்றார். மீன் கொத்தி தோளுக்குமேல் இறக்கைகளைப் புடைத்துக் கொண்டு பறந்துகொண்டே மீனின்மேல் பாய்வதைக் கம்பர் கூறியிருப்பது இயற்கையான விளக்கமாகும். சிச் சிரல் என்ற பெயரே சிச்சிலி என்று மாறியதா என்று ஐய முறுகின்றது. சிச்சிரல் என்ற பெயரைக் கம்பராமா யணத்தில் மட்டும் காண்கிறோம்.

## கசு. கணந்துள்

## (LAPWING)

சங்க இலக்கியத்தில் 'கணந்துள்' என்ற பெயருடைய பறவையைப் பற்றி இரு பாடல்கள் கூறுகின்றன. இந்த இருபாடல்கள் கூறும் செய்தியிலிருந்தே கணந்துள் என்பது பறவைநூற்படி (ornithology) இன்ன பறவை என்று உறுதியாகக் கூற முடிகின்றது. இந்தக் கணந்துள் என்ற பறவையைப் பற்றிச் சங்க இலக்கியத்திற்கு உரை



கணந்துள்

எழுதிய எவரும் பொருத்தமாகப் பொருள் கூறவில்லை. இதை நீர்வாழ் பறவை (water-bird) என்று கூறி 'எந் நில மருங்கிற் பூவும் புள்ளும்' என்றபடி பாலையில் வந்த தெனக் கொள்க என்று நச்சினார்க்கினியர் திணை மயக்க மெனக் கொண்டார். இது பறவையை நேரில் கண்டறி யாது கூறிய திணை மயக்கமாகும். கணந்துள் நீர்ப்

பறவையன்று. மற்றும் நீர்ப்பறவைகள் பாலையில் இயற்கையில் காணப்படக் கூடியவையன்று. இதற்கெல்லாம் திணை மயக்கம் கூறமுடியுமெனப் பிற்காலத்து உரையாசிரியர்கள் கருதியது தவறு. நுண்ணிதின் ஆராய்ந்தால் திணை மயக்கமானது காலநிலை, பருவநிலை, தட்பவெப்ப நிலை ஆகியவை வேறுபடுங்கால் உயிர்களிடையே அதற்கொப்ப ஏற்படும் மாற்றங்களையே குறித்ததாகும் என்பது புலப்படும். முதலில் அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில் கணந்துளை நீர்ப் பறவையாகக் கொண்டார். நச்சினார்க்கினியர் இதையே பின்பற்றிக் கூறினார். ஆராய்ந்து பார்க்குங்கால் கணந்துள் பாலைநிலப் பறவையாகவோ முல்லை, மருதநிலப் பறவையாகவோ கொள்ள முடியுமே தவிர நீர்ப்பறவையாக (Water-bird) ஒருகாலும் கருத முடியாது. ''அற்ற குளத்து அறுநீர்ப் பறவை''யே நீர்நிலைகளையே நம்பி வாழும்.

கணந்துள் என்ற பெயருடைய பறவை எதுவென்று அறியச் செய்யுளிலேயே அகச்சான்று (Internal evidence) உள்ளதை யாவரும் காணவில்லை.

*''பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ*
*நெடுங்கால் கணந்துளம் புலம்புகொள் தெள்விளி*
*சுரஞ்செல் கோடியர் கதுமென இசைக்கும்''*

—நற்றிணை. 212.

*''ஆற்றய விருந்த இருந்தோட் டஞ்சிறை*
*நெடுங்காற் கணந்து ளாளறி வுறீஇ*
*ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்*
*மலையுடைக் கான நீந்தி*
*நிலையாப் பொருட்பிணிப் பிரிந்திசி னோரே''*

—குறுந்தொகை, 350.

நற்றிணை 212 ஆம் பாடலிலும் குறுந்தொகை 350 ஆம் பாடலிலும் இரு செய்திகள் கணந்துளைப் பற்றி ஒரே முறையாகக் கூறப்பட்டுள்ளன. கணந்துட் பறவைக்குக்

கால் நீளம் என்பது 'நெடுங்கால்' என்று இருபாடல் களிலும் கூறுவதிலிருந்து தெரிகின்றது. இருபாடல் களிலும் கணந்துள் பறவை ஓசையிடுவது குறிப்பாகக் கூறப்பட்டுள்ளது. நற்றிணை கணந்துள் பறவையின் குரலைப் 'புலம்புகொள் தெள்விளி' என்று கூறியுள்ளது.

குறுந்தொகையில் கணந்துளின், ஆளை அறிவித்துக் காட்டும் குரல் குறிப்பிடப்பட்டுள்ளது. வேட்டுவன் பார்வையாக (Decoy) ஒரு பறவையை வைத்து வலையை விரித்துள்ளதைக் கண்டறிந்த கணந்துள் பறவை தனிமை தோன்றத் தெள்ளிய அழைப்புக் குரலிடுவதாகக் கூறி யுள்ளதை நோக்கவேண்டும். வழியில் செல்லும் வழிப் போக்கர்களுக்கு ஆறலைப்போர் பதுங்கியிருப்பதை அறிவிப்பதற்குக் குரலிட்டதாகக் குறுந்தொகைப் பாடல் கூறுவதைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். ஆள் இருப் பதை 'அறிவுறுத்துவதால்' 'ஆறு செல் வம்பலர் படைதலை பெயர்க்கும் மலையுடைக் கானம்' என்று கூறியுள்ளதை எண்ணிப் பார்க்கவேண்டும். இம் முறையாகச் சுரத்திலும் அரிய வழிகளிலும் மலையுடைக் கானங்களிலும் ஆள் வரவைக் கண்டு, வேட்டுவன் வலையைக் கண்டு பயந்து போய் அறிவிக்கும் பறவை எதுவாக இருக்கவேண்டும் என்று பறவை நூலறிவோடு (Ornithology) அனுபவ வாயிலாக ஆராய்ந்தால் அஃது இன்றும் நாட்டுமக்கள் நன்கு கண்டறிந்து கூப்பிடும் 'ஆள் காட்டிக் குருவி' என் பதில் சிறிதும் ஐயமில்லை. 'ஆளறி வுறூஉம்' பறவையையே ஆள் காட்டிக் குருவி என்றனர். சங்ககாலப் பெயரே தொன்றுதொட்டு மறவாமல் நல்ல மரபுடன் நாட்டுமக்கள் வாயில் ஆள்காட்டி யென்று வழங்குவதைப் பலரும் புரிந்து கொள்ளவில்லை. ஆள்காட்டிக் குருவி ஆளைக் காட்டிக் கொடுக்கும் என்பது தமிழர் அனுபவ வாயிலாக அறிந்த செய்தியாகும். ஆட்காட்டி தெரியாமல் திருடப்போகிறவன் கெட்டிக்காரனு? அவன் காலடி பிடித்துப் போகிறவன் கெட்டிக்காரனு? கணந்துள் என்ற பறவையே ஆள்காட்டிக் குருவி யென்பதற்கு இந்த அகச சான்றே போதும். இருப்

பினும் இந்த இருபாடல்களில் வரும் பிற செய்திகளும் கணந்துள் என்பது ஆள்காட்டிக் குருவியே என்பதை மேலும் வலியுறுத்தும். இந்த ஆள்காட்டிக் குருவிகளுக்கும் இதன் இனமான பறவைகளுக்கும் கால்கள் நீளமென்று பறவை நூல் கூறும் (The legs are fairly long or very long in some and are extended under or behind the tail in flight). இதே செய்தியையே 'நெடுங்கால் கணந்துள்' என்று இருபாடல்களும் குறிப்பிடுகின்றன.

ஆள்காட்டிக் குருவியில் இருவகைகள் உண்டு. மஞ்சள் நிறமான தோலைக் கண்ணைச் சுற்றி உள்ள ஆள் காட்டிக் குருவி வகையை மஞ்சள் மூக்கு ஆள்காட்டி (yellow wattled lapwing) என்று நாட்டுமக்கள் வழங்குவர். சிவப்புத் தோலை உடைய ஆள்காட்டிக் குருவியைச் சிவப்பு ஆள் காட்டி (Red wattled lapwing) என்று கூப்பிடுவர். இந்த இரண்டு ஆள்காட்டியும் நீண்ட கால்களையும் கடுங் குரலிடும் குணத்தையும் உடையன. நற்றிணையிலும் குறுந் தொகையிலும் கணந்துள் பறவை பாலைத் திணையில் அரிய வழிகளான சுரத்திலும் மலையுடைக் கானத்திலும் காணப் பட்டதாகக் கூறப்படுவதால் இப் பறவை மஞ்சள் மூக்கு ஆள்காட்டியாகவும் அல்லது சிவப்பு ஆள்காட்டியாகவும் இருக்கலாம். மஞ்சள் மூக்கு ஆள்காட்டி வறட்சியான திறந்த வெளிகளிலும் பறம்புகளிலும் கற்பாங்கான நிலத் திலும் காணப்படும். ஆனால், சிவப்பு ஆள்காட்டி குளம், குட்டை, ஆறு ஆகியவை அருகாமையில் உள்ள பறம்பு களிலும் வெளிகளிலும் மிகுந்து காணப்படும் என்று பறவை நூலார் கூறுவர். (The yellow wattled lapwing is found in dry open country, arid waste land, stony postures and the like. The red wattled lapwing likes grassy borders of tanks, fallow paddy fields and in general any flat ground near water.)

"ஆற்றயலிருந்த இருந்தோட் டருஞ்சிறை நெடுங் கால் கணந்துள்" சிவப்பு ஆள்காட்டிக் குருவியாகவே

இருக்கவேண்டும். ஏனென்றால் சிவப்பு ஆள்காட்டியே நீர் அருகாமையில் உள்ள சூழ்நிலையில் வாழ விரும்பும். இந்தச் சிவப்பு ஆள்காட்டிக் குருவி பொதுவாகக் குடும்பமாகக் கூட்டமாகக் காணப்படும். இரட்டையாகவும் காணப்படும் (It lives in pairs or small family parties) 'இருந்தோடு' என்று கூறுவது தொகுதியாகக் காணப்பட்ட ஆள்காட்டிக் குருவிகளைக் குறித்தே என்பதை உணர வேண்டும். நீர்நிலைக்கருகிலே காணப்பட்டாலும் இது நீர்ப்பறவையன்று. நீர்ப்பறவையைப் போன்று நீரையே நம்பி வாழ்வதில்லை.

இந்த ஆள்காட்டிக் குருவிகளின் குரலைப்பற்றிப் பறவை நூலார் பலர் குறிப்பாக விளக்கியுள்ளனர். இக் குருவிகள் முட்டையிட்ட காலத்திலேயோ குஞ்சு பொரித்துள்ள காலத்திலேயோ இவை வாழுமிடத்தருகில் விலங்குகளோ மனிதரோ சென்றால் திரும்பத் திரும்பக் கடுங்குரலிட்டுச், சுற்றிசுற்றிப் பறந்து பாய்ந்து ஆரவாரம் செய்யும். சிவப்பு ஆள்காட்டிக் குருவி குரலிடுவது "Did-he-do-it. Did-he-do-it" என்று திருப்பித் திருப்பி ஆங்கிலத்தில் கத்துவதுபோ விருக்குமென்று அறிஞர்கள் கூறுவர். "நீ இதைச் செய்தாயா?" என்று தவற்றைச் சுட்டிக் காட்டுவதுபோல் இதன் கூக்குரல் கேட்குமென்று கற்பித்துக் கூறினர். இது போன்றே மஞ்சள் ஆள் காட்டியும் ஆரவாரம் செய்து கடுங்குரலிடு மென்பர் (The Red wattled lapwing lives in pairs or small family parties spending its time walking hither and thither in little spurts all the time keeping a watch for any approaching enemy. Though not shy, it is a most vigilant bird and clever indeed must be the predator human or otherwise—that can circumvent it. At ordinary times it contents itself keeping at a safe distance but when a pair has eggs or young they take to wing with a preliminary yell and fly around the disturber of their place with an incessant and most irritating scream of 'did –

he—do—it———did—he—do—it' until the marauder has withdrawn. ........................Although the yellow wattled lapwing has not so loud a scream as the red wattled lapwing, it is equally demonstrative when its eggs or young are threatened and a pair will fly around agitatedly crying 'tee-ee' and a sharp 'kit, kit, kit' until the intruder has taken himself off).

ஆள்காட்டியின் கூட்டை விலங்கோ மனிதரோ நெருங்குவதை ஒன்றிரண்டு பர்லாங் தொலைவிலேயே கண்டு அந்த இடை வெளியை அவர்கள் கடக்கும்போதே கடுங்குரலிடத் தொடங்கும். விலங்குகளையும் பறவை களையும் வேட்டையாடச் செல்பவர்களைத் தொலைவிலேயே கண்டு ஆள்காட்டி கடுங்குரலிடுவதைக் கேட்ட விலங்கு களும் பறவைகளும் பாதுகாப்பைத் தேடிக்கொள்ளும். இதன் காரணமாக இந்தப் பறவையை வேட்டையாளர் வெறுப்பர். ஜிம்கார்பெட் (Jim Corbett) என்ற சிறந்த வேட்டையாளர் விலங்குகளுக்கு வேட்டையாளரைக் காட்டிக் கொடுக்கும் பறவைகளில் ஒன்ருக இந்த ஆள் காட்டியைக் குறிப்பிட்டுள்ளார். குரங்குகள், மயில்கள், காரிக்குருவிகளும் இத்தகைய பழக்கமுடையன என்று கூறு கின்ருர். தொலைவிலேயே நெருங்கும் ஆளைக் காட்டிக் கொடுப்பதாலேயே (betraying) ஆள்காட்டி என்று பெயர் பெற்றது. ஆறலைப்போர் வழியோரத்தில் நெருங்கி வருவதைக் கண்டு ஆள்காட்டி குரலிடவே அதைக் கேட்ட வழிப் போக்கர் கள்வர் உள்ளதை அறிந்து மறைந்து போயினர் என்ற செய்தியையே குறுந்தொகைப் பாடல் கூறியுள்ளது. 'ஆள் அறிவுறீஇ' என்று குறிப்பிட்டது அருமையான விளக்கம். இப் பறவைகள் கூட்டமாகவும் ''அபாய அறிவிப்பு'' செய்யும் என்று பறவை நூலார் கூறி யுள்ளனர். இந்த 'அபாய அறிவிப்புக் குரலைக்' கேட்டவர் ஆள்காட்டிக் குருவியை என்றும் மறக்கமுடியாது.

ஆள்காட்டிக் குருவியை நாட்டுமக்கள் நன்கு அறிந் திருந்தனர். ஆனல், தற்காலம் நகர நாகரிகத்தில் மூழ்கி

யுள்ளவர்களுக்கு ஆள்காட்டி யென்றால் அஃதென்ன ஓர் ஆளோ, இயந்திரமோ என்று மயங்குவர். ஆள்காட்டிக் குருவியைப் பற்றி நாட்டுப் பாடல்கள் தமிழகத்திலும் ஈழ நாட்டிலும் வழங்குகின்றன. ஆள்காட்டிக் குருவியுடன் பழகிய நாட்டுமக்கள் தங்களுடைய இன்ப துன்பங்களைக் கூட ஆள்காட்டிக் குருவியின் மேலேயேற்றிப் பாடிய அருமை, அழகு போற்றத்தக்கது.

"ஆக்காட்டி ஆக்காட்டி ஆவரம்பூ ஆக்காட்டி
எங்கே எங்கே முட்டை யிட்டாய்
கல்லுந் துளைத்துக் கடலோரம் முட்டையிட்டேன்
இட்டது நாலுமுட்டை பொரித்தது மூணுகுஞ்சு
மூத்த குஞ்சுக் கிரைதேடி மூணுமலை சுற்றி வந்தேன்
இளைய குஞ்சுக் கிரைதேடி ஏழுமலை சுற்றி வந்தேன்
பார்த்திருந்த குஞ்சுக்குப் பவளமலை சுற்றிவந்தேன்.
புல்லறுத்தான் புலவிற்குக் காய்தின்னப் போகையிலே
மாயக் குறத்திமகன் வழிமறித்துக் கண்ணி வைத்தான்
காலிரண்டும் கண்ணியிலே சிறகிரண்டும் மாரடிக்க
நானழுத கண்ணீரும் என்குஞ்சழுத கண்ணீரும்
வாய்க்கால் நிறைந்து வழிப்போக்கர் கால்கழுவிக்
குண்டு நிறைந்து குதிரைக் குளிப்பாட்டி
இஞ்சிக்குப் பாய்ஞ்சு இலாமிச்சுக்கு வேருண்டி
மஞ்சளுக்குப் பாய்ஞ்சு மறித்துதாம் கண்ணீரே".

இந்த நாட்டுப்பாடல் மாடு ஓட்டும் சிறுவர் பாடுவது. உணர்ச்சியை வடித்தெடுத்து உருவாக்கிப் பாடிய பாட்டு. இந்தப் பாட்டில் ஆள்காட்டியின் அரிய, சிறிய, உண்மை யான இயற்கைச் செய்திகள் கூறப்பட்டுள்ளதைக் காணும் போது நம்மை வியப்பிலாழ்த்துகின்றது. 'ஆள்காட்டி, ஆவரம்பூ ஆள்காட்டி' அஃதாவது மஞ்சள்மூக்கு ஆள் காட்டி. ஆவரம்பூவின் இதழ்கள் மஞ்சள் மூக்கு ஆள் காட்டியின் கண்ணைச் சுற்றிய மஞ்சள் தோல் போன்றே உள்ளதை நேரில் கண்டோரே உணர முடியும். ஆவரம்பூ காணப்படும் இடம் வறட்சியான நிலம், பறம்புகளே

யாகும். அத்தகைய நிலத்தில் சூழ்நிலையில் காணப்பட்ட ஒரு செடியின் பூவை அதே நிலத்தில் சூழ்நிலையில் வாழும் பறவையின் ஒருபகுதி நிறத்திற்கு ஒப்பிட்டது நாட்டுமக்களின் இயற்கையறிவை நன்கு எடுத்துக் காட்டுகின்றது. ஆள்காட்டியின் முட்டையைக் கண்டுபிடிப்பது மிகமிக அருமையெனப் பறவை நூலார் கூறுவர். சிறு கற்களும் காய்ந்த புற்களும் சூழ்ந்த இடத்தில் அதே சுற்றுச் சார்புடைய நிறத்துடன் கூடிய முட்டைகளை ஆள்காட்டி இடுவதால் யார் கண்ணிற்கும் முட்டைகள் புலப்படுவதில்லை. மற்றும் முட்டையை நெருங்கும் விலங்கையோ மனிதரையோ பயமுறுத்தியோ ஏமாற்றியோ விடும்தன்மை ஆள்காட்டிக் குண்டு. இதன் குஞ்சுகள் நிறத்தில், சூழலின் நிறத்தை ஒத்திருப்பதாலும் அஞ்சவரும் இடையூறு நெருங்குங்கால் ஆடாது அசையாது மறைந்து கொள்வதாலும் இவற்றைக் கண்டுபிடிப்பது எளிதன்று. அதனால் தான் நாட்டுப்பாடலில் 'எங்கே எங்கே முட்டை யிட்டாய்' என்று மாட்டுக்காரச் சிறுவன் கேள்வி கேட்கின்றான்.

செயற்கையாகக் கூடுகட்டாமல் கல்லின் இடையே குழிசெய்து முட்டைகளை யிடுவதால் கல்லைத் துளைத்து முட்டையிட்டதாக நாட்டுப் பாடலில் கூறப்படுகின்றது. இட்டது நாலுமுட்டை என்றதும் உண்மையே. நான்கு முட்டைகளையே மஞ்சள் ஆள்காட்டி இடுகின்றது என்று பறவை நூலார் கூறுவர். (The four pearshaped eggs are arranged in cross formation in a shallow scrape in open ground, usually among elods, stones etc............ in their normal surroundings they are hard to detect) ஆள்காட்டிக் குருவி குஞ்சுகளைப் பாதுகாப்பதில் கண்ணும் கருத்துமாய் இருப்பதையே அதன் அழுகையையும் கண்ணீரையும் கற்பனையாகக் கூறியதிலிருந்து உணர வேண்டும். இந்தப் பாட்டை ஈழநாட்டிலே, மன்னார் நாட்டில் பாடுவதாகக் கூறப்பட்டுள்ளது. இதே பாட்டு கொங்கு நாட்டிலும் சோழ நாட்டிலும் சிறிது மாற்றத்துடன் மாடு மேய்க்கும் சிறுவர்களால் பாடப்படுகின்றது.

மாடு மேய்க்கும் சிறுவர்கள் போகும் பாதைகளின் அருகே ஆள்காட்டிக் குருவி காணப்படுவது இயற்கையே. ''வண்ணரைப் பாவி மகன் பார்த்திருந்து கண்ணிவைத்தான்'' என்று பாடுவர். சிவப்பு ஆள்காட்டி நீர்நிலை யருகில் சிறிது தொலைவில் கற்பாங்கான நிலத்தில் காணப்படுமாதலால் வண்ணான் கண்ணி வைத்துப் பிடிப்பது எளிதே. நீர்நிலை யருகிலும் சேற்றிலும் புழுப்பூச்சிகளை இந்த ஆள் காட்டிகள் பிடித்துத் தின்னும். ஈழநாட்டுப் பாடலில் ஆள்காட்டியைக் குறத்தி வலைவைத்துப் பிடித்ததாகக் கூறியது நற்றிணை 212ஆம் பாடலில் வேட்டுவன் வலையை வைத்துப் பிடிக்கப் பார்ப்பதாகக் கூறியதுடன் ஒத்துள்ளது. இதிலும் சங்கப் பாடலின் மரபைக் காணலாம். ஆள்காட்டிக் குருவியின் முட்டையைக் கண்டுபிடிப்பது அரிதாகையால் ஆள்காட்டி ஆகாசத்தில் வீடு கட்டுவது போல என்று கூறினர். ஆள்காட்டி கூடுகட்டுவதேயில்லை. ஆதலின் ஆகாயத்தில் கட்டுவதாகக் கூறினர்.

ஆள்காட்டிக்குருவி ஆளைக் காட்டிக்கொடுக்கும் என்பதைத் தமிழர் அனுபவவாயிலாகத் தொன்றுதொட்டு அறிந்துவைத்திருந்தனர். ஆள்காட்டியைப்பற்றி அரிய பழமொழிகள் தமிழ்நாட்டில் வழங்குகின்றன. 'ஆட்காட்டி தெரியாமல் திருடப்போகிறவன் கெட்டிக்காரனா?' அவன் காலடி பிடித்துப் போகிறவன் கெட்டிக்காரனா? என்றொரு பழமொழி வழங்குகின்றது. ஆட்காட்டிக்குருவி அருகில் இருப்பதைத் தெரியாமல் ஓரிடத்தில் திருடப்போகிறவன் மாட்டிக்கொள்வான் என்பதே பொருளாகும். 'ஆட்காட்டி சொந்தக்காரனையும் திருடனையும் பிடித்துக்கொடுக்கும்' என்றொரு பழமொழியும் உள்ளது. ஆள்காட்டி சொந்தக்காரன் என்றும் திருடன் என்றும் வேற்றுமை பார்க்காது கத்தி இருவரையும் காட்டிக்கொடுக்கும் என்பதையே இந்தப் பழமொழி கூறுகின்றது. ஆள்காட்டியைப்பற்றி இந்தப் பழமொழிகளில் காணப்படும் அடிப்படைச் செய்தியே சங்கநூல்களிலும் வழங்கியிருக்கக் காணலாம்.

கணந்துள் என்ற இதன் சங்ககாலப் பெயரைப் பிற்காலத்தில் மறந்துவிட்டனர். ஆனால், இப் பறவையின் 'ஆளறிவிக்கும்' அபாய அறிவிப்புக் குரலைச் சங்கநூல் கூறியதைப்போலவே நேரில் நன்கு கண்டுணர்ந்த நாட்டுமக்கள் 'ஆட்காட்டி' என்று அழைத்தனர். கணந்துள் என்ற பெயர் ஆள்காட்டிக்குருவியின் அபாய அறிவிப்பு ஓசையின் காரணமாக வந்திருக்கலாம். கண. கணத்தல் என்ற சொல் விட்டுவிட்டு ஒலித்தலைக் குறிக்கும். ஆட்காட்டிக்குருவி 'இட்டிஇட்டி' என்று விட்டு விட்டு ஒலிப்பதாக மலையாளத்தில் கூறுவர். அதனால் இதை 'இட்டிஇட்டிக்குருவி' என்று வடமலையாளத்தில் அழைப்பர். விட்டுவிட்டு ஒலிக்கும் ஓசையைக் குறித்தே 'கணந்துள்' என்ற பெயர் தோன்றியிருக்கலாம். கணந்துள் என்ற பெயரில் உள் என்பது உள்ளானைக் குறிக்கலாம். உள்ளானைப்போன்று இருப்பதால் உள் என்ற பெயர் சேர்ந்திருக்கலாம். கணந்துள் என்பது ஆள்காட்டிக் குருவியே. சிவப்பான ஒருவகை ஆள்காட்டிக் குருவி நீர் அருகிலே காணப்படினும் ஆள்காட்டிக்குருவி நீர்ப்பறவையன்று. மஞ்சள் மூக்குள்ள ஒருவகை ஆள் காட்டிக்குருவி வறட்சியான சூழ்நிலையிலே விரும்பி வாழ்வதால் இதைப் பாலைப்பறவையாகக் கொண்டனர். முல்லையும் குறிஞ்சியும் திரிந்த பாலையிலேயே இதை மிக்குக் காணமுடியும் என்பதைப் பறவை நூல் படித்தோரும் நேரில் பார்த்தோரும் எளிதில் கூறமுடியும்.

பறம்பில் காணப்படுவதால் மலையாளத்தில் 'பறம்பத்தய்யன்' என்று சில இடங்களில் அழைக்கின்றனர். சிலப்பதிகாரத்தில் நாடுகாண்காதையில் வரும் 'புள்ளும் புதாவும்' என்றதற்கு அடியார்க்கு நல்லார் கணந்துட்புள்ளும் மரக்கால் நாரையும் என்று பொருள் எழுதியுள்ளார். கழனியில் காணப்பட்டதாகக் கூறப்பட்ட கணந்துட்புள் சிவப்பு ஆள்காட்டியாகவே இருக்கும். சிவப்பு ஆள்காட்டியைப் பறவை நூலில் 'Vanellus Indicus Indicus' என்றழைப்பர். மஞ்சள் ஆள்காட்டியை 'Vanellus

Malabaricus' என்றழைப்பர். ஆள்காட்டியில் சிவப்பு மூக்கு ஆள்காட்டி, மஞ்சள் மூக்கு ஆள்காட்டி யென்று இருவகைகள் உள்ளன. கண்ணிற்கருகில் சிவப்புத்தோலை யுடையது சிவப்பு மூக்கு ஆள்காட்டி யென்றும், மஞ்சள் தோலுடையதை மஞ்சள் மூக்கு ஆள்காட்டி என்றும் அழைப்பர். சிவப்புமூக்கு ஆள்காட்டி மருத நிலச் சூழ்நிலையில் நீரருகே காணப்படினும் நீர்ப்பறவை அன்று. மஞ்சள்மூக்கு ஆள்காட்டி பாலைத் தன்மை மிகுந்த வறட்சியான மணற்பாங்கான இடத்தில் காணப்படும். இதை முரம்பு நிலத்திலும் பறம்பு நிலத்திலும் காணலாம்

---

# கஎ. புறா
# (PIGEONS AND DOVES)

## 1. மாடப்புறா :

சங்க நூல்களில் நான்குவகைப் புறாக்களைப் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. இக் காலத்தில் அவற்றை மாடப்புறா, மணிப்புறா, தவிட்டுப்புறா, சாம்பல்புறா என்றழைக்கின்றோம். மாடப் புறாவைப் பற்றிச் சில பாடல்கள் கூறுகின்றன. மாடப்புறாவைத் தற்காலத்தில் கோயில் புறாவென்றும் அழைப்பர். இப் புறாக்களை வளர்ப்பதுண்டு. சங்க காலத்திலேயே இப் புறாக்களை வளர்த்தனர்.

> "புற்றுடைச் சுவர புதலிவர் பொதியிற்
> கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து
> உடனுறை பழமையிற் றுறத்தல் செல்லாது
> இரும்புறாப் பெடையொடு பயிரும்
> பெருங்கல் வைப்பின் மலைமுத லாறே" —அகம் 307

> "கருங்கைக் கொல்லன் இரும்புவிசைத் தெறிந்த
> கூடத் திண்ணிசை வெரீஇ மாடத்து
> இறையுறை புறவின் செங்காற் சேவல்
> இன்றுயில் இரியும் பொன்துஞ்சு வியனகர்"
> —பெரும்பாண் 437-440

> "மனையுறை புறவின் செங்கால் பேடைக்
> காமர் துணையொடு சேவல் சேரப்
> புலம்பின்று எழுதரு புன்கண் மாலைத்"
> —நற்றிணை 162

> "நாட்பலி மறந்த நரைக்கண் இட்டிகைப்
> புரிசை மூழ்கிய பொரியரை ஆலத்து
> ஒருதனி நெடுவீழ் உதைத்த கோடை
> துணைப்புறா விரிக்குந் தாய்மழை நனந்தலைக்"
> —அகம் 287

"வகையமர் நல்லில் அகவிறை உறையும்
வண்ணப் புறவின் செங்கால் சேவல்
வீழ்துணைப் பயிருங் கையறு மூரல்குரல்"
—நற்றிணை 71, வண்ணப்புறக் கந்தரத்தனார்

'மனையுறை புறவின் செங்காற் சேவல்
இன்புறு பெடையொடு மன்றுதேர்ந் துண்ணாது
இரவு பகலு மயங்கிக் கையற்று
மதலைப் பள்ளி மாறுவன விருப்ப"
—நெடுநல்வாடை 45-48

மாடப்புறுவை 'இரும்புறு' என்றழைத்திருப்பதைக் காணலாம். மாடப்புறுவின் பொதுமையான நிறம் கருநீல மாகும். இந்த நிறத்தின் காரணமாகவே ஆங்கிலத்தில் Blue rock pigeon என்றழைத்தனர். அகநானூறும் கருமையான புறு என்ற பொருளில் இரும்புறு என்றழைத் தது. நீலநிறத்தைக் கருமை என்றழைப்பது சங்கநூல் வழக்கு. வீட்டு மாடத்தில் இறப்பிலே வாழ்ந்து வந்த பழக்கத்தால் மாடப்புறு என்றழைத்தனர். பெரும் பாணாற்றுப் படையில் இந்தப் புறு வீட்டு மாடத்தின் 'இறையில்' உறைந்ததாகக் கூறியிருப்பதைக் காணலாம். கொல்லன் இரும்பை அடித்த ஓசைக்குப் பயந்து புறு இனிய துயிலை நீங்கியதாகக் கூறியுள்ளதைக் கவனிக்க லாம். இக் காலத்திலும் இப் புறு நகரத்தில் காணப்படும் எல்லாவித ஓசைகளையும் பொருட்படுத்தாது வீட்டு இறப்பில் தங்கி வாழ்வதைக் காணலாம். மனையில் உறைந்த புறுவென நற்றிணையும் நெடுநல்வாடையும் கூறியுள்ளன. சங்ககாலத்தில் வீட்டில் வளர்த்தனர். சங்ககாலத்திலிருந்த செங்கல்லால் கட்டிய கோயில்களில் இப் புறுக்கள் வாழ்ந்ததை அகநானூறு 207, 287 ஆம் பாடல்கள் குறிப்பிட்டுள்ளன. இன்று எல்லா மதத்தின ருடைய கோயில்களிலும் மாடபபுறு வாழ்வதைக் காண லாம். ஆதலால் கோயில் புறு என்றழைக்கலாயினர். வீட்டின் 'அக இறையில்' உறைந்த புறுவின் 'வண்ணப் புறத்தைக்' குறித்துக் கந்தரத்தனார் என்ற புலவர் பாடிய

தால் வண்ணப் புறக்கந்தரத்தனர் என்ற அடைமொழிப் பெயர் கொடுக்கப்பட்டது. மாடப்புறா பெரும்பாலும் கருநீலமா யிருப்பினும் பல வண்ணங்கள் அதன் உடலில் ஒளிவிடும். மாடப்புறா துணையோடு வாழுந் தன்மையுடையது. புறாச் சேவல் காமர் துணையொடு, வீழ்துணையொடு இருந்ததாகக் கூறியுள்ளனர். புறா செங்காலையுடையதென்று கூறப்பட்டுள்ளது. புறாவின் குரலை 'முரல் குரல்' என்றும் வீழ்துணையை அழைப்பதற்கு 'பயிரும்' என்றும் நற்றிணை கூறுகின்றது. வீட்டுப்புறா மன்றிலேயே இரைதேடி உண்ணுவதை நெடுநல்வாடை கூறியுள்ளது. வீட்டுப் புறாக்களை வளர்க்க வீட்டின் ஒருறுப்பாக கபோதகத்தலை என்ற புறாக் கூண்டுகளைக் கட்டியிருந்தன ரென்று தெரிகின்றது. இதனை நெடுநல் வாடை 'மதலைப் பள்ளி' என்றழைக்கின்றது. இரவும் பகலும் மதலைப் பள்ளியிலேயே இருந்து வெளியே இரைதேடச் செல்லாதிருந்த புறாச் சேவலைக் கூறியிருப்பதைக் காணலாம். சங்க காலத்திலேயே மாடப்புறா மனைகளில் வளர்க்கப்பட்டிருந்தது என்பது தெளிவாகின்றது. மற்றும் ஊர்களினருகில் மக்களோடு பழக்கப்பட்ட மாடப்புறாக்களும் (Semiferal) இருந்தன. தற்காலக் கோயில் புறாக்கள் அத்தகைய புறாக்கள் எனலாம். இயற்கையில்


மணிப்புறா

மாடப்புறுக்கள் மலைப்பாறைகளில் கூட்டம் கூட்டமாக வாழுமென்று பறவை நூலார் கூறுவர்.

## 2. மணிப்புறு

சங்க நூல்களில் கூறப்பட்டுள்ள மற்றொருவகைப் புறு மணிப்புறு என்பதாகும்.

*"ஊரெழுந்து உலறிய பீரெழு முதுபாழ்*
*முருங்கை மேய்ந்த பெருங்கை யானை*
*வெரிந் ஓங்கு சிறுபுறம் உரிஞ ஒல்கி*
*இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென*
*மணிப்புறுத் துறந்த மரஞ்சோர் மாடக்"*

*—அகம் 167*

பாழடைந்த ஊரிலே செங்கல்லால் கட்டிய மாடத்தின் விட்டம் வீழ்ந்து விட்டதால் மணிப்புறு மாடத்தை விட்டுச் சென்றதாகக் கூறியுள்ளதைக் காணலாம். மணிப்புறு என்ற சங்ககாலப் பெயர் இன்றும் நாட்டு மக்களிடையே வழங்கி வருவதால் மணிப்புறு எதுவென்று கண்டுகொள்ள முடிகின்றது.

இதன் கழுத்தின்மேல் கறுப்பும் வெள்ளையுமாகப் புள்ளிகள் காணப்படுவதால் மணிப்புறு என்றழைத்தனர். கழுத்தில் மணி அணிந்ததுபோல் இப் புள்ளிகள் தோன்றுகின்றன. உடலில் வெள்ளைப் புள்ளிகள் உள்ளதால் புள்ளிப்புறு என்றழைப்பர். இப் பெயர் நாட்டுமக்களின் பேச்சில் 'புலிப்புறு' ஆனது. மலையாளத்தில் 'சக்கரக் கூட்ட பிறவு' என்று அழைப்பர். நாட்டுமக்கள் இதை மணிப்புறு என்றும் உமிப்புறு என்றும் அழைக்கின்றனர். ஆனால், தவிட்டுப்புறு என்று தமிழ்நாட்டில் அழைக்கும் புறு இதனின்றும் வேறானதென்று தெரிகின்றது. மணிப் புறுவும் மாடப் புறுவைப்போல வீட்டின் இறப்பில் கூடு கட்டுவதுண்டு. சங்க காலத்திலும் மாடத்தில் மணிப்புறு வாழ்ந்ததைக் குறிப்பிட்டுள்ளனர். மணிப்புறு நீர் நிலைகள் உள்ள செழிப்பான இடங்களில் காணப்படும்.

## 3. தவிட்டுப்புறு :

மழையற்ற கள்ளிக் காடுகளிலும் வறட்சியான பாலை போன்ற நிலத்திலும் கண்ட ஒருவகைப் புறுவைச் சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர்.

"பெயன்மழை துறந்த புலம்புறு கடத்துக்
கவைமுட் கள்ளிக் காய்விடு கடுநொடி
துதைமென் றூவித் துணைப்புற விரிக்கும்
அத்த மரிய வென்னுர் நத்துறந்து"

—குறுந்தொகை 174.

"யாங்கறிந் தனர்கொ றோழி பாம்பின்
உரிசிமிர்ந் தன்ன வுருப்பவி ரமையத்
திரைவேட் டெழுந்த சேவ லுள்ளிப்
பொறிமயி ரெருத்திற் குறுநடைப் பேடை
பொரிகாற் கள்ளி விரிகா யங்கவட்டுத்
தயங்க விருந்து புலம்பக் கூஉம்" —குறுந்தொகை 154.



பொறிவரிப்புறு

"நொடிவிடு வன்ன காய்விடு கள்ளி
அலங்கலம் பாலை ஏறிப் புலம்புகொள்
புன்புறு வீழ்பெடைப் பயிரும்
என்றூழ் நீளிடைச் சென்றிசி னோரே"

—நற்றிணை 314.

"நுண்பொறிப் புறவின் செங்காற் சேவல்
வெண்சிறைப் பெடையொடு விளையாட்டு விரும்பி

வன்பர லார்ந்தவயிற்ற வாகிக்
கண்பொறி கள்ளிக் கவர்சினை யேறிக்
கூப்பீடு குரலிசை சேட்புலத் திசைப்பவும்
—பெருங்கதை 1 : 52 : 46 - 50.

"பொறிவரிப் புறவின் செங்காற் சேவல்
சிறுபுன் பெடையொடு சேட்புலம் போகி
அரிமணல் இயவிற் பரல்தேர்ந் துண்டு" —அகம் 271.

"வரிமரல் வாடிய வானிங்கு நனந்தலைக்
குறும்பொறை மருங்கிற் கோட்சுர நீந்தி
நெடுஞ்சேண் வந்த நீர்நசை வம்பலர்
செல்லுயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லிப்
பல்காய் அஞ்சினை யகவும் அத்தம் —அகம் 271.

"வண்புறப் புறவின் செங்காற் சேவல்
களரி ஓங்கிய கவைமுட் கள்ளி
முளரியங் குடம்பை ஈன்றிளைப் பட்ட
வயவுநடைப் பேடை உணீஇய மன்னர்
முனைகவர் முதுபாழ் உகுநெற் பெறூஉம்
மாணில் சேய்நாட் டதரிடை மலர்ந்த"—நற்றிணை 384,

வறட்சியான பாலை போன்ற நிலத்தில் காட்டில் வாழும் புருக்களைச் சாம்பல்புரு, தவிட்டுப்புரு வென்று இருவகை யாகக் கூறுவர். அந்த இருவகைப் புருவிலும் மிகவும் வறட்சியான அரைப் பாலைவனமான இடங்களில் காணப் படுவது தவிட்டுப் புருவாகும். இந்தப் புருவைப் பற்றியே சங்க நூல்களில் செய்திகள் வந்துள்ளன. இதுபோன்ற சாம்பல் புருவையும் தமிழ்நாட்டில் காணலாம். ஆனால் இந்தப் புருவைப் பற்றிய செய்திகள் சங்க நூல்களில் மிகுதியாகக் காணவில்லை. தவிட்டுப் புருவிற்குக் கழுத்தின் இரு புறத்திலும் பக்கவாட்டத்தில் கருமையும் செம்மையும் கலந்த பொறிகளும் புள்ளிகளும் வளையம் போன்று உள்ளன. இதைத் தெளிவாக, சங்கப் பாடல்கள் கூறி யுள்ளன. 'பொறித்த போலும் புள்ளியெருத்து' என்றும் 'பொறிமயி ரெருத்திற் குறுநடைப் பேடை' என்றும் கூறி

யிருப்பதால் கழுத்தில் பொறியும் புள்ளியும் இருந்த தவிட்டுப் புறுவை நன்கு தெரிந்தே கூறியுள்ளனரென்பது தெளிவாகின்றது. இதையே நுண் பொறிப்புறவு, பொறி வரிப் புறவு என்றும் அழைத்தனர்.

இந்தத் தவிட்டுப்புறு கள்ளிச் செடியில் காணப்பட்டதாகச் சங்க நூல்கள் கூறுவதும் தெளிவான செய்தியாகும். பொரிந்த காலையுடைய கள்ளியின் கவட்டிலிருந்து கூவினதாகக் குறுந்தொகை கூறியுள்ளது. கள்ளியின் காய் நொடிவிட்டு வெடிக்கும் என்றும் அத்தகைய கள்ளியில் இருந்து கூவும் என்றும் குறுந்தொகை, நற்றிணை, பெருங்கதை ஆகிய நூல்கள் கூறுவதைக் கவனிக்கவேண்டும். பறவை நூலாரும் இந்தப் புறு கள்ளியில் காணப்படும், கள்ளியில் கூடுகட்டும் என்று கூறியுள்ளனர். (The Indian little brown dove affects stony and bush country. Nest, a ridiculously flimsy and sketchy platform of twigs and grass stems placed low down in a Euphorbia or other open bush) நற்றிணை 384 ஆம் பாட்டு கள்ளியில் கூடுகட்டிய புறுவைப் பற்றித் தெளிவாகக் கூறியுள்ளதைக் காணலாம். களர் நிலத்தில் ஓங்கி வளர்ந்த கவை முள்ளுடைய கள்ளியில் சுள்ளிகள் கொண்டு கட்டிய கூட்டில் முட்டையிட்டு இளைத்துப் போன பெட்டைப் புறுவிற்கு மன்னர்கள் அழித்துப் பாழான இடத்தில் கிடைத்த உகுந்த நெல்லைக் கொண்டுவந்து ஊட்டும் சேவலைப்பற்றி நற்றிணைப் பாட்டு கூறுவது தெளிவான அரிய செய்தியாகும். கள்ளியில் காணப்படுவதையும் கள்ளியில் கூடு கட்டுவதையும் நன்கு கண்டறிந்த அனுபவத்தால் இப்போதும் நாட்டுமக்கள் இந்தப் புறுவைக் கள்ளிப்புறு என்றும் அழைக்கின்றனர். இந்தப் புறு வாழுமிடத்தையும் காணப்படும் சூழலையும் பற்றிச் சங்கப் புலவர்கள் கூறியது பறவை நூலார் கூறியிருப்பதுடன் மிகவும் ஒத்துவருவதைக் காணலாம். வரிமரல் வாடும் குறும்பொறை நிறைந்த சுரம், பாம்பின் உரித்த தோல்போலச் சூடான ஆவி அலை பறக்கும் நிலம் (அகம். 57), மழைமறந்த கடம் (குறுந்

தொகை 174), வெயில் காயும் நீளிடை (நற்றிணை 314), வெந்துகள் இயவு (நற்றிணை 66), கள்ளிக்களரி (நற்றிணை 384) ஆகிய இடங்களில் சூழலில் இப் புரு கூறப்பட்டிருப்பதைக் காணலாம். பறவை நூலாரும் இந்தப் புரு வறட்சியான பாதிப் பாலையான நிலத்தில் (Semi-desert facies) காணப்படும் என்று கூறியுள்ளனர். பாறைகள் நிறைந்த குறுங்காடுகளில் காணப்படுமென்பர். சங்க நூல்களில் வறட்சியான நீரற்ற நிலத்தில் வளரும் கள்ளி மரத்திலும் நெல்லி மரத்திலும் உகாய் மரத்திலும் இந்தப் புருவைக் கூறியிருப்பது கவனிக்கத் தக்கதாகும். இவ்வளவு நுட்பமாக இந்தப் புரு காணப்பட்ட மரங்களையும் கூறியது போற்றுதற்குரியதாகும்.

தவிட்டுப் புரு நெல்லைத் தின்பதைச் சங்கப் புலவர் கூறியுள்ளனர். உகாய் மரத்தின் மிளகு பெய்ததுபோன்ற காரமான சுவையுடைய காயைக் கொத்தி உண்டதாக



புன்புரு

நற்றிணை (66) கூறுவதும் அரிய செய்தியாகும். இச் செய்தி உண்மையான செய்தியாகவே இருக்கும்.

> "மிளகுபெய் தனைய சுவைய புன்காய்
> உலறுதலை உகாஅய்ச் சிதர்சிதர்த் துண்ட
> புலம்புகொள் நெடுஞ்சினை யேறி நினைந்துதன்
> பொறிகிளர் எருத்தம் வெறிபட மறுகிப்
> புன்புரு உயவும் வெந்துகள் இயவின்." — நற்றிணை 66

களரில் விளையும் உகாய் மரத்தின் (Mustard tree) காயும் கனியும் மிகவும் காரமான சுவையுடையதென்று (Pungent taste) செடிநூலார் கூறுவர். உகாய் மரத்தின் கனியைக் கொண்டலாத்தி முதலிய பறவைகள் தின்று விதைகளைப் பரப்பும் என்று செடிநூலார் கூறுவர். ஆதலின் சங்கப் புலவர்கள் கண்டு தெரிந்தே தவிட்டுப்புறுவும் உகாய் மரத்தின் காயைத் தின்பதாகக் கூறினர். நற்றிணை 66ஆம் பாட்டிலேயே இன்னொரு முக்கியமான செய்தியும் இப் புறுவைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. பெடையை நினைந்து 'பொறிகிளர் எருத்தம் வெறிபட மறுகிப் புன்புறு உயவும்' என்று கூறியதே அச் செய்தியாகும். இந்த வரிக்கும் பழைய மரபுப்படி உரையெழுதின பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் இந்தப் புறுவைப்பற்றிய ஓர் அரிய செய்தியைச் சொல்லியுள்ளார். 'வரைகள் விளங்கிய தன்பிடரி சிலிர்த்துத் தின்ற வெறுப்பினால் மறுக்கமுற்று வருந்தாநிற்கும்' என்று உரை கூறியுள்ளார். தவிட்டுப் புறு இணைசேர விழையுங்காலத்துப் பேடையை நோக்கிச் சென்று கழுத்துத் தூவிகளைச் சிலிர்த்துத் தலையைத் தாழ்த்தியும் தூக்கியும் சுற்றிவருமென்று பறவை நூலார் கூறுவர். (Male has the characteristic bowing courtship-head lowered, throat inflated, rump arched and tail depressed bobbing and cooing) 'எருத்தம் வெறிபட' என்பதற்குக் கூறிய பழைய உரை பறவை நூலார் கூறியதோடு ஒத்துள்ளது. புதிய உரை எழுதியவர்கள் வெறிபட என்பதற்கு உகாய்க்காயின் மணம் வெளிப்பட என்று பொருத்தமின்றிக் கூறினர். மற்றும் உகாய்க்காயைத் தின்றதால் எருத்தம் வெறிபட மறுகி உயவினதாகக் கூறியதும் தவறு. நற்றிணையில் பேடையை நினைந்து இச் செயல் புரிந்ததாகக் கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். ஆதலின் புறுச்சேவலின் இச் செயல் இணை சேர அழைக்கும் விளையாட்டே என்பதை உணரவேண்டும். பெருங்கதையிலும் நுண்பொறிச்சேவல் வெண்சிறைப் பெடையோடு விளையாட்டு விரும்பியதாகக் கூறியதைக் காணலாம். மறுகும், உயவும் என்று கூறியது திரும்பித்

திரும்பிப் பேடையைச் சுற்றி வருவது, வருந்துவதுபோல கூவுவது ஆகியவற்றைக் குறிப்பிடுவதாகும். இத்தகைய நுட்பமான செய்தியைக்கூட கண்டு கூறிய சங்கப்புலவர் களின் திறமையைப் போற்றுமலிருக்கமுடியாது. இந்த நற்றிணைப் பாடலில் செடிநூற், பறவை நூற் செய்திகள் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. சங்கநூல்கள் இப் புருவைச் 'சிறுபுன்புறவு' (திணைமொழி 15) 'சிறுபுன்பெடை (அகம். 271) என்றழைப்பதுபோலவே ஆங்கிலத்தில் இதன் பெயர் 'The little Brown Dove' என்றுள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

## 4. சாம்பல்புரு :

தவிட்டுப் புருப்போன்ற சாம்பல் புருவையும் சங்க நூல்கள் கூறியதாகக் கருதலாம். இதை வெள்ளைப்புரு வென்று சில இடங்களில் அழைப்பர். நற்றிணையில் வெண்புறப்புறவு என்று இதை அழைத்ததாகக் கருதலாம். கள்ளிக்காட்டிலும் வேலமரக்காட்டிலும் கண்ட இவ்விரு வகைப் புருக்களையும் (கானப்புரு' (நற்றிணை 189) என்றும் 'புன்புரு' என்றும் அழைத்தனர். சாம்பல் புரு வேலமரத்தில் அடிக்கடி காணப்படுமென்று பறவை நூலார் கூறுவர். (The Indlan Ring Dove affects open, cultivated, essentially dry deciduous country (even semi-desert) with groves or a scattering of Babool (Acacia) and Butea and similar trees, commonly sharing those facies with Little Brown Dove) சாம்பல்புருவும் தவிட்டுப் புருவும் வேலமரச் சூழலில் காணப்படும் என்று பறவை நூலார் கூறியதைச் சங்கப் புலவர்களும் கூறியிருப்பது வியப்பைத் தருகின்றது.

> "பொறித்த போலும் புள்ளி யெருத்திற்
> புன்புறப் புறவின் கணசிரை யலற
> வலந்தலை வேலத் துலவை யஞ்சினைச்
> சிலம்பு கோலிய வலங்கற் போர்வையில்"
>
> —பதிற்றுப்பத்து 4 : 32.

> "கொலைவல் வேட்டுவன் வலைபரிந்து போகிய
> கானப் புறவின் சேவல் வாய்நூற்
> சிலம்பி அஞ்சினை வெரூஉ
> மலங்கல் உலவையங் காடிறந் தோரே"
>
> —நற்றிணை 189.

வேலமரத்தில் சிலம்பி வலைந்த வலையைக்கண்டு வேடன் போட்ட வலையென்று மயங்கித் தவிட்டுப் புருக்கூட்டம் உட்காரப் பயந்ததாகப் பதிற்றுப்பத்து கூறியுள்ளது. தவிட்டுப்புரு வேலமரத்தில் வழக்கமாகத் தங்கும் என்பதையே பதிற்றுப்பத்து வரிகள் (4 : 32) குறிப்பாகக் காட்டியுள்ளன. நற்றிணையும் (189) இது போன்ற செய்தியைக் கூறியுள்ளது. ஆதலின் எவ்வளவு நுணுக்கமாகப் புருக்கள் வாழும் சூழலைக் கூடச் சங்கப் புலவர்கள் கண்டு கூறியுள்ளனர் என்பது விளங்குகின்றது. இந்தப் புருக்கள் சிலசமயங்களில் கூட்டமாகக் காணப்படும் என்று பறவை நூலார் கூறுவர். 'கணநிரை' என்று பதிற்றுப்பத்துக் கூறுவதைக் காணலாம். ஆனால் பொதுவாக இப்புருக்கள் தன் துணையோடு காணப்படுமென்பர். சங்க நூல்களும் துணையைக் கூப்பிடும் ஆண் புருவைப்பற்றியே பாடல்களில் கூறியுள்ளன. தனியாக இருந்து பேடையை அழைக்கும் புருச் சேவலைக் குறிப்பிட்டுள்ளன. புருவிற்குச் சிவந்த கால் இருப்பதையும் அடிக்கடி குறிப்பிட்டுள்ளனர். மணல் நிலத்தில் பரலைத் தேடி உண்பதாகவும் அகநானூறு கூறுகின்றது. தானியங்களைத் தேடி உண்ணும்போது சிறுகற்களையும் விழுங்குமென்று பறவை நூலார் கூறுவர். கல்லைத் தின்னும் புருவைத் 'தாதுணம் புரு' என்று கலித்தொகையும் பட்டினப்பாலையும் அழைக்கின்றன.

புருவின் முட்டையைப்பற்றியும் சங்கப் புலவர்கள் கூறியுள்ளனர்.

> "புறவுக்கரு வன்ன புன்புல வரகின்
> பரற்பெய் புன்கம் தேனொடு மயக்கி"

புருவின் முட்டை வெண்மையாக இருக்கும். இந்த நிறத்தைத் தீற்றின வரகரிசியின் வெண்மைக்கு ஒப்பிட்டுக் கூறியுள்ளனர். பெரும்பாணாற்றுப் படையில் (192-193) வரகின் சோறு வெள்ளையான பூளைப் பூ போன்று இருந்த தாகக் கூறியுள்ளதைக் காணலாம்.

சங்க நூல்களில் மூன்றுவகைப் புருக்களைத் தெளி வாகக் கூறியுள்ளனர் என்று கருதலாம். அவை மாடப் புரு, மணிப்புரு, தவிட்டுப்புரு வெனப்படும் கள்ளிப் புரு, என்று தெரிந்துக் கொள்ளலாம். அவற்றுடன் சாம்பல் புருவையும் சேர்த்துக் கொள்ளலாம். மாடப்புருவை ஆங்கி லத்தில் 'Blue Rock pigeon' என்றும் பறவை நூலில் 'Columba livia' என்றும் கூறுவர். மணிப்புருவை 'The Spotted Dove' என்றும் பறவைநூலில் 'Streptopelia Chinensis' என்றும் கூறுவர். பொறி வரிப்புரு என்று சங்க நூல்களில் அழைக்கப்பட்ட கள்ளிப்புருவை 'The Little Brown Dove' என்றும் பறவை நூலில் 'Streptopelia Senegalensis' என்றும் கூறுவர். சாம்பல் புருவை ஆங்கி லத்தில் 'The Ring Dove' என்றும் பறவை நூலில் 'Streptopelia decaocto' என்றும் கூறுவர். இதைத் தவிரத் தமிழ்நாட்டில் வேறு புருவகைகளும் உள்ளன. பச்சைப் புருவில் இரண்டு மூன்று வகைகள் உள்ளன. அவற்றைப் பச்சைப்புரு, சகடம்புரு, பாதுகைப்புரு என்று நாட்டு மக்கள் அழைக்கின்றனர். அவற்றைப் பற்றிய செய்திகள் சங்கநூல்களில் இல்லை; ஆனால், இந்தப் பச்சை முதலிய அழகிய வர்ணப் புருக்களில் மிக அரிதான ஒருவகைப் புரு சங்க நூல்களில் போகில் என்றழைக்கப்படுகின்றது. இதைப்பற்றித் தனியே விளக்கம் கூறப்படும்.

———

## கஅ. போகில்
## (IMPERIAL GREEN PIGEON)

சங்க இலக்கியத்தில் போகில் என்றொரு பறவையைப் பற்றி மூன்று பாடல்களில் செய்திகள் காணப்படுகின்றன. போகில் என்ற சொற்கு ஐங்குறு நூற்று உரையாசிரியர் பறவையென்று பொருள் கொண்டார். திவாகரம், பிங்கலந்தை முதலிய நிகண்டுகளிலும் போகில் என்ற சொல் பறவையின் பொதுப் பெயராகக் காணப்படுகின்றது.



போகில்

ஆனால், போகில் என்ற சொல் பொதுவே பறவையினத்தைக் குறிப்பதாகக் கொள்வது பொருத்தமன்று. இச் சொல் ஒரு குறிப்பிட்ட பறவையைப் பற்றியே வழங்கியதாகத் தெரிகின்றது. நிகண்டுகளில் காணப்பட்ட பொருளின் அடிப்படையில் பிற்கால உரையாசிரியர்களும் போகில் என்ற பெயர் பொதுவே பறவையினத்தைக் குறித்ததாகக் கொண்டனர். நிகண்டுகளை ஆராய்ந்து பார்த்தோர்க்கு அவற்றிலும் பிழைகளும் தடுமாற்றங்களும் காண முடியும். ஒரு பொருட் பல பெயராகப் பல சொற்கள் காணப்படினும் அவற்றில் பல சிறப்புப் பெயராகக் காணப்படுகின்றன. சங்க இலக்கியத்தில் மரஞ் செடி கொடிகள், விலங்குகள், பறவைகள்,

ஏனைய உயிரினங்களின் பெயர்கள் எவற்றைக் குறிக்கும் என்று உணராதபோது இஃது ஒரு மரம், இஃது ஒரு விலங்கு என்று தற்காலம் விளக்கிச் செல்வது போன்று, தெளிவாக விளங்காதவழிப் பொதுப்பெயராகக் கொள்வது நிகண்டாசிரியர்கள் வழக்கம் என்பதை நுண்ணிதாக ஆராய்ந்தோர்க்கு விளங்கும். சங்க காலத்தில் புலவர்களுக்கு இருந்த சுற்றுச்சார்பு, சூழல் பற்றிய நுண்ணிய அறிவு பிற்காலத்திலும் தற்காலத்திலும் காணப்படவில்லை.

போகில் என்பது எந்தப் பறவையைக் குறிக்குமென்று ஆராய்வோம்.

*''புதுக்கலத் தன்ன கனிய வாலம்*
*போகில்தனைத் தடுக்கும் வேனி லருஞ்சுரம்''*
*—ஐங்குறுநூறு, 303.*

*''வேனி லரையத் திலையொலி வெரீஇப்*
*போகில்புகா வுண்ணாது பிறிதுபுலம் படரும்*
*வெம்பலை யருஞ்சுர நலியா'' —ஐங்குறுநூறு, 325.*

*''அலங்கல் வான்கழை உதிர்நெல் நோக்கிக்*
*கலைபிணை விளிக்குங் கானத் தாங்கண்*
*கல்சேர்பு இருந்த கதுவாய்க் குரம்பைத்*
*தாழிமுதற் கலித்த கோழிலைப் பருத்திப்*
*பொதிவயிற்று இளங்காய் பேடை ஊட்டிப்*
*போகில் பிளந்திட்ட பொங்கல் வெண்காழ்*
*நல்கூர் பெண்டிர் அல்குற் கூட்டும்'' —அகம், 129.*

போகில் அரச மரத்தில் உணவு கொள்ள வந்து அரச மரத்தின் இலையொலி கேட்டுப் பயந்து வேறு இடங்களுக்குச் செல்லும் என்று ஐங்குறுநூறு (325) கூறுவதைக் கவனிக்கவும். புதிய பானை போன்று உருண்டு திரண்ட சிவப்பு நிறமான ஆலம்பழம் பழுத்து, போகில்தனைத் தடுக்கும் வேனிலின் அரிய சுரத்தைப் பற்றி வேறொரு ஐங்குறுநூற்றுப் பாடல் சொல்வதையும் கவனிக்க வேண்டும். ஆலங் கனியையும் அரசங் கனியையும் விரும்பி

உண்ணும் பறவைகளில் பச்சைப் புறுவினம் மிக முக்கிய மானது எனப் பறவை நூலார் கூறுவர். ஆலமர இன மான மரங்களின் (Figs) பழங்களை விரும்பி வெகு தொலைவு பறந்து கூட்டமாகச் செல்லுமெனக் கூறுவர். மலையாளத் தில் பேரால், அரையால், அத்தி, இத்தி என்று ஆலமர இனமான மரங்களை அழைப்பர். பேரால் என்பது ஆல மரம். அரையால் என்பது ஐங்குறு நூற்றில் அரையம் எனவும், தொல்காப்பியத்தில் அரை எனவும் அழைக்கப் படும் அரச மரமாகும். அரைய மரத்தை அரச மரமென்று அழைத்து இச் சொல் இராஜதருவென்ற வடமொழிவழி வந்தது என்று சொன்னால் வியப்படைவதற்கில்லை! ஆனால் ஐங்குறுநூற்றுச் சொல் மலையாளத்து மக்கள் வழக்கில் இன்றும் பாதுகாக்கப்படுவது குறிப்பிடத்தக்கதாகும். இத்தகைய சில சொற்களைக் காட்டித் தமிழ்மொழி மலை யாளத்திலிருந்து பிறந்தது என்று கூறிய அறிஞர்களும் மலையாள நாட்டில் உள்ளனர்! அரச மரத்தின் இலையும் காம்பும் சேர்ந்துள்ள முறை இலை நான்கு பக்கமும் திரும்பக்கூடிய வாய்ப்பைத் தருகின்றது. அதனால் காற் றடிக்கும்போது அரச மரத்திலைகள் மிக்க இரைச்சலை உண்டு பண்ணும். இதை நேரில் கண்டு கேட்டவர் ஐங்குறு நூற்றில் கூறப்பட்டுள்ள இச் செய்தியைப் போற்றுவர். பழுத்த ஆலமரம் போகில்தனைத் தடுத்து நிறுத்துகிற தென்று கூறியுள்ளதும் அரிய செய்தியாகும். பழுத்த அரச மரம் போகில்தனைத் தடுத்து நிறுத்தியும், அதன் இலைகள் இரைச்சலிட்டுப் போகிலதனை விரட்டுவதையும் கூறியுள்ள நயம் போற்றுதற்குரியது. போகில் போன்றே பிற பறவைகளும் ஆலங்கனியை விரும்பி ஒரு நாளன்றிப் பலநாள் தங்கி உண்பதையும் ஒரு புறப்பாட்டுத் தெளி வாகக் கூறியுள்ளது:

*"கடவு ளாலத்துத் தடவுச்சினைப் பல்பழம்*
*நெருந லுண்டன மென்னாது பின்னுஞ்*
*செலவா னவே கலிகொள் புள்ளினம்*
*அனையர் வாழியோ விரவல ரவரைப்."* —புறம், 199.

இதே போன்ற பச்சைப்புருக்களினங்கள் கூட்டம் கூட்டமாக உணவு தேடிச் செல்லும்போது பழுத்த ஆல மரத்தையோ அதனினமான மரங்களையோ கண்டால் இறங்கித் தங்கிச் சில நாள்கள் பழங்களை உண்ணும். பின்னர் வேறு இடங்களில் காணப்படும் பழுத்த மரங்களைத் தேடிப் பறந்து செல்லும். இதே செய்தியைத்தான் ஐங்குறு நூற்று இரு பாடல்களும் குறிப்பிடுகின்றன. இதை உறுதியாக்கப் பிறமொழிகளில் இந்தப் பச்சைப் புறுவைக் குறிக்கும் பெயர்கள் துணை புரிகின்றன. மலையாளத்தில் ஒருவகைப் பச்சைப் புறுவை (Imperial green pigeon) 'போகனு', 'போனு', 'போகினு' என அழைக்கின்றனர். இந்தப் பெயரொற்றுமையை முதலில் மலையாளக் காடுகளில் வேட்டையாடப் போனபோது கண்டுகொண்டேன். பின்னர்ப் பேராசிரியர் எமெனோவின் (Emeneu திராவிட மொழிகளின் வேர்ச்சொல்லகராதியிலும் இதைத் தெரிந்து கொண்டேன். பல பழைய திராவிட மொழிகளிலும் ஒரே பெயரொப்புமையுடைய சொற்களாலேயே இப் பறவை அழைக்கப்படுகின்றது. கொலாமி மொழியில் 'போல்க்' (polg), பார்ஜி மொழியில் 'போனல்' (ponal), குருக் மொழியில் 'போகா' (pokha), மால்ட்டோ மொழியில் 'போகெ' என்றும் வழங்குவதைக் காணும்போது மிக வியப்புக்குரிய உண்மை வெளியாகின்றது. சங்க நூல்கள் கூறும் போகில் என்ற பெயர் பறவைகளுக்குப் பொதுப் பெயரன்று, தனித்ததொரு புறுவினப் பெயரே என்பதில் சிறிதும் ஐயமில்லை. பல்கலைக்கழக அகராதியில் இதுவே 'போதப்புறு' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஓரிடத்தில் நில்லாது போய்க்கொண்டே இருப்பதைக் குறித்தே 'போகில்' என்ற பெயரால் அழைக்கப்பட்டது. கன்னட மொழியில் 'போகா', 'போக்கன்' என்றால் ஊர்சுற்றி, தேச சஞ்சாரி என்று பொருள். இந்தப் புறு பல கி. மீட்டர் தூரம் மரத்திற்கு மரம் சென்றுகொண்டே யிருப்பதால் போகில் என்ற பெயர் பெற்றது. தொல்காப்பியத்தில் போகில் என்ற சொல் உரியியலில் கூறப்பட்டதாகும்.

"வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
நேர்பும் நெடுமையுஞ் செய்யும் பொருள" —311.

என்று வரும் சூத்திரத்தில் போகல் என்பது நெடுமை என்ற பொருளில் வரும் என்று கூறப்பட்டுள்ளதைக் கூர்ந்து கவனிக்கவேண்டும். நெடுமையாகப் போகும் தன்மையுடைய பறவையைப் போகில் என்று பெயர் கொடுத்தது மிகவும் பொருத்தமேயாகும். திராவிட மொழிகளில் 'போகு' என்ற வேர்ச்சொல் அடிப்படையாக (Imperial pigeon) என்ற பறவையின் பெயர் இருப்பதால் போகில் என்ற பெயர் ஒருவகைப் பச்சைப் புறுவைக் குறிப்பிட்ட பெயர் என்பது தெளிவாகின்றது.

இப்பறவையைப்பற்றி அகநானூற்றுப் பாடலிலும் (129) ஒரு செய்தி வருகின்றது. காட்டில் மலையோரத்தில் நன்றாகச் செழிப்பாக வளர்ந்த பருத்திச் செடியின் காயைப் பிளந்து போகில் உண்டு போட்ட விதைகளை நலிவுற்ற பெண்கள் கூட்டியெடுப்பர் என்று சொல்லியிருப்பதைக் காணலாம். தற்காலம் பச்சைப் புரு (Imperial pigeon) என்றழைக்கப்படும் புரு முத்துக் கொட்டை மரத்தின் காய்களைப் பிளந்து தின்னும் என்று கூறுவர். அதன் இனமான போகில் (Imperial green pigeon) புருக்களினத்தில் மிகப் பெரியது மிக அழகானது. மிக விரைவாக வானத்தில் பறக்கக் கூடியது. பச்சையில் பல நிறங் கலந்து காணப்படும். ஆனால், மிகவும் கூச்சமுடையன. அதனால்தான் ஐங்குறுநூற்றிலும் அரசமரத்திலையொலிக்குப் பயந்து ஓடுவதாகக் கூறப்பட்டுள்ளது. இவை இரட்டையாக ஆணும் பெண்ணுமாகக் காணப்பட்டாலும் ஆலமரங்கள் பழுக்கும் காலத்தில் கூட்டம் கூட்டமாகச் செல்லும். மற்றைய பச்சைப் புருக்களுடனும் மைனாக்களுடனும் மரங்களில் பழங்களை உண்ணும். இதன் இறைச்சியை வேட்டையாளர்கள் மிகவும் சுவையுடையதாகக் கருதுவர். இவை காடுகளிலும் (காடுகளுள்ள வளர்ச்சியான இடங்களிலும் பெரும்பாலும் காணப்படும். விளை நிலங்களில் காண

முடியாது. இப் புருவை எளிதில் காண்பது மிகவுமரிது. இது பறக்கும்போது மிக விரைவாகவும், நேராகவும், மிகவுயரத்திலும் பறக்கும். (The flight in straight and powerful, performed with rather slow strokes of the wings and often at a considerable height when the bird in travelling to its feeding grounds).

பழுத்த மரங்களைத் தேடி மிக விரைவாக இவை இடத்துக்கிடம் போவதால் 'போகு' என்ற பொருளடிப் படையில் 'போகில்' என்று பெயர் பெற்றதாகத் தெரி கின்றது. நெடும்போக்கு என்ற சொற்றொடர்க்கு மீளும் நோக்கமில்லாத செலவு என்று பொருள் கொள்வர். நீண்ட செலவு என்பதே போக்கு என்ற சொற்பொருள். நீண்ட செலவுடைய இப் பறவையைப் போகில் என்றது மிகப் பொருத்தமே. போ, போகு என்ற சொற்களின் அடிப்படையாகவே திராவிட மொழியில் இதன் பெயர்கள் காணப்படுகின்றன. நீண்ட போக்குடைய, செலவுடைய போகிலை பழுத்த ஆலமரம் தடுத்ததாகக் கூறியது மிக மிகப் பொருத்தமே. மேற்கூறிய செய்திகளிலிருந்து போகில் பறவையினத்தைக் குறிப்பதாகக் கொள்வதைவிட அதை ஒருவகைக் குறிப்பிட்ட பச்சைப் புருவினத்தின் பெயராகவே கொள்ள வேண்டும் என்பது தெளிவு. இப் புருவைத் தமிழில் பெரிய புரு, மருத்தன் புரு என்று சில இடங்களில் வழங்குகின்றனர். ஆங்கிலத்தில் Imperial green pigeon என்றழைப்பர். பறவை நூலில் Ducula aenea pusilla என்றழைக்கப்படுகின்றது.

---

# கக. கானக்கோழி

## (GREY JUNGLE FOWL)

சங்க இலக்கியத்தில் கானக்கோழி, கானவாரணம் என்றழைக்கப்படும் காட்டுக்கோழியைப்பற்றிய செய்திகள் சில காணப்படுகின்றன. சங்க நூல்களில் கானக்கோழி யென்பது காட்டுக்கோழியைக் குறித்தே வழங்கிற்று.



கானக்கோழி

சிலப்பதிகாரத்தில் கானக்கோழி என்ற பெயர் தற்காலம் கானுங்கோழியென்று வழங்கும் நீர்க்கோழியினமான பறவைக்கும் பெயராக ஓர் இடத்தில் மட்டும் கூறப்பட்டுள்ளது. சங்க நூல்களில் காட்டியானையென்று கூறியது போலக் காட்டுக்கோழியைக் கானக்கோழியென்றழைத்தனர். சிலப்பதிகாரத்தில் நீர்க்கோழியினப்பறவைப் பெயராகக் கூறிய கானக்கோழியென்ற பெயரும் தற்காலம் நாட்டுமக்களிடையே வழங்கும் கானுங்கோழி யென்ற பெயரும் கானல் கோழியென்ற பெயரின் மறு உருவமாக இருக்க வேண்டும். இந்தக் கானுங்கோழி கம்பு போன்ற

பெயரில் சங்க நூல்களில் வழங்கியதென்பது ஏற்கெனவே விளக்கப்பட்டது. நந்திக்கலம்பகம் 93ஆம் பாட்டில் 'கனவு கண்டாய் நந்திமல்லைக் கானற்கடற் கம்புளே' என்று சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம். கடற்கரைக் கான லிற் காணப்பட்ட கம்புள் என்று கூறியதைக் கவனிக்க வேண்டும். கடற்கரைக் கழிகளில், கானல்களில் சம்பங் கோழியும் (கம்புள்), கானாங்கோழியும் (கானக்கோழி) காணப்படுமென்று பறவை நூலாரும் கூறுவர். இன்றும் இவற்றை இந்தக் கடற்கரைக் கானலின் சூழலில் கோடிக் கரையில் பார்க்கலாம். கானக்கோழி வேறு; கானாங் கோழி வேறு.

சங்க இலக்கியத்தில் வழங்கும் கானக்கோழி காடு களில் வாழும் பறவையாகும். இவை அடர்ந்த காடுகளிலும் குறுங்காடுகளிலும் காணப்படும். காடுகளிலேயே காணப் படுவதால் கானக்கோழி, கான வாரணம் என்றழைக்கப்பட் டது. வீட்டுக்கோழி, காட்டுக்கோழி, நீர்க்கோழி என்ற மூன்று கோழிப் பெயர்களையும் புறநானூறு கூறுகின்றது.

> "மனைக்கோழிப் பைம்பயிரினனே
> கானக்கோழிக் கவர்குரலொடு
> நீர்க்கோழிக் கூய்ப்பெயர்க் குந்து" —புறம் 395

இவற்று மனைக்கோழியானது காட்டுக்கோழி இனத் தில் ஒருவகையை வீட்டில் வளர்த்துப் பழக்கியதாகும். நீர்க்கோழி காட்டுக்கோழியோடு எந்தவகைத் தொடர்பும் உடையதன்று. முற்றிலும் வேறு இனமாகும்.

> "சிறுகிளி முரணிய பெருங்குரல் ஏனல்
> காவல் இனியென் றூளே சேவலொடு
> சிலம்பில் போகிய சிதர்கால் வாரணம்
> முதைச்சுவல் கிளைத்த பூழி மிகப்பல
> நன்பொன் இமைக்கும் நாடனொடு"
>
> —நற்றிணை - 389.

"வட்ட வரிய செம்பொறிச் சேவல்
ஏனல் காப்போ ருணர்த்திய கூஉம்
கானத் தோர்நின் றெவ்வர் நீயே —புறம் 28

உருக்குறு நறுநெய் பால்விதிர்த் தன்ன
அரிக்குரல் மிடற்ற அந்நுண் பல்பொறிக்
காமரு தகைய கான வாரணம்
பெயனீர் போகிய வியனெடும் புறவிற்
புலரா வீர்மணன் மலிரக் கெண்டி
நாளிரை கவர மாட்டித்
தன்பெடை நோக்கிய பெருந்தகு நிலையே"
—நற்றிணை - 21

"நரைமூ தாளர் நாயிடக் குழிந்த
வல்லி னல்லக நிறையப் பல்பொறிக்
கான வாரண மீனும்
காடாகி விளியு நாடுடை யோரே" —புறம் 52.

"கானக் கோழி கவர்குரற் சேவல்
ஒண்பொறி யெருத்திற் றண்சித ருறைப்பப்
புதனீர் வாரும் பூநாறு புறவிற்
சீறூ ரோளே மடந்தை வேறூர்"
—குறுந்தொகை - 242

"கானவர் மருதம் பாட வகவர்
நீனிற முல்லைப் பஃறிணை நுவலக்
கானக் கோழி கதிர்குத்த
மனைக்கோழி தினைக்கவர"
—பொருநாற்றுப்படை - 222

"மானதட் பெய்த வுணங்குதினை வல்சி
கானக் கோழியோ டிதல் கவர்ந் துண்டென"
—புறம் 320.

"பொறிகிளர் சேவல் வரிமரற் குத்த
நெறிதூ ரருஞ்சுர நாமுன்னி" —ஐந்திணை எழுபது-31

"வெங்கற் சாரல் வேய்விண் டுதிர்த்த
அங்கதிர் முத்த வணிமழைத் துளியெனக்

காட்டுச் கோழிச் சூட்டுதலைச் சேவல்
குத்தலானுது தத்துற்றுத் தளரவும்''
—பெருங்கதை - உஞ்சைக் காண்டம் 60 - 63

"பாவையுங் கிளியுந் தூவி யஞ்சிறைக்
கானக் கோழியும் நீனிற மஞ்ஞையும்''
—சிலம்பு - வேட்டுவவரி 33 - 34

"வேனல்வீற் றிருந்த வேய்கரி கானத்துக்
கான வாரணங் கதிர்வர வியம்ப''
—சிலம்பு - புறஞ்சேரியிறுத்த காதை-36-37

"பீலி மஞ்ஞையும் நாவியின் பிள்ளையும்
கானக் கோழியும் தேன்மொழிக் கிள்ளையும்''
—சிலம்பு - காட்சிக் காதை - 53 - 54

"நெறிகெழு வெண்மணல்மேல் நெய்யில் பால்விதிர்த்
தன்ன அந்நுண்
பொறிகெழு வாரணம் பேடையை மேய்விக்கும்
பூம்புறவே'
—இறையனார் - மேற்கோள்.

காட்டுக் கோழியைக் கானவாரணம் என்றும் சங்க நூல்கள் அழைக்கின்றன. பெருங்கதையில் தற்காலத்தில் நாட்டு மக்களிடை வழங்கும் பெயரான காட்டுக் கோழி வந்துள்ளது. காட்டுக்கோழி காடுகளிலும் மலைச் சிலம்பிலும் வாழ்வதைச் சங்கநூல்கள் கூறியுள்ளன.

மலையிலும் காடுகளிலும் அவை அருகில் உள்ள சிற்றூர்களில் பழகி வாழும் என்று பறவை நூலார் கூறுவர். குறத்தி மான்தோலில் உணக்கிய தினையைக் கானக் கோழி கவர்ந்துண்டதாகப் புறநானூறு கூறுவதைக் கவனிக்க வேண்டும். மனைக்கோழியின் கூப்பீட்டுக்குக் காட்டுக் கோழி தன்னுடைய கவர்த்த குரலால் கூவினதாகவும் புறநானூறு கூறியுள்ளது. காட்டுக்கோழி மூங்கில் காடுகளில் விரும்பி வாழும் என்று கூறுவர். பெருங்கதையிலும், சிலப்பதிகாரத்திலும் மூங்கிற் சாரலில் கானக்கோழி இருப்பதாகக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

இவை காடருகே வயல்களிலும் மேயும் என்பர். காட்டுக் கோழி பழங்கொல்லையில் மேய்தலை நற்றிணை கூறியுள்ளது. விடியற்காலையில் காட்டுக்கோழிச்சேவல் கூவும் என்று கூறுவர். விடியற்காலையில் தினைப்புனங்காப்போரை எழுப்பியதாக புறநானூறு கூறுகின்றதைக் காணலாம். கானக்கோழியின் நிறம் மிகத் தெளிவாகவும் அழகாகவும் வர்ணிக்கப் பட்டுள்ளது. காட்டுக்கோழிச் சேவலுக்கு வட்டமான, பளபளப்பான பொன் மஞ்சளான பொறிகள் கழுத்திலும், முதுகிலும் உண்டு என்று பறவை நூலார் கூறுவர். (Male white streaked grey neck hackles forming (a cape) upper back and mantle tipped or spangled with peculiar shiny, orange or golden yellow sealing-wax like spots and streaks) இதை அழகான உவமையால் சங்க நூல்கள் குறிப்பிட்டுள்ளன.

உருக்கின நெய்யைப் பாலில் தெளித்ததுபோல நுண்ணிய பல் பொறிகளையுடைய, அழகு நிறைந்த காட்டுக்கோழிச் சேவல் என்று நற்றிணை 21ஆம் பாடல் அழகாகக் கூறியுள்ளது. கானக் கோழியின் கழுத்தில் வெள்ளையும் கருப்பும் கலந்த கழுத்துத் தூவிகள் தானியக் கதிர் போலிருப்பதை 'வரிக்குரல் மிடறு' என்று நற்றிணை நுட்பமாக வர்ணித்துள்ளதைக் காணலாம். வரிகளும், பொறிகளும் உள்ளதையே பறவை நூலாரும் குறிப்பாகக் கூறியுள்ளனர்.

பாலில் நெய் தெளித்தாற் போன்று என்று கூறியது இதன் பொன்மஞ்சளான பொறிகளை ஒப்பிடவந்த மிக அழகிய உவமையாகும். இது பறவை நூலார் ஒப்பிட்ட மஞ்சள் அரக்கு உருகிவிழுந்த துளி என்பதைவிட மிகப் பொருத்தமானதாகும். புறநானூறு 28 ஆம் பாடல் 'வட்ட வரிய செம்பொறிச் சேவல்' என்று இதன் செம்மை கலந்த வட்டப் பொறிகளைத் தெளிவாகச் சுட்டிக் காட்டியுள்ளது. 'ஒண்பொறி எருத்து' உடையதென்றும், 'பொறிகிளர் சேவல்' என்றும், 'பல்பொறிக் கானவாரணம்' என்றும் கூறப்படுவதால் காட்டுக்கோழியின் சேவலை நன்கு கண்டு

வர்ணித்தது தெரிகின்றது. நெய் தெளித்தது போன்ற என்று வரும் சங்க நூல் உவமை இறையனுர் அகப்பொருள் உரை மேற்கோள் பாட்டிலும் கையாளப் பட்டிருப்பதைக் காணலாம். சேவலின் தலையில் சிவந்த கொண்டை யுள்ளதும் கூறப்பட்டுள்ளது. 'காட்டுக்கோழிச் சூட்டுதலைச் சேவல்' என்று பெருங்கதை கூறியுள்ளது.

சிலப்பதிகாரத்தில் வேட்டுவவரியிலும், புறஞ்சேரி யிறுத்த காதையிலும், காட்சிக் காதையிலும் கானக்கோழி மூன்று இடங்களில் கூறப்படுவதைக் காணலாம். இந்த இடங்களில் காட்டுக்கோழி யென்றே கானக்கோழியென்ற சொற்குப் பொருள் கொண்டுள்ளனர். புறஞ்சேரியிறுத்த காதையில் கதிரின் வரவு கூறினதாகக் கூறப்பட்டிருப் பதால் கானக்கோழியென்பது காட்டுக்கோழியின் சேவல் என்பதில் ஐயமில்லை. இங்குக் கானக்கோழி கானுங்கோழி யென்ற நீர்ப் பறவையாக இருக்கமுடியாது.

வேட்டுவவரியிலும் காட்சிக் காதையிலும் கொற்ற வைக்கும், சேரன் செங்குட்டுவனுக்கும் காணிக்கையாக வேடர்கள் கொடுக்கும் மயிலும் கிளியும் கூறப்பட்டிருப்ப தோடு கானக்கோழியும் கூறப்பட்டுள்ளது. வேடர்களின் காணிக்கையாக மருதநிலத்துக் கானுங்கோழியைக் கூறி யிருக்கமுடியாது. மயிலைப் போலக் காட்டுக்கோழியின் தூவியும் அழகிய தாகையால் 'தூவியஞ்சிறை கானக்கோழி' என்று சொல்லப்பட்டுள்ளது. ஆதலின் நாடுகாண் காதை யில் மருத நிலத்திற்குப் பொருத்தமாகக் கானக்கோழி யென்ற கானுங்கோழி கூறப்பட்டுள்ளதுபோல, வேட்டுவ வரியில் குறிஞ்சி நிலத்தில் கானக்கோழியென்ற காட்டுக் கோழி கூறப்பட்டுள்ளதைக் காணலாம். காட்டுக்கோழி யின் பெட்டை சேவலைப்போன்று அழகுடையதன்று. ஆதலின் காட்டுக்கோழியின் பெட்டை விளக்கப்படவில்லை. கானக்கோழியென்ற பெயரே அதன் சேவலைக் குறித்துச் சங்க நூல்களில் சேவ்லின் சிறப்பின் காரணமாக வழங்கு வதைக் காணலாம். காட்டுக்கோழி முட்டையிடுவதைப் புறநானூறு கூறியுள்ளது. சொக்கட்டான் விளையாடும்

முதியவர்கள் கல்லில் குழித்த குழியில் கானக்கோழி முட்டையிடும்படி நாடு அழிக்கப்பட்டுக் காடாகியதாகக் கூறியதைக் கவனிக்கலாம். நிலத்திலும் தரையிலும் மேலாக உள்ள குழியில் முட்டையிடுவது காட்டுக்கோழி யின் வழக்கம் என்று கூறுவர்.

இந்தியாவில் உள்ள காட்டுக்கோழிகளில் இருவகை உண்டு. சிவந்த நிறமுடையது வடநாட்டில் மிகுதியாகக் காணப்படும். தமிழ் நாட்டில் மிகுதியாகக் காணப்படுவது வெண்மையும் கருமையும் கலந்த பொறிகளையுடைய கோழி யாகும். இதையே சங்க நூல்கள் சொல்லியுள்ளன. இதை ஆங்கிலத்தில் 'Grey Jungle fowl' என்றும் பறவை நூலில் 'Gallus sonneratti' என்றும் கூறுவர். காட்டுக் கோழியென்ற பொருளில் இதன் பெயர் வடநாட்டு மொழி களிலும் கன்னடம் மலையாளத்திலும் வழங்கும். தெலுங்கு மொழியில் 'தெள்ள அடவிக் கோடி' [வெள்ளைக் காட்டுக் கோழி] என்று வழங்குகின்றது. காட்டுக்கோழியை வீட்டில் வளர்த்துப் பழக்கமுடியாது என்ற பொருளில் 'காட்டுக் கோழியைப் போற்றுவார் உண்டா?' என்ற பழ மொழி மலையாளத்தில் வழங்குகின்றது. வீடுகளில் நாம் வளர்க்கும் மனைக்கோழி வடநாட்டில் மிகுதியாகக் காணப் படும் சிவப்பு நிறக்கோழியிலிருந்து தோன்றியது என்பர். இதில் தென்னாட்டுக் காட்டுக்கோழியின் கலப்பும் சிறிது உண்டு என்றும் கருதலாம்.

# உ௦. இதல்

## (RED SPURFOWL)

காட்டுக் கோழியைப்போல் உருவுடையதும், கவுதாரியைப்போல் அளவுடையதுமான ஒரு பறவை குறுங் காடுகளிலும் கற்பாங்கான குறுங்குன்றுகளிலும் காணப்



இதல்

படுகின்றது. தென்னிந்தியாவில் ஊர்களின் அருகிலுள்ள காட்டுப்புதர்களிலும் காணப்படுகிறது என்று பறவை நூலார் கூறுவர். இதைச் சருகுக்கோழி, வரகுக்கோழி என்று இக்காலத்தில் நாட்டுமக்கள் அழைக்கின்றனர். சின்னக் காட்டுக்கோழி என்று ஈழ நாட்டில் அழைப்பர். இதன் உடல் செம்மை கலந்த பழுப்பு நிறமாக இருக்கும். வெள்ளையும் சிவப்பும் கலந்த வளைந்த வரிகள் உடலின் மேல் காணப்படும். இதற்குக் கண்களைச்சுற்றி வட்டமான சிவந்த தோல்பகுதி உண்டு. அந்தச் சிவந்த பகுதியில் தூவிகள் இல்லை. இதைச் சங்கப்புலவர்கள் நன்கு உணர்ந்தே 'மணிக்கண்' என்று கூறினர். மணிபோலச்

சிவந்த கண் என்று கூறினது பொருத்தமே யாகும். சங்க நூல்களில் இந்த இனக்கோழியை இதல் என்ற பெயரால் அழைத்தனர். இப்பெயர் வழக்கு பின்னர் வழக்கில் வீழ்ந்துவிட்டது.

> *"செம்பரல் முரம்பில் சிதர்ந்த பூழி*
> *நல் நாள் வேங்கைவீ நன்களம் வரிப்பக்*
> *கார்தலை மணந்த பைம்புதல் புறவின்*
> ......................................
> ......................................
> *இதல்முள் ஒப்பின் முகைமுதிர் வெட்சி*
> *கொல்புனக் குருந்தொடு கல்லறைத் தாஅம்"*
>
> —அகம் 133.

> *"பயிலரிற் கிடந்த வேட்டு விளி வெரீஇ*
> *வரிப்புற வீதலின் மணிக்கட் பேடை*
> *நுண்பொறி அணிந்த எருத்திற் கூர்முட்*
> *செங்காற் சேவற் பயிரும் ஆங்கண்"* —அகம் 387.

> *"புதன்மிசைத் தளவின் இதன்முட் செந்நனை*
> *நெருங்கு குலைப் பிடவமொடு ஒருங்குபிணி அவிழக்"*
>
> —அகம் 23.

> *"இல்வழங் காமையிற் கல்லென வொலித்து*
> *மானதட் பெய்த வுணங்குதினை வல்சி*
> *கானக் கோழியோ டிதல்கவர்ந் துண்டென."*
>
> —புறம் 320.

சங்க நூல்களில் 'பைம்புதல் புறவில்', 'பயில்அரிலில்' இதல் இருந்ததாகக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். பறவை நூலாரும் புதரிலும், செடிகொடி அடர்ந்த குறுங்காடுகளிலும் இப் பறவை காணப்படுவதைக் கூறியுள்ளனர். குறிஞ்சி நிலத்தில் இருந்த வீட்டின் முற்றத்தில் காயப் போட்ட தினையைக் கானக்கோழியோடு இதல் கவர்ந்துண்டதாகப் புறநானூறு கூறுவதைக் காணலாம். இதலுக்குக் காலின் பின் விரல்களுக்குமேல் கூரிய முட்கள்

இருக்கின்றன. ஆண் பறவைக்கு இரண்டு முதல் நான்கு வரை முட்கள் காணப்படும். இந்த முட்களை (Spurs) குறிப்பாகச் சங்க நூல்கள் கூறியுள்ளன. இந்த முட்கள் தளவின் சிவந்த அரும்புபோல இருப்பதாக மிக அழகாகப் பொருத்தமாகக் கூறியுள்ளதைக் காணலாம். இந்த முட்கள் கூர்மையானவை. 'கூர்முள் செங்கால் சேவல்' என்று அகநானூறு கூறுவதைக் கவனிக்க வேண்டும். 'இதல் முள்' என்று சங்க நூல்கள் கூறுவதுபோலவே முள்ளைக் குறித்தே இதன் பெயர் 'முள்ளன் கோழி' என்று மலையாளத்தில் இன்றும் வழங்குகின்றது. இந்தப் பறவையின் காலின் முள் சங்க நூல்களில் கூறப்பட்டதி லிருந்து இது 'இதல்' எனும் பறவை என்று கண்டு கொள்ள முடிகின்றது. 'மணிக்கண்பேடை' என்று இதனுடைய கண் குறிப்பிடப்பட்டதிலிருந்தும், இந்தப் பறவையைக் கண்டுகொள்ள முடிகின்றது. 'வரிப்புறமும்' (Upper parts with black and rufous vermicu lation) 'நுண்பொறி அணிந்த எருத்தும்' இதற்கு இருப்பதாக அகநானூறு கூறுவதாலும் இதன் உடல்நிறம் குறிப்பிடப் பட்டுள்ளது. சங்க நூல்களில் காணப்படும் இந்த வர்ணனைகள் 'இதல்' என்ற பறவை எது என்று கண்டு கொள்ள உதவுகின்றன.

சங்க நூல்களில் இதல் என்று வழங்கிய பறவையைப் பிற்கால உரையாசிரியர்கள் சரிவர உணராததால் இதைக் கவுதாரி என்று கருதிப் பொருள் கூறினர். கவுதாரிக்கும் காலில் முள் உள்ளதால் மயங்கினர் என்று தெரிகின்றது. நிகண்டிலும் இந்த மயக்கப் பொருளைக் காண்கிறோம். ஆனால், கவுதாரி வேறு; இதல் வேறு. இதல் என்ற பெயர் வழக்கு மறைந்துபோகவே இந்தப் பொருள் மயக்கம் தோன்றிற்று என்று கருதலாம். தற்போது இந்தப் பறவையைச் சருகுக்கோழி என்றழைக்கின்றனர். சருகுகளில் அரித்துக்கொண்டு காணப்பட்டதால் இந்தப் பெயர் தந்தனர் என்று கருதலாம். மற்றும் வடார்க்காடு மாவட்டத்தில் சுண்டால்கோழி என்றும் அழைக்கின்றனர்.

இதனில் ஒருவகைக் கோழிக்குப் பல வண்ணங்களுடைய உடல் உண்டு. இந்தவகை இதனைக் கல்கோழி என்று அழைக்கின்றனர். கற்பாங்கான இடத்தில் பாறைகளில் காணப்படுவதால் கற்கோழி என்று பெயர் பெற்றது. இதனை வரகுக்கோழி என்றும் அழைப்பதுண்டு. வரகு விளையும் வறண்ட முரம்பு வயல்களில் காணப்படுவதால் இப்பெயர் வந்திருக்கலாம். ஆங்கிலத்தில் இதல் பறவையை (The Red Spurfowl) என்றழைப்பர். சிவந்த முள்கோழி என்பதே ஆங்கிலப்பெயரின் பொருள். பறவை நூலில் (Galloperdix spadicea) என்றழைப்பர்.

## உக. மயில்

## (THE COMMON PEAFOWL)

சங்க நூல்களில் மயிலைப்பற்றிப் பல பாடல்கள் கூறு கின்றன. சங்கப் புலவர்கள் காட்டு மயிலையும் வீட்டு மயிலையும் பிரித்துக் கூறியுள்ளனர். காட்டு மயிலைப்பற்றிய செய்திகளே பல பாடல்களில் சொல்லப்பட்டுள்ளன. வீட்டில் வளர்த்த மயிலைப்பற்றியும் இரண்டு பாடல்கள் கூறியுள்ளன. காட்டு மயிலைக் கான மஞ்ஞை என்று சங்க நூல்கள் அழைக்கின்றன. இந்தப் பெயர் வழக்கு சங்க நூல்களில் வழங்கும் கானயானை, கானக்கோழி என்ற பெயர்களைப் போன்றதாகும். சங்க நூல்களில் காட்டு மயிலையும், வீட்டு மயிலையும் தவிர 'பழன மஞ்ஞை' என்ெறாரு மயிலையும்பற்றிக் கூறியுள்ளனர். இந்தப் பழன மஞ்ஞை ஊர்களினருகில் மக்களுடன் பழகிய மயிலென்று தெரிகின்றது. இத்தகைய பழகிய மயில்கள் குசராத்து முதலிய மாநிலங்களில் மக்கள் துன்புறுத்தாத காரணத் தால் இன்றும் வயல்களிலும், கழனிகளிலும் காணப்படு கின்றன. சங்க காலத்தில் மயில்களை உணவாக உண் ணும் பழக்கம் இல்லாமலிருந்திருக்கலாம். அதனால் வயல் களில் மயில்கள் வாழ்ந்திருக்கலாம். இந்தவகை மயில் களைப் பறவை நூலாரும் கூறியுள்ளனர். (where semi-feral, found in the precincts of villages and cultivation in close association with man).

> "பழன மஞ்ஞை யுகுத்த பீலி
> கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும்" —புறம் 13

பழன மஞ்ஞை என்ற பெயர் சங்க காலத்திலேயே வயல்களில் வாழ்ந்த மயில்களுக்கு வழங்கியிருப்பதைக் காணலாம். பழன மஞ்ஞை தானாக உதிர்த்த தோகையைக் கழனியில் வாழ்ந்த உழவர் நெல் கதிரோடு தொகுத்தனர்

என்று கூறியதைக் காணலாம். வீட்டில் வழங்கும் மயிலைப் பற்றியும் புறநானூறு கூறுகின்றது.

> "இல்வழங்கு மடமயில் பிணிக்குஞ்
> சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே" —புறம்-252

சங்க காலத்தில் வீட்டில் மயில்களை வளர்க்கும் வழக்கம் இருந்தது. இந்தப் பழகிய மயில்களைப் பாபி லோனியா முதலிய நாடுகளுக்குக் கி. மு. சில நூற்றாண்டு களுக்கு முன்னரே ஏற்றுமதி செய்ததை வரலாற்றுச் செய்திகள் கூறுகின்றன.

கான மஞ்ஞை எனப்பட்ட காட்டு மயில் இயற்கையில் காடுகளில் வாழ்கின்றன. மூங்கிற்காடுகளிலும் வேங்கை மரச் சூழலிலும் சங்க நூல்கள் காட்டு மயில்களைக் கூறி யுள்ளன. மரம் பயில் கானத்தும் (குறுந்தொகை-249) கானாற்றின் கரையிலும் (குறுந்தொகை-244) அருவி வீழும் மலைச்சாரலிலும் (நற்றிணை-288) மயில்களைக் கண்டு சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர். பறவை நூலாரும் மயில்களைக் காடுகளிலும் கானாற்றங் கரையிலும் காணப்படுவதாகக் கூறியுள்ளனர்.

> "இனமயி லகவு மரம்பயில் கானத்து
> நரைமுக வூகம் பார்ப்பொடு பனிப்பப்
> படுமழை பொழிந்த சாரலவர் நாட்டுக்"
> —குறுந்தொகை-249

> "கலிமழை கெழீஇய கான்யாற் றிகுகரை
> ஒலிநெடும் பீலி துயல்வர இயலி
> ஆடுமயி லகவும் நாடன் நம்மொடு"
> —குறுந்தொகை-264

> "கழைவளர் அடுக்கத் தியலி யாடுமயில்" —அகம்-82

> "வரையிழி மயிலின் ஒல்குவனள் ஒதுங்கி" —அகம்-158

> "வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி
> மயிலறி பறியா மன்னோ" —நற்றிணை-13

"காமர் பீலி ஆய்மயிற் றோகை
வேறுவே றினத்த வரைவாழ் வருடைக்
கோடுமுற் றிளந்தகர்ப் பாடுவிறந் தியல
ஆடுகள வயிரின் இனிய ஆலிப்
பசும்புற மென்சிர் ஒசிய விசும்புகந்து
இருங்கண் ஆடமைத் தயங்க இருக்கும்" —அகம் 378

"ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பிற்
களிமயிற் கலாவத்து அன்ன தோளே" —அகம் 152

மயில்கள் மலைச்சாரலிலும் வாழ்ந்ததாகச் சங்க நூல்கள் கூறியுள்ளன. நன்னனுடைய ஏழில் மலைக் காட்டில் மயிலைக் கண்டு கூறியுள்ளனர். காட்டு மயில்கள் இனமாகவும், கணமாகவும் வாழுமென்று சங்க நூல்கள் கூறியுள்ளன.

"இனமயில் அகவும் கார்கொள் வியன்புனத்து"
—அகம் 334

"மயிலினம் பயிலும் மரம்பயில் கானம்" —அகம் 344

"கருவுற்ற காயாக் கணமயிலென் றஞ்சி"
—திணைமாலை 107

"கருநனைக் காயாக் கணமயி லவிழ"
—சிறுபாணாற்றுப்படை 165

"களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப." —புறம் 127

இனமயில் என்றும் கணமயில் என்றும் கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். கான மஞ்ஞை கணனொடு சேரும் என்று கூறியிருப்பதையும் கவனிக்கலாம். பறவை நூலாரும் காட்டுமயில் சிறு கூட்டமாகக் காணப்படும் என்று கூறியுள்ளனர். ஓர் ஆண்மயிலும் மூன்றிலிருந்து ஐந்து வரை எண்ணிக்கையுடைய பெண்மயில்களும் சேர்ந்த கூட்டத்தைக் காணலாம் என்று கூறுவர். ஆண் மயிலின் நிறம், உருவம், அழகு ஆகியவை பற்றிச் சங்க

நூல்கள் கூறியுள்ளன. காலடியிலிருந்து உச்சிக் கொண்டைவரை மயிலை வர்ணித்துள்ளனர். மயிலின் காலில் ஐந்து விரல்கள் உள்ளன. இந்த விரல்கள் நொச்சியின் ஐந்து பிரிவுடைய இலைபோலிருப்பதாகச் சங்க நூல்கள் கூறியுள்ளன.

> "மயிலடி அன்ன மாக்குரல் நொச்சியும்"
>
> —நற்றிணை 305

> "மயிலடி யிலைய மாக்குர னொச்சி."
>
> —குறுந்தொகை-138, நற்றிணை 115

மயிலடிக்கு நொச்சியின் இலையை உவமை கூறியது மிகப் பொருத்தமானதாகும். காட்டு நொச்சியைப் பிற் காலத்தில் 'மயிலடி' என்ற பெயராலே அழைத்ததைக் காணலாம். இந்தப் பெயர்வழக்கு சங்க நூல்களில் பயன் படுத்திய உவமையின் அடிப்படையில் வழங்கப்பட்டிருப் பதைக் காணும்போது வியப்படையாமல் இருக்க முடியாது. மலையாளத்திலும் மயிலடி என்ற பெயர் இதற்கு வழங்கு கின்றது. கன்னடத்தில் நவுலடி என்று இதே பொருளில் வழங்குவதைக் காணலாம். தமிழில் இதையே மயிலை, மயிலை நொச்சி என்றும் அழைக்கின்றனர். சங்க காலத் திலேயே இதை மயிலை என்று அழைத்தனர். ஆனால், பிற் காலத்து உரையாசிரியர்கள் மயிலையை இருவாட்சி என்ற தொரு மல்லிகைப்பூவாகக்கொண்டு தவறாகப் பொருள் எழுதினர். சங்க நூலில் மயிலைக்குக் கருநீலப்பூ இருப்ப தாகக் கூறப்பட்டிருப்பதைக் காணும்போது வெள்ளை நிறப் பூவையுடைய மல்லிகையை மயிலை என்று கூறியது எப்படி? மயிலை என்ற பெயர் 'மயிலடி' என்ற பெயரின் மரூஉ என் பதில் ஐயமில்லை. மயிலின் கழுத்தைக் காயா மரத்தின் பூங்கொம்பு போல இருந்ததாகக் கூறியிருப்பதைக் கவனிக்கலாம். காயாவின் பூ நீல நிறமாக இருக்கும். மயிலின் கழுத்தும் ஒளிவிடும் நீல நிறமாக இருக்கும்.

> "புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை
> மென்மயி லெருத்திற் றோன்றும்" —குறுந்தொகை 183

"விரவுப் பொறி மஞ்ஞை வெரீஇ யரவின்
அணங்குடை யருந்தலை பைவிரிப் பவைபோற்
காயா மென்சினை தோய்யநீடிப்
பஃறுடுப் பெடுத்த வலங்குகுலைக் காந்தள்"
—அகம் 108

"கருநனைக் காயாக் கணமயி லவிழ"
—சிறுபாணாற்றுப்படை 165

"மணிபுரை எருத்தின் மஞ்ஞைபோலகின்."
—நற்றிணை 264

காயாவின் பூக்களுடன் கூடிய கொம்பை மயிலின் கழுத்திற்கு ஒப்பிட்டது பொருத்தமேயாகும். மயிலின் நீலக் கழுத்தை நீலமணிக்கு ஒப்பிட்டதையும் காணலாம். மயிலின் தலையிலிருக்கும் குடுமியைப் பற்றியும் கூறியுள்ளனர்.

"குடுமி நெற்றி நெடுமாத் தோகை
காமர் கலவம் பரப்பி யேமுறக்" —அகம் 194

"குமரி வாகைக் கோலுடை நறுவீ
மடமாத் தோகைக் குடுமியிற் றோன்றும்
கான நீளிடைத் தானு நம்மொடு" —குறுந்தொகை 347

"பெயலுழந்து உலறிய மணிப்பொறிக் குடுமிப்"
—நற்றிணை 357

"ஓரி முருங்கப் பீலி சாய
நன்மயில் வலைப்பட் டாங்கியாம்."—குறுந்தொகை 244

மயிலின் தலையில் இருந்த குடுமியை வாகை மரத்தின் கோலுடைய பூவிற்கு ஒப்பிட்டுக் கூறியுள்ளது மிக அழகிய உவமையாகும். இதுபோன்ற வேறோர் உவமையை இயற்கையில் காண்பதரிது. மயிலின் தலையிலும் கோல்கள் உண்டு. அதே போன்ற வாகைப் பூ கோலுடையதாக இருக்கின்றது. கோலின் நுனியில் குஞ்சம்போல் வாகைப் பூவிற்கும் மயிலிற்கும் இருப்பதையும் காணலாம். இதை

'மணிப்பொறிக் குடுமி' என்று நற்றிணை அழைக்கின்றது. மயிலின் உச்சிக் கொண்டையைச் சங்க காலத்தில் 'ஓரி' என்றழைத்ததைக் குறுந்தொகை கூறியுள்ளது. வலையில் அகப்பட்ட மயிலின் தலையில் கோல்போன்று நீண்டிருந்த இறகுக் கொண்டை ஒடிந்ததைக் குறுந்தொகை கூறியுள்ளது. மயிலின் தோகையைப் பற்றிச் சங்க நூல்கள் விளக்கமாகக் கூறியுள்ளதைக் காணலாம். மயிலின் வாலான தோகையைப் பீலி என்று சங்க நூல்கள் அழைக்கின்றன. மயிலின் தோகையை மகளிர் கூந்தலுக்கு ஒப்பிடுவது புலவர்களின் மரபாகும். மயிலின் தோகையைப் பூத்த கருவிளைச் செடிக்கு ஒப்பிட்டுக் கூறியது மிகச் சிறந்த அழகிய உவமையாகும். மயிலின் தோகை ஒளிவிடும் பச்சை நிறமானது. தோகையில் இடை இடையே கரு நீலநிறப் பொறிகள் காணப்படும். கொடியாக நீண்டு படர்ந்துள்ள காக்கணங் கொடியின் பசுமை நிறத்தில் கருநீல வட்டப் பொறி போன்ற பூக்கள் பூத்திருப்பது மயிலின் தோகைக்குப் பொருத்தமான உவமையாகும். மயிலின் தோகை அழகைப் பலவாறு வருணித்துள்ளனர். 'கவின்பெறு தோகை', 'காமர் பீலி', 'அணிகிளர் கலாவம்', 'கலிமயிர்க் கலாவம்' என்றெல்லாம் மயிலின் தோகையைப் பற்றிக் கூறியுள்ளனர்.

"தண்புனக் கருவிளைக் கண்போன் மாமலர்
ஆடுமயில் பீலியின் வாடையொடு துயல்வர'

—நற்றிணை 262

''நீலப் பைம்போ துளரிப் புதல
பீலி யொண்பொறிக் கருவிளை யாட்டி.''

—குறுந்தொகை 110

கருவிளையின் பூ கண்போல் இருப்பதாக நற்றிணை கூறுவதைக் காணலாம். மயிலின் பொறிகளையும் கண் என்று கூறும் வழக்கு உண்டு. நீலப் பூ இருந்த கருவிளைப் புதர் மயிலின் பீலிபோலிருந்ததாகக் குறுந்தொகை சொல்லியுள்ளது.

மயில் தோகையை விரித்தாடுவதையும், குவித்துத் தூக்கிச் செல்வதையும் சங்கப் புலவர்கள் சொல்லி யுள்ளனர்.

*''கலிமயிற் கலாவங் கால்குவித் தன்ன*
*ஒலிமென் கூந்தல் கமழ்புகை கொளீஇத்'' —புறம் 146*

*''வான்தளி பொழிந்த காண்பின் காலை*
*அணிகிளர் கலாவம் ஐதுவிரிந் தியலும்*
*மணிபுரை எருத்தின் மஞ்ஞை போலநின்*
*வீபெய் கூந்தல் வீசுவளி உளர*
*ஏகுதி மடந்தை எல்லின்று பொழுதே'' —நற்றிணை 264*

*''ஓலிநெடும் பீலி துயல்வர இயலி*
*ஆடுமயி லகவும் நாட னம்மொடு''— குறுந்தொகை 264*

*''மால்வரைச் சிலம்பின் மகிழ்சிறந் தாலும்*
*பீலி மஞ்ஞையி னியலிக் கால''*
*—பெரும்பாணாற்றுப்படை 330-331*

*''கன்மிசை மயிலாலக் கறங்கியூர் அலர்தூற்றத்.''*
*—கலித்தொகை 27*

கலாவத்தைக் கால்குவித்தல் என்று தோகையை மயில் சுருக்குவதைப்பற்றிப் புறநானூறு குறிப்பிட்டுள்ளது. ஒலி நெடும் பீலியைப் பின்னால் தூக்கிக்கொண்டு வருவதைக் குறுந்தொகை கூறியுள்ளது. நீண்ட தோகை அடர்ந்த காட்டில் வாழும் மயிலிற்கு இடையூறாக இருப்ப தில்லை என்று பறவை நூலார் கூறுவர்.

மயில்கள் பாறையில் வெயில் காயும் குணமுடையன என்று சங்க நூல்கள் கூறுவதைக் காணலாம்.

*''வேங்கை தந்த வெற்புஅணி நன்னாள்*
*பொன்னின் அன்ன பூஞ்சினை துழைஇக்*
*கமழ்தாது ஆடிய கவின்பெறு தோகை*

பாசறை மீமிசைக் கணங்கொள்பு ஞாயிற்று
உறுகதிர் இளவெயில் உண்ணும் நாடன்''
—நற்றிணை 396

''அருவி யார்க்கும் அணங்குடை நெடுங்கோட்டு
ஞாங்கர் இளவெயில் உணீஇய ஓங்குசினைப்
பீலி மஞ்ஞை பெடையோ டாடுங்'' —நற்றிணை 288

வேங்கை மரத்தின் பூஞ்சினையில் புகுந்த மயில் மகரந்தம் தெளிக்கப்பட்ட தோகையுடன் கூட்டமாகச் சேர்ந்து பாறையின் மேல் இளவெயில் காய்ந்ததாக நற்றிணை கூறுவதைக் காணலாம். மழை பெய்தாலும் மயில்கள் நனையும் என்று பறவை நூலார் கூறுவர்.

''சேணுறத் தோன்றுங் குன்றத்துக் கவாஅன்
பெயலுழந்து உலறிய மணிப்பொறிக் குடுமிப்
பீலி மஞ்ஞை ஆலுஞ் சோலை'' —நற்றிணை 357

மழை பெய்யும்போது நனைந்து தோகையை உலர்த்திய மயிலைப்பற்றி நற்றிணை கூறியுள்ளது.

மயில்கள் இரவுக் காலத்தில் மரக்கிளைகளின் உச்சியில் தூங்கும் என்பர். இரவில் இடி விழுந்தாலும் யாதாவதொரு பெரிய ஓசை கேட்டாலும் ஆண்மயில்கள் சேர்ந்து கூக்குரலிடும் என்று பறவை நூலார் கூறுவர். மற்றும் புலி முதலிய கொடிய விலங்குகளைக் கண்டால் குரலிட்டுக் குரங்குகள் போன்ற பிற விலங்குகளை எச்சரிக்கை செய்யுமென்றும் கூறுவர்.

''வானேர் பிரங்கும் ஒன்றோ அதனெதிர்
கான மஞ்ஞை கடிய ஏங்கும்
ஏதில கலந்த இரண்டற்கென்'' —குறுந்தொகை 194

''பொய்யிடி அதிர்குரல் வாய்செத் தாலும்
இனமயில் மடக்கணம் போல'' —நற்றிணை 248

''மறப்புலி யுரற வாரணங் கதற
நனவுறு கட்சியி னன்மயி லால
மலையுடன் வெரூஉம் மாக்கல் வெற்பன்.'' —அகம் 392

வானம் இடி இடிக்கும்போது அதன் எதிர் மஞ்ஞை ஏங்கிக் குரலிட்டதாகவும் இடியின் அதிர்குரல் கேட்டு மயில் கூட்டமாகக் கூவினதாகவும் குறுந்தொகையும் நற் றிணையும் கூறியுள்ளதைக் காணலாம். மறப்புலி உறுமும் போது கட்சியிலிருந்த மயில்கள் கூவினதாக அகநானூறு (392) கூறுவதையும் காணலாம். இவை பறவை நூலார் கூறிய செய்திகளோடு ஒத்துள்ளதைக் காண லாம். மயில் கார்காலத்தில் கூவுவதாகக் கூறுவது சங்க நூல் மரபாகும். கார்காலத்தில் ஆடுமென்றும் கூறுவர்.

மயில்கள் 'கட்சியில்' தங்குவதாகவும் சேர்வதாகவும் சங்க நூல்கள் கூறுவதைக் காணலாம்.

*"சேணோன் இழைத்த நெடுங்கால் கழுதின்*
*கான மஞ்ஞை கட்சி சேக்கும்"* —நற்றிணை 276

*"மறப்புலி யுரற வாரணங் கதற*
*நனவுறு கட்சியி னன்மயி லால*
*மலையுடன் வெரூஉம் மாக்கல் வெற்பன்"* —அகம் 392

*"மணிவரைக் கட்சி மடமயி லாலுநம்"*
—ஐங்குறுநூறு 250

*"கட்சி மஞ்ஞையிற் சுரமுதல் சேர்ந்த"* —புறம் 60

*"வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி*
*மயிலறி பறியா மன்னே."* —நற்றிணை 13

கட்சி மஞ்ஞை, கட்சி மயில் என்று சங்க நூல்கள் கூறுவதைக் காணலாம். கான மஞ்ஞை கட்சியில் சென்று தங்கும் என்று நற்றிணை 226ஆம் பாடல் கூறுகின்றது. கட்சி என்ற சொற்குக் காடு என்று உரையாசிரியர்கள் பொருள் கூறியுள்ளனர். கூர்ந்து நோக்கினால் கட்சி என்பதற்குக் காடு என்று கூறிய பொருள் பொருத்த மற்றது என்று தெரிகின்றது. சிலப்பதிகாரம், 'கட்சியுட் காரி கடிய குரலிசைத்துக் காட்டும் போலும்' என்று வலியன் பறவை தன்னுடைய இடத்தையும் சூழலையும்

பாதுகாப்பதைப் பற்றிக் கூறியுள்ளது. கட்சி என்ற சங்க கால வழக்கு விலங்குகள், பறவைகள் ஆகியவற்றின் உரிமையிடத்தையே குறிக்கின்றது என்பதைப் பாடல்களை ஆராயும்போது தெரிகின்றது. சில விலங்குகளும் பறவைகளும் தங்களுக்கென்று உரிய இடத்தை இயற்கைச் சூழலில் அமைத்துக் கொள்கின்றன. ஒரு தெருவில் வாழும் நாய் தனக்குரிய தெருவாகக் கொண்டு மற்ற தெரு நாயை விடுவதில்லை. 'தன்நிலத்தில் குறுமுயல் தந்தியினும் வலிது' என்றொரு பழமொழி வழங்குகின்றது.

இது போன்றே பறவைகளில் ஆண் பறவைகள் தங்களுக்கு உரியதென்று ஒரு குறிப்பிட்ட பரப்புடைய இடத்தை உரிமையாக்கிக்கொண்டு தங்களிடத்தில் பிற ஆண்பறவைகளை நெருங்க விடுவதில்லை. ஆனால் பெண் பறவைகளை அவ்விடத்தில் விரும்பி அழைக்கும். ஆண் மயிலிற்கு இந்தக் குணம் உண்டு என்பதைப் பறவை நூலார் தெரிந்துள்ளனர் ஆண் மயில் பல பேடைகளோடு சேர்ந்து வாழுமாதலால் ஒவ்வோர் ஆண் மயிலும் காட்டில் தத்தமக்குரிய இடத்தைத் தேடி வகுத்துக் கொள்கின்றன. ஆண் மயில் இணை சேரும் காலத்தில் 400 விருந்து 600 அடி வரை விட்டமுள்ள வளைவான இடத்தைத் தனதாக்கிக்கொண்டு பிற ஆண் மயில்களை வரவிடாது தடுக்கும் என்று ஓர் அறிஞர் (Zafar futeally) ஆராய்ந்து கூறியுள்ளார். இந்த இடத்தில் ஆண் மயில் ஒரு பாறையையோ, கறையான் புற்றையோ தலைமைப் பீடமாகக் கொண்டு அதில் ஆடிக் காட்டும். இதன் வழியாக இடத்திற்கு உரிமையை நிலைநாட்டுவதோடு பெண் மயில்களையும் அழைக்கும் என்று அந்த அறிஞர் கூறியுள்ளார். கூர்ந்து நோக்கினல் சங்க நூல்களில் கூறப்படும் கட்சி என்ற சொல்வழக்கு மயில்கள் தேடி உரிமையாக்கிக் கொள்ளும் இடத்தையே குறிக்கின்றதென்பது தெளிவாகின்றது. இத்தகைய 'கட்சியைக்' கானவன் செய்த நெடுங்காட்டினை பரணிலே அமைத்துக் கொண்ட மயிலைப்பற்றி நற்றிணை 278ஆம் பாடல் கூறியதைக் கவனிக்கலாம்.

உயரமான இடத்தில் தலைமைப் பீடந் தேடிக்கொள்வது ஆண் மயிலின் இயல்பு. கட்சி அகலமான இடத்தை உடையது என்பதை 'நனவுறு கட்சி நன்மயில்' என்று அகநானூறு கூறியுள்ளது. மலையிலும் பாறையிலும் இத்தகைய கட்சிகளை மயில்கள் அமைத்திருந்ததாகக் கூறுவதையும் கவனிக்கலாம். ஆண் மயிலைப் போல வலியனும் கட்சி பாராட்டித் தன்னுடைய கட்சியில் வரும் காக்கை, கழுகுகளைக் கூட விரட்டித் துரத்தும். அதே சமயம் குருவிகள் போன்ற எளிய பறவைகளைத் தன் கட்சிக்குள் இருக்கவிட்டுக் காப்பாற்றும் என்று பறவை நூலார் கூறுவர். பிற்காலத்தில் கட்சி என்ற சொல் ஒரு கொள்கையுடையோர் ஒன்று சேர்ந்து வாழும் அமைப்பிற்குப் பெயராக அமைந்தது. கண் என்ற சொல் இடத்தைக் குறிக்கும். இச்சொல் அடிப்படையாக விலங்குகள், பறவைகள் இயற்கையில் பிடிக்கும் உரிமையிடத்திற்குக் 'கட்சி' என்ற பெயர் தோன்றிற்று. கட்சியுள் மயில் ஆடுவதாகச் சங்க நூல்கள் கூறுவதையும் கவனிக்கலாம். கட்சியென்பதற்குக் கூடு என்றும் சிலர் உரை கூறினர். ஆனால், கூட்டைவிட விரிந்த உரிமை இடமென்றே (Territory) கட்சியென்ற சொற்குப் பொருள் கொள்ள வேண்டும். கூட்டில் பறவைகள் சேருவது போல் கட்சியில் மயில்கள் சேருவதும் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். மயில்கள் ஒழுங்காகக் கூடு கட்டுவதில்லை சில சமயங்களில் தரையைக் கிளறி முட்டையிடும். இல்லையேல் சில சுள்ளிகளைத் தரையில் வைத்து முட்டையிடும். ஆதலால் மயில்களுக்குக் கூடுகள் இருப்பதாகக் கூறுவதோ அதில் அவை தங்குவதாகக் கூறுவதோ தவறாகும். மயில்கள் ஒழுங்காகக் கூடு கட்டுவதில்லை என்பதை உணர்ந்தே மயில் பாறையில் முட்டை யிட்டதாகக் குறுந்தொகை கூறியுள்ளது.

> "கான மஞ்ஞை யறையீன் முட்டை
> வெயிலாடு முசுவின் குருளை உருட்டும்
> குன்ற நாடன் கேண்மை என்றும்."
>
> —குறுந்தொகை 38

கானமயில் பாறையில் இட்ட முட்டையை முசுக் குரங்கின் குட்டி பாறையில் உருட்டியதாகக் கூறியதைக் காணலாம். முசுக் குரங்கும், காட்டு மயிலும் காடுகளில் ஒரே சூழலில் காணப்படும் என்று கூறுவர். முசுக் குரங்குகள் சைவ உணவையே உட்கொள்ளுமாதலால் மயிலின் முட்டையைத் தின்னாது உருட்டின என்று கொள்ளலாம். பெண் மயில் மட்டுமே கூட்டில் முட்டையிட்டு அடை காக்கும். ஆண் மயிலிற்குத் தெரியாமல் முட்டையிட்ட இடத்தை, கூட்டைப் பெண் மயில் மறைக்கும் என்று பறவை நூலார் கூறுவர். ஆண் மயிலிற்கும் கூட்டிற்கும் தொடர்பு இல்லாமையால் 'கட்சி' என்ற சங்க நூல் வழக்கு கூட்டைக் குறிக்காது என்பது தெளிவாகின்றது.

சங்க நூல்களில் மயிலைப் பற்றி ஓர் அரிய நுண்ணிய செய்தி வருகின்றது. குறுந்தொகை 391ஆம் பாட்டில் மயிலிற்குப் 'போழ்கண்' இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

*"கையற வந்த பையுள் மாலைப்*
*பூஞ்சினை யிருந்த போழ்கண் மஞ்ஞை*
*தாஅரிர் கனந்தலை புலம்பக்*
*கூஉந் தோழி பெரும்பே தையவே."*

—குறுந்தொகை 391

'போழ்கண்' என்பதற்குப் போழ்ந்தாற் போன்ற கண்களையுடைய மயில்கள் என்று உரை கூறப்பட்டுள்ளது. இந்த உரை முழுமையான விளக்கமாகத் தெரியவில்லை. போழ் என்ற சொற்குப் பிளவுபடுத்தல், ஊடுருவிச் செல்லுதல் என்ற பொருள்கள் உண்டு. மயிலின் பார்வை ஊடுருவிச் செல்லுதல்போல் இருப்பதால் 'போழ்கண்' என்று கூறப்பட்டுள்ளது. மலையாளத்தில் 'கண்போழ' என்றால் உற்றுப்பார்த்தல் (Stare) என்று பொருள் உண்டு. குறுந்தொகையில் வரும் போழ்கண் என்றதன் மரபிலே மலையாள வழக்கு இருப்பதைக் காணலாம். மயிலிற்குக் காட்டு விலங்குகளை ஊடுருவிப் பார்ப்பதுபோல் உற்றுப் பார்க்கும் குணம் உண்டு என்பதைப் பறவை நூலறிஞர்கள்

சுட்டிக் காட்டியுள்ளனர். (Like all creatures peacocks have oddities of their own. They have the reputation of gazing with stupefaction at any object which comes within their ken and when leopards crawl upto them and finally come into view, the birds stare at them as if hypnotised and so fall an easy prey to carnivores - zafar Futeally - The Illustrated Weekly of India - October 27, 1968). காட்டில் வாழும் மயில் மற்ற விலங்கு களையும் பொருள்களையும் முட்டாள்தனமாக முறைத்து ஊடுருவிப் பார்க்கும் குணம் உடையது என்று அறிஞர்கள் கண்டு கூறியுள்ளனர். இந்தக் குணத்தால் மயில் சிறுத்தைப் புலி போன்ற விலங்குகளுக்கு எளிதில் இரை யாகின்றது. 'போழ்கண் மஞ்ஞை' என்பதின் உண்மை விளக்கம் அறிவியல் செய்தி யென்பதை உணரவேண்டும். சிறிய அடைமொழிச் சொற்களில் அரிய அறிவியல் உண்மையைக் கூறியதைப் போற்ற வேண்டும்.

மயிலிற்குக் கூர்மையான கண்ணிருப்பதால் மயிலின் பார்வையிலிருந்து மறைந்து தப்புவது எளிதன்று என்பர். காடுகளில் புலி முதலிய விலங்குகளை முதலில் காணும் பறவை மயிலென்று கூறுவர். பழமொழி நானூறு 'வெண்ணெய் மேல் வைத்து மயில் கொள்ளுமாறு' என்று கூறுகின்றது. மயில் கூர்மையான பார்வையுடையதால் மயிலை அணுகித் தலையில் வெண்ணெய் வைக்க முடியாது. வெண்ணெய் உருகி மயில் கண்ணை மறைக்கு முன் மயிலையே பிடித்து விடலாம் என்பதே பழமொழியின் கருத் தாகும். பழமொழி நூல் இயற்றப்பட்ட காலத்தில் மயிலிற்கு வழங்கிய இப் பழமொழி பிற்காலத்தில் கொக்கைக் குறித்து வழங்கலாயிற்று. 'கொக்கின் தலையில் வெண்ணெய் வைத்துப் பிடிப்பது போல்' என்று இக் காலத்தில் வழங்குகின்றது. கொக்கும் கூர்த்த பார்வை யுடைய பறவை என்பது தெரிந்ததே. பழமொழி நானூற்றில் 'மயில் போலுங் கள்வருடைத்து' என்றொரு பழமொழி வருகின்றது. பாம்பைத் தின்ற மயில் அடக்க

மாக இருப்பது போன்ற கள்வர் என்று பொருள் கூறுவர். மயில் முதலாயினவும் மக்களுள் ஒரு சாராரும் விழித் துறங்குவதுபோல உறங்குவதாக நீலகேசி உரையாசிரியர் கூறியுள்ளார்.

மயில் நெல் முதலிய தானியங்களை விரும்பி உண்ணும் என்று பறவை நூலாசிரியர் கூறுவர். வயல் களில் விளையும் நெல், தினை முதலியவற்றை உண்டு அழிவு செய்யும் என்பர்.

*''செந்நெ லுண்ட பைந்தோட்டு மஞ்ஞை*
*செறிவளை மகளி ரோப்பலிற் பறந்தெழுந்து*
*துறைநணி மருதத் திறுக்கு மூரொடு''* —புறம் 344

*''கொம்மையம் பசுங்காய்க் குடுமி விளைந்த*
*பாக லார்கைப் பறைக்கட் பீலித்*
*தோகைக் காவிற் றுளுநாட் டன்ன''* — அகம் 15

*''களைகால் கழீஇய பெரும்புன வரகின்*
*கவைக்கதி ரிரும்புறங் கதூஉ வுண்ட*
*குடுமி நெற்றி நெடுமாத் தோகை''* —அகம் 194

*''புனவன் றுடவை பொன்போற் சிறுதினைக்*
*கடியுண் கடவுட் கிட்ட செழுங்குரல்*
*அறியா துண்ட மஞ்ஞை யாடுமகள்*
*பொறியுறு வனப்பின் வெய்துற்று நடுங்கும்.''*
—அகம் 105

செந்நெல்லையும், தினையையும், வரகையும், பலாப்பழத் தையும் மயில் உண்டதாகச் சங்க நூல்கள் கூறியுள்ளன. மயில் கூவுவதைச் சங்க நூல்கள் 'அகவுதல்' என்று கூறு கின்றன. தெய்வம் வந்தேறிப் பாடும் மகளிரை, குறி கூறும் கட்டுவிச்சியரை அகவன் மகளிர் என்று குறுந் தொகை அழைக்கின்றது. மயிலின் குரலைப்போலக் குறி சொல்லும் மகளிர் கூவினதால் 'அகவன் மகளிர்' எனப் பட்டனர். அகவற் பாட்டும் அகவன் மகளிர் பாட்டும் பாட்டின் ஓசையடிப்படையாகத் தோன்றியிருக்கலாம்.

படகுப் பாட்டிலிருந்து தூங்கலோசையோடு கூடிய வஞ்சிப் பாட்டுத் தோன்றியது போல அகவற் பாட்டும் தோன்றியது. மயிலின் ஒருவகை ஓசை ஐந்து, ஆறு தடவை திருப்பித் திருப்பிக் கேட்கும். இந்த ஓசை 'க-ஆன்...க-ஆன்' என்று கேட்குமென்று பறவை நூலார் கூறுவர். இந்த ஓசையின் சொல்லுருவமே அகாவு அகவு என்பதாகும்.

மயிலின் பீலியைச் சங்க காலத்தில் சமயச் சடங்கு களுக்குப் பயன்படுத்தினர். வேலன் வெறியாட்டில் மயில் பீலியைச் சூடினன். வேலிலும், வில்லிலும், முரசிலு மயிலிறகைச் செருகி வைத்தல் அக்கால வழக்கம். மயிலே தெய்வமேறி ஆடும் என்ற நம்பிக்கையும் இருந்தது. மயிற்பீலி தெய்வத் தன்மை வாய்ந்தது என்று கருதினர். இன்றும் இந்த நம்பிக்கை மக்களிடையே உள்ளது.

*''நெய்தல் உருவின் ஐநிலங் ககலிலைத்*
*தொடையமை பீலிப் பொலிந்த கடிகை*
*மடையமை திண்சுரை மாக்காழ் வேலொடு''* அகம் 119

*''மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை*
*ஓலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்*
*பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டி.''*
—புறம் 50

மயில்கள் தாமாக உதிர்த்த பீலியைப் பிளந்து மறவர் வில்லில் சுற்றிக்கொள்வதை அகநானூறு (281) கூறி யுள்ளது. முருகனுக்குரிய பறவையாக மயிலைச் சங்க நூல்கள் கூறுகின்றன. முருகனின் மயிலை 'பிணிமுகம்' என்று புறநானூறு கூறுகின்றது. முருகனது கொடியாக அகநானூறும், புறநானூறும் கூறியுள்ளன. தொல் காப்பியர் மரபியலில் சேவற் பெயர் மயிலின் ஆணிற்கு வழங்காது என்று கூறியுள்ளார். பெண்களை மயிலிற்கு ஒப்பிடும் செய்யுள் வழக்கு தொல்காப்பியருக்கு முன்னரே இருந்ததால் பெண் தன்மை வாய்ந்ததாகக் கருதப்பட்ட மயிலிற்குச் சேவல் பெயர் வழங்குவது மரபில்லை எனக்

கருதப்பட்டது. பேராசிரியர் செவ்வேள் ஊர்ந்த மயிலா யிருந்தால் ஆணிற்குச் சேவல் என்ற பெயர் வரலாம் என்று கூறினர். பரிபாடலில், முருகனுடைய செருப்பாக, 'புரிமென் பீலிப் போழ்புனை அடையல்' கூறப்பட்டுள்ளது. தெய்வங்களுக்கும் கடவுளர்க்கும் காலிற்குச் செருப்பு முதலிய அணிகள் ஆகமங்களில் கூறப்படவில்லை. வட நாட்டிலும் சூரியனுக்கு மட்டும் சிலைகளில் காலில் செருப்பு போன்ற அணிகலனைக் காணலாம். இது பாரசீகத் தொடர்பால் ஏற்பட்டது என்பர். ஆனல், முருகன் காலிற்குச் செருப்பு கூறியது வியப்பான செய்தியாகும். பீலியை இரண்டாக வகிர்ந்து முருகனின் செருப்புக்கு வாராக அமைத்ததைப் பரிபாடல் (21 : 7) கூறியுள்ளது.

மயிலின் ஆணைத் 'தோகை' யென்றே அழைப்பதைச் சங்க நூல்களில் காணலாம். ஆண்மயிலைக் குறிப்பிடப் 'பீலி மஞ்ஞை', 'மயிற்றோகை', என்று சங்க நூல்கள் கூறு கின்றன. தொல்காப்பியர் ஆண்மயிலைத் 'தூவிமயில்' என் றழைப்பதைக் காணலாம். பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை யவர்கள் விவிலிய நூலில் கூறப்பட்ட 'துகி' என்ற மயிலைக் குறிக்கும் ஈப்ரு மொழிச் சொல் தமிழ்ச் சொல் அன்று என்று கூறினர். தோகை என்ற சொல் ஆகு பெயராய் வாலையுடைய மயிலைக் குறித்ததையும் கூறித் 'துகி' என்ற சொல் தமிழிலிருந்து போகவில்லை என்றார். ஆகு பெய ரானதால் வேற்று மொழியில் செல்லவில்லை என்பது பொருந்தாது. சங்க காலத்திற்கு முன்னரே தோகை என்ற சொல் ஆகு பெயராகிச் சங்க காலத்தில் மயிற்கு வழங்கும் பரந்துபட்ட பெயராக மாறியுள்ளதைப் பேரா சிரியர் கவனிக்கவில்லை. முற்பட்ட சங்க நூல்களில் 14 பாடல்களில் ஆண்மயிலைக் குறித்தே தோகை என்ற சொல் வந்துள்ளது. ஒன்றிரண்டு பாடல்களில்தான் ஆண் மயிலின் கலாவத்தைக் குறித்து வந்துள்ளது. ஆதலின் சங்க காலத்திலேயே ஆண்மயிலைக் குறிப்பிட்ட அடிப்பட்ட வழக்காகத் தோகை என்ற சொல் வழங்கிற்று என்பதைக் காணும்போது இச் சொல் ஈப்ரு மொழியில் சென்றிருப்

பதில் ஐயமென்ன உள்ளது? அகநானூற்றுப் பதினைந்தாம் பாடல் துளுநாட்டில் இருந்த தோகைக்கா என்ற ஊரைக் குறிப்பிட்டுள்ளது. இதுவே இன்று ஜோக் நீர் வீழ்ச்சி (Jog falls) என்று கருதுகின்றனர். சங்க காலத்திலேயே தோகை என்ற மயிலின் பெயரால் ஓர் ஊர் தோன்றியிருக்குமாயின் தோகை என்ற பெயரின் பரந்துபட்ட வழக்கு நன்கு விளங்கும். ஆகுபெயர்களாகத் தோன்றியவை அடிப்பட்ட பெயர்களாக மாறிப் பிறமொழிகளில் புகக் கூடாதா? சந்தனம் என்ற பெயர் சாந்து என்ற பெயரிலிருந்து தோன்றித் தொழிலாகு பெயராய்ச் சாந்தம் என்று சங்க காலத்தில் வழங்கி வடமொழியில் புகவில்லையா? வெளிநாட்டிலிருந்து சங்க காலத்திற்குச் சிறிது பிற்பட்டு நம்நாடு புகுந்த வெற்றிலைப் பயிர் ஆகுபெயரால் பெயர் பெற்று ஆங்கிலத்தில் (Betel) என்று மாறிப் புகவில்லையா? நாயின் வாலைக் குறித்து 'வலஞ் சுரித் தோகை ஞமலி' என்று அகநானூற்றில் வருகின்றது. ஞமலி என்ற சொல் நாயைக் குறித்துச் சங்க காலத்தில் வழங்கிற்று. ஆனால், அதே சொல் நெமலி, நெவுலி என்று தெலுங்கு, கன்னட மொழிகளில் வழங்கி நாயைக் குறிப்பிடாது மயிலைக் குறிப்பதைக் காணலாம். பிற்காலத்தில் ஞமலி என்ற சொல் தமிழிலும் மயிலைக் குறித்து வழங்கியதாகத் தெரிகின்றது. திவாகர நிகண்டில் மயிலின் பெயர்களில் ஞமலி இல்லை. பிங்கலந்தையிலும் சூடாமணியிலும் ஞமலி மயிலின் பெயராகக் காணப்படுகின்றது. திவாகர நிகண்டு எழுதப்பட்ட காலத்துக்கும் பிங்கலந்தை நிகண்டு எழுதப்பட்ட காலத்துக்கும் இடைப்பட்ட காலத்தில் தமிழில் மயிலைக் குறிக்கும் வழக்காக ஞமலி என்ற பெயர் வந்திருக்கலாம். மயில் என்ற சொல்லே ஞமலி, நெமலி என மாறியதாக டாக்டர் எமனோ கூறியுள்ளார். மிஞிறு என்பது ஞிமிறு ஆகியது போன்றது இந்த மாற்றம் என்பார்.

தோகை என்ற சொல் மயிலின் வாலைக் குறித்தது போலத் துளுமொழியில் பீலி என்ற சொல்லை நாயின் வாலிற்கும் பயன் படுத்துவதைக் காணலாம். 'நாயித

பீல்' என்பது நாயின் வாலைக் குறிக்கின்றது. பீலி என்ற சொல்லும் பொதுவாக வாலைக் குறித்து வழங்கியிருக்கலாம். ஞமலி என்ற சொல் சங்க காலத்துத் தமிழில் நாயையும், பிற்காலத் தமிழிலும், தெலுங்கு, கன்னட மொழிகளிலும் மயிலையும் குறித்து வழங்கினதால் நாய்க்கும் மயிலிற்கும் ஏதோ ஒரு கற்பனைத் தொடர்பு திராவிட மொழிகளில் பழங்காலத்தில் இருந்திருக்கலாம் என்று கருதலாம். பீலி என்ற சொல் பிற்காலத்தில் மயிலைக் குறித்தும் தமிழில் வழங்கியுள்ளதை நிகண்டுகள் காட்டும். நவிரம் என்ற சொல் மயிலைக் குறித்ததாக நிகண்டுகள் கூறுகின்றன. இச்சொல் ஞமலி என்ற பெயருடன் தொடர்புடையதாக இருக்கலாம். நவிலு என்ற கன்னடச் சொல்லிற்கும் நவிரம் என்ற தமிழ்ச் சொல்லிற்கும் ஒற்றுமை காணப்படுகின்றது. நவிரம் என்ற ஒரு மலையைப் பற்றிச் சங்க நூல்களில் சொல்லப்பட்டுள்ளது. மயில் மிகுதியாக வாழ்ந்ததால் நவிரம் என்ற பெயர் வந்திருக்கலாம். கொல்லி என்ற ஆட் கொல்லிப் புலிகள் வாழ்ந்ததால் கொல்லி என்ற மலைப்பெயர் வந்துள்ளதை இது சார்பாகக் கவனிக்க வேண்டும். மயிலிறகின் அடி முள்ளிற்கு முருந்து என்ற பெயர் அகநானூற்றில் (193) கூறப்பட்டுள்ளது.

சங்க நூல்களில் மயிலை 'மாயினம்' என்று பொதுவாக அழைத்ததைக் காணலாம். பசுமையான கிளியினத்தைப் 'பாசினம்' என்று அழைத்ததைப்போல் கருநீலப் பறவையினத்தை 'மாயினம்' என்றனர். மை, மா என்ற சொற்கள் கருமையையும் நீலத்தையும் குறிக்கும். மை நிறமுடைய பறவை மையில் என்றழைக்கப்பட்டு மயில் ஆகியிருக்கலாம். அசோகர் போன்ற பேரரசர்கள் தோன்றிய குலப் பெயரான 'மோரியர்' என்ற பெயரே 'மோர்' என்ற மயிற் பெயரடியாக வந்ததென்பர். இந்த மோர் என்ற சொல்லும் மா, மை என்ற திராவிடச் சொற்களடியே தோன்றியிருக்கலாம். மயிலைப் பறவை நூலில் (Pavo cristatus) என்று அழைப்பர்.

———

## உஉ. குறும்பூழும் சிவலும்
## (GREY QUAIL AND GREY PARTRIDGE)

சங்க இலக்கியத்தில் காடை, கவுதாரி என்ற இரு பறவைகளும் கூறப்பட்டுள்ளன. காடையைக் குறும்பூழ் என்றும் கவுதாரியைப் பூழ், சிவல் என்றும் சங்க நூல்கள் அழைக்கின்றன. குறும்பூழாகிய காடையைப் பற்றிய செய்திகளே மிகுதியாகக் காணப்படுகின்றன. கவுதாரியைப் பற்றிச் சில பாடல்களிலேதான் சொல்லப்பட்டுள்ளது.



குறும்பூழ்

"வண்ணக் கடம்பின் நறுமலர் அன்ன
வளரிளம் பிள்ளை தழீஇக் குறுங்காற்
கறையணற் குறும்பூழ் கட்சிச் சேக்கும்
வன்புல மிறந்த பின்றை"

—பெரும்பாணாற்றுப்படை 203-5வரிகள்

"கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்தி
முடங்குதாள் உதைத்த பொலங்கெழு பூழி
பெரும்புலர் விடியல் விரிந்துவெயில் எறிப்பக்
கருந்தார் மிடற்ற செம்பூழ்ச் சேவல்
சிறுபுன் பெடையொடு குடையும் ஆங்கண்"

—அகம் 63

"பைந்தினை யுணங்கல் செம்பூழ் கவரும்
வன்புல நாடற் றரீஇய வலனேர்"

—ஐங்குறு நூறு 469

"யானை வேட்டுவன் யானையும் பெறுமே
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே"
—புறநானூறு 214

"செய்கனி குறும்பூழ் காய மாக
ஆர்பதம் பெறுக தோழி அத்தை"
—குறுந்தொகை 389

"கையுள தாகி விடினும் குறும்பூழ்க்குச்
செய்யுள தாகு மனம்" —பழமொழி 96

"குரவங் கொண்ட குறும்பூழ்போற் கொழுங்கான்"
—முகை சுமந்தன—"
—சீவகசிந்தாமணி 1651

குறும்பூழ் வன்புலத்தில் பயிர்விளையும் வயலில் காணப் படுவதாகக் கூறப்பட்டுள்ளது. தானியங்கள் விளையும் வயல்களிலும், புல்வெளிகளிலும், சமவெளிகளிலும் காடைகள் காணப்படுமென்று பறவை நூலார் கூறுவர். குறும்பூழ்க்குச் 'செய்புள தாகு மனம்' என்று பழமொழி கூறு வதைக் கவனிக்க வேண்டும். குறும்பூழ் தினையை விரும்பி உண்பதாகவும் கூறப்பட்டுள்ளது. பூழிமண்ணை விடியற் காலை வெயிலில் குறும்பூழ்ச் சேவல் தன் பெடையோடு சீத்துக் கொண்டிருந்ததாக அகநானூறு கூறுகின்றது. குறும்பூழின் நிறத்தைக் குறிப்பாகத் தெளிவாக அகநானூறு விளக்கியுள்ளது. குறும்பூழ் மங்கிய சிவப்பு நிறமுடையது. ஆதலின் குறும்பூழைச் செம்பூழ் என்று அகநானூறும் ஐங்குறுநூறும் அழைக்கின்றன. அகநா னூற்றில் 63 ஆம் பாடல் 'கருந்தார் மிடற்ற செம்பூழ்ச் சேவல்' என்று கூறுவதைக் கவனிக்க வேண்டும். காடைச் சேவலின் கழுத்தினடியில், தொண்டையில் இருக்கும் பட்டைகள் வரைகள் வளையம் போலக் (Two dark bands curving up from base throat to ear coverts) காதுவரை நீண்டிருக்கும். கிளியின் கழுத்தில் காணப் படும் செவ்வரிகளைச் சங்கநூல்கள் செந்தார் என்று அழைக்கின்றன. அதுபோல் காடையின் தொண்டையில்

காணப்படும் கரிய வரிகளைக் 'கருந்தார்' என்றும், அவை காடையின் மிடற்றில் காணப்படுமென்றும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். இந்த விளக்கம் செம்பூழ் என்பது காடையென்பதைத் (Grey Quail) தெளிவாகக் காட்டுகின்றது. பெரும்பாணாற்றுப்படையி லும் 'கறையணல் குறும்பூழ்' என்று விளக்கப்பட்டுள்ளது. கறைமிடறு உடையதாகையால் இவ்வாறு கூறப்பட்டது. காடையின் குஞ்சுகளைக் கூடக் கண்டு கூறியுள்ளனர். காடையின் குஞ்சு வெண்மையும் மஞ்சளும் கலந்த நிற மாக உருண்டு திரண்டு காணப்படும். இதற்கு உவமை யாகக் கடம்பின் உருண்டையான வெண்மை கலந்த மஞ்சள் நிறப் பூக்கள் கூறப்பட்டது மிகமிகப் பொருத்தமே. இரண்டையும் நேரில் பார்த்தால்தான் இந்த உவமையின் நுட்பத்தையும் அருமையையும் உணரமுடியும். இதன் கால்கள் குறியன என்று கூறப்பட்டுள்ளது. கால்கள் குறியனவாகையால் இதன் உருண்டு திரண்ட வடிவம் நன்கு தெரிகின்றது. காடைகள் கூட்டம் கூட்டமாகக் காணப்படும். முப்பது, நாற்பது காடைகள் ஒன்முகக் கூட்டமாகக் காணப்படும். கறையணற் குறும்பூழ்க் கட்சி சேக்கும் என்று கூறியிருப்பதைக் காணலாம். கட்சி என்பது கூடு, கூட்டமாக வாழுமிடம் இவைகளைக் குறிக்கும். காடை தனது வளரிளம் பிள்ளையைக் கூட்ட மாக வாழுமிடத்தில் தங்க வைத்ததாகப் பெரும்பாணாற் றுப்படை கூறியுள்ளது.

காடையின் இறைச்சியை மிகச் சுவையுடையதாகக் கருதுவதால் இதை வலையிட்டுப் பிடித்தல் வழக்கமாக உள்ளது. நெய்யில் கனிந்து வெந்த குறும்பூழை அரிய உணவாகக் குறுந்தொகைப் பாடல் கூறியுள்ளதைக் காண லாம். குறும்பூழ் வேட்டையாடும் வேட்டுவனைப் புற நானூறு குறிப்பிட்டுள்ளது. யானையை வேட்டையாடச் சென்றவன் ஊழ்வலியால் யானையைப் பெறுவதுமுண்டு, குறும்பூழ் வேட்டைக்குச் சென்றவன் வெறுங்கையோடு திரும்புவதுமுண்டு என்று கூறப்பட்டுள்ளது. குறும்பூழ் சில காலங்களில்தான் கூட்டமாகக் காணப்படும். குறும்

பூழ் கூட்டமாக இடத்திற்கு இடம் தரையிலேயே வலசை போய்க் கொண்டிருக்கும் தன்மையுடையது. ஆதலின் விரும்புங் காலத்தில் குறும்பூழ் கிடைப்பதரிது. ஆதலின் வேண்டும்போது வெறுங்கையுடன் வேடன் திரும்புவது இயற்கையே. காடைகளைப் போர் செய்யப் பழக்குவது சங்க காலத்திலிருந்தே வழக்கமாக இருந்திருக்கலாம். குறும்பூழ்ப் போரைக் காண்பது ஆடவர் வழக்கம் என்று தெரிகின்றது. காடையைக் கையிலேயே வைத்துப் பழக்கினால்தான் போர் செய்யும் தன்மை பெறுகிறது என்று கூறுவர். இதையே பழமொழியிலும் 'கையுளதாகி விடினும்' என்று கூறப்பட்டுள்ளது. காடையை ஒருவன் கையிலேயே வைத்துப் பழக்க வேண்டுமென்பதைக் கலித்தொகைப் பாடலும் குறிப்பிட்டுள்ளது. கலித்தொகை 95 ஆம் பாடல் குறும்பூழ்ப் போரைப் பற்றிச் சொல்லியிருப்பதைக் காணலாம்.

> "புதுவன வீகைக வளம்பாடிக் காலிற்
> பிரியாக் கவிகைப் புலையன்றன் யாழி
> னிகுத்த செவிசாய்த் தினியினிப் பட்டன
> வீகைப்போர் கண்டாயும் போறிமெய் யெண்ணிற்
> றபுத்த புலர்வில புண்" —கலித்தொகை 95

'காலிற் பிரியாக் கவிகைப் புலையன்' என்று கூறியதால் குறும்பூழின் காலிலிருந்து பிரியாத கவிந்த கையுடைய புலையனைக் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம். இக் காலத்திலும் குறும்பூழைப் போரிடப் பழக்குவோர் கவித்த கைவிரலின்மேல் குறும்பூழ் எப்போதும் இருக்கும்படி செய்து தீனியூட்டி வளர்த்து வருவதைக் காணலாம். குறும்பூழைக் கையிலேயே பழக்கும் வழக்கத்தைப் பழமொழியும் கூறியிருப்பதையும் கவனிக்காமல் உரையாசிரியர்கள் இந்த இடத்தில் பொருத்தமான பொருளைக் கூருது யாழைக் கையில் வைத்திருந்த புலையன் என்று பொருள் கூறினர். குறும்பூழைப் போரிட அனுப்பும் போது மந்திரஞ் சொல்லி அனுப்புவது வழக்கம். புறப்பொருள் வெண்பாமாலை உரையில் குறும்பூழ்க்கு தீற்றும் அரிசி ஓது மந்திரமும், பச்சிலை பிசைந்து தடவும்போது

சொல்லு மந்திரமும், செவியுள்ளுறுத்து மந்திரமும் என்று சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம்.

குறும்பூழ்களைத் தடவி ஒரு குறும்பூழ்க்கு மற்றொரு குறும்பூழ் தெரிந்து பொருத்துவதுண்டு என்றும் கூறப்பட்டுள்ளது. 'கறுவொடு மொன்றேடொன்று காரண மின்றிச் சீறிப், பொறியுடைக் குறும்பூழ் தம்மிற் போர்செயப் பொருத்து மோதை' என்று சிந்தாமணி கூறியிருப்பதைக் காணலாம். தொல்காப்பிய உரையாசிரியர் சிலர் குறும்பூழ் என்பது ஒரு பறவைச் சாதிப் பெயரென்றும், சிலர் இனஞ் சுட்டிய பெயர் என்றும் கூறினர். கலித்தொகையில் குறும்பூழ் என்றும் பூழ் என்றும் ஒரே பாட்டில் கூறப்படுவதால் இனப்பெயர் என்று கொண்டனர் என்று தெரிகின்றது. குறும்பூழ் எனும் காடையும் பூழ் எனும் கவுதாரியும் உருவில் ஒத்திருப்பதால் இரண்டிற்கும் ஒரே இனப் பெயரென்று கொண்டனர். கலித்தொகையில் ஈகை என்ற புதிய பெயர் குறும்பூழ்க்குக் கூறப்பட்டுள்ளது. இந்தப் பெயர் வேறு நூல்களில் பயிலவில்லை. ஈகைப் போர், பார்வைப்போர் என்ற வழக்குகள் கலித்தொகையில் காணப்படுகின்றது. இவை நாட்டுமக்களிடையே வழங்கியவையாக இருக்கலாம். போரில் குறும்பூழ்க்குப் புண்கள் உண்டாவது பற்றியும் அதற்கு மருந்திடுவது பற்றியும் கலித்தொகை கூறுகின்றது. குறும்பூழைப் போர்க்குப் பொருத்துபவனை, இயக்குபவனை இயக்கன் என்று கலித்தொகை உரை குறிப்பிடுகின்றது.

சங்க நூல்களில் கவுதாரியைச் சிவல் என்றும் பூழ் என்றும் அழைத்ததாகத் தெரிகின்றது.

> "பொறிப்புறப் பூழின் போர்வல் சேவல்
> மேந்தோல் களைந்த தீங்கொள் வெள்ளிளட்
> சுளகிடை யுணங்கற் செவ்வி கொண்டுடன்"
>
> —புறம். 321

> "பூழ்க்கா லன்ன செங்கா லுழுந்தின்
> ஊழ்ப்படு முதுகா யுழையினங் கவரும்"
>
> —குறுந்தொகை. 68,

''வன்பாலாற் கருங்கால் வரகின்
அரிகாற் கருப்பை யலைக்கும் பூழின்
அங்கட் குறுமுயல் வெருவ வயல'' —புறம். 384

''பறழ்ப்பன்றிப் பல்கோழி
யுறைக் கிணற்றுப் புறச்சேரி
மேழகத் தகரொடு சிவல்விளை யாடக்''
—பட்டினப்பாலை. 75 - 77

''இரும்பார்க்குங் காலராய் ஏதிலார்க் காளாய்
கரும்பார் கழனியுட் சேர்வர்—சுரும்பார்க்குங்
காட்டுளாய் வாழுஞ் சிவலுங் குறும்பூழுங்
கூட்டுளாய்க் கொண்டுவைப் பார்'' —நாலடியார் 122

பூழ் என்பதற்குப் பிற்காலத்தில் உரையாசிரியர்கள் குறும்பூழ் என்று பொருளெழுதினர். அது பொருந்துவதாகத் தெரியவில்லை. குறும்பூழ் என்ற பெயரே பூழ் என்ற பறவையைவிடக் குறியது என்றபொருளில் வழங்கியதாகத் தெரிகின்றது. கவுதாரியும் காடையும் உருவிலும் நிறத்திலும் மிகவும் ஒத்துள்ளதால் பூழ் என்றும் குறும்பூழ் என்றும் முறையே பெயரிட்டதாகத் தெரிகின்றது. பறவை நூலாரும் இவற்றை மிக நெருங்கிய இனப் பறவைகளாகவே கருதுகின்றனர். திவாகர நிகண்டு காடையின் பெயர் குறும்பூழ் என்று கூறும் பாட்டிலேயே நிலங்கு என்பது பூழின் பெயர் என்று கூறியிருப்பதைக் காணலாம். ஆதலின் குறும்பூழிலிருந்து வேறானது பூழ் என்ற பறவை என்பது தெளிவாகின்றது. திவாகர நிகண்டு பூழான் என்பதற்குச் சிவல், கவுதாரி என்று பொருள் கூறியிருப்பதும் கவனிக்கத்தக்கது. பூழான் என்ற பெயர் பூழ் என்ற பெயரின் மாற்றமேயாகும். ஆதலின் பூழ் என்று சங்க நூல்கள் குறிப்பிடுவதும் பூழான் என்று திவாகர நிகண்டு கூறுவதும் கவுதாரியேயாகும் என்பது தெரிகின்றது. நிலங்கு என்ற பெயர் பூழ்க்கு வழங்கும் என்று நிகண்டுகள் கூறுகின்றன. வானில் பறக்காமல் நிலத்தில் வாழ்வதால் 'நிலங்கு' என்ற பெயர் வந்திருக்கலாம்.

பூழ் எனப்படும் கவுதாரிக்குப் 'பொறிப்புறம்' இருப்ப தாகப் புறநானூறு கூறியுள்ளது உண்மையே. கவுதாரிக்கு மேற்புறம் வளைவான சிறு சிறு வரிகள் குறுக்கிலும் நெடுக் கிலும் காணப்படும். உழுந்துச் செடியின் காம்பு' இளஞ் சிவப்பாக இருப்பதுபோலப் பூழின் கால்கள் இருந்ததாகக் கூறியது உருவிலும் நிறத்திலும் பொருத்தமாயுள்ளது. வரகுவிளையும் வறண்ட நிலத்தில் அரிகாலில் கருப்பை எலியொடு போரிடும் கவுதாரி என்று புறநானூறு கூறி யுள்ளது உண்மையான சூழ்நிலையை நன்கு உணர்ந்து கூறிய செய்தியாகும். பன்றி, கோழி, ஆடு ஆகியவற் றுடன் புறச்சேரியில் கவுதாரியும் வளர்க்கப்பட்டதாகப் பட்டினப்பாலை கூறியுள்ளது. சங்க காலத்திலேயே போரிடும் கவுதாரியை வளர்த்து வந்தனரென்பது தெரி கின்றது காட்டில் வாழுங் குறும்பூழையும் சிவலையும் கூட்டில் வைத்தல் பாவம் என்று நாலடியார் கூறியதும் காண்க. கவுதாரியையும் போரிடப் பயிற்சி செய்து விளை யாடி மகிழ்ந்தனர் என்பதைப் புறப்பொருள் வெண் பாமாலை கூறியுள்ளது. சிவல் வென்றி என்பது வேந்தரும் மக்களும் நடத்திய விளையாட்டுகளில் ஒன்றாகும். குறும் பூழை ஆங்கிலத்தில் The Common Quail (or) Grey Quail என்பர். பறவை நூலார் Coturnix Coturnix என் றழைப்பர். பூழ் எனும் கவுதாரியை The Grey Partridge என்று ஆங்கிலத்திலும் Francolinus Pondicerianus என்று பறவை நூலிலும் அழைப்பர்.

சிவல் என்ற பெயர் கவுதாரிக்குப் பெயராகப் பட்டினப் பாலையில் வருகின்றது. நிகண்டுகளும் சிவல் என்ற பெயர் கவுதாரியைக் குறிக்கும் என்று சொல்லுகின்றன. சிவல் என்ற பெயர் கவுதாரியின் இளஞ்சிவப்பு நிறம் காரண மாகப் பெற்ற பெயர் என்று தெரிகின்றது. சிவலைக்காடை, செவ்வல்காடை என்று உரையாசிரியர்கள் சிவந்த நிற மான காடையைக் குறித்துச் சொல்லியிருப்பதையும் இது சார்பாகக் கவனிக்க வேண்டும். சிவல் என்ற பெயர் காடைக்கும் பிற்காலத்தில் வழங்கியதென்று தெரிகின்றது.

நிகண்டுகளில் சிவலின் மறு பெயராக இதல் என்ற பெயர் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். கவுதாரியை இதல் என்று தவறுதலாகக் கருதினர். 'கவுதாரியின் பெயர் இதலே பூழான் சிவல்' என்று திவாகரம் கூறுகின்றது. திவாகரம் திரும்பவும் 'இதலே பகண்டை சிவலா கும்மே' என்று கூறுகின்றது. சிவல் எனப்படும் கவுதாரி இதலின் வேறான பறவை என்பது நிகண்டாசிரியர்கள் காலத்தில் தெளிவாக உணரப்படவில்லை என்பது தெரிகின்றது. நிகண்டுகளில் வரும் பாடல்களில் கூறப்படும் பெயர்களைப் பிரித்து எடுத்து அச்சிடும்போது பிழைகள் விளைந்திருப்பதைக் காணலாம். சிவலின் பெயராகக் கூறப்படும் பெயர்களிலும் இந்தப் பிழைகள் இருக்கின்றன.

"குலிங்கமே சடக மேயூர்க் குருவியாம் புலிங்க மும்பேர்
கிலங்குபூ ழாங்கா தம்ப கெடியகா னங்கோ ழிப்பேர்
கலிங்கமே கம்புள் வானம் பாடியாங் குறும்பூழ் காடை
இலங்குகோ ரசமே புல்லோ டிதல்சிவ லிவைமுப் பேரே"
—சூடாமணி. 59

"சிரவமே கௌதாரிப்பேர் சில்லையே பகண்டை யாகும்"
—சூடாமணி. 60

மேலே காட்டிய சூடாமணி நிகண்டுப் பாடலில் (59) மூன்றாவது வரியில் குறும்பூழ் காடையென்று கூறப்பட்டுப் பின்னர் நாலாவது வரியில் சிவல் கூறப்பட்டுள்ளது. நாலாவது வரியில் 'இலங்கு கோரசமே புல்லோடிதல் சிவலிவை முப்பேரே' என்று கூறப்பட்டுள்ளது. இந்த நான்காவது வரியில் சொல்லப்பட்ட பறவைப் பெயர்களாகக் கோரசம், புல், இதல், சிவல் எனக் கொண்டனர். ஆனால், இது தவறு என்று தெரிகின்றது.

கோரசம் என்ற பெயரை அடுத்துப் புல் என்ற பெயர் இருப்பதாகக் கொண்டது பொருத்தமற்றது. புல்லோடிதல் என்று சேர்த்துக் கூட்டிப்படித்துப் புல்லில் ஓடும் இதல்

என்று பொருள் கொள்ள வேண்டியுள்ள இடத்தில் புல்லுடன் இதல் [புல்+ஒடு+இதல்] என்று பொருள் கொண்டனர். இதல் என்ற பறவை நிலத்தில் வாழ்வது. புல்லில் புதரில் வாழ்வது ஆதலின் புல்லில் ஓடும் இதல் என்று கொள்ள வேண்டும். மற்றும் கோரசம், இதல், சிவல் இவை மூன்றும் சேர்ந்தால் முப்பேராகும் முடிவைக் கொள்ளும். ஆனால், கோரசம், புல், இதல், சிவல் என்றால் நான்கு பெயர்கள் ஆகும். ஆதலின் புல் என்ற சொல்லைச் சிவலின் பெயராகக் கொண்டது பிழையாகும்.

புல் என்ற சொல் ஒரு பறவையைக் குறித்தது என்பது நம்பமுடியாததாகும். புல் என்ற பெயர் கயாதரம், உரிச்சொல் நிகண்டுகளில் கூறப்படவில்லை. 'கோரசம் இதல் சிவல் இவை முப்பேரே' என்பதுடன் அடுத்த பாட்டின் முதல் வரியையும் சேர்த்துப் படித்தல் வேண்டும். அப்படிச் சேர்த்துப் படித்தால் 'முப்பேரே சிரவமே கௌதாரிப்பேர்' என்று வரும். முப்பேருடன் சிரவம் என்ற பெயரையும் சேர்த்துக் கௌதாரிபபேர் என்று கொள்ளவேண்டும். நிகண்டுகளில் இந்தவகைப் பிழைகள் பெயர்களைப் பிரித்துப் பொருள் கூறும்போது நிகழ்ந்திருப்பதை இதே பாடலில் இன்னோர் இடத்திலும் காண்கிறோம். மூன்றாவது வரியில் 'கலிங்கமேகம்புள் வானம்பாடி' என்பதைக் கலிங்கமே கம்புள் என்று கொண்டு வானம்பாடிக்குக் கலிங்கமென்ற பெயரும் கம்புள் என்ற பெயரும் உள்ளதாகக் கொண்டனர். இதுவும் மிகவும் பிழைபட்ட உரையாகும். கலிங்கம், மேகம்புள் (மேகப்புள்) வானம்பாடி' என்று பொருள்கொள்ள வேண்டியிருப்ப இங்கு இல்லாத கம்புள் பெயரைக் கொண்டுவந்து தவறிழைத்தனர்.

பிங்கலந்தைப் பாடல் இதை நன்கு எடுத்துக் காட்டுகின்றது. வானம்பாடியின் பெயரைக் கூறும்போது வானம்பாடியின் பெயர் கலிங்கம் வானம்பாடியாகும் என்று கூறி மற்றும் வானம்பாடியின் பெயர் மேகப்புள்ளென்றும்

விளம்பலாகும் என்று சொல்லியிருப்பதால் மேகம்புள் என்ற பெயர் வானம்பாடிக்கு உண்டு என்பது தெளிவாகின்றது. வானத்தில் பாடும் பறவையை மேகத்துப் புள் என்று சொன்னதும் பொருத்தமே. ஆதலின் சூடாமணியில் கம்புள் என்று புதியதாக வானம்பாடிக்குப் பெயர் ஒன்று உண்டுபண்ணியது தவறாகும். கம்புளைப் பற்றிய பாடலிலும் இப் பெயர் வானம்பாடியின் பெயராக எந்த நிகண்டும் கூறவில்லை என்பதையும் நோக்க வேண்டும். ஆதலின் நிகண்டுகளில் பிரித்துப் பொருள் கூறுங்கால் ஏற்பட்ட பிழைகளில் புல் என்று ஒரு பெயர் சிவலுக்கு இருப்பதாகக் கொண்டது ஒன்றாகும்.

---

## உ௬. குயில்
## (INDIAN KOEL)

குயிலைப்பற்றித் தெரியாதவர்கள் யாரும் இருக்க முடியாது. குயிலில் பலவகைகள் உண்டு. ஆனால், கருங்குயில் என்பதையே பலரும் குயில் என்று கூப்பிடுகின்றனர். சங்க நூல்களில் இந்தக் கருங்குயிலைப் பற்றிப் பல பாடல்கள் உண்டு. தமிழ் நாட்டில் வேனிற்காலத் தொடக்கத்தில் இந்தக் குயில் கூவுவதைக் கேட்கலாம். குயிலில் ஆண் பறவை கருமையாகவிருக்கும். பெண்குயில் கரும்பழுப்பு நிறமாக, வெள்ளைப் புள்ளிகளுடன் வரிகளுடன் காணப்படும். சங்க நூல்களில் இந்தக் கருமையான ஆண்குயிலே பல பாடல்களில் கூறப்பட்டுள்ளது. பெண்குயிலைப் பற்றித் தெளிவான செய்திகள் இல்லை.

"இனையல் என்றி தோழி சினைய
பாசரும் பின்ற செம்முகை முருக்கினப்
போதவிழ் அலரி கொழுநிழ் தாதருந்து
அந்தளிர் மாஅத்து அலங்கள் மீமிசைச்
செங்கண் இருங்குயில் நயவரக் கூஉம்
இன்னிள வேனிலும் வாரார்
இன்னே வருதும் எனத்தெளித் தோரே" —அகம். 229

"யாங்கா குவள்கொல் தானே நீங்தொடை
விளரி நரம்பின் நயவரு சீறியாழ்
மலிபூம் பொங்கர் மகிழ்குரல் குயிலோடு
புணர்துயில் எடுப்பும் புனல்தெளி காலையும்"

"அரவெயிற்று அன்ன அரும்புமுதிர் குரவின்
தேனிமிர் நறுஞ்சினைத் தென்றல் போழக்
குயில்குரல் கற்ற வேனிலுந் துயில்துறந்து
இன்னு கழியுங் கங்கு லென்றுநின்" —அகம். 237

"அற்சிர நீங்கிய அரும்பத வேனில்
அறலவிர் வார்மணல் அகலியாற் றடைகரைத்
துறையணி மருது தொகல்கொள வோங்கிக்
கலிழ்தளிர் அணிந்த இருஞ்சினை மாஅத்
திணர்ததை புதுப்பூ நிரைத்த பொங்கர்ப்
புகைபுரை அம்மஞ் ஞர
நுகர்குயில் அகவும் குரல்கேட் போர்க்கே" — அகம். 97

"நெடுங்கரைக் கான்யாற்றுக் கடும்புனல் சாஅ
யவிரறல் கொண்ட விரவுமண லகன்றுறைத்
தண்கய நண்ணிய பொழில்தொறுங் காஞ்சிப்
பைந்தா தணிந்த போதுமலி யெக்கர்
வதுவை நாற்றம் புதுவது கஞல
மாநனை கொழுதிய மணிநிற விருங்குயில்
படுநா விளியா னடுநின் றல்கலு
முரைப்ப போல வூழ்கொள்பு கூவ
வினச்சிதர் ருகுத்த விலவத் தாங்கட்
சினைப்பூங் கோங்கி னுண்டாது பகர்நர்" — அகம். 25

"கோங்கும் கொய்குழை யுற்றன குயிலுந்
தேம்பாய் மாஅத் தோங்குசினை விளிக்கும்
நாடார் காவிரிக் கோடுதோய் மலிர்நிறைக்"
—அகம். 341

"மானே முற்ற காமர் வேனில்
வெயிலவிர் புரையும் வீததை மராஅத்துக்
குயிலிடு பூசல் எம்மொடு கேட்ப" —அகம். 317

"மாவும் வண்டளிர் ஈன்றன குயிலும்
இன்றீம் பல்குரற் கொம்பர் நுவலும்" —அகம் 355

"அழுந்துபடு விழுப்புண் வழும்புவாய் புலரா
எவ்வ நெஞ்சத் தெஃகெறிந் தாங்குப்
பிரிவில புலம்பி நுவலுங் குயிலினும்" —நற்றிணை 97

"நம்வயின் நினையு நெஞ்சமொடு கைம்மிகக்
கேட்டொறுங் கலுழுமால் பெரிதே காட்ட

ஆற்றல் நுணங்கிய நாட்பத வேனில்
இணர்துதை மாஅத்த புணர்குயில் விளித்தொறும்"
—நற்றிணை. 224

"புணர்ந்தீர் புணர்மி னோவென இணர்மிசைச்
செங்கண் இருங்குயில் எதிர்குரல் பயிற்றும்
இன்ப வேனிலும் வந்தன் று நம்வயின்
பிரியல மென்று தெளித்தோர் தேஎத்து
இனியெவன் மொழிகோ யானே கயனற"
—நற்றிணை. 224

"அடைகரை மாஅத்து அலங்குசினை ஒலியத்
தளிர்கவின் எய்திய தண்ணறும் பொதும்பின்
சேவலொடு கெழீஇய செங்கண் இருங்குயில்
புகன்றெதிர் ஆலும் பூமலி காலையும்
அகன்றோர் மன்றநம் மறந்திசி னோரென"
—நற்றிணை. 118

"அலங்குசினை பொதுளிய நறுவடி மாஅத்துப்
பொதும்புதோ றல்கும் பூங்கண் இருங்குயில்
கவறு பெயர்த்தன்ன கில்லா வாழ்க்கையிட்டு
அகறல் ஓம்புமின் அறிவுடை யீரெனக்
கையறத் துறப்போர்க் கழறுவ போல
மெய்யுற இருந்து மேவர நுவல" —நற்றிணை. 243

"மாநனை கொழுதி மகிழ்குயி லாலும்
நறுந்தண் பொழில கானங்
குறும்ப லூரயாஞ் செல்லும் ஆறே" —நற்றிணை. 9

"மின்னின் றூவி யிருங்குயில் பொன்னின்
உரைதிகழ் கட்டளை கடுப்ப மாச்சினை
நறுந்தாது கொழுதும் பொழுதும்
வறுங்குரற் கூந்தற் றைவரு வேனே"
—நற்றிணை. 192

"மனைமர நொச்சி மீமிசை மாச்சினை
வினைமாண் இருங்குயில் பயிற்றலும் பயிற்றும்"
—நற்றிணை. 246

"அஞ்சினைப் பாதிரி யலர்ந்தெனச்
செங்க ணிருங்குயி லறையும் பொழுதே"
—ஐங்குறு நாறு. 346

"குரவ நீள்சினை யுறையும்
பருவ மாக்குயிற் கௌவையிற் பெரிதே"
—ஐங்குறு நூறு. 369

"குயில்வா யன்ன கூர்முகை யதிரல்" —புறம். 269

"செல்புன லுழந்த சேய்வரற் கான்யாற்றுக்
கொல்கரை நறும்பொழிற் குயில்குடைந் துதிர்த்த
புதுப்பூஞ் செம்மல் சூடிப் புடைநெறித்துக்"
—சிறுபாணாற்றுப்படை-வரி. 3-5

"ஆவுதி நறும்புகை முனைஇக் குயிறம்
மாயிரும் பெடையோ டிரியல் போகிப்"
—பட்டினப்பாலை-வரி-55-56

"குருகிலை யுதிரக் குயிலினங் கூவப்"
—பரிபாடல். 15 : 41

"கூடிப் புணர்ந்தீர் பிரியன்மி னீடிப்
பிரிந்தீர் புணர்தம்மி னென்பன போல
வரும்பவிழ் பூஞ்சினை தோறு மிருங்குயி
லானு தகவும் பொழுதினான் மேவர"
—கலித்தொகை-92

"வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்"
—மணிமேகலை-4. வரி-5

"கொம்ப ரிருங்குயில் விளிப்பது காணாய்"
—மணிமேகலை-4. வரி. 13

"வரிக் குயில்கள் கோதிய தண்பொழில்சூழ்
கொடிமாடச் செங்குன்றூர்" —தேவாரம். 107-10

அகநானூற்றிலும் (25, 229) நற்றிணையிலும் (118, 246, 192) ஐங்குறு நூற்றிலும் (346) 'இருங்குயில்' என்று அழைக்கப்படுவதால் கருங்குயிலைப்பற்றியே சங்க நூல்கள்

பாடியுள்ளன என்பது தெளிவாகின்றது. அகநானூறு (25) 'மணிநிற இருங்குயில்' என்றது இதன் ஒளிவிடும் கருமையைக் குறித்ததாகும். நீலமணி போல ஒளிவிடும் கருமையான தூவிகளை உடைய குயில் என்று விளக்கம் கூற வேண்டும். பறவை நூலாரும், மின்னும் நீல நிறத்துடன் கூடிய கருமையானது என்று (black with bluish green gloss) விளக்கியுள்ளனர். கருங்குயிலின் மின்னும் சிறகைத் தெளிவாக நற்றிணைப்பாடல் (192) விளக்குகின்றது. 'மின்னின் தூவி இருங்குயில்' என்றழைத்துள்ளது. கருங்குயிலின் மின்னும் தூவி கரிய உரைகல் பொன்துகளோடு மின்னுவது போலிருப்பதாகக் கூறியுள்ளதைக் கவனிக்கவேண்டும். பறவை நூலாரும் மின்னும் கறுப்பு நிறத்தையுடைய ஆண்குயிலைப்பற்றி (Male glistening black all over with crimson eyes) இது போன்றே விளக்கியுள்ளனர். கருங்குயிலின் கண் நல்ல சிவப்பாக (crimson) இருக்கும் என்று பறவை நூலார் கூறுவர். கருப்புநிற உடலும், சிவந்த கண்ணும் 'கூகூ' என்று பல தடவை கூவும் குரலும் ஆண்குயிலைக் கண்டு பிடிக்கும் குறிகளாகும். குயிலின், சிவந்த கண்ணையும் சங்க நூல்கள் கூறியுள்ளன. 'செங்கண் இருங்குயில்' என்று அகநானூறு 229ஆம் பாடலும், நற்றிணை 224ஆம் பாடலும் கூறுகின்றது. நற்றிணை 243ம் பாடல் 'பூங்கண் இருங்குயில்' என்று கூறியுள்ளது. 'பூங்கண்' என்பது செங்கண்ணைக் குறிக்கும். பூ என்ற சொல் சங்க இலக்கியத்தில் சில இடங்களில் சிவப்பு நிறத்தைக் குறிக்கின்றது. குயிலின் கண்ணையும் அதன் அளவையும், உருவையும் நிறத்தையும் ஓர் அரிய உவமை வாயிலாக அகநானூறு விளக்கியுள்ளதைக் காணலாம்.

> *"குயிற்கண் ணன்ன குரூஉக்காய் முற்றி*
> *மணிக்கா சன்ன மானிற இருங்கனி*
> *உகாஅ மென்சினை உதிர்வன கழியும்."* — அகம் 293

குயிலின் கண் மணிக்காசு போன்று உருண்டையாக இருக்குமென்றும், உகாய் மரத்தின் முற்றிய காய் பழுத்

தாற் போன்று இருக்குமென்றும், அகநானூற்றில் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். உகாயின் (Mustard tree) பழம் சிவப்பாயிருக்கும். 1/8 அங்குல அளவுள்ள உகாயின் சிவந்த பழம் குயிலின் கண்ணிற்கு ஒப்பிடப்பட்டுள்ளது பொருத்தமேயாகும். எவ்வளவு நுண்ணிதாக ஆராய்ந்து குயிலின் கண்ணிற்கு உகாய்ப்பழத்தை உவமை கூறியுள்ளனர் என்பதைக் கவனிக்கவேண்டும். குயிலின் அலகு அதிரலின் கூரிய முகைபோல இருப்பதாகச் சிறுபாணாற்றுப்படை கூறியுள்ளது. குயிலின் அலகு மஞ்சள் கலந்த பச்சையாகக் காணப்படும். அதிரல் பூவின் முகையும் குயிலின் மூக்கைப்போல உருவில் ஒத்து வளைந்து காணப்படுகின்றது.

குயில் பயிலும் மரங்களையும் செடிகளையும் சங்கப் புலவர்கள் கவனித்துக் கூறியுள்ளனர். குயில்கள் எப்போதும் அடர்ந்த கொம்புகளின் இலைகளின் உள்ளே காணப்படும். அதனால் குயில்களைக் கண்டுபிடிப்பது எளிதன்று. ஆனால், வேனிற்காலம் துவங்கியதும் குயிலின் குரலிலிருந்து கண்டுபிடித்துவிடலாம். மற்றக் காலங்களில் குயிலின் குரலைக் கேட்க முடியாது. குயில் வேனிற்காலத்தில் கூவுவதையே சங்க நூல்கள் பல பாடல்களில் கூறியுள்ளன. குயில் மரங்கள் சூழ்ந்த சோலைகளிலும் தோட்டங்களிலும் விரும்பி வாழும். வெயில் நுழையாத பொதும்பரில் குயில் நுழைந்து வாழ்வதாக மணிமேகலை கூறுகின்றது. குயில் மரத்திலிருந்து கீழே இறங்குவது இல்லை. ஆதலின் 'கொம்பர் இருங்குயில்' என்று மணிமேகலை கூறியுள்ளது. குயில் பொழிலிலும், மரச் சூழல்களிலும் இருப்பதைச் சங்க நூல்கள் பாடியுள்ளன. சோலைக் குயில், குயில் பொதும்பு என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. குயில் மாமரத்தில் விரும்பி இருப்பதாகச் சங்க நூல்கள் குறிப்பிட்டுள்ளன. மாங்குயில் என்ற பிற்கால வழக்கும் உள்ளது. 'மாங்குயில் கூவிடும் சோலை' என்று பாரதிதாசன் மரபு வழுவாது கூறியுள்ளார். குயில் ஆற்றங்கரையில் இருந்த மருத மரச்சூழலிலும், காஞ்சி மரப்

பொழிலிலும் கூவுவதாக அகநானூறு கூறியுள்ளது. புதுத்தளிர்விட்ட மரங்களிலும் பூவரும்பிய மரங்களிலும் குயில் விரும்பி இருப்பதாகச் சங்க நூல்கள் குறிப்பிடு கின்றன. இலைகளில் காணப்படும் புழுப்பூச்சிகளையும் பழங்களையும் குயில் தின்றுவாழும். மற்றும் குயில் சில மரங்கள் பூக்கும்போது பூவில் உள்ள தேனைக் குடிக்கின் றதைப் பறவை நூலார் கவனித்துள்ளனர். கலியாண முருங்கை மரத்தின் பூவில் குயில் தேன்குடிப்பதைப் (Coral tree) பறவை நூலார் குறிப்பிட்டுள்ளனர். முருக்கின் அன் றலர்ந்த பூவைக் கொழுதித் தாதருந்தும் குயிலைப் பற்றித் தெளிவாக அகநானூறு 229ஆம் பாடல் கூறியுள்ளது. தாது என்பது மகரந்தத்தைக் குறித்தாலும் தேன் உண் ணும்போது குயிலின் மூக்கில் தாதுபட்டு மகரந்தச் சேர்க்கை நடப்பதாகப் பறவை நூலார் கூறிய செய்தியைக் கவனிக்கவேண்டும். பொழிலில் புதுப்பூவைக் குயில் குடைந்து உதிர்த்ததால் விழுந்த பூவிதழ்களைப்பற்றிச் சிறு பாணாற்றுப்படை கூறியுள்ளது. மாம்பூவைக் கொழுதுவதை யும் இலவம்பூவைச் சிதறுவதையும் அகநானூறு சொல்லி யுள்ளது. தேனுண்ணக் குயில் பூக்களைக் கொழுதுவதும் குடைவதும் சங்கப் புலவர்கள் கண்டறிந்த செய்தி களாகும். சங்க நூல்களில் மா, இலவம், கோங்கு, குரா, பரதிரி ஆகிய மரங்கள் பூக்கும்போது குயில்கள் அந்த மரங்களிலிருந்து கூவுவதாகக் கூறியிருப்பதையும் கவனிக் கலாம்.

குயில் வேனிற்காலத்தில் கூவுவதாகச் சங்க நூல் களில் பல பாடல்கள் கூறுகின்றன. குயில் கூவும் இள வேனிலில் தலைவன் வராததைக் கூறும் தலைவியைப்பற்றிப் பல பாடல்கள் வருகின்றன. இன்ப வேனில் வந்து விட்டது, புணர்ந்தீர் புணர்மின் என்று குயில்கள் கூவுவ தாக நற்றிணை கூறியுள்ளது. வேனிற் காலத்தில் குயில்கள் புணர்வதாகவும் நற்றிணை கூறுகின்றது. வெயிற்காலத்தில் குயில்கள் இணை சேர்கின்றன என்று பறவை நூலாரும் கூறுவர். இவ்வுலகின் நில்லா வாழ்க்

கையை நினைத்து அகலாது சேர்ந்திருக்கும்படியும், கூடிப் புணர்ந்தவர் பிரியக்கூடாது என்றும் குயில் கூவுவதாகவும் கற்பனைசெய்து சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர். குயிலின் குரலை இனியதென்று கருதினர். குயில்கள் எதிரெதிர் மாறிமாறிக் கூவுவதாகவும் சங்க நூல்கள் கூறுகின்றன. இம்முறையாக எதிரெதிர் குயில்கள் கூவுவதையே 'பூசல்' என்றும் 'கௌவை' என்றும் சங்க நூல்கள் கூறுகின்றன. ஒன்றுக்கொன்று சொற்போர் புரிவது போல் குயில்கள் கூவுவதையே இவ்வாறு சங்க நூல்கள் குறிப்பிட்டுள்ளன. நற்றிணையில் (118) 'சேவலொடு கெழீஇய செங்கண் இருங்குயில் புகன்றெதிர் ஆலும்' என்று வரும் வரிக்கு உரை கூறுங்கால் சேவலொடு பொருந்திய செங்கண் இருங்குயிலாகிய பெட்டை என்று பொருள் சொல்லியிருப் பதைக் காணலாம். ஆனால் பறவை நூலார் ஆண் குயிலும் பெண்குயிலும் எதிரெதிர் கூவுவதைக் காணவில்லை. கரிய குயில் பெட்டையாக இருக்க முடியாது. சேவலாகத்தான் இருக்க முடியும். ஆதலின் இந்த நற்றிணைவரிக்கு வேறு முறையாகப் பொருள் கொள்ளவேண்டும். குயில்கள் ஓயாது கூவுவதை 'ஆனாது அகவும்' என்று கலித்தொகை கூறியுள்ளது. குயில் நுகர்வதாகவும், அறைவதாகவும், புகல்வதாகவும், விளிப்பதாகவும், நயவரக் கூவுவதாகவும் சங்க நூல்கள் கூறியுள்ளன. அகநானூற்றில் (25) 'ஊழ் கொள்பு கூவ' என்று முறையாகக் குயில்கள் வேனிற் காலத்தில் கூவுவது குறிப்பிடப்பட்டுள்ளது. ஆண்டு தோறும் மற்றக் காலங்களில் குரல் காட்டாது இருந்து வேனிற்காலத்தில் தவறாது கூவுவதால் இவ்வாறு கூறப் பட்டுள்ளது. குயில் விடியற் காலையில் கூவுவதை அக நானூறு 279ஆம் பாட்டும் குறிப்பிட்டுள்ளது. சீறியாழ்ப் பாடல் குயிலின் குரலொடு சேர்ந்து காதலரை துயில் எழுப்பும் காலை, மகளிர் தண்ணீர் தெளிக்கும் காலை என்று அகநானூறு கூறுகின்றது. வேனிற் காலத்தில் விடியற் காலைக்கருக்கலில் முதலில் கூவும் பறவை குயிலென்று கூறுவர். குயிலின் குரல் மெல்லிய ஓசையன்று என்று

உரையாசிரியர்கள் கூறியுள்ளனர். குயிலின் ஓசை பஞ்சம் சுரமென்று கருதினர். குயிலின் குரல் 'புகல்' என்ற சுரத்தில் இருப்பதாகக் கன்னடத்தில் கருதப்படுகின்றது. 'புகன்றெதிர் ஆலும்' என்ற நற்றிணை வரியில் புகன்று என்று குயில் கூவுவதற்குக் கூறப்பட்டுள்ளதை இது சார் பாகக் கவனிக்கவேண்டும்.

குயில்களில் பலவகை இருந்தும் கருங்குயிலைப் பற்றியே சங்க நூல்களில் செய்திகள் கூறப்பட்டுள்ளன. கருங்குயில் பாடும்போது கூ கூ என்று மிகுந்த ஓசையுடன் மாறி மாறிக் கூவி ஏழாவது அல்லது எட்டாவது தடவை உச்ச இடத்தை அடைந்து உடனே நிறுத்திக் கொள்ளும் என்று பறவை நூலார் கூறுவர். காக்கையின் கூட்டில் முட்டையிடுவதைப் பற்றிச் சங்க நூல்களில் செய்திகள் இல்லை. பெண்குயில் அடைகாப்பதில்லை. ஆதலின் காக்கையின் கூடுகளில் முட்டையிடுகின்றது. காக்கையைக் கூட்டிலிருந்து வெளியேற்ற ஆண்குயில் போக்கு காட்டும் போது பெண்குயில் காக்கையின் கூட்டில் முட்டை யிடுகின்றது. காக்கை முட்டையிடும் காலத்திலேதான் குயிலும் முட்டையிடும். குயிலின் முட்டையும் நிறத்திலும் உருவிலும் காக்கையின் முட்டைபோல் இருக்கும். மனிதரையும் ஏமாற்ற வல்ல காக்கை குயிலிடம் ஏமாந்து போய், குயிலின் முட்டைகளையும் அடைகாத்துக் குயிற் குஞ்சிற்கு இரையூட்டும். குயில் குஞ்சு பெரிதானதும் காக்கை குஞ்சுகளைக் கூட வெளியே தள்ளிவிடும். குயில் குஞ்சு நிறத்திலும், குரலிலும் காக்கை போலவே இருக்கும். காக்கையின் கூட்டில் குயில் முட்டையிட்டு ஏமாற்றுவதால் காக்கைக்குக் குயிலைச் சக்களத்தியாகக் கூறும் வழக்கு நாட்டு மக்களிடையே இருக்கின்றது. குயில் சக்களத்தி என்று அழைப்பர். கருங்குயிலைத் தமிழ் நாட்டிலும், மலை யாள நாட்டிலும் காக்கைக்குயில் என்று அழைப்பர். காக்கை போன்று கருமையாக இருப்பதால் இவ்வாறு அழைக் கின்றனர். குயில் என்ற பெயரே குரலின் காரணமாக வந் திருக்கவேண்டும். வட நாட்டிலும் வெளிநாடுகளிலும் பல

மொழிகளில் குரலின் காரணமாகவே குயிலிற்குப் பெயர்கள் வழங்கிவருகின்றன. தெலுங்கிலும், மலையாளத்திலும் ஆண் குயிலிற்கும் பெண் குயிலிற்கும் தனிப்பெயர்கள் நாட்டு மக்களிடையே வழங்குகின்றன. மலையாளத்தில் பெண்குயிலைப் புள்ளிக்குயில் என்றும், ஆண்குயிலை காக்கைக் குயில் என்றும் வழங்குவர். தமிழ்நாட்டிலும் இந்த வழக்கு உண்டு. ஆனால் இவை பெண்ணும் ஆணும் என்று பிரித்துணர்ந்து கூறுகின்றனரா என்பது ஐயமாக உள்ளது. தேவாரத்தில் புள்ளிக்குயிலை, பெண்குயிலை "வரிக்குயில்'' என்று குறிப்பிட்டதைக் காணலாம். குயிலை ஆங்கிலத்தில் 'Indian Koel' என்றும் பறவை நூலில் 'Eudynamys Scolopacea Scolopacea' என்றும் அழைப்பர்.

———

## உச. குக்கில்

## (SOUTHERN CROW PHEASANT)

குக்கில் என்ற பறவை களவழிநாற்பதில் முதன் முதலாகக் கூறப்பட்டுள்ளது.

> "கோழியுங் கூவின குக்கில் குரல்காட்டுந்
> தாழியு ணீலத் தடங்கணீர் போதுமினோ"
> —யாப்பருங்கலக்காரிகை மேற்கோள்

> "தெரிகணை எஃகம் திறந்தவாய் எல்லாம்
> குருதி படிந்துண்ட காகம்—உருவிழந்து
> குக்கில் புறத்த சிரல்வாய செங்கண்மால்
> தப்பியார் அட்ட களத்து" —களவழிநாற்பது-5

குக்கில் என்பதற்குச் 'செம்போத்து' என்று பொருள் கூறப் பட்டுள்ளது. யாப்பருங்கலக்காரிகையில் வரும் மேற்கோள் பாடல் அருகதேவனைப் பற்றிய பாவைப் பாட்டிலிருந்து எடுத்தாளப்பட்டுள்ளது. ஆண்டாள் திருப்பாவையில் வருவதுபோல விடியற்காலையில் நடக்கும் நிகழ்ச்சிகள் கூறப்பட்டுள்ளன. கோழி கூவுவதையும், குக்கிலாகிய செம்போத்து கூவுவதையும் கூறியுள்ளதைக் காணலாம். மதுரைக் காஞ்சியில் கோழிச் சேவல் கூவுவதும் யானையங் குருகு கூப்பிடுவதும் கூறப்பட்டதோடு இதையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம். குக்கிலின் நிறம், உருவம், களவழி நாற்பதில் அழகாகக் கூறப்பட்டுள்ளது. செம்போத்து காக்கையைப் போன்று கருமையாயினும் உடலின் மேற்புறம் சிவந்த செம்பு நிறமாக இருக்கும். அதனால் காக்கையானது இரத்தத்தில் தோய்ந்து எழுந்தாற்போல குக்கில் இருந்த தாக உவமிக்கப்பட்டுள்ளது. மீன் கொத்தியின் மூக்கைப் போலக் காக்கையின் மூக்குச் சிவந்திருந்ததாகவும் கூறி யுள்ளதைப் பார்க்கலாம். குக்கில் என்ற பெயர் குங்கி

லயத்தைக் குறித்து வழங்கியுள்ளது. பின்னர் அந்த நிறமுடைய செம்போத்திற்கு வழங்கிற்று. திவாகரம் 'குங்கிலுவும், குக்கிலுவும் குங்கிலய மாகும்' என்று கூறி யிருக்கின்றது. செம்போத்து என்ற பெயர் மயிலைநாதர் உரையில் வருகின்றது. செம்போத்தைத் தற்காலத்தில் செண்பகம், செம்புவாக் காக்கை, கள்ளிக் காக்கை என்று தமிழ்நாட்டில் சில இடங்களில் அழைக்கின்றனர். மலையாள நாட்டில் செம்போத்தின் கூட்டைக் காண்பது நல்லது என்ற நம்பிக்கை உள்ளது. அரிய மூலிகைகளைச் சேர்த்துக் கூட்டில் வைத்துள்ளது என்றும் நம்புவர். இதனை வியாழக்கிழமையிலும், ஞாயிற்றுக்கிழமையிலும் காலையில் காண்பது நல்ல சகுனம் என்றும் கூறுவர். செம்போத்து ஆங்கிலத்தில் 'The Common Coucal' அல்லது 'Southern Crow Pheasant' என்று அழைக்கப்படும். இதன் அறிவியற் பெயர் Centropus Sinensis என்பதாகும்.

## உரு. காரி

## (KING CROW)

காரி என்ெருரு பறவைப் பெயர் சங்ககாலத்தில் வழங்கி யிருக்கலாம் என்று தோன்றுகின்றது. நிகண்டுகளில் காரி என்பது வலியன்பறவையென்று கூறப்பட்டுள்ளது. வலி யன் என்ற பெயர் கரிய நிறமுடைய இப்பறவைக்கு இன் றும் வழங்குகின்றது. மலையமான் என்ற வேளிர்குல அர சன் காரிப்பறவையைத் தன் குடியின் அடையாளமாகக் கொண்டதால் திருமுடிக்காரி என்று பெயர்பெற்றதாகத் தெரிகின்றது. அதுபோல கொல்லிமலையை ஆண்ட ஓரி அரசனும் நரியைத் தன் குடிக்கு அடையாளமாகக் கொண் டதால் ஓரி என்ற பெயர் பெற்ருன் என்று கருதலாம். பிற்காலத்தில் மலையமான்கள் பிருகுவம்சத்தைச் சேர்ந் தவர் என்று கூறிக்கொண்டனர். காரிக்கண்ணனுர் என்ற சங்ககாலப் புலவர் காரிப்பறவையின் கண்ணை ஒப்பிட்ட தால் பெயர் பெற்ருர். காரியின் கண் ஒளிமிக்கு சிவந்து காணப்படும். காரிகிழார் என்ற புலவர் பெயரும் உள்ளது. சங்கநூல்களில் மக்கள் பழகி அறிந்த விலங்குகள், பறவைகள்பற்றிய செய்திகளை மிகக்குறைவாகவே காண் கிரேம். அதனுல் மக்கள் நன்கு அறிந்திருந்த காரிப் பறவையைப்பற்றிய செய்திகள் சங்கநூல்களில் கூறப்பட வில்லைபோலும். காரியைச் சகுனப்பறவையாகவும் சங்க காலத்தில் நன்கு தெரிந்திருப்பர்.

வலியன் என்பது பாரத்துவாசன், வயவன் என்று பெயர் பெறும் என்று சேந்தன்திவாகரம் கூறியுள்ளது. உரையாசிரியர்கள் வலியன்குருவிக்குப் பொருளாக பாரத் துவாசன் என்ற வடமொழிப்பெயரைக் கூறுவர். திவா கரத்தில் கரிக்குருவியின் பெயராகக் கஞ்சனம், வலியன், கயவாய் என்ற பெயர்கள் கூறப்பட்டுள்ளன. ஆகவே

கரிக்குருவி என்பது வலியன் குருவியின் ஒருவகையே என்று கொள்ளவேண்டும். ஒரே இனமாயினும் வலியன் வேறு, கரிக்குருவி வேறு என்று கொள்ளலாம். பிங் கலந்தை நிகண்டு இன்னும் விளக்கமாக வலியன் சாதிக் குருவிகளின் பெயர்களைக் கூறியுள்ளது. கரிக்குருவியின் பெயராகக் காரி, பிள்ளை, கபிலம், கஞ்சனம், கயவாய் என்ற பெயர்களைப் பிங்கலந்தை கூறுகின்றது. வலியனின் பெயராகக் கஞ்சனம், கிகிணி, கஞ்சரீடம், வயவன், பாரத் துவாசன் என்ற பெயர்கள் கூறப்பட்டுள்ளன. காரிப் பிள்ளையின் பெயராக வஞ்சுளன், வயவன், வயான் என்ற பெயர்கள் கூறப்பட்டுள்ளன. ஆக, பிங்கலந்தையில் வலியன் இனத்தில் மூன்று வகைகள் கூறப்பட்டுள்ளன என்று கருத வேண்டும். இயற்கையில் தமிழ்நாட்டில் இரண்டு, மூன்று வகை வலியன்குருவிகள் இருப்பதையும் காண்கிறோம். நிகண்டுகளில் கூறப்பட்ட பெயர்களில் காரி, பிள்ளை, வயவன், வயான் என்ற பெயர்கள் இலக் கியத்திலும் இலக்கண உரைகளிலும் வருகின்றன. புறப் பொருள் வெண்பாமாலையும் இதைக் கூறியுள்ளது. சீவக சிந்தாமணி 'பிள்ளை' என்று இப்பறவையை அழைக் கின்றது.

வலியன் பறவையைப் போர்க்குச் செல்லும் மறவர் சகுனம் பார்க்கும் பறவையாகக் கருதினதைத் தமிழிலக் கியம் கூறுகின்றது. சிலப்பதிகார வேட்டுவவரியில் காரி யின் குரலைப் புள் நிமித்தமாகக் கொண்டு நிரை கொள் ளும் வழக்கத்தைக் கூறியிருப்பதைக் காணலாம்.

> *"கட்சியுட் காரி கடிய குரலிசைத்துக் காட்டும் போலும்"*
> —சிலப்பதிகாரம், வேட்டுவ வரி, 12

> *"பிள்ளை யுள்புகுந் தழித்த தாதலால்*
> *எள்ளன் மின்னிரை யின்று மீரென"*
> —சீவகசிந்தாமணி, 2 : 420

> *"வெட்சி மலைய விரவார் மணிநிரைக்*
> *கட்சியுள் காரி கலும்''*
> —புறப்பொருள் வெண்பா மாலை. ௨

காரிப்புள் ஆநிரைக்குள் புகுந்து அழித்ததால் நிரையைக் காவல் காக்க வேண்டுமென்று நிமித்திகன் கூறியதைச் சிந்தாமணி கூறுகின்றது. பகைவருடைய நிரைகள் இருந்த காட்டில் காரிப்பறவை தீநிமித்தமாக அழுவதாகப் புறப்பொருள் வெண்பாமாலை கூறுகின்றது. காரிப்பறவை கடிய குரலெடுத்துப் பாய்வதைப் பறவைநூலாரும் கூறுவர். மலையாளத்தில் இதன் கடிய குரலைச் 'சூலம்விளி' என்று கூறுவர். கடிய குரலிட்டு எதிரிகளைப் பாய்ந்து விரட்டுவதைப் பார்த்தே நிமித்தமாகக் கொண்டனர் என்று தெரிகின்றது. வலியன் பெரும்பாலும் கன்றுகாலி நிரைகளோடு காணப்படும் என்று பறவைநூலார் கூறுவது இதுசார்பாகக் கவனிக்கத்தக்கது. (The King crow rides on the backs of grazing cattle and takes toll of insects disturbed by the animals' movements through the grass.) ஆநிரைகளில் காணப்பட்டதால் வெட்சி வீரர்க்கும், ஆயர்களுக்கும் இது நிமித்தமாக அமைந்தது. இந்தப் பொருத்தமான நயத்தைக் காணும்போது வியப்படைகிறோம். கன்றுகாலிகளோடு காணப்படும் என்று காரியைக் குறிப்பிடுவதால் காரி என்ற பறவை எதுவென்று பறவை நூற்படி எளிதில் கண்டறியலாம். இதை ஆங்கிலத்தில் King crow என்றழைப்பர். இது பளபளப்பான கருமையான உடலை உடைய பறவை. இதன் வால் மீனின் வால்போலப் பிரிந்திருக்கும். இதனால் கருவாட்டு வாலி என்று இதைச் சில இடங்களில் அழைப்பர். வலியன்குருவி இனத்தை இரட்டைவாலன் என்று ஈழ நாட்டில் அழைப்பர். கேரளத்தில் வள்ளுவ நாட்டில் ஆனைராஞ்சி என்று இதே பறவையை மக்கள் அழைப்பர். ஒரு யானையைக்கூட இருய்ஞ்சி எடுத்துச் செல்லுமாப் போல பறக்கும் குருவி என்று கருதுகின்றனர். யானையுண் குருகே ஆனையிருஞ்சிப்புள் என்று திவாகரம் கூறுவதாகச் சென்னைப் பல்கலைக்கழக அகராதி குறிப்பிட்டுள்ளது. ஆனால் திவாகரப் பதிப்புகளில் இந்தப் பெயரைக் காணோம். ஆனைராஞ்சி என்ற பெயர் மலையாளத்தில்

தற்காலம் வழங்குவதுபோல முற்காலத்தில் தமிழிலும் வழங்கியிருக்கலாம். இதுபோலக் கடலிருய்ஞ்சி என்று தமிழ்நாட்டில் அழைக்கப்படும் கடற்பறவை வானத்தில் பறக்கும்போதே பாய்ந்து பிற பறவைகளிடமிருந்து இரைகளை இருய்ஞ்சி பற்றிச் செல்வதால் பெயர் பெற்றதைக் காணலாம். பூச்சி முதலிய இரைகளை வானத்தில் பாய்ந்து பிடிக்கும்போதும் தன்னைவிடப் பெரிய எதிரிகளான கழுகு, காக்கை, வல்லூறு ஆகிய பறவைகளைப் பாய்ந்து விரட்டும் போதும் வலியன்குருவியின் பாய்ச்சலில் கண்ட வேகத்தையும் வலிமையையும் கண்டே ஆனை இருய்ஞ்சி என்று பெயரிட்டனர். ஆனை இருய்ஞ்சி என்ற பெயருடன் மிக நெருங்கிய தொடர்புடைய பெயரே 'ஆனைச்சாத்தன்' என்று ஆண்டாள் திருப்பாவையில் வரும் பறவைப் பெயரும் என்று கருத வேண்டும்.

> "கீசுகீசு என்றெங்கும் ஆனைச்சாத்தன், கலந்து
> பேசின பேச்சரவம் கேட்டிலையோ பேய்ப்பெண்ணே"
> —திருப்பாவை, 7

ஆனைச்சாத்தன் என்ற பறவைகள் விடியற்காலையில் 'கீசு கீசு' என்று பேசுவதாக ஆண்டாள் திருப்பாவையில் கூறியுள்ளார். இந்த இடத்தில் ஆனைச்சாத்தன் என்பதற்குப் பாரத்துவாசப்பட்சி என்று ஈட்டில் கூறப்பட்டுள்ளது. பாரத்துவாசம் என்பது வலியன்குருவி என்று நிகண்டுகள் கூறும். ஆதலின் ஆனைச்சாத்தன் என்ற பறவை ஆனைராஞ்சி என்பதில் ஐயமில்லை. ஆனைராஞ்சி சாத்தன் என்ற பெயரே ஆனைச்சாத்தனை மாறியிருக்கலாம். இந்தப் பறவைகள் கலந்துபேசுவதாகக் கூறியது மிக அருமையான செய்தியாகும். பறவை நூலாரும் இச்செய்தியைக் கூறியுள்ளனர். (At the approach of breeding season two birds, frequently a trio will sit close together or face to face and talk loudly 'at' one another (argue) in harsh scolding notes, raising head and forepart of body and bobbing violently up and down and fluttering the wing from time to time as if to emphasize some

important point in the argument.) இரண்டு, மூன்று பறவைகள் நேருக்குநேர் அமர்ந்து ஒன்ருேடொன்று உரத்துப் பேசுவதும் திட்டுவதுமாகவும் தலையை உயர்த்துவதும் தாழ்த்துவதுமாகவும் நடந்துகொள்வதைப் பறவை நூலார் கூறியதைக் கவனிக்க வேண்டும். இதையே ஆனைச்சாத்தன் கலந்து பேசின பேச்சரவம் என்று ஆண்டாள் கூறினர். வலியன்குருவி இனத்தில் ஆனைராஞ்சியையே நாட்டுப் புறத்தில் எங்கும் எளிதில் காணலாம். மற்ற இருவகைகளும் அவ்வளவு எளிதில் காணக் கூடியவை அல்ல. இதை மலையாளத்தில் காக்கைத் தம்புராட்டி என்றுமழைப்பர்.

*"காலை யெழுந்திருந்து கரியகுருவிக் கணங்கள்*
*மாலின் வரவுசொல்லி மருள்பாடுதல் மெய்ம்மைகொலோ"*
—நாலாயிரத் திவ்யப் பிரபந்தம், 9-8

கரிய குருவிக் கணங்கள் என்பது ஒருவகை வலியன் குருவியாகும். இதை மலையாளத்தில் காக்கைத்தம்புரான் என்றழைக்கின்றனர். இது சாம்பல் நிறமாக இருக்கும். இதை Ashy Drango என்று ஆங்கிலத்தில் சொல்லுவர். மலையாள வழக்கப்படி தாய்வழி உரிமை முதன்மை பெறுவதால் வலியன் குருவியினத்தில் முக்கியமானதைக் காக்கைத் தம்புராட்டியை Black Drango என்றும், மற்ருெரு வகையைக் காக்கைத்தம்புரான் என்றும் அழைத்தனர். இந்த இனத்தில் பிறிதொரு வகையைக் காக்கை ராசன் (White-bellied Drango) என்று அழைத்தனர் பிங்கலந்தை நிகண்டில் வலியன் குருவியின் பெயரை மூன்று தொகுதிகளாகக் கூறியிருப்பது இதன் மூன்று வகைகளைக் குறிப்பிடவே என்று கருதலாம். கரிக்குருவியின் பெயரும், வலியனின் பெயரும் காரிப்பிள்ளையின் பெயரும் பிரித்துக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். வலியன், வயான் என்ற பெயர்கள் இதன் வலிமையைக் குறிப்பிடுகின்றன. கரிச்சான், கரிச்சான்குஞ்சு என்று வலியன்குருவியை அழைக்கும் நாட்டு வழக்கும் உண்டு. முதலில் கரிச்சான் என்ற பெயர் இதன் கருநிறம் காரண

மாகத் தோன்றியிருக்கலாம். கரிச்சானின் குரல் காரண மாகக் கரிச்சுக்கரிச்சுக் கத்துதல் என்ற பேச்சுவழக்கு தோன்றியிருக்கலாம்.

சாத்தன் என்ற பெயர் இப் பறவைக்கு எப்படி வந்தது என்பதையும் ஆராயலாம். சாத்தன் என்ற பெயர் பண்டைக்காலத்தில் தமிழரிடையில் வழங்கிவந்ததாகும். சாத்தன், கொற்றன், சாத்தி, கொற்றி என்ற பெயர்கள் எல்லா இலக்கண உரையாசிரியர்களாலும் மக்கள் பெயர் களாக எடுத்தாளப்படுவதைப் பார்க்கலாம். சாத்தன் என்ற பெயரைக்கொண்ட புலவர்கள் பலர் சங்ககாலத்தில் இருந்துள்ளனர். சாத்தன் என்ற தெய்வத்தின் பெயரால் இப்பெயர் வழங்கிற்று. இப் பெயரை உயர்திணைக்கு மட்டுமின்றி அஃறிணைக்கும் வழங்கும் வழக்கம் பண்டைக் காலத்தில் இருந்தது. தொல்காப்பியச் சொல்லதிகாரத் தில் விரவுப் பெயருக்கு எடுத்துக்காட்டாக (சூத்திரம் 172) சாத்தன் வந்தான், சாத்தன் வந்தது என்று உரையாசிரி யர்கள் கூறியிருப்பதைக் காணலாம். அதற்குப் பாவாணர் எழுதிய குறிப்புரையில் பழந்தமிழர் ஆவையும் எருதையும் அவற்றின் பயன்பாடும், உழைப்பும் பற்றி அருமையாய்ப் பேணி அவற்றிற்குச் சாத்தி, சாத்தன் என்ற மக்கட் பெயரையே இட்டு அழைத்து வந்திருக்கின்றனர் என்று கூறியுள்ளார். சாத்தன் என்ற பெயரை அஃறிணை உயிர் கட்கும் வழங்கும் மரபு மலையாள மொழியில் இன்றும் காணப்படுகின்றது. சாத்தன் என்ற பெயர் மக்கள் பெயராக மலையாள மக்களிடையே முக்கியமாகப் பழங்குடி மக்களாகிய செருமரிடையே வழங்குகின்றது. இந்த உயர்திணைப் பெயரை அஃறிணைக்கும் வழங்குவதை இன்றும் மலையாளத்தில் காண்கிறோம். மிகவும் பழக்க மான எளிதில் கண்டு பழகும் (familiar) பறவைகளில் சில வற்றிற்குச் 'சாத்தன்' பெயரிட்டு அழைக்கும் வழக்கம் இன்றும் வடமலையாள நாட்டில் உள்ளது. கோழியைக் 'கோழிச்சாத்தன்' என்றழைக்கின்றனர். வலியன் குருவி யின் இனத்தைச் சேர்ந்த நீண்டவாலுடைய வலியனைக்

(Rocket-tailed Drango) 'காராடன்சாத்தன்' என்றழைக்கின்றனர். காராடன் என்றால் கரவடமுடையவன், தந்திரமுடையவன் என்று பொருள். இந்த இன வலியன்குருவி பூனைபோலக் கத்தித் தந்திரமாக வேட்டுவரை ஏமாற்றுவதால் 'காராடன்' என்ற பெயர் பெற்றது. இப் பெயரில் சாத்தன் என்ற சொல் வலியன் குருவியில் வால்நீண்ட ஒருவகைக்கு வழங்கியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

> "வால் நீண்ட கரிக்குருவி வலமிருந்தே இடஞ்சென்றால்
> கால்நடையாய்ப் போனவர்கள் கனகதண்டி யேறுவாரே"

என்று வரும் வரிகளில் வால்நீண்ட கரிக்குருவி என்று நீண்ட வாலுடைய வலியன் குறிப்பிடப்பட்டுள்ளது. கோழியைக் குறிக்கக்கோழிச்சாத்தன் என்றும், வலியனில் கரவடமான இனத்தைக் குறிக்கக் காராடன்சாத்தன் எனவும் பெயர் வழங்குவதைக் கூர்ந்துநோக்க வேண்டும். இதேபோன்றே வலியனில் ஒருவகையைக் குறிக்க 'ஆனைச் சாத்தன்' என்ற பெயர் வழங்கினது இக் கருத்தை வலியுறுத்துகின்றது. விடியற்காலையில் குரலிடும் கோழிக்கும் வலியனுக்கும் 'சாத்தன்' என்ற பெயர் வழங்கியிருப்பதையும் கவனிக்க வேண்டும். ஆனைச்சாத்தன் என்ற சொல் ஆண்டாள் வாழ்ந்த நாட்டுப் பகுதியில் வழங்கின பேச்சுவழக்குப் பெயராக இருக்கலாம்.

ஐயனுருக்குப் பெயர்களாகச் சாத்தன், காரி என்ற பெயர்கள் வழங்கியுள்ளன. இந்த இருபெயர்களும் வலியன்குருவிக்கும் வழங்கியிருப்பதைக் காணலாம். ஐயனார்காவுகளில் வலியன்குருவியைப் பழக்கமாகக் காணலாம். ஐயனர் ஊருக்குக் காத்தற் கடவுளாகக் கருதப்படுகின்றார். அதுபோன்றே சிறிய பறவையாயினும் பிற எளிய பறவைகளுக்குப் பாதுகாப்பளித்துத் தரும் பறவையென்று வலியனைப் பறவை நூலார் கூறியிருக்கின்றனர். வலியன் மரத்தின் உச்சியில் கூடு கட்டுவது வழக்கம். வலியன் கூடுகட்டிய மரத்தில் கீழ்க்கிளைகளிலே மற்ற சிறு பறவைகள் கூடுகட்டி வாழ்ந்தால் வல்லூறு, கழுகு,

காக்கை போன்ற எதிரிகள் அவைகளை அணுகாமல் வலியன் தன்னுடைய வீரத்தினாலும் அஞ்சாநெஞ்சத் தாக்குதலாலும் பாதுகாக்கின்றது. இதன் காரணமாக இந்தி மொழியில் வலியனைக் காவல்காரன் (Kotwal) என்றழைக்கின்றனர். காப்புக்கடவுளான சாந்தனைப் போலவே வலியனும் எளிய பறவைகளுக்குக் காப்பாள னாகக் காணப்படுவதைக் கவனிக்க வேண்டும். இதன் பிற பெயர்களையும் மயிலைநாதருரையில் காண்கிறோம். 209 ஆம் சூத்திர உரையில் வான், வலன், வயான், வலி யான், வாலன், வல்லன், அருமணவன், நன்று என்று மேற்கோள் காட்டுகின்றார். இப் பெயர்களில் வயான், வலியான், வாலன், வல்லன் என்ற பெயர்கள் இந்தக் குருவியைக் குறித்தே வழங்குவதைக் காணலாம். வல்லூறு, கழுகு முதலிய பெரிய எதிரிகளையும் விரட்டித் துரத்துவதால் இதற்கு வலியன், வயான், வயவன், வல்லன் என்ற பெயர்கள் தோன்றின. வயம் என்றால் வலிமை என்று பொருள். வலிய புலியை வயமான் (அகம், 14) என்றும் வயப்புலி (அகம், 22) என்றும் சங்கநூல்கள் கூறுவதைக் காணலாம். இதன் வலிமை காரணமாக ஆப்பிரிக்காவில் பழங்குடி மக்கள் இதைச் சினம் மிகுந்த சிறுத்தைப் புலியின் பெயரால் Angry Leopard என்று அழைக்கின்றனர். பறவைகளில் வலிமையுடையது என்ற பொருளில் வலியன் வீரன் என்ற பொருளில் வயவன் என்ற பெயரும் தோன்றின. நிகண்டுகளில் கயவு, கயவாய் என்ற பெயர் இதற்குக் கூறப்பட்டுள்ளது. கய என்றால் பெரிய என்று பொருள். இது உருவில் சிறிய பறவையாயினும் வீரத்தில் பெரிய பறவை யாதலால் கயவு என்ற பெயர் பெற்றது. திருவாலவாய்ப் புராணத்தில் கோக்கயம் என்று அழைக்கப்பட்டுள்ளது. கயம் எனப் படும் கரிக்குருவிகளில் அரசன் என்ற பொருளில் கோக் கயம் எனப்பட்டது. இது King Crow என்று ஆங்கிலப் பெயர் போல இருப்பது கவனிக்கத்தக்கதாகும். பறவை களில் அரசு போன்றிருப்பதால் கோக்கயம் எனப்பட்டது.

மலையாளத்தில் பறவைகளின் அரசி என்ற பொருளில் காக்கைத்தம்புராட்டி என்றனர். இந்தியாவிலும் சில பழங் குடிமக்களின் தலைவன் தலைமையின் சின்னமாகவும் வலிமையின் அறிகுறியாகவும் வலியன் பறவையின் சிறகு களைத் தலையில் தரிக்கின்றான். இதன் வால் மீன்வால் போல் இருப்பதால் கருவாட்டுவாலி என்றழைக்கின்றனர். வாலன் என்ற பெயரை மயிலைநாதர் காட்டுகின்றார். வலம் இருந்து இடம்வந்த வலியனைக் கண்டால் கால்நடை போனவர்களும் கனகதண்டியேறுவார் என்று கருதும் நம்பிக்கை மக்களிடையே நிலவிற்று.

வலியனைப் பிள்ளை என்றழைக்கும் வழக்கையும் காண லாம். சிலப்பதிகாரத்திலும் சிந்தாமணியிலும் பிள்ளை யென்று பெயர் கூறப்பட்டுள்ளது. போரில் இது நிமித்தப் பறவையாக இருந்திருக்கின்றது. பிள்ளைப் பெயர்ச்சி என்ற புறப்பொருள் துறையானது காரிப்பிள்ளை கடுங்குரல் கொடுத்து நிமித்தங் காட்டினும் அதைப் புறக்கணித்து, பொருதுவென்று நிரை மீட்டலைக் குறித்து வழங்கிற்று. இதைச் சிலப்பதிகார வேட்டுவவரியும் கூறியுள்ளது. புறப் பொருள் வெண்பாமாலையில் பிள்ளைவழக்கு என்ற துறை காரிப் பிள்ளையின் குரலோர்ந்து நிமித்தம் கூறியவர் களுக்குச் சிறப்பாக வழங்கியதைக் குறித்தது. தமிழரின் போர்முறைகளில் காரிப்பிள்ளை மிகப் பெருமையும் சிறப்பும் வாய்ந்தது என்பது தெளிவாகின்றது. மற்றும் ஆளெறி பிள்ளை, பிள்ளைத்தெளிவு, பிள்ளையாட்டு ஆகிய புறத்துறை களும் இந்தக் காரிப்பிள்ளையின் சிறப்பான தன்மையை நோக்கியே வந்தவையாகும். உரையெழுதினோர் இதை உணராது பிள்ளைப் பருவத்தோன், விளைவறியாத பிள்ளை யென்றெல்லாம் பிள்ளை என்ற சொற்கு இங்கெல்லாம் பொருள் கொண்டனர். ஒரு தானைகி வெட்சி மறவரைக் கொன்று வீழ்த்திய வீரனைக் கூறிய ஆளெறிபிள்ளை பிள்ளைப்பருவத்தோனாகவோ விளைவறியாத பிள்ளை யாகவோ இருக்கமுடியாது. இங்குப் பிள்ளை என்பது காரிப் பிள்ளைபோன்ற வீரனைக் குறித்தே வந்தது. காரியை

வயவன் என்று வீரனின் பெயரால் அழைப்பதையும் கவனிக்க வேண்டும். காரிப்பிள்ளை எப்படித் தன்னிலும் பெரிய பறவைகளை விரட்டி வெல்கின்றதோ அதுபோன்றே பல கரந்தை மறவரை ஒரு மறவனே தானே நின்று எதிர்த்துக் கொன்று வீழ்த்தினன் என்பதையே ஆளெறி பிள்ளை என்ற வழக்கு குறிப்பிடுகின்றது. தன்னிலும் வலிய பறவைகளை எறிந்து வெல்லும் பிள்ளைபோல ஒரு தானாகிய ஆளெறிகின்றவனை ஆளெறிபிள்ளை என்று கூறியது பொருத்தமே. பிள்ளைத்தெளிவு என்பது தான் ஆளெறிந்து பெற்ற விழுப்புண்ணிற்கு மகிழ்ந்து கூத்தாடி யதைக் குறித்தது. பிள்ளையாட்டு என்பது அந்த வீரன் பகைவரின் குடலைத் தன் வேலிலே சுற்றி யாடுதலைக் குறிக்கும். இங்கெல்லாம் பிள்ளை என்ற சொல் காரிப் பிள்ளையின் வீரத்தன்மையுடன் ஒப்பிட்டுக் கூறியதாகும்.

> *"அணைக்குரி மரபினது கரந்தை யன்றியும்*
> *வருதார் தாங்கல் வாள்வாய்த்துக் கவிழ்தலென்*
> *றிருவகைப் பட்ட பிள்ளை நிலையும்*
> *வாள்மலைந் தெழுந்தோனை மகிழ்ந்து பறைதூங்க*
> *நாடவற் கருளிய பிள்ளை யாட்டும்"* —புறத்திணை, 5

தொல்காப்பியத்தில் கூறிய பிள்ளை நிலையும் பிள்ளையாட்டும் காரிப்பிள்ளையினொடு சேர்த்துக் கூறியதெனத் தெரிகின்றது. நச்சினார்க்கினியர் பிள்ளை யென்பதற்கு அரசிளங் குமரன் என்றும் அரசு கொடுத்த பிள்ளைப் பருவத்தோன் என்றும் கூறினர். ஒருவகையில் நச்சினார்க்கினியர் கூறியது பொருத்தமே. ஏனென்றால் பிள்ளையென்ற காரிப் பறவையை அரசப்பெயருடன் கோக்கயம் என்று தமிழிலும், காக்கைத்தம்புரான், காக்கைத்தம்புராட்டி என்று மலையாளத்திலும் அழைப்பதால் வீரமிக்க அரசிளங்குமரனைக் குறித்துப் பிள்ளையென்ற பெயர் புறத்துறையில் வழங்கியிருக்கலாம். மற்றும் பிற்காலத்தில் போர்க்களத்தில் வென்று அரசர்க்கு உதவியவரைக் குமாரகணம் என்று பெருமை அளிப்பது தமிழரசர்களின் வழக்கமாக

இருந்தது. இக் காரணத்திஞல் பிள்ளையென்ற பெயரும் முதலி என்றபெயரும் படைத்தலைவருக்கு அளிக்கப்பட்டன. இப் பெயர்கள் பின்னர் சாதிப்பெயர்கள் ஆயின. நச்சினர்க்கினியர் வேந்தன் குடிப்பிறந்தோரும் அவன் படைத்தலைவருமாகிய இளையர் செய்யினும் தன்னுறு தொழிலாதலிற் கரந்தையாம் என்று கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். ஆதலின் குமாரகணத்தில் அரச னுடைய குடியில் பிறந்தவர் மட்டுமின்றி போரில்வென்று சிறந்த போர்வீரரும் படைத்தலைவராய்ச் சேர்க்கப்பட்டன ரென்று தெரிகின்றது. பிள்ளையென்ற சாதிப்பெயர் இந்த வகையில் தோன்றியதென்று தெரிகின்றது. அன்று வேளிர் என்ற வேளாளரே அரசன் படையில் முதலிகள் போல சேனைத் தலைவராயிருந்தனர். ஆதலின் பிள்ளை என்ற இன்றைய சாதிப் பெயரும் முற்காலத்தில் பிள்ளை என்ற காரிப்பறவையின் பெயரில் தோன்றியதென்பதை அறிய வேண்டும்.

நெற்றியில் குடுமியையுடைய ஒரு வலியன்குருவியைப் பற்றிப் பெருங்கதை கூறியுள்ளது.

> 'கடுவிசைக் கனலி சுடுகதிர் மருங்கிற்
> குடுமி நெற்றிக் கூருளி யன்ன
> வல்வாய் வயவன் வறண்மரத் துச்சிப்
> பல்காற் குரைத்துப் பகற்படை தருமென
> ..........................................
> காழ்த்த காலைக் கீழ்த்திசை முன்பகல்
> அன்றவட் பாடிய வணிவரி வயவன்
> இன்றிவ ணின்னே யிகற்படை தருதல்
> பொய்த்த லின்றி மெய்த்த தாமென
> அங்குபடு புட்குர லாண்டகை யஞ்சி''
>
> —பெருங்கதை, உஞ்சைக்காண்டம், 55 : 19 - 37

நெற்றியில் குடுமியுடைய வலியன்குருவி வற்றிய மரத்தின் உச்சியில் பல தடவை குரைத்ததையும் கீழ்த்திசையில் பாடியதையும் கேட்டுப் புட்குரல் ஆண்டகை நிமித்தம்

கூறியது பெருங்கதையில் சொல்லப் பட்டிருப்பதைக் காண லாம். இந்தக் குடுமியுடைய வலியன் ஓரினமாகும். இதைக் கொண்டைக்கரிக்குருவி என்று கோடிக்கரைப் பகுதியில் வழங்குவர். கொண்டைக்கரிச்சான் என்றும் கொண்டை யுடைய வலியனை அழைப்பர். நீண்ட வாலுடைய வலியனை எருத்துவாலன் என்றும் நாட்டுமக்கள் வழங்குவர். எங்கும் எளிதில் காணப்படும் வலியன் பறவையையே ஆனைச் சாத்தன் என்று ஆண்டாள் கூறினர். காரியை ஆங்கிலத் தில் King Crow அல்லது The Black Drango என் றழைப்பர். பறவை நூலார் Dicrurus adsimilis என் றழைப்பர். குடுமியுடைய வலியனை Southern Racket-tailed Drango என்று அழைப்பர்.

---

## உசா. வங்கா

## (THE GOLDEN ORIOLE)

குறுந்தொகை 151ஆம் பாட்டில் வங்கா என்றொரு பறவை கூறப்பட்டுள்ளது. இந்தப் பறவை எதுவாயிருக்கலாம் என்பது மயக்கத்தைத் தந்துவந்தது. பலமுறை ஆராய்ந்ததின் பயனாக இப் பறவை எதுவாயிருக்கலாம் என்பது இப்பொழுது தெளிவாகியுள்ளது

> "வங்காக் கடந்த செங்காற் பேடை
> எழாலுற வீழ்ந்தெனக் கணவற் காணாது
> குழலிசைக் குரல குறும்பல வகவும்
> குன்றுகெழு சிறுநெறி யரிய வென்னாது"
>
> —குறுந்தொகை, 151

வங்கா என்ற பறவையின் பேடையின்மேல் எழால் என்ற வல்லூறு வீழ்ந்ததால் ஆண்வங்கா நீங்கப்பெற்ற பேடை குழலிசைபோலக் குறுகிய குரலொடு பலதடவை அகவிய தாகக் கூறப்பட்டுள்ளது. வங்கா என்ற சொற்குப் பாட மாற்றமாக 'வங்கர்' என்ற சொல் காட்டப்பட்டுள்ளது. நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உயிர்மயங்கியலில் (23) மேற்கோளாக 'தாரா, மூங்கா, வங்கா' ஆகியவைகளைக் கூறியுள்ளார். இவைகளில் தாரா என்பது காட்டுவாத்து. மூங்கா என்பது கீரிப்பிள்ளை. வங்கா என்பது குறுந்தொகையில் குறிப்பிடப்பட்ட பறவை. நச்சினார்க்கினியர் வங்கா என்ற பாடத்தையே சரியானதென்று கொண்டுள்ளார் என்பது தெளிவாகின்றது. குறுந்தொகையைப் பதிப்பித்த உ.வே. சாமிநாதய்யர் நற்றிணை 341ம் பாடலில் 'வங்கா வரிப்பறை' என்று வருவதாகக் காட்டி வங்கா என்ற பெயர்க்கு மேற்கோள் காட்டியிருக்கிறார். ஆனால் பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் பதிப்பித்த நற்றிணை

யிலோ, பல சுவடிகளைப் பார்த்துப் பதிப்பித்த ஔவை துரைசாமி பிள்ளை அவர்களின் நற்றிணையிலோ இந்தப் பாடம் காணப்படவில்லை. பின்னத்தூரார் 'வங்கவரிப் பாறை' என்று கொண்டார். ஔவை துரைசாமி பிள்ளை யவர்கள் 'ஈங்கை இவர் பாறை' என்று கொண்டார். ஆதலின் குறுந்தொகையில் வரும் வங்கா என்ற பெயர் வேறு எந்த நூலிலும் வரவில்லை என்பது தெளிவா கின்றது. நச்சினார்க்கினியர் வங்கா என்று மேற்கோள் காட்டியிருப்பதால் வங்கா என்று குறுந்தொகை கூறும் பறவைப்பெயர் உண்மையானதே என்பது உறுதிப்படு கின்றது.

உ. வே. சாமிநாதய்யர் வங்கா என்ற பறவையை வக்கா என்று கொண்டார். வக்கா என்ற பெயர் சங்க நூல்களிலோ பிற்காலத்தமிழ் நூல்களிலோ வழங்கவில்லை. இப் பெயர் இன்றைய பேச்சுவழக்குப் பெயராகும். வக்கா என்ற பறவை 'வாக்வாக்' என்று ஓசையிடுவதன் காரண மாகப் பெயர் பெற்றதாகும். சங்ககால வங்கா இக்கால வக்காவாக இருக்க முடியாது. மற்றும் சங்ககாலத்தில் வக்கா என்ற பறவையை அன்றில் என்றழைத்தனர் என் பது ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. ஆதலின் வங்கா என்ற பறவை வக்கா என்று இன்று வழங்கும் கொக்கு வகைப் பறவை யன்று. வங்கா என்ற பறவைப் பெயர் வேறு மொழிகளில் வழங்கியுள்ளதா என்று ஆராய்தல் வேண்டும். வடமொழியில் கி.மு. ஆறும் நூற்றுண்டில் தோன்றிய ஐத்திரேய ஆரண்யகத்தில் "வாயாம்சி, வங்கா, வகடா, சேரபாத" என்று ஒரு வரி வருகின்றது. இவ்வரிக்கு விளக்கம் எழுதிய சிலர் இப்பெயர்கள் வங்கம், சேரநாடு ஆகிய நாடுகளைக் குறிப்பதாகக் கொண்டனர். வடமொழிப் புலவரான டாக்டர் பர்ரோ (Dr. Burrow) அதை மறுத்து வங்கநாட்டுப் பெயர் கி. மு. ஆறும் நூற் ருண்டில் தோன்றவில்லை யென்றும், கி.பி. சில நூற்ருண்டு களில் தோன்றியது என்றும் சுட்டிக்காட்டி இப்பெயர்கள் சில பறவை வகைகளைக் குறிப்பிடுகின்றன என்று கொண்

டார். ஐத்திரேய ஆரண்யகத்தில் வரும் வங்கா என்ற பறவைப் பெயரும் கி.பி. முதல் இரண்டாம் நூற்றுண்டுக் குரியதான நற்றிணையில் வழங்கிய வங்கா என்ற பறவைப் பெயரும் ஒன்று என்பதை ஆராய வேண்டும். இந்த ஆராய்ச்சிக்குப் பிற திராவிடமொழிப் பெயர்கள் துணைபுரி கின்றன. தெலுங்குமொழியில் 'வங்காபண்டு' என்ற பெயர் ஒருவகைப் பறவைக்கு வழங்குகின்றது. தமிழில் மாம்பழக்குருவி என்றழைக்கப்படுவதே தெலுங்கில் வங்கா பண்டு என்றழைக்கப்பட்டுள்ளது. மாம்பழக்குருவியை மாங்குயில் என்றும் மாம்பழப்பட்சி என்றும் அழைப்பர். மலையாளத்தில் மஞ்சக்கிளி என்று அழைப்பர். இந்தப் பறவை மாம்பழ நிறத்தில் கருமை கலந்து காணப்படும். மாம்பழ நிறத்தில் இருப்பதாலும், மாமரத்தில் காணப் படுவதாலும் மாம்பழக் குருவி என்றழைக்கப்பட்டது. தெலுங்கு மொழியில் வங்கா என்றழைக்கப்பட்டதற்குக் காரணம் தெலுங்குமொழி வல்லுநரால் கூறமுடியவில்லை. வங்கா என்பது இப்பறவையின் இயற்பெயர் என்று தெரி கின்றது. வங்கா என்று இப்பறவையின் இயற்பெயராக இன்றும் வழங்குவதால் இந்த மாம்பழக்குருவியே நற் றிணையில் குறிப்பிடப்பட்ட வங்கா என்ற பறவையாக இருக்கலாம். ஐத்திரேய பிராமணத்தில் கூறப்பட்ட பற வையும் இதுவேயாகலாம். பழந்திராவிட மொழியிலிருந்து வங்கா என்ற பெயரை வடமொழி பெற்றிருக்க வேண்டும். ஐத்திரேய பிராமணத்தில் வரும் பறவைப்பெயர்களில் வாயாம்சி காக்கையென்றும் வங்கா, வகடா, சேரபாத என்ற பறவைகள் எவை என்பது தெளிவாகத் தெரிய வில்லை என்றும் கூறியுள்ளனர். ஆதலின் வங்கா திராவிட மொழிப் பெயராகவே இருக்கலாம். சேராக்கொக்கு என்ற பெயரில் ஒரு நீர்ப்பறவை மலையாளத்தில் வழங்குகின்றது. சேரபாத என்ற பறவைப் பெயரோடு இப்பறவை ஒத் துள்ளது. மாம்பழக்குருவியை ஒரு குறிப்பிட்ட பருவத் தில்தான் காணமுடியும். இப்பறவையும் ஓரளவு வலசை செல்லுமென்று கூறுவர். இந்தக் குருவி குறிப்பிட்ட பரு

வத்தில் மட்டும் வருவதால் சங்கநூல்களில் ஒரே பாடலில் கூறப்பட்டதாகக் கருத வேண்டும். பிற்காலத்தில் இதை யும் ஒருவகைக் குயிலென்று கருதினர்.

வங்கா என்ற பறவை மாம்பழக்குருவியாக இருக்க லாம் என்பதற்குப் பிற சான்றுகளும் உள்ளன. நற்றிணை யில் வங்கா குழலிசைபோல குரலிடுவதாகக் கூறப்பட் டுள்ளது. பறவைநூலாரும் மாம்பழக் குருவி குழலைப் போலவே கூவும் (loud melodious flute like notes) என்று எழுதியுள்ளனர். வேய்ங்குழலினது இசையைப் போன்ற குரலுடையது வங்கா என்று கூறியது பொருத்தமே. வங்கியம், வங்கால் என்ற இசைக்கருவிகள் தமிழிலக்கி யத்தில் கூறப்பட்டுள்ளன. வம்சம் என்ற மூங்கிலைக் குறிக்கும் வடசொல்லிலிருந்து வங்கியம் என்ற பெயர் வந்ததாகக் கூறுவர். ஆனால் வங்கு என்பதே வேர்ச் சொல்லாகத் தெரிகின்றது. வங்கு என்பது உள்ளே துளையாக இருப்பதைக் குறிக்கும். உள்ளே துளையாக இருக்கும் மூங்கிலால் ஆன இயத்தை (இசைக்கருவியை) வங்கியம் என்றனர். வங்கியம் போன்று இசைக்கும் பற வையை வங்கா என்றழைத்தனர்.

வங்கா என்ற மாம்பழக்குருவி மைனா அளவினதாக இருக்கும். இது முசுக்கட்டைப்பூச்சி என்கிற கம்பளிப் பூச்சியை நன்கு உண்ணும். அதனால் முசுக்கொட்டாம் பூச்சிக்குருவி என்றும் அழைப்பர். முசுக்கட்டை செடியில் காணப்படும் புழுவிற்கு முசுக்கட்டாம்பூச்சியென்றும் அதைத் தின்னும் பறவையை முசுக்கட்டாம்பூச்சிக்குருவி யென்றும் நாட்டு மக்கள் அழைப்பது கவனிக்கத்தக்க தாகும். ஆண் வங்காப்பறவையை எழால் அடித்துக் கொன்றதாகவும் அதனால் ஆண் துணையைக் காணாது பெண் வங்கா அகவினதாகவும், குறுந்தொகை கூறி யுள்ளது. மாம்பழக்குருவியை எழால் எனும் வல்லூறு அடித்துக்கொல்வது இயற்கையில் காணக்கூடியது. மாம் பழக்குருவியைப் பெரும்பாலும் இணையாகவே பார்க்கலாம்.

இவை ஆண் பெண்ணுக இணைந்து மரங்களில் காணப்படு வதைப் பறவைநூலாரும் குறிப்பிட்டுள்ளனர். ஆண் பெண்ணுக இணைந்து வாழ்ந்ததைக் கண்டே ஆண் பற வையைக் 'கணவன்' என்று குறுந்தொகை குறிப்பிட் டுள்ளது. மாம்பழக்குருவி கூவும்போது ஒருவகைக் குறுகிய ஓசையுடன் திருப்பித்திருப்பி ஒலி செய்யும் என்று கூறுவர். குறுந்தொகையிலும் குழலிசைபோல 'குறும்பல அகவும்' என்று கூறப்பட்டுள்ளதைக் கவனிக்க வேண்டும். குறிய பல ஒலிகளை வெளிவிடுவதாகக் கூறியிருப்பது பொருத் தமேயாகும்.

இதுவரை கூறிய சான்றுகளிலிருந்து குறுந்தொகை யில் கூறப்பட்ட வங்கா என்ற பறவை மாம்பழக்குருவி யென்பது தெளிவாகின்றது. இதையே தெலுங்குமொழி யில் 'வங்காபண்டு' என்றழைக்கின்றனர். வடமொழியில் ஒரே இடத்தில் வங்கா என்றழைத்தனர். வங்கா என்ற மாம்பழக்குருவியை Golden Oriole, Black-headed Oriole என்றழைப்பர். பறவைநூலார் Oriolus oriolus kundoo என்றழைப்பர்.

———

## உஎ. செந்தார்க் கிளி
## (ROSE-RINGED PARROT)

சங்க நூல்களில் கிளியைப் பற்றிப் பல பாடல்கள் கூறுகின்றன. சங்க காலத்திலேயே கிளியை வீட்டில் வளர்க்கும் பழக்கம் இருந்தது. சங்க நூல்களில் சில பாடல்களே வீட்டில் வளர்ந்த கிளியைப் பற்றிக் கூறியுள்ளன. கிளிகள் புனத்தில் தினை கவருவதைப் பற்றியே பல பாடல்கள் சொல்லுகின்றன. குறிஞ்சி நிலத்தில் கிளிகள் பெரும்பாலும் கூறப்பட்டுள்ளன. இக்கிளியைச் செந்தார் உடையதாக சில பாடல்கள் கூறுகின்றன. இதைச் சிறுகிளி என்று பல பாடல்கள் அழைக்கின்றன. குறுகிளி என்றும் ஒரு பாடல் கூறுகின்றது. இதிலிருந்து பெரிய கிளி வேறு என்று தெரிகின்றது. சிறுகிளி என்றழைக்கப்படும் கிளியே எளிதில் எங்கும் காணப்பட்டதால் அதைக் கிளியென்றும் கிள்ளையென்றும் பொதுவாக அழைத்தனர்.

*"பைந்தாட் செந்தினைக் கொடுங்குரல் வியன்புனம்*
*செந்தார்க் கிள்ளை நம்மொடு கடிந்தோன்"—அகம். 248*

*"பூக்கெழு தொடலை நுடங்க வெழுந்தெழுந்து*
*கிள்ளைத் தெள்விளி யிடையிடை பயிற்றி*
*யாங்காங் கொழுகா யாயி னன்னை*
*சிறு கிளி கடித ரேற்று ளிவளெனப்"* —அகம். 28

*"கன்னென மலர்ந்த சுனையும் வண்பறை*
*மடக்கிளி யெடுத்தல் செல்லாத் தடக்குரற்*
*குலவுப் பொறை யிறுத்த கோற்றலை யிருவி"*
—அகம். 38

*"ஏனற் செந்தினைப் பாலார் கொழுங்குரல்*
*குறுகிளி கடிகஞ் சென்றும் இங்"* —நற்றிணை. 288

"தந்தை வித்திய மென்தினை பைபயச்
சிறுகிளி கடிதல் பிறக்கியா வணதோ" —நற்றிணை. 306

"பெரும்புனங் கவருஞ் சிறுகிளி ஓப்பிக்"
—நற்றிணை. 368

"மென்றினை நுவணை யுண்டு தட்டையின்
ஐவனச் சிறுகிளி கடியு நாட" —ஐங்குறுநூறு. 285

"பவளச் செவ்வாய்ப் பைங்கிளி கவரும்"—நற்றிணை. 317

கிளிகள் புனத்தில் தினை கவர்வதையும் தலைவி தினை காத்தலையும் குறிஞ்சித் திணைப் பாடல்கள் கூறுகின்றன. இக் கிளிகளைச் சிறுகிளி என்றும் குறுகிளி என்றும் சங்கப் பாடல்கள் குறிப்பிடுவதைக் கவனிக்க வேண்டும். சிறு கிளிக்குச் 'செந்தார்' இருப்பதாகக் கூறுவதையும் கவனிக்க வேண்டும். இத்தகைய செந்தார் உடைய கிளியை (Rose-ringed parrot) என்று பறவை நூலார் குறிப்பிடுவர். இதன் ஆங்கிலப் பெயர் கழுத்தில் உள்ள சிவப்பு வளை யத்தைக் குறித்ததாகும். இந்தக் கிளியின் ஆணிற்கு மட்டுமே இந்தச் 'செந்தார்' உண்டு. பெட்டைக்குக் கிடை யாது. ஆனால் பெண் கிளிக்குப் பசுமையான ஒரு வளையம் கழுத்தைச் சுற்றி இருக்கும். (Male parakeet with a rose-pink and black collar. Female without the collar but with an indistinct emerald-green ring round neck) பெட்டைக் கிளிக்கு உள்ள இந்தப் பச்சை வளையத்தையும் சங்க நூல் கூறியுள்ளது.

"எய்யா வரிவில் அன்ன பைந்தார்ச்
செவ்வாய்ச் சிறுகிளி சிதைய வாங்கிப்
பொறைமெலிந் திட்ட புன்புறப் பெருங்குரல்
வளைசிறை வாரணங் கிளையொடு கவர
ஏனலும் இறங்குபொறை உயிர்த்தன பால்நாள்"
—அகம். 192

•

வானில் காணப்படும் இருமுனையும் சேராத வானவில்லைப் போல் பச்சை மாலையைக் கழுத்தில் அணிந்த செவ்வாய்ச்

சிறுகிளி என்று கூறப்பட்டுள்ளதால் இந்தக் கிளி பெண் கிளி என்பது தெளிவாகின்றது. தார் என்பது முனை ஒன்று சேராத மாலையைக் குறிக்கும். ஆண்கிளியின் செந்தாரிலும் பெண் கிளியின் பைந்தாரிலும் முனைகள் சேருவதில்லை. பிற்காலத்தில் நந்திக் கலம்பகமும் 'தார் வட்டக் கிளி' என்று இதையே குறிப்பிட்டுள்ளது. இந்தக் கிளிக்கு அறிவியற் பெயராக 'செந்தார்க்கிளி' என்ற சங்க நூற் பெயரையே பயன்படுத்தலாம். ஆங்கிலப் பெயருக்கு நேர் எதிராக, பொருத்தமாக இப் பெயர் காணப்படுகின்றது. கிளியின் மூக்கு சிவப்பாய் இருப்பதால் 'செவ்வாய்ப் பைங்கிளி' என்றழைத்தனர். 'பவளச் செவ்வாய்ப் பைங்கிளி' (நற்றிணை 317) என்று அழைக்கப்பட்டது. கிளியின் மூக்கு சங்க நூல்களில் அவரை என்றழைக்கப்படும் மொச்சைச் செடியின் பவழநிறப் பூப்போல இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

> "பனிப்புத விவர்ந்த பைங்கொடி யவரைக்
> கிளிவா யொப்பி னொளிவிடு பன்மலர்" —குறுந். 240

மொச்சையின் மலர் இரு பாகங்களுடன் கூடி கிளிமூக்குப் போல இருப்பது பார்த்தோருக்குத் தெரியும். கிளியின் உடல் பச்சையாக இருப்பதால் பைங்கிளி என்றும் 'பைம் புறப்படுகிளி' என்றும் கூறுவர். கிளிக் கூட்டத்தைப் 'பாசினம்' என்று அழைத்தனர்.

> "வளியொடு சினைஇய வண்டளிர் மாஅத்துக்
> கிளிபோல் காய கிளைத்துணர் வடித்துப்" —அகம். 37

மாவினது காய்போல கிளி இருந்ததாகக் கூறியதைக் காணலாம். கிளிமூக்கு மாங்காய் என்று இன்று ஒருவகை மாங்காயை அழைப்பதைக் காணலாம். இக் கிளிகள் பெரும்பாலும் மலைச்சாரல்களிலும் சோலைகளிலும் தோட்டங்களிலும் சிறு காடுகளிலும் கூட்டமாகக் காணப்படும். சில சமயங்களில் அரைப் பாலையான இடங்களிலும் காணப்படும். உழவுத் தொழிலுக்கு மிகவும் ஊறு செய்யும்

பறவை கிளிகளாகும். கூட்டமாக வந்து சோளம், கம்பு, தினை விளைந்த வயல்களில் கதிர்களை வெட்டி அழிக்கும். பழத்தோட்டத்தில் பழங்களைக் கொத்தி அழிக்கும். சங்க காலத்தில் தினையே மலைச்சாரல் இடங்களில் விளைவிக்கப் பட்டதால் தினையைக் கவர்வதாகக் கூறப்பட்டுள்ளது. நாட்டிற்கு வரும் கேடுகளில் ஒன்றாக கிளியையும் தமிழ் நூல்கள் கூறுவதைக் காணலாம். கிளிகள் மலை நெல்லைத் தின்பதையும் அவரைக் காயைத் தின்பதையும் சங்க நூல்கள் கூறியுள்ளன. சங்க நூல்களில் மொச்சையை அவரை என்றழைப்பர்.

> "மென்றினை நுவணை யுண்டு தட்டையின்
> ஐவனச் சிறுகிளி கடியு நாட" —ஐங்குறுநூறு. 285

> "காய்த்த அவரைப் படுகிளி கடியும்" —ஐங்குறு. 286

நெல்லைக் கவருவதையும் காய்த்த அவரை விதையைக் கவருவதையும் பறவை நூலாரும் கூறியுள்ளனர். மொச்சையைப் புனத்தில் பயிரிடுவது இன்றும் நடைபெறுவதாகும். சங்க காலத்தில் மொச்சையைப் பயிரிட்டனர். இந்த மொச்சையைக் (Dolichos lab-lab) கிளி கவருவதைப் பறவை நூலார் கூறியிருப்பதைப் போலவே சங்கப் புலவரும் கூறியது அரிய செய்தியாகும்.

> "உள்ளார் கொல்லோ தோழி கிள்ளை
> வளைவாய்க் கொண்ட வேப்ப வொண்பழம்
> புதுநா ணுழைப்பா னுதிமாண் வள்ளுகிர்ப்
> பொலங்கல வொருகா சேய்க்கும்
> நிலங்கரி கள்ளியங் காடிறந் தோரே" —குறுந். 67

கிளி வேப்பம் பழத்தை வாயில் கௌவி எடுத்துச் செல்லுதல் புது நாண் செலுத்திய பொற்காசுபோல இருக்கும் என்று கூறியிருப்பதைக் காணலாம். கிளிகள் உணவைச் சேர்த்துக் கூட்டில் வைக்குமென்று சங்க காலத்தில் கருதினரென்று தெரிகின்றது.

"ஒலியிருங் கதுப்பி னாயிழை கணவன்
கிளிமரீஇய வியன்புனத்து
மரனணி பெருங்குர லனைய னாதலின்
நின்னை வருத லறிந்தனர் யாரே" —புறம், 138

கிளி மருவிய அகன்ற புனத்தின்கண் மரப்பொதும்பின் கண் வைத்த பெரிய கதிர் என்று புறநானூறு சொல்லு கின்றது. கிளியீடு வாய்த்தாற்போல் என்னும் வழக்கும் பழைய உரையில் கூறப்பட்டுள்ளது. கிளி தேடிச் சேர்த்த உணவையே கிளியீடு என்று சொல்லுதல் வழக்கமென்று தெரிகின்றது. இனக்கிளி என்று கிளியின் கூட்டத்தைக் குறிப்பிட்டுள்ளனர். கிளியின் குஞ்சைப் பற்றியும் சங்க நூலில் ஒரு பாடல் சொல்லுகின்றது.

"தளிரியற் கிள்ளை யினிதினி னெடுத்த
வளராப் பிள்ளைத் தூவி யன்ன
வுளர்பெயல் வளர்த்த பைம்பயிர்ப் புறவிற்"
—அகம். 324

தளிர் இலை போன்ற நிறமுடைய கிளி இனிதாகப் பெற் றெடுத்த வளராத பிள்ளையின் தூவி போன்று மழைபெய்து வளர்ந்த பசும்பயிர் இருந்ததாகக் கூறியுள்ளனர். கிளிக் குஞ்சின் படியாத சிலிர்த்த தூவி பசும் பயிர் போலிருப் பதாகக் கூறியது பொருத்தமே.

செந்தார்க் கிளியைச் சங்க காலத்திலேயே வீட்டில் வளர்த்துப் பழக்கினர் என்பது சங்க நூற் செய்திகளி லிருந்து தெரிகின்றது. இக் கிளியைப் பேசவும் பழக்கினர்.

"துணையொடு திளைக்குங் காப்புடை வரைப்பிற்
செந்தார்ப் பைங்கிளி முன்கை யேந்தி
யின்றுவர லுரைமோ சென்றிசி னோர் திறத்தெ ன"
—அகம். 34

"மயிலோர் அன்ன சாயல் செந்தார்க்
கிளியோர் அன்ன கிளவி பணைத்தோள்"
—நற்றிணை. 301

*"விளிகுவை கொல்லோ நீயே கிளியெனச்*
*சிறிய மிழற்றுஞ் செவ்வாய்ப் பெரிய"* —அகம். 126

*"ஓண்சுவர் நல்லி லுயர்திணை யிருந்து*
*பைங்கிளி மிழற்றும் பாலார் செழுநகர்"*
—பட்டினப்பாலை. 263-264

*"வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்*
*மறைகாப் பாளர் உறைபதிச் சேப்பின்"*
—பெரும்பாண். 300-301

**கிளிகளை வீட்டில் வளர்த்துப் பேசுவதற்குப் பழக்கினர் என்று சங்க நூல்கள் கூறியுள்ளன. பார்ப்பனர் வீடுகளிலும் கிளியை வளர்த்து மறையைக் கூறப் பயிற்றுவித்தனர் என்று கூறப்பட்டுள்ளது. சில சொற்களுக்குமேல் கிளியால் பேச முடியாது. கிளி பேசுவதும் தெளிவாக இருக்காது. சிறிய மிழற்றுவதாகக் கூறினது கிளியின் தெளிவற்ற குழந்தைப் பேச்சைக் குறித்தே யெனலாம். செந்தார்க்கிளியை ஆங்கிலத்தில் (Rose-ringed parrot) என்றும் பறவை நூலில் (Psittacula krameri manillensis) என்றும் அழைப்பர். மலையாளத்தில் கழுத்து வளையத்தைச் சுட்டிக் காட்டும் பெயராக 'மோதிரத்தத்தா' என்ற பெயர் வழங்குகின்றது. தெலுங்கில் 'சிலுகா' என்று அழைக்கின்றனர்.**

**தொல்காப்பிய மரபியலில் (623) 'செவ்வாய்க் கிளியைத் தத்தை யென்றலும்' என்று வரும் வரிக்கு உரை யெழுதிய பேராசிரியர் தத்தை யென்பது பெருங்கிளியாதலின் சிறுகிளிக்கும் அப்பெயர் கொடுத்தலமையுமென்றவாறு என்று கூறினர். பேராசிரியர் கூறியதிலிருந்து தத்தை என்ற பெயர் முதலில் பெருங்கிளியைக் குறித்து வழங்கியது தெளிவாகின்றது. எல்லாவகைக் கிளிகளையும் தத்தை யென்றழைக்கும் வழக்கை இன்றும் மலையாளத்தில் காண்கிறோம். தொல்காப்பியர் கூறும் தத்தையென்ற வழக்கும், பூனையைப் பூசையென்றழைக்கும் வழக்கும் இன்றும் மலையாளத்தில் இருப்பதைக் கவனிக்கலாம்.**

தொல்காப்பியர் காலத்திலேயே சேர நாட்டில் இவ் வழக்குகள் இருந்தமையால் அவைகளைக் குறிப்பிட்டுள்ளார். தத்தை என்ற பெயர் கிளி தத்தித் தத்திச் செல்வதால் வந்திருக்கலாம். தத்துவது தத்தையாகிற்று. தத்துக் கிளி என்று வெட்டுக் கிளியை அழைப்பதையும் கவனிக்கலாம். இலைகளிலும் கிளைகளிலும் தத்தித் தத்திச் செல்ல, கிளிக்குக் கால்களில் நான்கு விரல்கள் முன் பக்கம் இரண்டாகவும் பின் பக்கம் இரண்டாகவும் நேரெதிராக உள்ளன. மூக்கையும் கிளைகளில் இலைகளில் செல்லு வதற்குப் பயன்படுத்தும். கிளி தொத்திச் செல்வது என்பது பொருத்தமானது. தொத்துவதும் தத்துவதும் ஒரே பொருள் தருவனவே. தத்தை யெனப்பட்ட பெருங்கிளி ஆங்கிலத்தில் (Large Indian parrot) என்றழைக்கப்படும். பறவை நூலில் (Psittacula eupatria nipalensis) என்றழைக்கப்படும். கிளி, கிள்ளை என்ற பெயர்கள் கதிர்களைக் கிள்ளி எடுக்கும் குணத்தால் வந்திருக்கலாம். திவாகர நிகண்டில் கிளியின் மறு பெயர்களாகக் கூறப்படுபவை வடமொழிப் பெயர்களாகும். கருங்கிளி என்பது கருப்பு மூக்கையுடைய கிளியைக் குறிக்கலாம். கரிய நிறமுடைய கிளி இயற்கையில் கிடையாது.

---

# உஅ. வானம்பாடி
## (THE SKYLARK)

சங்க நூல்களில் வானம்பாடியைப் பற்றிச் சில பாடல்கள் கூறுகின்றன.



வானம்பாடி

"வானம் பாடி வறங்களைந் தானாது
அழிதுளி தலைஇய புறவிற் காண்வர"
—ஐங்குறுநூறு. 418

"யானெவன் செய்கோ தோழி பொறிவரி
வானம் வாழ்த்தி பாடவும் அருளாது
உறைதுறந் தெழிலி நீங்கலிற் பறைபுடன்
மரம்புல் லென்ற முரம்புயர் நனந்தலை" —அகம். 67

"தற்பாடிய தளியுணவிற்
புட்டேம்பப் புயன்மாறி" —பட்டினப்பாலை வரி. 3-4

"கேளில் சேஎய் நாட்டினெந் நாளும்
துளிநசைப் புள்ளினின் னளிநசைக் கிரங்கிநின்
அடிநிழற் பழகிய வடியுறை" —புறம். 198

"தற்பாடு பறவை பசிப்பப் பசையற
நீர்சூல் கொள்ளாது மாறிக் கால்பொரச்
சீரை வெண்டலைச் சிறுபுன் கொண்மூ" —ஆசிரியமாலை

"துளிநசை வேட்கையான் மிசைபாடும் புள்ளிற்றன்
அளிநசைஇ ஆர்வுற்ற அன்பினேன் யானக" —கலி. 46

"வறங்கூர் வானத்து வள்ளுறைக் கலமரும்
புள்ளிற் கதுபொழிந் தாங்கு மற்றுத்தன்" —கலி. 146

"..........................மேகப்
புள்வயிற் பிறந்த புட்போ
லொன்றலா துரைத்த தேற்றார்"
—சீவக சிந்தாமணி.

மேலே காட்டிய பாடல்களிலெல்லாம் மழைத்துளியை விரும்பி உண்ணும் பறவையைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

இந்தப் பறவையை வானம்பாடி யென்று கூறுவர். வானம்பாடி மழைக்காக ஏங்கிப்பாடுமென்றும் அதனல் மழை பொழியுமென்றும் ஐங்குறுநூற்றில் கூறப்பட்டுள்ளது. வானம்பாடி பாடியும் மேகம் அருளாது மழை பெய்ய வில்லை என்று அகநானூறு கூறியுள்ளது. வானம்பாடி மழைத்துளியை விரும்பி உயரத்தில் பறந்து பாடினல் மழை வரும் என்ற நம்பிக்கை சங்க காலத்திலேயே இருந்த தென்று தெரிகின்றது. இந்த நம்பிக்கை நாட்டு மக்களிடையே வழங்கி வந்ததாகலாம். ஆனல் மழைத்துளியை உணவாகக் கொள்ளும் பறவை இயற்கையில் எதுவும் இல்லை. 'துளிநசைப்புள்' என்று புறநானூறு வானம் பாடியை அழைக்கின்றது. வறட்சி மிக்க காலத்தில் மழைத் துளிக்கு அலையும் புள் என்று கலித்தொகை கூறியுள்ளது. வானில் உயரத்தில் பாடும் பறவையை வானம்பாடியென்று கூறியது உண்மைச் செய்தியே யாகும். பாடும் பறவை களில் வானம்பாடி மிகவும் புகழ் பெற்றதாகும். வானம்பாடி நிலத்தில் பெரும்பாலும் வாழும் பறவையாகும். சில காலங்

களில் வானம்பாடி நிலத்திலிருந்து செங்குத்தாக மேலே எழும்பி உயரச் சென்று வானில் ஒரு புள்ளிபோலத் தோன்றிப் பறந்து கொண்டே இனிய பாட்டைப் பொழி கின்றது. பத்து விநாடிகள்வரை பாடியபின் நேர் செங்குத் தாக நிலத்திற்கு இறங்குகின்றது. பொதுவாக நிலத்தில் வாழும் இந்தப் பறவை சில காலங்களில் வானிற்குச் சென்று உயரத்தில் பாடுவதால் இதை வானத்தைப் பாடும் பறவை யென்று அழைத்தனர். வானத்தை வாழ்த்தும் பறவையாகக் கருதி 'வானம் வாழ்த்தி' என்று அகநானூறு அழைக்கின்றது. 'மிசைபாடும் புள்' என்று கலித்தொகை கூறுகின்றது. மிசையென்பதற்கு வானம் என்று பொருள். வானத்தை வாழ்த்திப் பாடுவது மழை பொழிவதற்காக என்று கருதினர். வானம்பாடியின் உணவே மழைத்துளி என்று கருதினர்.

வானம்பாடியைத் 'தற்பாடிய புள்' என்று பட்டினப் பாலை குறிப்பிடுவதைக் கவனிக்க வேண்டும். தன்னையே பாடிய பறவை என்று கூறுவதன் காரணத்தை ஆராய லாம். ஆசிரியமாலையிலும் 'தற்பாடு பறவை' என்று அழைக்கப்பட்டுள்ளது. வானத்தைப் பாடும் பறவையைத் தன்னையே பாடும் பறவை என்று ஏன் கூறினர் என்பதை ஆராயவேண்டும். சீவகசிந்தாமணியில் அதற்கான விளக்கம் காணப்படுகின்றது. வானம்பாடியை சீவக சிந் தாமணி 'மேகப் புள் வயிற் பிறந்தபுள்' என்று கூறு கின்றது. இதற்கு மேகமாகிய பறவையின் இடத்தில் பிறந்த பறவை யென்று நேராகப் பொருள் கொள்ள வேண்டும். இந்தப்பறவை வானத்திலிருந்து பிறந்தது என்று கருதினரென்று தெரிகின்றது. வானில் பிறந்த பறவையாதலால் தான் பிறந்த வானத்தை வாழ்த்திப் பாடும்போது தன்னையே வாழ்த்துவதாகக் கொண்டனர். ஆதலின் தற்பாடு பறவை யென்றழைத்தனர். தற்பாடு பறவை யென்ற வழக்கு சங்க காலத்தில் இருந்தாலும் தற்காலம் தமிழ் நாட்டில் வானம்பாடி யென்றே வழங்கு கின்றோம். ஆனால் மழையை வருவிக்கும் என்று கருதப்

படும் வேறொரு பறவையை ஈழநாட்டில் 'தற்பாடி' என்ற சங்ககாலப் பெயரால் வழங்குவது வியப்பைத் தருகின்றது.



தற்பாடி

தமிழ் நாட்டில் தலையிலாக் குருவி, தகைவிலான் என்று அழைக்கும் குருவியை ஈழநாட்டில் 'தாம்பாடி' என்று

இன்றும் அழைக்கின்றனர். 'தாம்பாடி' என்ற பெயர் தற்பாடி என்பதின் மரபில் வந்த பெயராகும். தாம்பாடி என்பது பன்மையைக் குறிக்கின்ற பெயராகும். இந்தத் தாம்பாடி என்ற பறவை நீர்த்துளியை உண்பதாக ஒரு நம்பிக்கை வடநாட்டில் உண்டு. இந்தி மொழியில் இப் பறவையின் பெயர் (Ababil) இதே நம்பிக்கையின் அடிப் படையில் வழங்குகின்றது. இந்தக் குருவி வானத்தைப் பாடி மழையை வருவிக்கும் என்ற நம்பிக்கை இருந்ததால் ஈழநாட்டில் 'தாம்பாடி' என்றழைத்தனரென்று கருத வேண்டும். தமிழ் நாட்டில் இன்றும் தரையிலாக் குருவி வியைப்பற்றி இதுபோன்ற நம்பிக்கை நிலவுவதைக் காண லாம். 'தைலான் குருவி' தரையை ஒட்டிப் பறந்தால் மழைவரும் என்று கூறுவர். வானம்பாடி வானில் உச்சியில் பறந்து பாடினால் மழைவரும் என்ற நம்பிக்கை சங்க காலத்தில் இருந்தது. ஆனால் இன்று தகைவிலான் குருவி தரையை யொட்டிப் பறந்தால் மழைவரும் என்று சொல்லுகின்றனர். தகைவிலான் குருவியை (The common Swallow) என்று பறவை நூலார் அழைப்பர். பிங் கலந்தையில் தலையிலாக் குருவி என்று இப்பறவை அழைக் கப்பட்டுள்ளது. இதற்கு மறுபெயராக மழைக் குயில் என்ற பெயர் காணப்படுகின்றது. மழையைத் தரும் குயி லாகக் கருதிப் பிங்கலந்தை கூறுகின்றது. ஆனால் இந்தி மொழியில் மழையை அழைக்கும் குயிலாகக் குயிலினத்தைச் சேர்ந்த பறவை கூறப்படுகின்றது. கல்லாடத்தில் மலைப் புள் என்ற பெயரில் மழைக்குப் பாடும் ஒரு பறவை கூறப் பட்டுள்ளது.

> "மலையுறை பகைத்து வானுறைக் கணக்கும்
> புட்குலம் சூழ்ந்த பொருப்பு" —கல்லாடம் 51

> "அளிதார் பாடும் குரனீர் வறந்த
> மலைப்புட் போல................" —கல்லாடம் 91

தகைவிலான் குருவியினத்தில் ஒருவகை (Hill Swallow) குன்றுகளிலும் மலைகளிலும் வாழ்கின்றது.

நீலகிரி முதலிய மலைகளில் காணப்படுகின்றது. இந்த இனப்பறவையையே 'மலைப்புள்' என்று கல்லாடம் அழைக்கின்றது. இந்தப் பறவை மழைமேகத்தைப் பாடினதால் குரல் கம்மியதாகவும் மழைத்துளிக்கு வாயை அங்காந்து திறந்திருப்பதாகவும் கல்லாடம் கூறியுள்ளது. மலையில் கூட்டமாகச் சூழ்ந்திருக்கும் பறவை இயற்கையில் வானம் பாடியாக இருக்க முடியாது. கூட்டமாக மலையில் காணப்படுவது, மழைக்குப் பாடுவதாகக் கருதப்படுவது மலையில் வாழும் தகைவிலான் குருவியாகவே இருக்க முடியும். இதைப் பறவை நூலார் 'The Indian Cliff Swallow' என்றழைப்பர்.

வானம்பாடியைப் 'பொறிவரி வானம் வாழ்த்தி' என்று அகநானூறு கூறுகின்றது. வானம்பாடிக்கு வரிகளும் புள்ளிகளும் கலந்த உடல் உண்டு. வானம்பாடியைப் பிற்கால நூல்கள் சாதகம் என்ற வடமொழிப் பெயரால் அழைக்கின்றன. திவாகரத்தில் சாதகப்புள் என்று சொல்லப்பட்டுள்ளது. வானம்பாடியின் பெயர்களாக கவிங்கம், மேகப்புள் என்பவைகளைப் பிங்கலந்தை கூறியுள்ளது. மேகப்புள் என்ற பெயர் சிந்தாமணியில் பயில்கின்றது. கல்லாடத்தில் 'சாதகமுரல் குரல் வாய்மடை திறப்ப......................எழுந்தகார்' என்ற வரி காணப்படுகின்றது. 'வானத்தின் துள்ளி அல்லால் வருந்தினும் விரும்பல் செல்லா மானத்தையுடைய புள்ளின்' (121) என்ற மேருமந்தரபுராணம் வானம்பாடியை மானப்புள்ளாகக் கூறியுள்ளது. கவரிமா மானமா ஆனது போல வானம்பாடி மானப்புள்ளாக மாறிற்று. நான்மணிக்கடிகையில் சாதகப் புள்ளின் பெயராக 'ஓங்கல்' என்ற சொல் பயில்கின்றது. 'நீரிடும்பை புள்ளினுள் ஓங்கல் அறியும்' என்று நான்மணிக்கடிகை கூறுவதில் நீர்த்துளியை உண்ணும் வானம்பாடி கூறப்பட்டுள்ளது. ஓங்கல் என்ற பெயர் வானம்பாடி உயரத்தில் சென்று பாடுவதன் காரணமாக வழங்கியிருக்கலாம். சாதகப்புள் தரையிலுள்ள நீரை உண்டால் உயிர் மாயும் என்றும் மேகதாரையை ஆகாயத்

தில் உண்ணும் பறவைகளில் உயர்ந்து பறக்கும் சாதகப் பறவை என்றும் இங்கு உரை கூறப்பட்டுள்ளதைக் காண லாம். மழைத்துளியை உண்பதாக வானம்பாடி, தகை விலான் குருவி, ஒருவகைக் குயில் ஆகிய பறவைகள் கூறப் படுவதைக் காணலாம். சகோரம் என்ற பறவை நிலவுக் கதிரை உண்பதாகக் கூறுவர். இவையெல்லாம் கற்பனைச் செய்திகளே.

வானம்பாடியை ஆங்கிலத்தில் The Indian Skylark என்றும் பறவை நூலில் Alauda gulgula என்றும் அழைப்பர்.

---

## உகூ. முதுக்குறை குருவி

## (THE BAYA WEAVER BIRD)

சங்க இலக்கியத்தில் மிகுந்த அறிவுடைய குருவியாகக் கருதப்பட்ட தூக்கணாங் குருவிக்கு 'முதுக்குறை குரீஇ' என்ற பெயர் நற்றிணையில் வழங்குகின்றது. பிற சங்கப் பாடல்களில் 'தூக்கணங் குரீஇ' என்று அழைக்கப்படு கின்ற இக் குருவியைப் பற்றிச் சில அரிய செய்திகள் காணப்படுகின்றன.

*"இரும்பல் மெல்லணை ஒழியக் கரும்பின்*
*வேல்போல் வெண்முகை பிரியத் தீண்டி*
*முதுக்குறைக் குரீஇ முயன்றுசெய் குடம்பை*
*மூங்கில் அங்கழை தூங்க ஒற்றும்*
*வடபுல வாடைக்குப் பிரிவோர்*
*மடவர் வாழியிவ் வுலகத் தானே"* —நற்றிணை-366

*"முடங்க லிறைய தூக்கணங் குரீஇ*
*நீடிரும் பெண்ணைத் தொடுத்த*
*கூடி னு மயங்கிய மைய லூரே"* —குறுந்தொகை-374

*"தூக்கணங் குரீஇத் தூங்குகூ டேய்ப்ப*
*வொருசிறைக் கொளீஇய திரிவாய் வலம்புரி."*
—புறம்-225

தூக்கணாங் குருவியின் கூட்டைப் பலரும் பார்த்திருக் கலாம். ஒரு பக்கமாகப் பிதுங்கிய உருண்ட நடுப்பாகமும் மேலும் கீழும் குழாய் போன்றும் செய்யப்பட்ட கூட்டைக் கண்டார் மறக்கவே முடியாது. நடுவே பானை போல உருண்டிருந்தாலும் ஒரு பக்கமாக ஒருக்கணித்து இருப் பதைக் காணலாம். இதையே 'ஒருசிறைக் கொளீஇய' திரிவாய் வலம்புரிச் சங்கினோடு புறநானூற்றுப்பாடல் ஒப் பிட்டுக் கூறியதைக் காணலாம். 'ஒருசிறைக் கொளீஇய'

என்ற விளக்கம் ஒரு பக்கம் ஒதுங்கிய, பிதுங்கிய கூட்டின் பாகத்தையே குறிக்கும். நடுப்பாகம் வலம்புரிச் சங்கு போன்றும் அதோடு குழாய்போல அமைந்த வாய்ப்புறமும் சேர்ந்து உள்ளது. தூக்கணாங் குருவியின் கூடு ஓலை, இலை நார்களால் பின்னப்பட்டது. இக் கூட்டில் நாரிழை எங்குத் துவங்கி எங்கு முடிகின்றது என்பதைக் கண்டு பிடிப்பது முடியாத செயலாகும். ஆதலின் இதையே ஓர் உவமையாகக் குறுந்தொகைப் பாடலில் ஒரு புலவர் கையாண்டுள்ளார். தலைவனுக்கும் தலைவிக்கும் உள்ள தொடர்பையும் அன்பையும் உணராத ஊரார் மயங்கிப் பலவாறு அலர் கூறினர் என்று சொல்ல வந்த இடத்தில் அவர்கள் மயக்கம் தூக்கணாங் குருவியின் கூட்டில் நாரிழைகள் பின்னியிருந்த மயக்கம் போலிருந்ததாகக் கூறியுள்ளார். குருவிக் கூட்டில் நாரிழைகளின் சிக்கலை அவிழ்த்துப் பிரிப்பது எவ்வளவு அரிய செயலோ அது போன்றே ஊரார் மயக்கமாகிய சிக்கலை அவிழ்ப்பதுவும் அரிய செயல். தலைவன் வரைந்துகொள்ள வந்ததால் அந்தச் சிக்கல் அவிழ்ந்தது என்று தோழி கூறியதாக அமைந்த இந்த உவமை மிக நயமான புலமை வளம் நிறைந்ததாகும். தூக்கணாங் குருவி 'முயன்று செய்த குடம்பை' மனிதர்கூடக் கையினால் செய்யமுடியாது. ஆதலின் 'முதுக்குறை குரீஇ' என்று அழைத்து இதன் அறிவைப் போற்றிப் பாடியுள்ளனர். தூக்கணாங்குருவி பனையோலை, மற்றும் புல்வகைகளின் ஓலைகளையும் அலகினால் கிழித்து நாரிழையாகச் செய்து அந்த இழைகளைப் பின்னிக் கூடுகட்டுகின்றது. கரும்பின் பூவிலிருந்து இழை யெடுத்துப் பிரித்துக் கூடு கட்டுவதாக நற்றிணை கூறியுள்ளது பொருத்தமான செய்தியாகும். தூக்கணாங் குருவி பனை, ஈச்சமரங்களில் விரும்பிக் கூடு கட்டுவதைப் பறவை நூலார் குறிப்பிட்டுள்ளனர். குறுந்தொகையில் பனை மரத்திலும், நற்றிணையில் மூங்கில் கழையிலும் தூக்கணாங் குருவி கூடு கட்டுவதாகக் கூறியுள்ளது உண்மையான செய்தியேயாகும்.

தூக்கணாங்குருவி கூடுகள் கட்டிக் கூட்டம் கூட்டமாக முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் என்பதையும் தமிழ்ப் புலவரொருவர் கண்டறிந்து கூறியுள்ளார்.

> "வெள்ளாங் குருகின் பிள்ளையும் பலவே
> அவையினும் பலவே சிறுகருங் காக்கை
> அவையினும் அவையினும் பலவே குவிமடல்
> ஓங்கிரும் பெண்ணை மீமிசைத் தொடுத்த
> தூக்கணாங் குரீஇக் கூட்டுவாழ் சினையே."

மேலே காட்டிய பாடல் தொல்காப்பியப் பொருளதிகார உரையில் இளம்பூரணர் எடுத்தாண்ட பழைய மேற்கோள் பாட்டாகும். வெள்ளாங்குருகுகள் (Egrets) கூட்டமாகக் கூடுகட்டிக் குஞ்சு பொரிக்கும். இதை வேடந்தாங்கலில் சென்றால் இன்றும் காணலாம். சிறு கருங்காக்கை கடற்கரையில் கூட்டம் கூட்டமாகக் காணப்படும். வெள்ளாங் குருகின் பிள்ளைக்கூட்டத்தைவிட, காக்கைகளின் கூட்டத்தைவிட, உயர்ந்த பனைமரத்தில் தொடுத்த தூக்கணாங் குருவிக் கூடுகளில் வாழ்ந்த குஞ்சுகள் மிகுந்திருந்தனவாகக் கூறியுள்ளது பறவை நூலார் கண்டு கூறிய செய்தியுடன் மிகவும் ஒத்து வருகின்றது. (The Baya weaver bird breeds in Colonies. a bunch of nests being usually built in a single tree or palm) 'கூட்டு வாழ்சினையே' என்று கூறியது குஞ்சு பொரிக்கும் காலத்தில் கூட்டமாகக் கூடு கட்டிக் குஞ்சு பொரித்தலைப் பறவை நூலார் கண்டு கூறியதையேயாகும் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். தூக்கணாங் குருவிகள் தங்கள் கூட்டை மரக்கிளைகளின் உச்சிக் கொம்பரிலோ, தொங்கும் கொம்பு நுனிகளிலோ, பனை, ஈச்சம்முதலிய மரங்களின் ஓலை நுனியிலோ கட்டுவதால் எதிரிகள் கூட்டை அழிக்க அணுகுவது அரிது. கொடிய முள் நிறைந்த வேல மரத்தில் கூடு கட்டுவதையும் கண்டிருக்கலாம். தூக்கணாங் குருவிக் கூடு தொங்கிக் கொண்டிருப்பதைத் 'தூங்கி ஒற்றும்' என்று கூறியுள்ளனர். தூங்கியிருப்பதால் இதன் கூட்டைத் 'தூங்கணத்தான்' என்று நாட்டு மக்கள் அழைக்கின்றனர். தூங்கிக் கிடக்கும் கூட்டைக் கட்டும் குருவியைத்

'தூக்கணங் குருவி' என்று சங்க நூல்கள் அழைத்தன. மேலே தொங்குவது என்ற அதே பொருளிலே தேன் கூட்டைத் 'தூக்கன்' என்று கூறுவதையும் கேட்டிருக் கலாம். மலைத்தூக்கன், பெருந்தூக்கன் என்ற சொல் வழக்குகள் தேன் கூட்டிற்கு வழங்குவதைக் காணலாம்.

தூக்கணாங் குருவி கார்காலத்தில் கூடுகட்டும் என்று தமிழ் இலக்கியத்தில் கூறப்பட்டுள்ளது.

> "கன்னலெனுஞ் சிறுகுருவி
> மின்னலெனும் புழுவெடுத்து
> விளக்கேற்றும் கார்காலம்." —பெருந்தொகை-1196

தூக்கணாங் குருவிகள் கார்காலத்தில் கூடு கட்டிக் குஞ்சு பொரிக்குமென்று பறவை நூலாரும் கூறுகின்றனர். (Nesting season is May to September, coincident with the South-West Monsoon) பெருந்தொகைப் பாடலை அடி யொற்றியே அழகிய நாட்டுப் பாடல் ஒன்றும் வழங்கு கின்றது.

> "அங்குயிரும் இங்குடலும்
> ஆனமழைக் காலம்
> அவரொருவர் நாமொருவர்
> ஆனதொரு காலம்
> கன்னலெனும் சிறுகுருவி
> ககனமழைக் காற்றுமல்
> கன்னலெனும் புழுஎடுத்து
> விளக்கேற்றும்"

கார்காலத்தில் தூக்கணாங்குருவி இணை சேருகின்றது. இக்காலத்தில் சென்ற தலைவனை நினைந்துகொண்டு தலைவி கூறுவதாக இச்செய்தி இலக்கியத்திலும் நாட்டுப்பாடல் களிலும் வரும் நயம் இன்புறத்தக்கது. நற்றிணைப் பாட்டில் வடபுலவாடை வீசுங் காலத்தில் தூக்கணாங் குரு வியின் கூடு அலைக்கழிக்கப்படுவதைப் பற்றிச் சொல்லப் பட்டுள்ளது. நவம்பர்-டிசம்பர்த் திங்களில் வடபுலவாடை வீசும். இக்காலத்தில் தூக்கணாங் குருவி குஞ்சு பொரித்து வெளியாகி விடுவதொடு கூடுகளும் வெறுமையாகி விடும். கூட வேண்டிய கூதிர்காலத்தில் பிரியும் தலைவன் மடமை

யுடையவன் என்று கூறியதும் அழகிய புலமை நலமாகும். பெருந்தொகைப் பாட்டு, தூக்கணங்குருவியைக் 'கன்னல் எனும் சிறு குருவி' என்று கூறியதைக் காணலாம். கன்னல் என்ற சொல் தொகுத்த வாயையுடைய கரகம் என்று பொருள்படும். 'தொகுவாய்க் கன்னற் றண்ணீர், குண்ணூர்' என்று நெடுநல் வாடை (65 வரி) கூறுவதைக் காண்க. தொகுவாய் வைத்த கரகம் போல (Retort - shaped) கூடு கட்டுவதால் கன்னல் என்ற பெயரால் இக் குருவி அழைக்கப்பட்டுள்ளது. மின்னல் எனும் புழு மின் மினிப் பூச்சி போன்ற மின்மினிப் புழுவைக் குறிப்பிடும். மின்மினிப் புழு பெண் என்றும் மின்மினிப் பூச்சி ஆண் என்றும் அறிவியலார் கூறுவார். கன்னலெனும் புழு என்று நாட்டுப் பாடல் கூறுவதில் கனல் என்ற சொல் கன்னல் என்று விரித்துக் கூறப்பட்டதாகத் தோன்று கின்றது. கன்னலெனும் குருவி ககன மழைக் காற்றுமல் மின்னலெனும் புழுவெடுத்து விளக்கேற்றிக் குஞ்சுகளைப் பாதுகாக்கும் மழைக் காலத்தில் அங்குயிரும் இங்குடலு மாகிய துன்பத்தைக் காதலி பாடுவது மிகவும் நயம் வாய்ந்த செய்தியாகும். நாட்டுப் பாடலில் புலமை நலமும் செய்யுள் நயமும் காண்கிறோம். உயிரைத் தலைவனாகவும் உடலைத் தலைவியாகவும் உவமிக்கும் வழக்கம் சங்ககாலத் திலேயே காணலாம். மின்மினிப் புழுவைத் தூக்கணங் குருவி தூக்கிச் சென்று கூட்டில் வைத்து விளக்கேற்றுவ தாகக் கூறிய செய்தி வடநாட்டிலும் நாட்டு மக்களிடையே வழங்குவதாகத் தெரிகின்றது. இச் செய்திக்கு அடிப்படை இல்லையென்று பறவை நூலார் கூறுகின்றனர். இந்த நம்பிக்கை தோன்றுவதற்கு ஒரு காரணம் இருக்கலாம். தூக்கணங்குருவி கூடு கட்டும்போது மழைக்காலத்தில் காற்றில் அலைக்கழிக்கப்படாமல் இருக்க நனைந்த களிமண் உருண்டைகளைக் கூட்டில் வைத்து ஒட்டவைப்பதைப் பறவை நூலார் கண்டுள்ளனர். மின்மினிப் புழுவும் பூச் சியும் கார்காலத்தில் ஈரமான சூழ்நிலையில் காணப்படு கின்றன. தூக்கணங்குருவி எடுத்துச் செல்லும் களிமண் ணில் தற்செயலாக மின்மினிப் புழு காணப்பட்டிருக்கலாம்.

இதைப் பார்த்து இந்த நம்பிக்கை எழுந்திருக்கலாமென்று தோன்றுகின்றது.

தூக்கணாங்குருவியை வான்குருவி என்று சிறுபஞ்ச மூல உரையிற் கூறப்பட்டுள்ளது.

> "வான்குருவிக் கூடரக்கு வாலுலண்டு கோற்றுதல்
> தேன்புரிந்தி யார்க்குஞ் செயலாகா—"

என்று வரும் பாடல் வரிகளில் கூறப்படும் வான்குருவி தூக்கணாங்குருவி ஆகும். ஔவையாரும்,

> "வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கறையான்,
> தேன்சிலம்பி யாவர்க்குஞ் செய்யரிதால்"

என்று பாடினர். உயரத்தில் கூடுகட்டுவதால், வானத்திற் கடியில் தொங்குவது போலத் தோற்றுவதால் வான்குருவி என்றழைத்தனர். இதை மஞ்சள்குருவி என்றும் அழைப்பர். தூக்கணங்குருவியின் தலையும் அடிப்பாகமும் மஞ்சளாக இருக்கும். ஆண்குருவிக்கே இந்த நிறம் உண்டு. மரம் நிறைய மஞ்சள் குருவி ஊசலாடுது என்று கிராம மக்கள் கூறுவதுண்டு. பொன் குருவி யென்றும் அழைப்பது நிறத் தின் காரணத்தால் என்று கருதலாம். வான்குருவி என்ற பெயரை நாட்டுமக்கள் இன்றும் வழங்குகின்றனர். வான் குருவி வாழ்வு பெற்றால் வையகம் செழிக்கும், வான் குருவியின் வயிற்றெரிச்சல் வழி வழி விடாது என்று பழ மொழிகள் வழங்குவதைக் காணலாம். மஞ்சள் குருவி என்ற பெயர் ஈழநாட்டிலும் வழங்குகின்றது. தூக்கணங் குருவியின் கூட்டைக் குரங்குகள் அழிப்பதுண்டு. ஆனால், இக்குருவிகள் முள் மரத்திலும், ஈச்ச மர இலையின் நுனி யிலும் கூடுகட்டுவதைக் காணலாம். நீர் நிலைகளின்மேல் தொங்கும்படி கூட்டை மரக் கொம்புகளின் நுனிகளில் கட்டுவதையும் பார்க்கலாம். பஞ்ச தந்திரக் கதையில் தூக்கணங்குருவியின் கூட்டைப் பிய்த்தெறியும் குரங்கைப் பற்றிய கதை வருகின்றது. குருவியை 'ஊசிமூஞ்சி' என்று குரங்கு அழைப்பதாகக் கூறப்பட்டுள்ளது. குருவி போலக் கூடுகட்டிக் குரங்குபோலப் பிய்த்தெறிவான் என்று நாட்டுமக்கள் கூறுவது இந்தக் கதையின் அடிப்படை

யாகவே என்று கருதலாம். தூக்கணங்குருவிபோலக் கூடு கட்டிப் பாதுகாப்பாக மனிதன் வாழவேண்டும் எனக் கருதினர். 'ஊசி முஞ்சியை ஊதை என்ன செய்யும்,' 'தூக்கணத்துக்குத் துயரமில்லை, மூக்கணத்துக்கு முசு வில்லை' என்ற பழமொழிகள் வழங்குகின்றன. ஊதைக் காற்றடிக்கும் வாடைக் காலத்தில் கூட்டினுள் முட்டை யிட்டுக் குஞ்சு பொரிக்கின்றன. தூக்கணாங்குருவியின் சேவல் பல பெண் குருவிகளைக் கூடிவாழும் குணமுடையது என்று பறவை நூலார் கண்டுள்ளனர். ஆண் குருவி கூடுகள் கட்டிப் பெண் குருவிகளைக் கவர்ச்சி செய்யும். எந்தப் பெண் குருவி கட்டிய கூட்டை ஏற்றுக்கொள் கின்றதோ அதனுடன் சேர்ந்து கூடிவாழும். பல கூடுகள் கட்டி, பல பெட்டைகளுடன் கூடிவாழுமென்பர். கூடுகளைக் கட்டத்தொடங்கி நடுவில் விட்டுச் செல்வதுமுண்டு. இக் கூடுகள் பெட்டைக் குருவிகள் ஏற்றுக்கொள்ளாதவை எனக் கூறுவதுண்டு. பல பெட்டைகளுடன் கூடிவாழும் குணத்தை அறிந்தே 'துணை இரண்டானால் தூக்கணத் துக்கு மனை இரண்டு' என்ற பழமொழி வழங்கலாயிற்று. துணைகள் பெருகப் பெருகக் கூடுகளும் பெருகும்.

தூக்கணங் குருவிகளின் கூட்டை வியந்தே முதுக் குறை குருவி என்று சங்க நூல்கள் அழைக்கின்றன. உருவில் சிறியதாயினும் அறிவில் மிகுந்தது என்பதே இப் பெயரின் பொருளாகும். 'பொற்குருவி போன இடம் போதனுக்கும் தெரியாது' என்றொரு பழமொழி வழங்கு கின்றது. போதன் என்றால் அறிவாளி என்று பொருள். பொற்குருவியான தூக்கணம் இழையெடுத்துப் போன இடத்தை அதன் கூட்டில் அறிவாளியும் காணமுடியாது என்பதே இதன் பொருள். குறுந்தொகையில் 'கூடினும் மயங்கிய மையல்' என்று கூறியது இதைக் குறித்தே யாகும். அறிவாளியினும் அறிவில் மிஞ்சிய தூக்கணங் குருவியை 'முதுக்குறை குருவி' என்று சங்க நூல்கள் கூறியது பொருத்தமே. தூக்கணங்குருவியைப் பறவை நூலார் 'Ploceus philippinus' என்றழைப்பர்.

———

## ௯௦. மனையுறை குருவி

## (THE HOUSE SPARROW)

சங்க இலக்கியத்தில் மனையுறை குருவியைப் பற்றிச் சில செய்திகள் வருகின்றன. மனையுறை குருவி தற்காலம் ஊர்க் குருவி, அடைக்கலாங் குருவி என்றழைக்கப்படுகின்றது. பறவைகளில் இது சிறியது என்று கருதப்பட்டது. 'உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகுமா ?' என்பது ஒரு பழமொழி. இக் குருவியை மலையாளத்தில் அடைக்காப்பட்சி என்று வழங்குவர். சங்க காலத்தில் வழங்கிய மனையுறை குருவி என்ற பெயர் மிகவும் பொருத்தமான பெயர். இக் குருவி வீடுகளின் இறப்புகளிலும் இடுக்குகளிலும் வாய்ப்பான இடங்களிலெல்லாம் கூடு கட்டும். இக் குருவியின் கூட்டை அழித்தால் குடும்பத்திற்குக் கேடுவரும் என்ற நம்பிக்கையால் கூட்டை அழிப்பதில்லை. சங்க இலக்கியத்தில் ஊர்க்குருவியின் கூட்டைப் பற்றியும், முட்டை, குஞ்சுகளைப் பற்றியும் செய்திகள் காணப்படுகின்றன.

*"ஆம்பற் பூவின் சாம்ப லன்ன*
*கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ*
*முன்றி லுணங்கன் மாந்தி மன்றத்*
*தெருவினுண் டாது குடைவன வாடி*
*இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்"*

*—குறுந்தொகை 46*

*"உள்ளிறைக் குரீஇக் காரணல் சேவல்*
*பிறபுலத் துணையோடு உறைபுலத் தல்கி*
*வந்ததன் செவ்வி நோக்கிப் பேடை*
*நெறிகிளர் ஈங்கைப் பூவின் அன்ன*
*சிறுபல் பிள்ளையொடு குடம்பை கடிதலின்*
*துவலையின் நனைந்த புறத்த தயலது*

கூர விருக்கை அருளி நெடிதுநினைந்து
ஈர நெஞ்சின் தன்வயின் விளிப்பக்
கையற வந்த மையன் மாலே" —நற்றிணை 181

"மனையுறை குரீஇக் கறையணற் சேவல்
பாணர் நரம்பின் சுகிரொடு வயமான்
குரற்செய் பீலியி னிழைத்த குடம்பைப்
பெருஞ்செய் நெல்லி னரிசி யார்ந்துதன்
புன்புறப் பெடையொடு வதியும்........." —புறம் 318

"உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்
சூன்முதிர் பேடைக் கீனி லிழைஇயர்
தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்
நாறா வெண்பூக் கொழுதும்
யாண ரூரன் பாணன் வாயே" —குறுந்தொகை 85

"உள்ளூர்க் குரீஇக் கருவுடைத் தன்ன
பெரும்போது அவிழ்ந்த கருந்தாட் புன்னை"
—நற்றிணை 231

ஊர்க்குருவி காய்ந்த ஆம்பல் பூவின் சாம்பல் நிற மான இறக்கைகளை உடையது என்று குறுந்தொகைப் பாடல் கூறுகின்றது. ஆம்பற் பூவின் காய்ந்த இதழும் ஊர்க்குருவியின் சாம்பல்நிற (Grey) இறக்கையும் நிறத்தில் மட்டுமன்று, குவிந்த உருவிலும், தோற்றத்திலும் ஒத்துள்ளன. பறவைகளில் மனிதனை நம்பியே வாழும் ஒரே பறவை ஊர்க் குருவியாகும். நாகரிகமான நகரங்களிலும் ஊர்க் குருவிகள் மின்சார விளக்குக் கூம்புகளில் கூடக் கூடுகட்டுவதைக் காணலாம். இக் குருவி உலகில் எங்கணும் காணப்படுகின்றது. நற்றிணைப் பாடலில் இக் குருவியின் ஆணிற்குக் 'காரணல்' இருப்பதாகக் கூறியது உண்மையே. ஊர்க்குருவியின் சேவலை இந்தக் கருப்பான தாடையைக் கொண்டுதான் கண்டுபிடிக்கலாம். ஆணும் பெண்ணும் பொதுவாகச் சாம்பல் நிறமாக உள்ளன. ஊர்க்குருவியின் முட்டை புன்னையின் பெரிய பூ மொட்டுப் போல் இருப்பதாகவும், புன்னை மொட்டு விரிந்தால் எப்படி

யிருக்குமோ அதுபோல ஊர்க்குருவி முட்டை உடைந்து போனபோது காணப்பட்டதாகவும் கூறியது அழகிய நுண்ணிய உவமையாகும். ஊர்க் குருவியின் முட்டையின் அளவும் புன்னை மொட்டின் அளவும் ஒத்தே உள்ளன. உருவிலும் ஒன்றேபோல வெண்மையாக உள்ளன. புன்னை மொட்டு மலர்ந்தால் அதில் நிறைய மகரந்தத் தாதுகள் மஞ்சளாகத் தோன்றும். அதுபோன்ற உடைந்த முட்டையில் மஞ்சள் கரு தோன்றுவதாகக் கூறியுள்ளது மிகவும் போற்றத்தக்க புலமையாகும். ஊர்க்குருவியின் உடைந்த முட்டையையும் பூத்த புன்னைப் பூவையும் நேரில் கண்டவர்க்கே இந்த உவமைச் சிறப்பு விளங்கும். மற்றொரு நற்றிணைப்பாடல் ஊர்க் குருவியின் குஞ்சுகளை நெறிகிளர்ந்த ஈங்கைப் பூவின் தோற்றத்திற்கு ஒப்பிட்டுக் கூறியுள்ளது. ஈங்கையின் (Acacia cesia) பூ உருண்டு பந்து போலச் சிறியதாகக் காணப்படும். வேல மரத்தின் பூப்போல மெத்தென்று உருண்டு மகரந்தத் தாள்கள் நீட்டிக் கொண்டிருக்கும். ஊர்க்குருவியின் குஞ்சு இறக்கையின்றிக் குறு மயிர்களுடன் ஏறக்குறைய ஈங்கைப் பூவைப்போலக் காணப்படும். கோழி முட்டையிலிருந்து பொரித்த குஞ்சிற்கு எப்படி இறகு மயிர்கள் சுற்றிலும் காணப்படுகின்றதோ அதேபோலவே ஊர்க்குருவியின் குஞ்சுக்கும் காணப்படும். ஈங்கையின் பூவிற்கு ஒப்பிட்டது பொருத்தமே.

ஊர்க்குருவி வீடுகளில் கழிவாகப் போடப்பட்ட உணவுப் பொருள்கள், நெல், புல்லரிசி முதலிய தானியங்களைக் கொத்தித் தின்று வாழும். வீட்டு முற்றத்தில் காயப் போட்டிருந்த உணங்கலைத் தின்றதாகவும் தெருவினில் குப்பையைக் குடைந்ததாகவும் குறுந்தொகைப் பாட்டுக் கூறியுள்ளதைக் கவனிக்கலாம். ஊர்க்குருவி கூடுகட்டுவதைப்பற்றிக் கூறப்புட்ட செய்திகள் தெளிவாக உள்ளன. இல்லிறையில் பள்ளி கொள்வதாகக் கூறப்பட்டுள்ளது. இறை என்பது இறவாணம் என்று இக் காலத்தில் வழங்குவர். இறைப்பில் கூடுகட்டுவதை நாம் அடிக்கடி காண்

கிறோம். சூல் முதிர்ந்த பேடைக்கு 'ஈன்இல்' இழைக்கச் சேவல் கரும்பின் பூவைக் கோதியதாகக் கூறியதைக் காண லாம். கரும்பின் பூப்போன்ற பஞ்சு முதலிய மெத்தென்ற பொருள்களை எடுத்துக் கூட்டில் வைப்பது ஊர்க் குருவி களின் வழக்கம். புறநானூற்றில் வயமானுடைய வாலின் மயிரை யெடுத்துக் கூடுகட்டினதாகக் கூறியுள்ளதைக் கவனிக்கலாம். மனிதனுடைய மயிரைக் கூட எடுத்துக் கூடுகட்டுவதைக் காணலாம். வயமான் என்பதற்குச் சிங்கம் என்று உரை கூறியுள்ளார். சிங்கம் தமிழ்நாட்டில் என்றும் இயற்கையில் வாழ்ந்ததில்லை. ஆதலின் சிங்கம் என்று கொள்வது தவறு. வயமான் என்பதற்குக் குதிரை, புலி என்ற பொருளும் உண்டு. குதிரையின் வால் மயிர் கீழே கிடந்ததை எடுத்துக் கூடுகட்டியதாகக் கொள்வதே பொருத்தம். பாணர் விட்டுச் சென்ற நரம்பிழையையும் சேர்த்துக் கூடுகட்டியதாகவும் புறநானூறு கூறியுள்ளது. ஊர்க்குருவி ஆண்டு முழுவதும் கூடுகட்டுவதும் குஞ்சு பொரிப்பதும் உண்டு. இதன் காரணமாக ஊர்க்குருவிக்கு ஆண்மைச் சக்தி கூடுதல் என்று கருதிச் 'சிட்டுக் குருவி லேகியம்' என்று விற்கப்படுகின்றது. இந்த மருந்தில் யாதொரு பயனுமில்லை. ஊர்க்குருவிகள் முட்டையிடும் காலத்தில் ஆண்கள் பெண்களுடன் சேர்ந்து கூடுகட்டு கின்றன; சேர்ந்து வாழ்கின்றன. மற்றைக் காலங்களில் ஆண்கள் கூட்டமாகத் தனித்து வாழ்வதுண்டு. ஊர்க் குருவிகள் முட்டையிடும் காலத்தில்தான் கூடுகளைத் தேடு கின்றன. பிற காலங்களில் கூடுகளை நாடுவதில்லை. சங்க இலக்கியத்திலும் ஈனும் காலத்தில் இல்லாகப் பயன்படும் கூடுகட்டுவதாகக் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். இணைசேரும் காலத்தில் சேவல் குருவி மதர்த்த நடை போட்டு இறகுகளை விரித்து உலர்த்திப் பேடையைக் களிப் பிக்கும். குறுந்தொகைப் பாட்டு 'துள்ளுநடைச் சேவல்' என்றது இதைக் குறித்ததேயாகும். நற்றிணை 181 ஆம் பாட்டு ஒருசெய்தியைக் கூறுகின்றது. சேவல் குருவி பிற புலத்துப் பேடையைத் தழுவித் தங்கிவிட்டு வந்ததைப்

பார்த்த அதன் பேடை தன் சிறிய பிள்ளைகளுடன் இருந்தாலும் சேவலைக் கூட்டில் சேர்க்காது. அதை மழையில் நனைந்து நடுங்கும்படி செய்து பின்னர் நெடிய நேரம் நினைந்து இரக்கப்பட்டு உள்ளே அழைத்ததாகக் கூறியிருப்பதைக் காண்கிறோம். மனிதர் தம் உணர்ச்சிகளைக் குருவியின்மேல் ஏற்றிக் கூறிடும் பாட்டின் நயமும் பொருட் சிறப்பும் போற்றத்தக்கன.

குருவியை உருவில் சிறியது என்று கருதியதால் குருவி என்ற சொல் 'சிறுமை' என்ற பொருளில் வழங்கி வந்துள்ளது. குருவித்தலை, குருவித் தேங்காய் முதலிய பெயர்களைக் காணலாம். சங்க இலக்கியத்திலேயே குறிஞ்சிப் பாட்டில் 'குருவிப்பூளை' என்ற பெயர் சிறிய பூளை என்ற பொருளில் வந்துள்ளது. பெரிதைக் குறிக்க யானை யென்ற அடை மொழியைச் சேர்ப்பதையும் காணலாம். குருவியின் குறுமை கருதியே 'குருவி குறங்கறுப்பச் சோரும் குடர்' என்ற பழமொழி வந்தது.

சிட்டு என்றால் எளிமை, சிறுமை என்று பொருள். சிறிய பறவைகளை, குருவிகளைச் 'சிட்டு' என்று சொல்வது வழக்கு. சிட்டுக் குருவி என்று அடைக்கலாங் குருவியைக் கூப்பிடுவதுண்டு. ஆங்கிலத்தில் ஊர்க்குருவியை The House Sparrow என்றழைப்பர். பறவை நூலில் Passer domesticus என்றழைப்பர்.

———

## ௬௧. மலையுறை குருவி

## (SWIFTS AND MUNIAS)

'குன்று முட்டிய குரீஇப் போல' என்றொரு வழக்கு உரையாசிரியர்களால் கையாளப்பட்டுள்ளது. புறநானூறும் 'குன்றத் திறுத்த குரீஇயினம் போல' என்று கூறுகின்றது.

*"குன்றத் திறுத்த குரீஇயினம் போல*
*அம்புசென் றிறுத்த வரும்புண் யானை"* —புறம் 19

*"யானைமேல் யானை நெரிதர ஆனாது*
*கண்ணேர் கடுங்கணை மெய்ம்மறைப்ப வெவ்வாயும்*
*எண்ணரும் குன்றிற் குரீஇயினம் போன்றவே"*
—களவழி 8

*"கோல்பொரக் குளித்த யானை குருவிசேர்*
*குன்ற மொத்த"*
—மேரு மந்தர புராணம்-பலதேவர், 15

*"கணை மொய்ப்பக் கதஞ் சிறந்து*
*குருவி சேர் வரைபோன்ற குஞ்சரம்"*
—சீவக சிந்தாமணி 2237

குன்றத்தே சேர்ந்த குரீஇயினம் யானைமேல் தைத்திருந்த அம்புகள் போலக் காணப்பட்டதாகப் புறநானூறு கூறுவது அழகிய உவமையாகும். யானையின் உடல் முழுவதும் மறைக்கும்படி தைத்திருந்த அம்புகள் குன்றில் எல்லா இடத்திலும் எண்ண முடியாத குரீஇயினம் போன்று இருந்ததாகக் களவழி நாற்பது கூறியுள்ளது. மேரு மந்தர புராணமும், சீவக சிந்தாமணியும் இதே உவமையைக் கையாண்டுள்ளன. குன்றத்தே இனமாகச் சேரும் குருவிகள், அம்புபோலத் தோற்றும் எண்ணமுடியாத

குருவிகள் எவை என்று பறவை நூலறிவோடு ஆராய்ந் தால் அவை Alpine Swift என்பதில் ஐயமில்லை. இந்தக் குருவிகள் செங்குத்தான மலையில் தம்முடைய வாயிலிருந்து வரும் பிசின் போன்ற எச்சிலால் ஒட்டவைத்த கொட்டங் கச்சி போன்ற பல கூடுகளில் ஆயிரக்கணக்காகத் தங்கி வாழும். பகலில் பல கி. மீட்டர்கள் இரை தேடச் சுற்றின பறவைகள் அந்திக்காலத்தில் இனமாகச் சேர்ந்து ஆயிரக் கணக்காகக் கூடும். கடும் விரைவாகப் பறந்து செல்லும். குன்றுகளில் ஒட்டி வைத்துள்ள கூடுகளில் அவை அடை யும்போது அவற்றின் வால் அம்பின் பின்பகுதி போன்று காணப்படும். அதனால் அம்புகள் சென்று பாய்ந்த யானை போலக் குன்று காணப்பட்டதாகக் கூறினர். யானையைக் குன்றுக்கு ஒப்பிட்டுக் கூறுவது சங்க நூல் வழக்கு. யானை யின் முதுகில் பல அம்புகள் எய்யப்பட்டுத் தைத்திருப்பது போலவே குன்றில் சேர்ந்தடைந்த குருவிகள் இருந்தன வாகக் கூறின உவமை பொருத்தமானது. இந்தப் பற வைகள் இறக்கைகளை விரித்துப் பறக்கும்போது வில் போலவும் அவற்றின் வால் அம்பு போலவும் தோற்றுவ தாகப் பறவை நூலார் கருதியதால் இந்த இனக் குருவி களுக்கு Bow and Arrow Bird என்று பெயரிட்டனர். தமிழ்நாட்டுச் சிற்றூர்களில் காணப்படும் உழவாரக் குருவி என்பதுவும் இந்த இனத்தைச் சேர்ந்த குருவியே. ஆனால் இவற்றைக் குன்றுகளில் காண முடியாது. 'குன்று முட்டிய குரீஇப் போல' என்ற வழக்கு குன்று தடுத்த குருவி என்று பொருள் தந்தாலும் குன்று இறுத்த குருவி என்று புறநானூறு கூறுவதே இயற்கையோடொத்த செய்தி யாகும். குன்றுகளில் காணப்பட்ட குருவிகளைக்கூடச் சங்க நூல்கள் குறிப்பாகச் சொல்லியுள்ளன. இக் குருவியை மலையாளத்தில் 'சரப்பட்சி' என்று அம்பிற்கு ஒப்பிட்டுப் பெயரிட்டுள்ளனர். கல்லாடத்தில் கூறப்பட்ட 'மலைப்புள்' எனப்படும் தகைவிலான் குருவியும் இதுபோன்றே காணப் படும். மலையில் காணப்படும் இந்தத் தகைவிலான் குருவி யைத் தமிழில் தோல் குருவி யென்றும் கூறுவர். மலையா

ளத்தில் இதை 'வரையன் கத்தரிகை பட்சி' யென்று கூறுவர். மலையில் வாழும் கத்தரிகை பட்சி யென்று பொருள். இதன் இறக்கைகள் கத்தரிக்கோல் போல் இருப்பதால் கத்தரிகை பட்சி என்று மலையாளத்தில் பெயர் வந்தது. கத்தரிகைக்கிளி யென்றும் அழைப்பர்.

மலையில் வாழும் வேறு குருவிகளைப் பற்றியும் சங்க நூல்கள் கூறியுள்ளன.

> "..............................மாமலைப்
> பரீஇ வித்திய வேனற்
> குரீஇ யோப்புவாள் பெருமழைக் கண்ணே"
>
> —குறுந்தொகை 72

> "உளைக்குரற் சிறுதினை கவர்தலிற் கிளையமல்
> பெருவரை யடுக்கத்துக் குரீஇ ஓப்பி" —அகம் 388

> "அருவி யார்ப்பமுத் தணிந்தன வரை
> குருவி யார்ப்பக் குரல்குவிந்தன தினை"
>
> —பரிபாடல் 18 : 46

> "உரைசால் வண்புகழ்ப் பாரி பறம்பில்
> நிரைபறைக் குரீஇயினங் காலைப் போகி
> முடங்குபுறச் செந்நெற் றரீயர் ஓராங்கு
> இரைதேர் கொட்பின வாகிப் பொழுதுபடப்
> படர்கொண் மாலைப் படர்தந் தாங்கு." —அகம் 303

குன்றுகளிலும் மலைகளிலும் தினையைக் கவரும் அழகிய சிறுகுருவிகள் உள்ளன. இக்குருவிகளைத் தினையன் என்றும் தினைக்குருவி என்றும் ஈழநாட்டிலும் தமிழ்நாட்டில் சில பகுதிகளிலும் அழைக்கின்றனர். கருப்புவரையன் சிட்டு, கருடவரிச்சிட்டு, ஆழ்வார்சிட்டு என்றெல்லாம் நாட்டுமக்கள் முனியாக்குருவிகளின் வகைகளை அழைப்பர். ஆராய்ந்து பார்த்தால் தினைக் குருவி, தினையன் என்பவை சங்க காலத்தில் அறியப்பட்ட குருவிகளேயாகும். தினைக் குருவி தினையையும் புல்லரிசி, தானியங்களையும் விரும்பிக் கவரும். இவை கூட்டம் கூட்டமாகக் கதிர்களில் தானி

யங்களைக் கவரும். இவற்றை (Munia) என்று பறவை நூலார் கூறுவர். தமிழிலும் தற்காலம் வளர்ப்பதற்குக் குருவிகள் விற்போர் 'முனியாக் குருவி' என்று அழைக் கின்றனர். இக் குருவி பார்ப்பதற்கு மிக அழகாகவும் சிறியதாகவும் இருக்கும். இதில் புள்ளிகள் உடைய முனி யாக் குருவியை 'நெல்லுக் குருவி' என்று ஈழத்தில் அழைப்பர். இந்த நெல்லுக் குருவி 'நெற்கதிர்களை அழித்து மிக்க கேடு விளைக்கு மென்பர். (When paddy is ripening the spotted Munia will form large flocks which work considerable havoc on the crops.) அகநா னூறு 303ஆம் பாடல் சொல்லும் குருவி இந்த நெல்லுக் குருவி என்றே கொள்ளவேண்டும். இக் குருவிகள் கூட்ட மாகப் பறந்து செல்லும் குணமுள்ளன. 'நிரைபறைக் குரீஇ யினம்' என்று கூறியிருப்பதைக் காணலாம். (In flight the Munias as a whole maintain a fairly even course.) பறந்து செல்லும்போது நிரையாகச் செல் வதைப் பறவை நூலாரும் கூறியிருப்பதைக் காணலாம். இவை இருநூறுக்குக் குறையாமல் கூட்டமாக இரை தேடப் போவதுண்டு. 'கிளையமல் குரீஇ' என்று கூறி யதும் இக் கூட்டத்தைக் குறித்தே யாகும். உரையாசிரி யர்கள் அகநானூறு 303ஆம் பாடலில்வரும் குருவியினத் தைக் கிளியினமாகக் கொண்டு உரையெழுதியுள்ளனர். கிளியினத்தைப் பற்றித் தெளிவாகச் சங்க நூல்கள் கூறு வதால் குருவி என்பது கிளியன்று. சங்க நூல்களில் தினை கவரும் குருவியாகக் கூறப்பட்டவையும் நெல்கவரும் குருவி யாகக் கூறப்பட்டவையும் முனியாக் குருவிகளே யாகும். அவற்றில் நெல்லைக் கவரும் குருவியை (அகம். 303) "The spotted or the black headed Munia" என்று கொள்ள வேண்டும். தினைகவரும் குருவியைத் தற்காலம் சிலவிடங்களில் தினைக்குருவி, தினையன் என்பர். குறுந் தொகையில் (72) இதை 'ஏனற்குரீஇ' என்று சொன்ன தாகக் கருத இடமுண்டு. இதை "The White-backed Munia" என்று பறவை நூலார் அழைப்பர்.

## கூ௨. காக்கை

## (CROW)

சங்க இலக்கியத்தில் காக்கை, சிறுவெண் காக்கை, கடலங் காக்கை என்று காக்கைப் பெயர்கள் வழங்கப்படு கின்றன. இவற்றில் சிறுவெண் காக்கை, கடலங் காக்கை என்பன நீர்ப்பறவைகளாகும். காக்கையினத்தைச் சேர்ந் தவை அல்ல. காக்கை போலக் குரலிடுவதாலும் காக்கை யின் பழக்க வழக்கங்களுள் சிலவற்றை உடையதாகை யாலும் காக்கையென்ற பெயரோடு 'சிறுவெண் காக்கை' என்றழைக்கப்பட்டது. சிலப்பதிகாரத்தில் 'நீர்நிறக் காக்கை' என்ற பறவை கூறப்பட்டுள்ளது. இதுவும் காக்கையன்று.

தமிழ்நாட்டில் இருவகைக் காக்கைகள் உள்ளன. அவை ஊர்க்காக்கை என்றும் அண்டங்காக்கை என்றும் அழைக்கப்படும். ஊர்க்காக்கை உடல் கரியதாகவும், கழுத்து சாம்பல் நிறமாகவும் காணப்படும். அண்டங் காக்கை உடல் முழுவதும் கருமையாகக் காணப்படும். ஊர்க்காக்கை எங்கும் காணப்பட்டதால் அதைப்பற்றி மிகுதியாகச் சங்கப் பாடல்களில் கூறப்படவில்லை. ஆனால், அண்டங் காக்கை பெரும்பாலும் காடுகளிலும் அரிதாக ஊர்களிலும் காணப்பட்டதால் இக்காக்கையைப்பற்றிப் பல பாடல்கள் உள்ளன. அண்டங் காக்கையை மணிக்கட் காக்கை, கருங்கட்காக்கை, கருங்காக்கை என்று அழைத் தனர். இந்தக் காக்கையைக் காட்டுக் காக்கை யென்றும் கூப்பிடுவர்.

> "கானக் காக்கைக் கலிச்சிற கேய்க்கும்
> மயிலைக் கண்ணிப் பெருந்தோட் குறுமகள்."
>
> —புறம். 342

கானக்காக்கை என்று இது புறநானூற்றில் அழைக்கப்படுகின்றது. கானக் காக்கை (Jungle Crow) என்றழைப்பது பொருத்தமானது. புறநானூற்றுப் பாட்டில்வரும் மயிலை என்ற சொல் இருவாட்சிப் பூவைக் குறிக்காது. சிலப்பதிகாரத்திலும் பிற்காலத்து நூல்களிலும் இருவாட்சியென்று மயிலைக்குப் பொருள் கூறினர். இருவாட்சி ஒரு வகை மல்லிகைப் பூவாகும். வெண்மை நிறமான இருவாட்சி மல்லிகைப் பூவைக் கருங்காக்கை நிறத்திற்கு எப்படி ஒப்பிட முடியும்? ஆதலால் மயிலை என்ற சொல் சங்க காலத்தில் நொச்சி இனத்தைச் சேர்ந்த ஒரு மரத்தின் பெயராக வழங்கியதை அறியவேண்டும். இந்த மரத்தை 'மயிலடி' என்று தற்காலம் தமிழில் அழைக்கின்றனர். 'மயிலடியன்ன மாக்குரல் நொச்சி' என்பது சங்கச் செய்யுட்களில் பயின்றுவரும் உவமையாகும். மலையாளத்தில் 'அத்த மயிலை' என்று இம் மரம் அழைக்கப்படுகின்றது. இதன் பூ நீல நிறமாக உள்ளது. கருங் காக்கையின் சிறகு சுடர் ஒளியில் கருநீலங் கலந்த கருமையாகப் பள பளவென்று தோன்றும். இதையே கருநீல நிற மயிலைப் பூவிற்கு ஒப்பிட்டுப் புறநானூறு கூறுகிறது. பிற்காலத்தில் மயிலை என்ற பெயர் இருவாட்சி மல்லிகைக்கு மாறி வழங்கினதாகத் தெரிகின்றது. ஆனால், மயிலை என்ற சங்கப் பெயரின் உண்மைப் பொருள் மலையாளத்திலும், நாட்டு மக்கள் வாயிலும் இன்றும் வழங்குகின்றது. இந்த அண்டங் காக்கையை மலையாளத்தில் 'பலிக்காக்கை' என்றழைக்கின்றனர். இந்த மலையாளப் பெயர் சங்க மரபு தழுவிய பெயராகும்.

*"நெய்த்தோர் தூஉய நிறைமகி ழிரும்பலி*
*எறும்பு மூசா விறும்பூது மரபிற்*
*கடுங்கட் காக்கையொடு பருந்திருந் தார"*

*—பதிற்றுப்பத்து. 30*

•

*"மாசின் மரத்த பலியுண் காக்கை*
*வளிபொரு நெடுஞ்சினை களியொடு தூங்கி*
*வெல்போர்ச் சோழர் கழாஅர்க் கொள்ளும்*

நல்வகை மிகுபலிக் கொடையோடு உகுக்கும்
அடங்காச் சொன்றி அம்பல் யாணர்
விடக்குடைப் பெருஞ்சோறு உள்ளுவன இருப்ப''
—நற்றிணை. 281

"நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து
உகுபலி அருந்திய தொகுவிரற் காக்கை
புன்கண் அந்திக் கிளைவயிற் செறியப்''
—நற்றிணை. 343

"செஞ்சோற்ற பலி மாந்திய
கருங்காக்கை கவவுமுனையின்''
—பொருநராற்றுப்படை. 183-184

சங்கப் பாடல்களில் காக்கை பலியருந்துவதைக் குறிப்பாகச் சொல்லியிருப்பதைக் காணலாம். இந்த மரபையொட்டியே மலையாளத்தில் இன்னும் 'பலிக்காக்கை' யென்று பெயர் வழங்குகின்றது. சங்க காலத்தில் இரத்தங் கலந்த சோற்றைக் கடவுளுக்குப் பலியிடும்போது அதை அண்டங்காக்கைகள் உண்டன. இன்றும் இறந்தோர்க்கு நினைவாகச் செய்யும் சடங்குகளில் காக்கைக்குப் பலி கொடுக்கும் வழக்கம் மலையாளத்தில் உள்ளது. இப் பலியை அண்டங் காக்கைகள் உண்ண வேண்டுமென்று மக்கள் விரும்புகின்றனர். மூதாதையர் அண்டங் காக்கைகள் உருவில் பலியை உண்பதாகக் கருதுகின்றனர். ஊர்க்காக்கையை மலையாளத்தில் மாப்பிள்ளைக் காக்கை யென்று சிலவிடங்களில் அழைப்பர். முகம்மதியரொடு தொடர்புபடுத்தி இப்பெயர் வந்தது. இந்த ஊர்க் காக்கைகள் பலியை உண்ணுவதை மக்கள் விரும்புவதில்லை. மலையாளத்தில் பகவதி கோயில்களில் தரும் பலியைப் பூத கணங்கள் காக்கை உருவில் வந்து உண்பதாகக் கருதுவர்.

இந்த அண்டங் காக்கை காடுகளில் இறந்த விலங்குகளின் பிணத்தை விரும்பும். கழுகும் காக்கையும் பிணங்களைத் தின்பது வழக்கம். 'காக்கை உகக்கும் பிணம்' என்று கூறியுள்ளனர்.

"நீங்கா வம்பலர் கணையிடத் தொலைந்தோர்
வசிபடு புண்ணின் குருதி மாந்தி
ஒற்றுச்சென் மாக்களின் ஒடுங்கிய குரல
இல்வழிப் படூஉங் காக்கைக்
கல்லுயர் பிறங்கன் மலையிறந் தோரே" —அகம். 313

"மணிவாய்க் காக்கை மாநிறப் பெருங்கிளை
பிணிவீழ் ஆலத் தலங்குசினை யேறிக்
கொடுவில் எயினர் குறும்பிற் கூக்குங்
கடுவினை மறவர் வில்லிடத் தொலைந்தோர்
படுபிணங் கவரும் பாழ்படு நனந்தலை" —அகம். 319

"பைந்நிற உருவின் மணிக்கட் காக்கை
பைங்கிணங் கவரும் படுபிணக் கவலை" —அகம். 327

"கருங்கட் காக்கையொடு கழுகுவிசும் பகவச்
சிறுகண் யானை யாள்வீழ்த்துத் திரிதரும்."
—ஐங்குறுநூறு. 314

மேலே காட்டிய பாடல்களில் அண்டங்காக்கை பிணத்தை விரும்புவதைப் பற்றிக் கூறியுள்ளதைக் காணலாம். காடுகளில் விலங்குகள் இறந்து கிடந்தால் காக்கைகள் சுற்றுவதிலிருந்தும் ஆகாயத்திலிருந்து இறங்குவதிலிருந்தும் வேட்டையாளர் கண்டு கொள்வர்.

காக்கை விருந்தைக் கரைந்தழைக்கும் என்ற நம்பிக்கை நம்மிடையே உண்டு.

"திருவுடை வியனகர் வருவிருந்து அயர்மார்
பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த
கொக்குகிர் நிமிரல் மாந்தி எற்பட
அகலங் காடி அசைநிழற் குவித்த
பச்சிறுக் கவர்ந்த பசுங்கண் காக்கை
தூங்கல் வங்கத்துக் கூம்பிற் சேக்கும்" —நற்றிணை. 258

"மறுவி றூவிச் சிறுகருங் காக்கை
அன்புடை மரபினின் கிளையோ டாரப்

பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ''
—ஐங்குறுநூறு. 391

''எழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி
பெருந்தோ ணெகிழ்த்த செல்லற்கு
விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே.''
—குறுந்தொகை. 210

விருந்துவரக் கரையும் காக்கையைப் பாடினமையால் காக்கை பாடினியார் என்ெருரு புலவர் பெயர்பெற்ருர். 'காக்கை பாடினியம்' என்ற நூலால் இதனை அறியலாம். விருந்தயரும் காக்கை ஊர்க்காக்கையாகும். அண்டங் காக்கைக்கும் அமையும். ஐங்குறுநூற்றில் 'சிறு கருங் காக்கை' என்றழைக்கப்படுவதால் இக் காக்கையை ஊர்க் காக்கையாகக் கருத வேண்டும். சிறிது வெண்மை நிற மான கடற்காக்கையைச் 'சிறு வெண் காக்கை' என்றழைப் பதைக் காணலாம். அது போன்றே சிறிது கருமையான - அஃதாவது சாம்பல் நிறமான காக்கையைச் 'சிறு கருங் காக்கை' என்றனர். சிறு காக்கைப் பாடினியார், பெருங் காக்கைப் பாடினியார் என்று இரு இலக்கணப் புலவர்கள் இருந்ததாகக் கூறுவர். பெருங்காக்கை அண்டங்காக்கை யைக் குறித்தும் சிறுகாக்கை ஊர்க்காக்கையைக் குறித்தும் வழங்கியிருக்கலாம். பெருங்காக்கையான பலிக்காக்கை யைப் பாடினவர் அதன் பெயராலும் சிறு காக்கையான ஊர்க்காக்கையைப் பாடினவர் அதன் பெயராலும் வழங்கப் பட்டிருக்கலாம். சிறு காக்கைப் பாடினியாரைச் சிலர் 'காக்கைப் பாடினியார் நச்செள்ளையார்' என்று கருதுவர்.

ஊர்க்காக்கையைப் பறவை நூலார் 'Corvas Splendens' என்றழைப்பர். அண்டங்காக்கையை Corvas macrorhynchos என்றழைப்பர்.

———

## ௬௬. கூகையும் குராலும் குடிஞையும் ஊமனும் ஆண்டலையும்

## (THE BARN OWL, THE COLLARED SCOPS OWL, INDIAN GREAT HORNED OWL, BROWN FISH OWL)

சங்க இலக்கியத்தில் ஆந்தையினப் பறவைகளாக ஐந்துவகைப் பறவைகள் கூறப்பட்டுள்ளன. அவை கூகை, குரால், குடிஞை, ஊமன், ஆண்டலை என்பவையாகும். ஆந்தை என்ற பெயரை இந்த இனத்திற்கே பொதுப் பெயராக இங்குப் பயன்படுத்தி யிருக்கிறேன். ஆந்தை யென்ற பெயர் ஐந்திணை எழுபது என்ற நூலில்தான் முதலில் பயில்கின்றது. முற்பட்ட சங்க நூல்களான அகநானூறு, புறநானூறு முதலிய சங்க நூல்களில் ஆந்தை என்ற பெயர் காணப்படாதது வியப்பைத் தருகின்றது. பிற்காலத்தில் ஆந்தை யென்ற பெயரையே உரையாசிரியர்கள் பெரும்பாலும் பயன்படுத்தி யிருக்கிறார்கள். ஆதலின் இப் பெயரை இப் பறவை வகைகளின் இனப் பெயராகக் கொள்வது நல்லது.



கூகை

**கூகை :**

கூகை இடிந்த கட்டிடங்களிலும், நெற்களஞ்சியங் களிலும் காணப்படும் ஒருவகை ஆந்தையாகும். இது மஞ்சளும் வெண்மையும் கலந்த நிறத்தோடு காணப்படும். இதற்குப் பெரிய வட்டவடிவான தலையும் குரங்கு முகம் போன்ற வெள்ளையான தட்டையான முகமும் உண்டு. இஃது இருட்டில் எலி முதலியவற்றை வேட்டையாடும். இதை மனிதர்கள் வாழும் சூழ்நிலையில் பெரும்பாலும் காணமுடியும். இதைப் பற்றிச் சங்க நூல்களில் சில செய்திகள் காணப்படுகின்றன.

*"திங்கள் கல்சேர்பு கனையிருள் மடியின்*
*இல்எலி வல்சி வல்வாய்க் கூகை*
*கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும்*
*வளைக்கட் சேவல் வாளாது மடியின்"* —அகம். 122

*"..............................வெருவர*
*மன்ற மராஅத்த கூகை குழறினும்"* —அகம். 158

*"குன்றக் கூகை குழறினு முன்றிற்"*
—குறுந்தொகை. 153

*"எம்மூர் வாயில் ஒண்டுறைத் தடைஇய*
*கடவுள் முதுமரத்து உடனுறை பழகிய*
*தேயா வளைவாய்த் தெண்கண் கூருகிர்*
*வாய்ப்பறை அசாஅம் வலிமுந்து கூகை*
*மையூன் தெரிந்த நெய்வெண் புழுக்கல்*
*எலிவான் சூட்டொடு மலியப் பேணுதும்"*
—நற்றிணை. 83

*"ஞாயிறு கோடா நன்பக லமையத்துக்*
*கவலை வெண்ணரி கூஉமுறை பயிற்றிக்*
*கழல்கட் கூகை குழறுகுரற் பாணிக்"*
—பதிற்றுப்பத்து. 22 : 34-36

"ஒழுகை யுய்த்த கொழுவில் பைந்துணி
வைத்தலை மறந்த துய்த்தலைக் கூகை
கவலை கவற்றுங் குராலம் பறந்தலை"
—பதிற்றுப்பத்து. 44 : 17-19

"அழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவும்"
—பட்டினப்பாலை. 258

"உணவில் வறுங்கூட் டுள்ளகத் திருந்து
வளைவாய்க் கூகை நன்பகற் குழறவும்"
—பட்டினப்பாலை. 267-268

"பல்லா தழீஇய கல்லா வல்வில்
உழைக்குரற் கூகை யழைப்ப வாட்டி" —புறம். 261

"களரி பரந்து கள்ளி போகிப்
பகலுங் கூவும் கூகையொடு பேழ்வாய்" —புறம். 356

"பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின்
வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு
பிணந்தின் குறுநரி நிணந்திகழ் பல்ல" —புறம். 359

"மாடத் தகத்தி லாடுவினைக் காவினுட்
கொம்பர் மீமிசைக் கூகை வந்துலா அய்"
—பெருங்கதை. 3 : 14-151

"வெருவக் குழறிய விழிகட் கூகைக்
கடுங்குர லறியாள் கதுமெனநடுங்கினள்"
—பெருங்கதை. 22-150-152

"சிறுவெள் ளென்பி னெடுவெண் களரின்
வாய்வன் காக்கை கூகையொடு கூடிப்
பகலுங் கூவு மகலு ளாங்கட்" —புறம். 362

"நிலம்பக வீழ்ந்த வலங்கற் பல்வேர்
முதுமரப் பொத்திற் கதுமென வியம்பும்
கூகைக் கோழி யானாத்
தாழிய பெருங்கா டெய்திய ஞான்றே" —புறம். 364

"கூகைக் கோழி வாகைப் பறந்தலை"
—குறுந்தொகை. 393

"வாகை வனமாலை சூடி யரசுறையும்
ஓகை யுயர்மாடத் துள்ளிருந்து—கூகை
படுபேய்க்குப் பாட்டயரும் பண்பிற்றே"
—புறத்திரட்டு-முத்தொள்ளாயிரம். 1281

கூகை நெல் முதலியன போட்டுச் சேமிக்கும் களஞ்சியங்களில் காணப்படும் என்று பறவை நூலார் கூறுவர். இதன் ஆங்கிலப் பெயரான Barn owl என்பது களஞ்சிய ஆந்தை என்ற பொருளில் வழங்குவதைக் காணலாம். 'கரிகுதிர்ப் பள்ளியில்' காணப்பட்டதாக மதுரைக் காஞ்சியும் 'உணவில் வறுங் கூட்டகத்து' இருந்ததாகப் பட்டினப்பாலையும் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம். உயர்ந்த மாடக் கட்டடத்தில் கூகை யிருந்ததை முத்தொள்ளாயிரமும் பெருங்கதையும் கூறுவதைக் காணலாம். மற்றும் மன்றத்தின் மரத்திலும், வாகை மரத்திலும், களர் நிலத்தில் இருந்த கள்ளி மரத்திலும், இருந்து கூகை கத்தியதாகச் சங்க நூல்கள் கூறுகின்றன. முதிய மரப் பொந்தில் இருந்து குரலிடும் கூகையைப்பற்றிப் புறநானூறு கூறியிருப்பதைக் கவனிக்கவேண்டும். முதியமரங்களின் பொந்துகளில் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் கூகையைப்பற்றிப் பறவை நூலார் எழுதியுள்ளனர். (Eggs deposited in holes or niches in ruins of buildings occupied or deserted and in hollows in ancient trees, the same hold being used in successive years and if left undisturbed tend to become traditional.) முதிய மரங்களில் ஆண்டாண்டுதோறும் ஒரே பொந்தில் தங்கி முட்டையிடும் கூகையைப்பற்றிப் பறவை நூலார் கூறியதைக் கவனிக்க வேண்டும். இதை நன்கு உணர்ந்தே புறநானூறு (364), நற்றிணை (83), பாடல்கள் குறிப்பிட்டுள்ளதைக் காணும்போது வியப்படைகிறோம்.

பறவை நூலார் கண்டு கூறியதோடு எவ்வளவு பொருத்தமாகக் கூகையைப்பற்றிச் சங்கப் புலவர் கூறி

யுள்ளனர்! கூகை இரவுக் காலத்தில் வெளியே வருமென்று கூறுவர். சங்க நூல்களில் இரவிலும், பேய்கள் நடமாடும் நள்ளிரவிலும் கூகைகள் கத்துவதாகக் கூறியுள்ளனர். ஆதலால் இதைப் பகற் குருடு என்பர். காக்கைகளும் மனிதரும் தொந்தரவு செய்யாவிட்டால் கூகை பகலிலும் வெளியே வருமென்று பறவை நூலார் கூறுவர். பதிற்றுப்பத்தில் ஞாயிறு மறையாத நண்பகலில் கூகை குழறினதாகக் கூறியிருப்பதைக் காணலாம். கூகையின் உணவு பெரும்பாலும் வீட்டு எலிகள் என்று பறவை நூலார் கூறுவர். 'இல் எலி வல்சி'யுடைய கூகையைப் பற்றி அகநானூறு கூறியுள்ளது. வெள்ளை எலியையும் தின்னு மென்பதை நற்றிணைப்பாடல் (83) குறிப்பிட்டுள்ளது. கூகை ஊன் உணவை விரும்பி உண்ணும் என்று சங்கப் புலவர்கள் கருதினர். ஆட்டு இறைச்சியை நெய்யில் புழுக்கிக் கூகைக்கு வெள்ளை எலியின் சூட்டிறைச்சியோடு தருவதாக ஒரு புலவர் பாடியுள்ளார். கொழுத்த பச்சை இறைச்சித் துண்டை ஓரிடத்தில் பதுக்கி வைத்துப் பின்னர் வைத்த இடம் தெரியாது தேடிக் கவலையுடன் கத்திய கூகையைப் பற்றிப் பதிற்றுப்பத்து கூறியுள்ளது. கூகை இரவில் கத்துவது மிகுந்த பயத்தைத் தரும். கூகைக்கு வெவ்வேறு வகையான குரல்கள் உண்டு. நீண்ட அழுகுரல் போன்ற ஓசையும், குழறுவது போன்ற ஓசையும், குறட்டை விடுவது போன்ற ஓசையும் செய்யுமென்று பறவை நூலார் கூறுவர். அலகுகளைத் தேய்த்து முரமுரவென்று ஓர் ஓசை செய்யும் வழக்கமுமுண்டு. சங்க நூல்களில் கூகை செய்யும் ஓசைகளையும் ஒலிகளையும் பல பாடல்களில் பாடியுள்ளனர். குழறும் ஓசையை அகநானூறு, குறுந்தொகை, பட்டினப்பாலை, பதிற்றுப்பத்து ஆகியவை கூறுகின்றன. குழறுகுரல் பாணி என்று பதிற்றுப்பத்து கூறியுள்ளது. பலவகை ஓசைகளிடுவதால் 'வேறுபடு குரல்' என்று புறநானூறு பொருத்தமாகக் கூறியுள்ளது. (A variety of discordant long-drawn shrieks and chuckles and weird snoring and hissing

notes; a castanet bill snapping when hungry). பறவை நூலார் கூறியது போலவே சங்க நூல்கள் கூகையின் ஓசைகளை வருணித்திருப்பதைக் கவனிக்க வேண்டும்.

கூகையின் தலையைத் 'துய்த்தலை' என்று சங்க நூல்கள் கூறும். துய்போன்ற மெல்லிய தூவிகள் இதன் தலையில் இருப்பதைக் கண்டே கூறினர். கூகைக்கு வளைந்த வாயும் கூரிய நகங்களும் இருப்பதாகச் சங்க நூல்களில் கூறப்பட்டிருப்பதும் உண்மையே. நற்றிணை 83 ஆம் பாட்டில் முதுமரத்தில் உடனுறைந்து பழகிய தேயாத வளைந்த வாயையுடைய தெண் கண்ணையுடைய கூருகிரையுடைய வாய்ப்பறை ஓயாதகூகை என்றுவருணித்துள்ளது கூகையைப்பற்றிய அழகிய விளக்கமாகும். கூகையின் கண்களைத் 'தெண்கண்' என்றும் 'கழல்கண்' என்றும் கூறியதைக் கவனிக்க வேண்டும். வளைக்கண் என்று அகநானூறு 122 கூறுகின்றது. தெண்கண் என்பது தெளிந்தகண் என்று பொருள் பெறும். கண்கள் பெரியனவாகத் தெளிவாகப் பார்க்கக் கூடிய சக்தியுடைனவென்று பறவை நூலார் கூறுவர். வளைக்கண் என்றது கூகையின் கண்ணைச்சுற்றி வட்ட வளையமாக இறகுகள் கதிர்போல் விரிந்திருக்கும் காரணத்தால் என்று தெரிகின்றது. இந்த வட்ட வளையத்துள் கண் தெரிவதால் கூகையின் கண் பெரிதாகத் தெரிகின்றது. வளைக்கண் என்று கூறப்பட்டது இதன் காரணமாகவே யாகும். கழல்கண் என்று கூறியது வளைந்திருப்பதால் என்று கருதவேண்டும். வளைந்த அலகும் கூரிய விரல்களும் இருப்பதைப் பறவை நூலாரும் குறிப்பிட்டுள்ளனர்.

கூகையைச் சாவுக் குருவி என்று ஈழ நாட்டிலும் தமிழ் நாட்டிலும் அழைப்பதுண்டு. புறநானூற்றிலும் மணிமேகலையிலும் கூகை செத்துப் போகிறவர்களைக் கூப்பிடுவதாகக் கூறியுள்ளதைக் காணலாம். சாவோரை அழைப்பதாகக் கருதியதால் சாக்குருவி என்று இன்றும் கூகையை நாட்டு மக்கள் அழைக்கின்றனர்.

"சாவோர்ப் பயிருங் கூகையின் குரலும்"
—மணிமேகலை-சக்கரவாளக் கோட்ட முரைத்தகாதை 75

"பொத்த வறையுட் போழ்வாய்க் கூகை
சுட்டுக் குவியெனச் செத்தோர்ப் பயிருங்
கள்ளியம் பறந்தலை" —புறம். 240

கூகை செத்தோரைக் கூப்பிடும் கள்ளி நிறைந்த சுடுகாடு என்று புறநானூறு கூறியுள்ளது. புறநானூறும் (240) மணிமேகலையும் சுட்டுக்குவியெனச் செத்தோரைக் கூப்பிடும் பறவையாகக் கூகையைக் கூறின. அகநானூற்றில் (19) 'பொருடெரிந்திசைக்குங் கடுங்குரற் குடிஞை' என்று வரும் வரிக்குக் காணப்படும் பழைய உரையில் 'பொருள் தெரிதல் குடிஞை ஓசைக்குள்ளது. குத்திப்புதை என்றதோர் பொருள் தோன்ற இசைக்கும்' என்று கூறியுள்ள விளக்கத்தைக் கவனிக்க வேண்டும்.

"கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென முதுகூகை
கொட்புற்றெழ நட்பற் றவுணரை"

என்று திருப்புகழில் அருணகிரிநாதர் மிக அழகாகக் கூகையின் குரலையும் அது குத்திப்புதை புக்குப்பிடியெனக் கூவும் என்றும் கூறியிருப்பதைக் காணலாம். 'குத்திச்சுடு, வெட்டிப்புதை' என்று இந்தக் கூகை கூறுவதாக இன்றும் நாட்டுப்புறங்களில் கூறுவர். கேரளத்தில் கொள்ளிக் குறவன் என்று ஒருவகை ஆந்தை 'குத்திச்சூடு குத்திச் சூடு' என்று கத்துவதாகக் கூறுவர். சுடு என்று தமிழில் சொல்வதே சூடு என்று மலையாளத்தில் மாறியது. சங்க காலத்தில் கூகை, ஆந்தை ஆகியவற்றை இடுகாட்டிலும் சுடுகாட்டிலும் இருந்ததாக இதன் காரணமாகவே கூறினரென்று தெரிகின்றது. இதனாலேயே சாக்குருவி என்று இதை நாட்டு மக்கள் அழைத்தனர். தெலுங்கு மொழியில்

சாவுப்பிட்ட என்றழைக்கின்றனர். மலையாளத்தில் ஒரு வகை ஆந்தையைச் சாவுதரும் எமதூதன் என்று பெண்கள் கருதுவர். இதைச் செகுத்தான் என்றும் கூறுவர். செகுத்தான் என்ற சொல் காலனை, எமனைக் குறிக்கும். சங்கநூல்களில் செகுத்து என்ற சொல் ஓர் உயிரைக் கொல்வதைக் குறித்து வழங்கியிருப்பதைக் காணலாம். காலங்கோழி என்றோர் ஆந்தைப்பெயர் மலையாளத்தில் வழங்குகின்றது. இப் பறவை கூவுங்கால் பெண்கள் புடைவைத் தலைப்பினை (முன்றானையை)க் கை விரலில் சுருட்டி 'நாராயணா, நாராயணா' என்று கூப்பிட்டுச் சாவு வருவதைத் தடுக்க முயல்வர். காலனை அழைக்கும் கோழி என்று மலையாளத்தில் பெயரிட்டிருக்கின்றனர்.

கூகையை மலையாளத்தில் பொதுவாக வெள்ளி மூங்கா என்றழைப்பர். வெள்ளையான மூங்கா என்பது இதன் பொருள். ஒருவகை ஆந்தைக்கு ஊமன் என்றொரு பெயர் தமிழில் உண்டு. மூங்கா என்ற பெயர் நன்னூல் உரையில் ஆந்தையைக் குறித்து வழங்கியுள்ளது. மூங்கன் என்ற பெயர் ஊமன் என்ற பொருளையுடையதாகும்.

வெள்ளையான முகத்தை யுடையதாகையால் வெள்ளி மூங்கா என்றழைக்கப்பட்டது. கூகையைக் கருநிறக் காக்கைக்கு முரணாக 'வெண்ணிறக் கூகை' என்று கல்லாடம் குறிப்பாகக் கூறியுள்ளதைக் கவனிக்கலாம். தகடூர்யாத்திரையில் கருநிறக் காக்கை, வெண்ணிறக் கூகை என்று முரண்பட்டுக் கூறியதை நோக்கவேண்டும். மலையாளத்தில் இதைப் பத்தாயப்பட்சி என்றும் கூறுவர்.

களஞ்சியத்தில் காணப்படுவதைக் குறித்தே இப்படிக் கூறுவர். கூகை என்ற பெயரே இப் பறவை 'கூகூ' என்று கத்துவதால் வந்ததென்று தெரிகின்றது. இப் பறவையை வடநாட்டில் மராத்தி மொழியில் 'கூவாட்' என்றழைப்பதும், மத்திய பிரதேசத்தில் 'கூகூ' என்ற பெயரால் அழைப்பதும் கூகை என்ற தமிழ்ப் பெயர்

போன்றதே. இப் பெயர்கள் திராவிட மொழிகளிலிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டனவாகும். கூகையை ஆங்கிலத்தில் Indian Barn Owl என்றும் பறவை நூலில் Tyto alba என்றும் அழைப்பர். கூகை என்ற பெயர் முதலில் ஒரு தனிப்பட்ட ஆந்தையைக் குறித்து வழங்கிற்று. ஆனால், சங்க நூல்களிலேயே ஆந்தையினத்தைக் குறிக்கும் பொதுப் பெயராகவும் வழங்கிற்று. குரால் கூகை (நற்றிணை 215), ஊமைக்கூகை (நீலகேசி, தரும. 3) என்ற பெயர்கள் குரால் எனப்படும் ஒருவகைக் கூகையையும் ஊமன் என்றழைக்கப்படும் கூகையையும் குறிப்பிட்டன. பேச்சு வழக்கிலும் ஊமத்தங் கூகை யென்று ஊமைக் கோட்டான் என்ற பெரிய ஆந்தையைக் கூப்பிடுகின்றார்கள்.



குரால்

குரால் :

சங்க நூல்களில் சொல்லப்பட்டுள்ள ஆந்தைவகைகளுள் குரால் என்பதும் ஒன்றாகும். கூகையும் குராலும் ஒன்றே யென்றும் குரால் என்பது கூகையின் பெண் என்றும் உரையாசிரியர்களிற் சிலர் கொண்டனர். இது தவறு என்று தெரிகின்றது. குரால் கூகையென்ற பெயர் இருபெயரொட்டுப் பெயராக வந்து குராலாகிய கூகை என்று பொருள் படும். இங்குக் குரால் சிறப்புப் பெயராகவும் கூகை பொதுப் பெயராகவும் வருகின்றது.

> "புலாஅற் கையர் பசா வாயர்
> ஒராஅ உருட்டுங் குடுமிக் குராலொடு
> மராஅஞ் சீறூர் மருங்கில் தூங்கும்" —அகம். 265

"பாறரை வேம்பின் படுசினை யிருந்த
குராஅல் கூகையும் இராஅ இசைக்கும்"
—நற்றிணை. 218

"மணன்மலி மூதூர் அகல்நெடுந் தெருவின்
கூகைச் சேவல் குராலோடு ஏறி
ஆரிருஞ் சதுக்கத்து அஞ்சுவரக் குழறும்
அணங்குகால் கிளரும் மயங்கிருள் நடுநாள்"
—நற்றிணை. 319

"நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளிக்
குடுமிக் கூகை குராலொடு மூரல"
—மதுரைக்காஞ்சி. 169

"அஞ்சுவரு குராஅற் குரலுந் தூற்றும்" —புறம். 280

குரால் என்ற வகை ஆந்தையினப்பறவை சிறிய ஊரின் அருகில் மரத்தில் இருக்கும் என்றும் பெரிய அடிமரத்தையுடைய வேம்பின் கொம்பில் இருக்குமென்றும், அகன்ற நெடிய தெருவில் சதுக்கத்துள்ளோர் பயப்படும்படி கூகையோடு சேர்ந்து குழறும் என்றும் சங்க நூல்கள் கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். குராலுக்குக் குடுமி இருப்பதாக அகநானூறு (265) கூறியுள்ளது. குரால் என்ற சொல் கபில நிறத்தைக் குறித்துச் சங்க நூல்களில் வழங்கினதைக் காணலாம். குரால் என்ற பெயரே கபில நிறப் பசுவைக் குறித்துப் புறநானூறு 325ஆம் பாடலில் வழங்கியுள்ளது. கலித்தொகை 104—105 ஆம் பாடல்களிலும் குறுந்தொகை 224 ஆம் பாடலிலும் மணிமேகலையிலும் குரால் ஆன் என்ற பெயர் கபிலநிறப் பசுவைக் குறித்து வழங்கியுள்ளது. ஆதலின் குரால் என்ற ஆந்தை வகையும் கபிலநிற அடிப்படையாகவே பெயர் பெற்றிருக்க வேண்டுமென்பதில் ஐயமில்லை. குரால்பசு என்று இன்றும் பேச்சுவழக்கில் வருகின்றது. காரி, மயிலை, குரால், சிவலை என்ற பெயர்கள் மாடுகளின் நிறத்தைக் குறித்து வழங்கும் சொற்களாகும். வெண்ணிறக் கூகையையும் குரால் நிறக் கூகையையும் பிரித்தே உணர்ந்திருந்தனர். கபிலநிறமும்,

குடுமியும் உடைய ஆந்தைவகை, ஊரருகில் உள்ள மரச் சூழலில் காணப்படும் ஆந்தை வகை எதுவென்று ஆராயுங்கால் அது பறவை நூலார் கூறும் (The Collared Scops Owl) என்பதே ஆகும். இந்த ஆந்தைதான் மக்கள் வாழும் இடங்களருகில் கபிலநிறத்துடன் (Rufous brown) காணப்படும் ஆந்தை வகையாகும். 'குராஅல் கூகையும்', 'கூகைச்சேவல் குராலோடு ஏறி' என்றுவரும் நற்றிணை வரிகளுக்கு உரை கூறும்போது குராற்கூகை இரு பெயரொட்டுப் பெயர் என்று பொருள் கூறியுள்ளனர். குரால்நிறக் கூகை என்றும் பொருள் கொள்ளலாம். குராலும் கூகையும் மக்கள் வாழுமிடங்களின் அருகில் நெருங்கிக் காணப்படுவது இயற்கையில் கண்டறிந்ததேயாகும். கூகையும் குராலும் குரலிடுவதாகக் கூறுவது சங்க நூல் வழக்கு.

மணிமேகலையில் கூகையின் குரலும் குராலின் குரலும் ஆண்டலையின் குரலும் வெவ்வேருகக் கூறப்பட்டிருப்பதால் கூகையும் குராலும் ஆண்டலையும் வெவ்வேறு ஆந்தையினப் பறவைகள் என்பது தெளிவாகும். குராவிற்குத் தலையில் இரண்டு சிறு கொண்டைகள் உண்டு. ஆனல், கூகைக்கு இத்தகைய குடுமிகள் கிடையா. இந்தக் குடுமிகள் (Horns) குராலிற்கு இருப்பதைப் பறவை நூலாரும் குறிப்பிட்டுள்ளனர். அதனல் இதைக் கோட்டான் என்று தற்காலத்தில் அழைப்பர். குடுமியுள்ள ஆந்தை வகைகளுள் இது சிறியதாகும். கூகைக்குத் துய்த்தலை இருப்பதாகச் சங்கப் பாடல்கள் கூறும்.

மதுரைக் காஞ்சியில் 'குடுமிக்கூகை குராலொடு முரல' என்று கூறப்பட்டிருக்கும் வரியில் கூகைக்குக் குடுமியிருப்பதாகச் சொல்லப்பட்டுள்ளது. இங்குக் கூகைக் குரால் என்று அஃதாவது குடுமியுடைய குராலாகிய கூகை என்று பொருள் கொள்ள வேண்டும். இங்கு இருபெயரொட்டாகக் கருதலாம். குராலை எளிதில்

மக்கள் காணமுடியாது. குரலைக் கேட்டுத்தான் குராலை அறியமுடியும். குரால் திருப்பித் திருப்பி ஒரே முறையாக 'வூட்', 'வூட்' என்று இரவு முழுவதும் ஓசையிடும் என்று பறவை நூலார் கூறுவர். 'ஓராஅ உருட்டும்' குரால் என்று அகநானூறு கூறுவது கவனிக்கத்தக்கது. ஒரே குரலில் ஓயாது திருப்பித் திருப்பி ஓசையிடுவதால், உருட்டுவதால், 'ஒரா உருட்டும்' என்றனர். 'தூற்றும்' என்றும் புறநானூறு கூறுகின்றது. இது குழறுவது முண்டு என்று கூறுவர். சங்க நூல்களும் இதைக் கூறு கின்றன. இதன் குரலையும் கேட்டு மக்கள் அஞ்சுவதுண்டு.

குராலின் பெயர் கபில நிறத்தினடிப்படையாகத் தோன்றிய தென்பதில் ஐயமில்லை. கூகை பெரும்பாலும் வெண்ணிறமாகையால் அதனின்றும் வேறான கபில நிற முடைய ஆந்தை வகையைச் சங்க காலத்தில் குரால் என்றழைத்தனர். இதைச் சின்ன ஆந்தை யென்றும், நத்து என்றும் சில இடங்களில் அழைப்பதுண்டு. குராலை ஆங்கிலத்தில் (The Collared Scops Owl) என்றும் பறவை நூலில் (Otus bakkamoena) என்றும் அழைப்பர். கூகையை இந்தியில் 'குரையா,' 'கனரல்' என்று அழைக்கின்றனர். இப்பெயர்கள் குரால் என்ற பெயரின் மாற்றம் போன்று தோன்றுகின்றது.

குடிஞை:

சங்க நூல்களில் குடிஞை என்றோர் ஆந்தையினப் பறவை சில பாடல்களில் கூறப்பட்டுள்ளது. குடிஞை என்பதற்குப் பொருள் பேராந்தை என்று உரையாசிரி யர்கள் கூறுவதால் இப் பறவை ஆந்தையினத்திற் பெரியது என்பது தெளிவாகின்றது.

"வேருழந் துலறி மருங்குசெத் தொழியவந்
தத்தக் குடிஞைத் துடிமரு டீங்குரல்
உழிஞ்சிலங் கவட்டிடை யிருந்த பருந்தின்
பெடைபயிர் குரலொ டிசைக்கு மாங்கட்"—புறம். 370

"இழிபிறப் பாளன் கருங்கை சிவப்ப
வலிதுரந்து சிலைக்கும் வன்கட் கடுந்துடி
புலிதுஞ்சு நெடுவரைக் குடிஞையோ டிரட்டும்"
—புறம். 170

"திரிவயின் தெவிட்டுஞ் சேட்புலக் குடிஞைப்
பைதல் மென்குரல் ஐதுவந் திசைத்தொறும்"
—அகம். 283



குடிஞை

"தொடிமாண் உலக்கைத் தூண்டுரற் பாணி
நெடுமால் வரைய குடிஞையோ டிரட்டுங்
குன்றுபின் னொழியப் போகி யுரந்துரந்து" —அகம். 9

"வருந்தினை வாழியெ னெஞ்சே பருந்திருந்
துயாவிளி பயிற்று மியாவுயர் நனந்தலை

யுருடுடி மகுளியிற் பொருடெரிந் திசைக்குங்
கடுங்குரற் குடிஞைய நெடும்பெருங் குன்றம்''
—அகம். 19

''உருத்தெழு குரல குடிஞைச் சேவல்
புல்சாய் விடரகம் புலம்ப வரைய
கல்லெறி இசையின் இரட்டும் ஆங்கண்'' —அகம். 89

''மயில்க ளாலக் குடிஞை யிரட்டும்
துறுகல் லடுக்கத் ததுவே'' —ஐங் குறு நூறு. 291

''விரலூன்று படுக ஞகுளி கடுப்பக்
குடிஞை யிரட்டு நெடுமலை யடுக்கத்துக்''
—மலைபடுகடாம். 140 - 141

''மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து
அலந்தலை ஞெமையத்து இருந்த குடிஞை
பொன்செய் கொல்லனின் இனிய தெளிர்ப்ப''
—நற்றிணை. 394

''துடிக்குடிஞைக் குடிப்பாக்கத்து'' —பழமொழி. 246

''குடிஞை யிரட்டுங் கோடுயர் நெடுவரை''
—நன்னூல். மயிலை - மேற்கோள்

''கொடுவரி மறுகுங் குடிஞை கூப்பிடும்''
—சிலப்பதிகாரம். 2 : 13 - 31

ஆந்தையினத்தில் ஒருவகை பெரிய ஆந்தையின் குரலோசை தனித்த முறையினதாக வெகுதொலைவில் சென்று கேட்கும் என்று பறவை நூலார் கூறுவர். சங்க நூல்களில் இத்தகைய குரலோசையுடைய பேராந்தையைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. பறவை நூலார் இந்தப் பேராந்தையின் குரலோசை 'பூ-பூஊ' (Bu-Bu) என்று எதிரொலி போன்று விட்டுவிட்டுத் திருப்பித் திருப்பி ஒலிக்குமென்பர். இந்தப் பேராந்தையின் குரலோசை பெரிதாக இல்லையானாலும் வெகு தொலைவு ஊடுருவி மனிதர் காதில் மென்மையாக விழும்

தன்மையது என்று பறவை நூலார் கூறுவர். (A deep, resonant hollow bu-bu repeated at intervals, not particularly loud but with a curious penetrating and far carrying quality). சங்கநூல்களில் இந்தப் பேராந்தையின் குரலோசை பொருத்தமான, நுட்பமான உவமைகளால் மிகத் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

பொன் செய்கின்ற தட்டான் ஊதுகுழல்கொண்டு தணலை ஊதும்போது 'பூம் - பூம்' என்ற ஓசை எழுப்புவது போலப் பேராந்தையின் குரலோசை இருந்ததாக நற்றிணை கூறியுள்ளது. 'பொன்செய் கொல்லனின் இனிய தெளிர்ப்ப' என்று வரும் நற்றிணை 394ஆம் பாடல் வரிக்குப் பொருள் எழுதியவர்கள் இந்த நுண்பொருள் நயத்தை எடுத்துக் கூறவில்லை. 'பொன்செய் கொல்லனின் முன்னிய இரட்ட' என்றொரு பாடம் இருப்பதாக ஔவை துரைசாமி பிள்ளையவர்கள் நற்றிணைப் பதிப்பில் காட்டியுள்ளார். இதுவே பொருத்தமான பாடமாக இருக்கலாம். 'குடிஞை இரட்ட' என்றே பல பாடல்களிலும் கூறப்பட்டுள்ளது. குடிஞை 'பூ - பூ' என்று குரலோசையிடுவதும் தட்டான் 'பூம் - பூம்' என்று ஊதுவதும் மாறி மாறி ஒலிப்பதையே 'முன்னிய இரட்ட' என்று நற்றிணைப் பாடல் கூறுகின்றது.

இந்த இரு ஓசைகளும் ஒரே முறையாக ஒலிப்பதால் இரட்டை ஓசைபோலக் காதில் விழுகின்றன. துடிப் பறையைக் கோல்கொண்டு உருட்டிவிட்டு ஒலி செய்யும் போது உண்டாகும் ஓசையை இந்தப் பேராந்தையின் குரலோசைக்கு ஒப்பிட்டுச் சில பாடல்கள் கூறுகின்றன. துடியின் ஓசையோடு மிகுந்த ஒற்றுமையிருந்ததால் 'துடிக் குடிஞை' என்று பொருநராற்றுப்படை கூறுகின்றது. 'துடிமருள் தீங்குரல்', 'கடுந்துடி இரட்டும்', 'உருள்துடி மகுளியின் பொருள்தெரிந் திசைக்கும்' என்றெல்லாம் சங்கப் பாடல்கள் இதன் குரலோசையை வருணித்திருக்கின்றன. ஆகுளிப் பறையின் கண்ணில் விரலை ஊன்றித் தேய்த்துச் செய்யும் 'பூம் - பூம்' ஓசைபோலத் திருப்பித்

திருப்பி ஒலிக்கும் குடிஞை என்று மலைபடுகடாம் கூறுவ தையும் காணலாம். உணவு அரைக்கும் திரிகை செய்யும் ஓசைபோலச் சேட்புலத்து இருந்த குடிஞையின் மென் குரல் மெதுவாக வந்து ஒலிக்கும் என்று அகநானூறு 283ஆம் பாடல் கூறுவது மிக நுட்பமான விளக்கமாகும். பேராந்தையின் குரலோசை தொலைவிலிருந்து வரினும் ஊடுருவி வந்து மனிதர் காதில் மெதுவாக விழும் என்று (not so loud) பறவை நூலார் கூறிய விளக்கத்துடன் அகநானூறு கூறியது எவ்வளவு ஒத்திருக்கின்றது! இந்த அகநானூறு பாட்டில் இந்த இடத்திற்கு உரை கூறிய வர்கள் பொருத்தமாகப் பொருள் கூறவில்லை.

'இரட்டும்' என்ற சொல்லால் பல பாடல்களிலும் குடி ஞையின் குரலைக் குறிப்பிடுவதைக் கவனிக்கவேண்டும். பறவை நூலாரும் இப் பறவையின் குரலோசை எதிரொ லிப்பது போன்று (resonant) கேட்பதாகக் கூறியதைக் காணலாம். இரட்டும் என்ற சொல்லே நுட்பமான கலைச் சொல்லாகும். தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் 'இரட் டைக்கிளவி இரட்டிற் பிரிந்திசையா' என்று கூறப்பட் டுள்ளது. இரட்டித்து நின்று பொருளுணர்த்தும் சொற்கள் இரட்டித்து நின்றன்றிப் பிரிந்து நில்லா என்று தொல் காப்பியர் கூறியதுபோலக் குடிஞையின் இரட்டும் ஓசையும் ஒற்றையாக என்றும் ஒலிக்காது. இத்தகைய பறவை ஓசை பற்றியே முதலில் இரட்டைக்கிளவி தோன்றியிருக் கலாம். இரட்டைக் கிளவியையே சில பறவைகளின் இரட்டும் குரலோசையிலிருந்து பழந்தமிழன் படைத் திருக்கலாம்.

குடிஞை வெகுண்டு எழுப்பும் குரலோசை மலையின் மேல் உருளும் கல்செய்யும் ஓசைபோல இரட்டுவதாக அக நானூறு (89) கூறுவது நுட்பமான உவமையாகும். குடிஞை வெகுண்டு குரலோசை செய்வது 'டுக் - டுக்' என்று கேட்கும் என்றும், இம்முறையாக அலகுகளால் செய்கின்றது என்றும் பறவை நூலார் கூறுவர். கல் உருளும் ஓசையைக் குடிஞை வெகுண்டு செய்யும் ஓசைக்கு

ஒப்பிட்டது அழகிய உவமையாகும். உலக்கையை உரலில் இடிக்கும் ஓசையோடு குடிஞையின் குரலோசை மாறிமாறி ஒலிக்கும் என்றும் கூறப்பட்டுள்ளது. குடிஞையின் குரலோசையைப் பொருத்தமான அழகிய உவமைகள் வாயிலாகச் சங்க நூல்கள் விளக்கியிருப்பதிலிருந்து ஆந்தையினத்தில் இந்தப் பறவை எது என்பதைத் தெளிவாகவும், உறுதியாகவும் கூற முடிகின்றது. இத்தகைய குரலோசையுடைய ஆந்தையினப் பறவையை ஆங்கிலத்தில் 'Indian Horned or Eagle owl' என்று கூறுவர். பறவை நூலார் இதன் குரலோசையையே இதற்குக் காரணப்பெயராக வைத்துள்ளனர். பறவை நூலார் Bubo Bubo Bengalensis (பூ - போ, பூ - போ) என்று பெயரிட்டனர். இந்தப் பேராந்தையின் குரலே 'உருள்துடி மகுளியின் பொருள் தெரிந்திசைக்கும் கடுங்குரல் குடிஞை' என்று வரும் அகநானூற்று வரிக்குக் கூறிய பழைய உரையில் மக்கள் இப் பறவைக்குப் பயப்படும் செய்தி விளக்கப்பட்டுள்ளது.

குடிஞை புலிதுஞ்சு நெடுவரையிலும் நெடுமால் வரையிலும், புல்சாய் விடரகத்திலும், துறுகல்லடுக்கத்திலும், கோடுயர் நெடுவரையிலும் இருந்ததாகச் சங்க நூல்கள் கூறுவது பறவை நூலில் கூறியதோடு ஒத்துக் காணப்படுகின்றது. குன்றுகள் மலைகளின் உச்சியில் காணப்பட்டதாகச் சங்க நூல்கள் கூறியது போலவே பறவை நூலாரும் குன்றுகளின் உச்சியில் காணப்படுவதைக் கூறியுள்ளனர். 'புல்சாய் விடரகத்தில்' குடிஞையிருந்ததை அகநானூறு கூறியுள்ளது. சரிவான பிளப்புகளில் விரும்பி வாழும் என்று (Partial to steep earth banks and clay cliffs of dry nullahs and rivers) பறவை நூலார் கூறியுள்ளதோடு அகநானூறு கூறும் செய்தி ஒத்துள்ளது. குறுங்காடுகள் சூழ்ந்த குன்றுகளிலும் வறட்சியான காடுகளிலும் மரங்களிலும் காணப்படும் என்று பறவை நூலார் கூறியுள்ளனர். வேர்கள் வற்றிச் செத்த சுரத்திலிருந்த மரத்தில் குடிஞையிருந்ததாகவும், மரங்கள் நெருங்கிய கானத்தில் ஞெமை மரத்தில் இருந்ததாகவும் சங்கப்

பாடல்கள் கூறுகின்றன. வீடுகளின் அருகில்கூட மரச் சோலைகளில் காண்பதுண்டு. குடிப்பாக்கத்தில் கண்ட குடிஞையைப் பொருநராற்றுப்படை கூறியுள்ளது. குடிஞை வாழுமிடம், காணப்படும் சூழல் ஆகியவற்றைக்கூடச் சங்கப் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

தமிழ்நாட்டில் சேர்வராயன் மலையிலும் மேற்குத் தொடர்ச்சி மலையிலும் காடுகளில் குடிஞையைப் போன்றே மற்றொரு பேராந்தை காணப்படுகின்றது. இந்த இரு வகைகளையும் பிரித்துணர்வது எளிதன்று இந்த வகைப் பேராந்தையைக் காட்டுமூங்கா என்று மலையாளத்தில் அழைக்கின்றனர். இந்தப் பெரிய ஆந்தையை Forest Eagle owl என்றழைப்பர். இப்பறவை 'ஊ ஊ' என்று ஓசையிடும். இந்த வகைப் பேராந்தையையும் சங்கப் புலவர்கள் குடிஞை என்றே அழைத்திருக்கின்றனர் என்று கருத வேண்டும். இந்த இரண்டு வகைப் பேராந்தை களுக்கும் உருவில் வேற்றுமை காண்பது எளிதன்று. காட்டில் இருந்த குடிஞையின் குரல் உழிஞ்சில் மரக்கவட் டில் இருந்த பெட்டைப்பருந்தின் குரலோடு இசைக்கும் என்று புறநானூறு 370ஆம் பாடல் கூறுவதைக் கவனிக்க வேண்டும். அடர்ந்த காட்டில் வாழும் இந்த வகை ஆந்தை சில சமயங்களில் பருந்து குரலோசை செய்வது போல நீண்டு ஒலிக்கும் என்று பறவை நூலார் கூறி யுள்ளனர். ஒருவேளை இந்த வகை ஆந்தையின் குரலையே பருந்தின் குரலோடு புறநானூறு (370) ஒப்பிட்டுக் கூறு கின்றதென்று கருதலாம்.

ஊமன் :

குறுந்தொகை 224ஆம் பாட்டில் 'உயர்திணை ஊமன்' என்ற சொல்வழக்கு வருகின்றது. இஃது அஃறிணை ஊமனை ஒருவகை ஆந்தையை மறைமுகமாகக் குறிப்பிடு கின்றது.

"கவலை யாத்த அவல நீளிடைச்
சென்றோர் கொடுமை யெற்றித் துஞ்சா

நோயினு நோயா கின்றே கூவற்
குராலான் படுதுய ரிராவிற் கண்ட
உயர்திணை யூமன் போலத்
துயர்பொறுக் கல்லேன் றோழி நோய்க்கே''
—குறுந்தொகை. 224

அஃறிணையாகிய கோட்டானுக்கும் ஊமன் என்ற பெயர் வருதலின் உயர்திணை ஊமன் என்று இப் பாட்டில் சொன்னதாக விளக்கம் கூறுவர். உயர்திணை ஊமன் என்பது வெளிப்படை என்னும் இலக்கணத்தின் பாற்படும் என்பர். ஊமன் என்பது ஒருவகைக் கோட்டான் என்ற பெரிய ஆந்தையைக் குறிக்கும். இந்தப் பாட்டில் உயர்திணை ஊமனைச் சுட்டிய வரிக்கு முன்வரும் வரியில் 'குராலான்' என்ற சொல் வருவதைக் கவனிக்க வேண்டும். குராலான் என்றும் உயர்திணை ஊமன் என்றும் கூறியதில் ஒரு நுண்ணிய செய்யுள் நயம் இருப்பது தெரிகின்றது.


ஊமன்

குரால் என்பது அஃறிணையாகிய கோட்டானைக் குறிக்கும். சங்க நூல்களில் குரால் (Scops owl) என்ற பெயர் ஒருவகைச் சிறிய கோட்டானைக் குறித்தே வழங்கியுள்ளது. இந்தக் குராலாகிய கோட்டானிலிருந்து குரால் நிறப் பசுவைப் பிரித்துக்காட்டவே 'குரால் ஆன்' என்று கூறினர். குரால் என்ற கோட்டானின் பெயரோடு ஆன் என்ற சொல்லை இணைத்து வேறு பொருள் பெற வைத்தது போலவே ஊமன் என்ற கோட்டானின் பெயர் முன்னர்

உயர்திணை என்ற சொல்லை இணைத்துப் பிறிதொரு பொருள் பெற வைத்த நயம் போற்றுதற்குரியது. இந்தப் பாட்டில் இரண்டு வகைக் கோட்டான்களை மறைமுகமாகக் கூறிய நயமும் உள்ளது. இந்த நயத்தின் சிறப்பை உணர்ந்த கல்லாட ஆசிரியரும் ஊமை கண்ட கனவு என்ற பழமொழியைப் பயன்படுத்துமிடத்து 'ஆரிய ஊமன் கனவு' என்று கூறினர்.

> ''புக்கதே வினர்தம் பொருகடற் படையினை
> ஆரிய ஊமன் கனவென வாக்கிய
> கூடற் பெருமான் பொதியப் பொருப்பகத்''
>
> —கல்லாடம் 4, வரி. 7-9

மனிதரில் ஊமையைக் குறுந்தொகை உயர்திணை ஊமன் என்று குறிப்பிட்டது. அதையே ஆரிய ஊமன் என்று கல்லாட ஆசிரியர் குறிப்பிடுகிருர். ஆரிய என்ற சொல் இங்கு உயர்திணையைக் குறித்ததேயாகும். இனப் பாகு பாட்டைக் குறித்தது அன்று. ஊமன் என்ற பெயர் கோட்டானைக் குறித்துச் சங்க நூல்களில் எங்குமே பயில வில்லை. ஆனல், அதைக்கொண்டு ஊமன் என்ற பெயர் சங்க காலத்தில் வழங்கவில்லை என்று கூறக்கூடாது. ஏனென்ருல் உயர்திணை ஊமன் என்று குறுந்தொகையே அஃறிணை ஊமணுகிய கோட்டானைக் குறிப்பிட்டதைக் காணும்போது சங்க காலத்தில் ஊமன் என்ற பெயர் கோட்டானைக் குறித்து வழங்கியே இருக்க வேண்டும்.

> ''இரியல் மகளி ரிலைஞெமலு ளீன்ற
> வரியிளஞ் செங்காற் குழவி—அரையிரவின்
> ஊமன்பா ராட்ட வுறங்கிற்றே செம்பியன்றன்
> நாமம்பா ராட்டாதார் நாடு'' —முத்தொள்ளாயிரம் 77

> ''சிறுகூகை யுட்கவிழிக்க ஊமன் வெருட்ட''
>
> —மூத்ததிருப்பதிகம், காரைக்காலம்மையார். 2-3

> ''ஈமத் தாமமு மெரியினு மிருளொடு விளக்கா
> ஊமைக் கூகையு மோரியு முறழ்உறழ் கதிக்கும்''
>
> —நீலகேசி, தரும. 29

முத்தொள்ளாயிரத்திலும், காரைக்காலம்மையாரின் மூத்த திருப்பதிகத்திலும் ஊமன் என்ற பெயர் ஊமைக்கோட்டான் என்ற பெரிய ஆந்தையையே குறிப்பிட்டுள்ளதைக் கவனிக்க வேண்டும். இதையே ஊமைக் கூகை என்று நீலகேசி அழைத்தது. இதை ஊமத்தங் கூகை என்றும் நாட்டுமக்கள் அழைப்பர். ஈழத்தில் ஊமடங்குருவி, ஊமத்தங்கோழி என்றழைப்பதுண்டு. இந்த ஊமன் என்ற பேராந்தையைக் கடற்கரையோரங்களிலும் நீர்நிலையருகிலும் மரச்சூழலில் காணலாம். மீன்களைப் பிடித்துத் தின்னும் இந்தப் பேராந்தை 'ஊம்-ஊம்' என்று குரலோசை செய்வதால் இதற்கு ஊமன் என்று பெயரிட்டனர். இதனுடைய பிற பெயர்களும் ஊமன் என்ற பெயரடிப்படையாகவே தோன்றின.

ஊமன் கூவுவதைத் தற்காலத்திலும் சிற்றூர்களில் நல்ல சகுனமாகக் கருதுவதுண்டு. ஊமன் கூவினால் குழந்தையைத் தாலாட்டக் கூவுவதாகவும் குழந்தை பிறக்கும் என்றும் நம்புவதுண்டு. ஊமன் பாராட்டக் குழந்தை உறங்கினதாக முத்தொள்ளாயிரம் கூறுவதை இது சார்பாகக் கவனிக்க வேண்டும். சில ஆந்தையினப் பறவைகளைக் கேடுதரும் பறவைகளெனக் கொண்டு சுடு காட்டில் வைத்துக் கூறுவது வழக்கம். ஊமன் சுடுகாட்டில் கூவுவதாகக் காரைக்காலம்மையார் மூத்த திருப்பதிகத்தில் கூறினார். நீலகேசியும் அவ்வாறே கூறுகின்றது. பிற்காலத்தில் ஊமாண்டி காட்டுதல் என்ற வழக்குத் தோன்றிற்று. ஊமைக் கோட்டான் கண்ணை மூடாது உற்றுப் பார்ப்பதைக் கண்டு விடை கூறாமல் முறைத்துப் பார்க்கும் மனிதனுக்குப் பெயராக்கினர். இம்முறையாகப்பயமுறுத்துவதற்கு ஊமாண்டி காட்டுதல் என்ற வழக்கு உள்ளது.

ஊமைக் கூறனைக் கூப்பிடுவது என்ற வழக்கு வாய் பேசாது 'உம்' என்ற ஓசையால் கூப்பிடுவதைக் குறித்தது. ஊமைக் கோட்டானைக் கூமன் என்றும் அழைப்பர். முத்தொள்ளாயிரப் பாட்டில் ஊமன் என்பதற்குப் பாட

மாற்றமாகக் கூமன் என்ற சொல் உள்ளது. மலையாளத்தில் ஊமன் என்ற பெயரும் கூமன் என்ற பெயரும் வழங்குகின்றன. மீன் கூமன் என்றழைப்பதுண்டு. சங்க காலத்திலும் கூமன் என்ற பெயர் வழங்கியிருக்கலாம் என்று கருதச் சான்று புறநானூற்றில் உள்ளது.

> "பதிமுதற் பழகாப் பழங்கண் வாழ்க்கைக்
> குறுநெடுந் துணையொடு கூர்மை வீதலிற்
> குடிமுறை பாடி யொய்யென வருந்தி
> அடனசை மறந்தவெங் குழிசி மலர்க்கும்" —புறம். 393

புறநானூற்றுப் பாடலில் நகரத்தில் பழகாத பழைமையான இடத்தில் வாழும் துணையொடு கூடிய கூமை என்று சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம். 'குறுநெடுந்துணையொடு கூமை வீதல்' என்று வரும் வரியில் கூமை என்ற ஆந்தை வீச்சென்று கத்துவதாகக் கூறப்பட்டுள்ளது. "வீசு கோட்டாந்தையும் சேவலோடலமர (79, வரி 2) என்று கல்லாடம் ஆந்தை வீச்சைக் கூறியுள்ளது. காரைக்காலம்மையாரும் 'ஆந்தை வீசி' என்று பாடியுள்ளார். வீதல் என்பது வீசல் என்ற பொருளில் புறநானூற்றில் வருகின்றது. ஆந்தை வீச்சென்று கத்துவதாக இன்றும் நாட்டுமக்கள் கூறுவர். கூமை என்பது இவ்விடத்தில் கூமன் என்ற பேராந்தையாகவே இருக்கும்.

கொலாமி என்ற பழந்திராவிட மொழியில் 'குமன்' என்றும், கொடகு மொழியில் 'குமீ' என்றும் துளுமொழியில் 'கும்மே' என்றும் அழைக்கப்படுவது புறநானூற்றில் வரும் 'கூமை' என்ற பெயருடன் ஒத்துள்ளதைக் காணலாம். இந்த ஆந்தை பெரும்பாலும் ஆணும் பெண்ணுமாய்க் காணப்படும். ஒன்று கூவுங்கால் மற்றொன்று திருப்பிக் கூவும். மலையாளத்தில் முதலில் கூவும் ஊமனைக் கூமன் என்றும் அடுத்துக் கூவும் ஊமனைக் கூமத்தி என்றும் ஆண் பெண்ணைக் கருதி அழைப்பர். கூமன் ஒரு குரல் கொடுத்தால் கூமத்தி இரண்டு குரல் கொடுக்கும் என்று மலையாள நாட்டுமக்கள் கூறுவர். தமிழில் வீழ்ந்து

விட்ட பெயர் மலையாளத்திலும் துளுவிலும் இருப்பது கவனிக்கத் தக்கதாகும்.

பண்டைய எகிப்திய மொழியில் 'ம்' என்ற ஒலியைக் குறிக்கும் உருவெழுத்து ஓர் ஆந்தை அல்லது கோட்டானின் சித்திரமாகும். (ஊ)ம் (ஊ)ம் என்று குரலோசை காட்டும் ஊமனின் உருவத்தால் பழங்கால எகிப்திய மொழியிலும், 'ம்' என்ற ஒலியைக் குறித்தது ஊமனின் மிகப் பழைய வரலாற்றைக் காட்டுகின்றது. எகிப்திய மொழியில் உயிரெழுத்துகள் இல்லை. பிற எழுத்துகளோடு சேர்ந்து உயிர் ஒலிக்குமென்பர்.

ஆதலின் 'ம்' என்ற ஒலியெழுத்தை அம், உம் என்றெல்லாம் இடத்திற்குத் தக்கவாறு ஒலித்தனராம். 'உம்' என்ற ஓசைக்கும் ஊமனுக்கும் உள்ள தொடர்பைத் தமிழிலும் காண்கிறோம். மிகப் பழைய வரலாறு பெற்ற (கி. மு. 3000) எகிப்திய மொழியிலும் காண்கிறோம். வடகிழக்கு இந்தியாவில் வாழும் அங்காமி நாகர் இனத்தில் தம்பெயரையோ தம் மனைவியின் பெயரையோ வெளிப்படையாகச் சொல்லமாட்டார்கள். மனைவியும் தன் கணவனின் பெயரைச் சொல்வதில்லை. மனைவி தன் கணவனின் பெயரைச் சொல்லாத வழக்கம் தமிழரிடையேயும் உண்டு. அங்காமி நாகர்கள் அதற்குக் கூறும் காரணம் ஆராயத்தக்கதாகும். தன் பெயரைச் சொன்னால், தன் பெயரையே திருப்பித்திருப்பி எப்போதும் சொல்லிக் கொண்டிருக்கும் ஆந்தையைப்போலக் கருத நேரும் என்று பெயரைச் சொல்வதில்லை என்று கூறுவர். இதுபோல் பிலிப்பைன் தீவிலும் பெயரைச் சொல்லாததற்குக் காரணம் கூறுகின்றனர். ஆனால் இங்கு ஆந்தைக்குரிய இடத்தில் காக்கையைக் கூறுகின்றனர். காக்கையானது 'கா கா' என்று அதன் பெயரையே திருப்பித்திருப்பிச் சொல்கின்றது என்று கூறுவர்: தமிழில் ஊமன் என்ற ஆந்தையின் பெயர் திருப்பித்திருப்பித் தன் பெயரையே சொல்வதாகக் கருதினதால் தோன்றியிருக்கலாம். தமிழரில்

மனைவியர் கணவரின் பெயரைச் சொல்லாதிருப்பதற்கும் இதுவே காரணமாகலாம். நாகரிகம் அமைந்தபோது இக் காரணம் மறைந்திருக்கலாம்.

ஆந்தையினத்தைப் பொதுவாக 'மூங்கா' என்ற பெயரால் மலையாளத்தில் அழைப்பர். மூங்கை என்ற சொல் தமிழில் ஊமையனையும் கீரிப்பிள்ளையையும் குறித்து வழங்கும். ஊமையைத் தமிழில் மூங்கை என்று அழைத்தது உயர்திணையில் காணப்படுகின்றது. ஆனால் மலையாளத்தில் ஊமனை மூங்கா என்று அழைத்தது அஃறிணையில் காணப்படுகின்றது. ஆந்தையைக் குறிக்கும் அஃறிணை மூங்கா தமிழில் வழக்கில் இல்லை. ஊமனுக்குத் தலையில் இரு பெரிய கொண்டைகள் உண்டு. அதனால் ஊமைக் கோட்டான் என்றழைப்பர். ஊமனை ஆங்கிலத்தில் (Brown fish owl) என்பர். பறவை நூலார் (Buba zey lonensis Ieschenault) என்றழைப்பர்.

**ஆண்டலை:**

சங்க நூல்களில் சில பாட்டுகளில் ஆண்டலை என்ற ஆந்தைப் பெயர் காணப்படுகின்றது. பிற்கால நூல்களிலும் இதைப் பற்றிச் சில செய்திகள் வருகின்றன.

*"பசும்பிசி ரொள்ளழ லாடிய மருங்கின்*
*ஆண்டலை வழங்குங் கானுணங்கு கடுநெறி"*
—பதிற்றுப்பத்து 25 : 7-8

*"ஆண்டலைக் கீன்ற பறழ் மகனே"* —கலித்தொகை 94

*"சாவோர்ப் பயிருங் கூகையின் குரலும்*
*புலவூண் பொருந்திய குராலின் குரலும்*
*ஊண்டலை துற்றிய ஆண்டலைக் குரலும்"*
—மணிமேகலை, சக்கரவாள 75-77

*"அழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவும்"*
—பட்டினப்பாலை 258

"நீண்டபலி பிடத்தி லரிந்து வைத்த
நெடுங்குஞ்சிச் சிரத்தைத் தன்னினமென் றெண்ணி
ஆண்டலைப்புள் ளருகணைந்து பார்க்கு மாலோ"
—கலிங்கத்துப்பரணி - கோயில் பாடியது-16

"ஊமைக் கூகையு மோரியு முறழ் உறழ் கதிக்கும்
யாமத் திண்டி வந்த தாண்டலை மாண்பில வழைக்குந்"
—நீலகேசி, தரும 29.

"கூகையோ டாண்டலை பாட ஆந்தை
கோடதன் மேற்குதித் தோட வீசி"
—திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகம் 3.

"மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினு
மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர"
—திருமுருகாற்றுப்படை 226-227 வரிகள்.

ஆண்டலை என்ற ஆந்தை வகை யாது என்று அறியப் போதுமான விளக்கம் பாடல்களில் இல்லை. திருமுருகாற்றுப்படை உரையாசிரியர் ஒருவர் கோழி என்றே மயங்கிப் பொருள் கூறினர். ஆண் தலையைப்போல் உள்ள பறவையே ஆண்டலையாகும். கோழிக்கு ஆடவர் தலை போல் தலை இல்லை. ஆண்டலை என்பது ஆடவரின் தலைக்குப் பெயராகும் என்பது தெய்வச்சிலையார் உரையில் விளங்குகின்றது. 'ஒரு மக்கட் டலையோடு காட்டுட் கிடந்தது கண்டு, பெண்டலை, ஆண்டலை யென்றுணரா தான் பெண்டாட்டி தலை கொல்லோ, ஆண்மகன் றலை கொல்லோ, இதோ கிடந்த மக்கட் டலையென்க' என்று கிளவி ஆக்கத்தில் உரை கூறப்பட்டுள்ளது. ஆதலின் ஆண்டலை ஆடவரின் தலையைக் குறித்தும் மண்டை யோட்டைக் குறித்தும் வருமென்பது தெளிவாகும்.

ஆணின் தலைபோல உள்ள பறவை யாது என்று பறவை நூலறிவோடு ஆராய்ந்தால் அது ஆந்தை இனப் பறவையாகவே இருக்க முடியும் என்பது உறுதியாகின்றது. ஆந்தைகளின் முகம் மனிதர்களின் முகம் போலவும்

குரங்கின் முகம்போலவும் இருப்பதாகப் பல பறவை நூலறிஞர்கள் கூறியுள்ளனர். ஆந்தையினத்துள்ளும் கூகைதான் சற்றுத் தட்டை முகத்துடன் மனிதருடைய தலைபோலவே இருக்கும். ஆதலின் கூகையையே ஆண்டலையென்றழைத்தனர் என்று கருதவேண்டும். ஆண்டலை என்பது கூகையே என்பதற்குத் தக்கதொரு சான்றும் உள்ளது.

திராவிட மொழிகளில் கூகைக்கு இப்பெயரே வழங்குவது முக்கிய சான்றாகும். கன்னடமொழியில் 'ஆண்டெக' என்ற பெயர் கூகையைக் குறித்து வழங்குகின்றது. கன்னடத்திலும் தெலுங்கிலும் 'ஆடெலு' என்ற பெயர் கூகைக்கு வழங்குகின்றது. ஓர் ஆணை ஆடவன் என்று அழைப்பதுபோலவே ஆண்டலை என்பது ஆடெலு என்று அழைக்கப்பட்டது. தமிழில் வரும் ஆந்தை என்ற பெயரும் ஆண்டலையின் மருஉவாக இருக்கலாம். ஆந்தையென்ற பெயர் முற்கால சங்க நூல்களில் வழங்காமல் பிற்பட்ட ஐந்திணை எழுபதில்தான் முதலில் வருவதைக் காணலாம்.

திருமுருகாற்றுப்படையில் ஆண்டலைக்கொடி என்பது தலையோட்டுக் கொடியாகவே இருக்கலாம். மலையாளத்தில் வெறியாட்டங்களில் இத்தகைய மனிதனின் மண்டையோடு பொறிக்கப்பட்ட கொடிகளை இன்றும் தொங்க விடுகின்றனர். பேய்களை வழிபடும் முறைகளில் இத்தகைய கொடிகளைத் (Death's head pennant) தொங்கவிடுவது மேல்நாடுகளிலும் காணும் வழக்கமாகும். பேய் முதலியன பலியை நுகராமல் தலை ஆண்மகன் தலையும் உடல் புள்ளின் வடிவுமாக எழுதிய கொடி என்று திருமுருகாற்றுப்படைக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் கூறியது பொருத்தமானது. கொடியில் ஆந்தையின் உருவமும் வரையப்பட்டிருக்கலாம். ஏனென்றால் பேயொடு கூகையைக் கூறுவது சங்க காலத்திலிருந்து வழங்கிய மரபாகும். லேப்சா (Lepcha) என்ற இமயமலைப் பழங்குடியினரின் மொழியில் ஆந்தையின் பெயர்

பேயைக் கூப்பிடும் பறவை என்ற பொருளில் வழங்குவதை இது சார்பாகக் கவனிக்க வேண்டும்.

வடநாட்டில் வாழும் திராவிடப் பழங்குடி மக்களிடையே ஆந்தையினப் பறவைகளைச் சுடுகாட்டுக்குரிய பறவைகளாகக் கருதும் கதைகள் வழங்குகின்றன. சங்க இலக்கியத்திலும் பிற்கால இலக்கியத்திலும் சுடுகாட்டில் ஆந்தையினப் பறவைகள் கூவுவதாகக் கூறும் வழக்கைக் காணலாம். ஆண்டலைஎன்ற ஆந்தையினப் பறவையின் பெயர்கூட, பழந்திராவிட மக்களிடையே வழங்கும் ஆந்தையின் தோற்றக்கதையி னடிப்படையில் தோன்றியிருக்கலாம். பைகர்கள் என்ற திராவிடப் பழங்குடி மக்கள் ஆந்தையைப் பற்றி ஒரு கதையைச் சொல்லுகிறார்கள். ஒரு காதலன் அம்மையால் மடிந்துவிடவே அந்த ஆளை ஒரு பெரிய முதுமக்கள்தாழியில் வைத்துப் புதைத்தனர்—ஆனால், அவன் கண்ணும் மண்டையோடும் அழியாமலே இருந்தன. அவனுடைய மண்டையோட்டை ஒரு தேவன் ஆந்தையாக மாற்றினான். அந்த ஆந்தை தாழியின் உள்ளே இருந்து கூவுவதைக் கேட்டு அவனுடைய காதலி பயந்து ஓடுகிறாள். இந்தக் கதையில் ஆணின் தலை மண்டையோடு ஆந்தையாக மாறுவதாகக் கூறியதைக் கவனிக்க வேண்டும். தமிழில் ஆண்டலை என்பதற்கும் இதே பொருள் இருப்பதைக் காணலாம். புறநானூறு 238ஆம் பாட்டில் 'கவிசெந்தாழிக் குவிப்புறத் திருந்த' பறவைகளில் கூகையும் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். ஆதலின் ஆண்டலை என்ற தமிழ்ப் பெயர் பழந்திராவிட மக்களிடையே வழங்கும் ஆந்தையினப் பறவையின் தோற்றக் கதையுடன் நெருங்கிய தொடர்புடையது என்று தெரிகின்றது.

கூகைக் கோழி என்ற பெயர் புறநானூற்றுப் பாடலில் வருகின்றது.

"முதுமரப் பொத்திற் கதுமென வியம்பும்
கூகைக் கோழி யானாத்
தாழிய பெருங்கா டெய்திய ஞான்றே" —புறம். 364

'அவனைக் கூகைக் கோழியார் பாடியது' என்று அடிக் குறிப்பில் கூறப்பட்டுள்ளது. 'கூகைக் கோழி' என்று சொல்லியதால் ஆசிரியர் பெயர் பெற்றார் என்று உ.வே. சாமிநாதையரும் பிறரும் கூறியுள்ளனர். ஆனால் கூகைக் கோழி என்ற பெயர் குறுந்தொகைப் பாடலிலும் வருகின்றது.

> ''மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்
> முயங்கிய நாடவச் சிலவே யலரே
> கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
> பசும்பூட் பாண்டியன் வினைவ லதிகன்
> களிறொடு பட்ட ஞான்றை
> ஒளிறுவாட் கொங்க ரார்ப்பினும் பெரிதே''
>
> —குறுந்தொகை. 393

ஆனால், இப் பாட்டைப் பாடியவர் பரணர் என்று கூறப் பட்டுள்ளது. ஆதலின் கூகைக் கோழி என்று பாடியதால் புறப்பாடலைப் பாடிய புலவர் பெயர் பெற்றார் என்று கூறுவது பொருத்தமாகத் தெரியவில்லை. புறநானூறு 364ஆம் பாட்டைப் பாடிய புலவர் பெயர் மறைந்துவிடவே அவர் பாடிய பாட்டில் இருந்த சுவையுடைய சொல் வழக்கால் பெயரிட்டனர் என்று சொல்வதே சிறப்பாகும். கூகைக் கோழி என்ற பெயர் சங்ககாலத்தில் பழகிய, வழங்கிய பெயராக இருந்திருக்கலாம். மலையாள மொழி யில் இன்றும் பாமர மக்கள் ஒரு வகை ஆந்தையைக் 'காலன்கோழி' என்று அழைக்கின்றனர். இப் பெயர் சங்க காலப் பெயரான கூகைக் கோழி என்பதைப் போலவே உள்ளது. கூகைக் கோழி என்ற சொல்லைக் கூகையும் கோழியும் என்றும் கொள்ளலாமென்று உ.வே. சா. கூறியுள்ளார். ஆனால், முதுமரப் பொந்தில் காட்டுக் கோழியை இயற்கையில் காண முடியாது. காட்டுக் கோழிகள் பொந்தில் வாழ்வன அல்ல. 'காலன்கோழி' என்ற மலையாளப் பெயரில் காலன் என்ற சொல் கூற்றுவன் என்ற பொருளில் வருகின்றது.

காலன்கோழி என்ற ஆந்தை சாவைத் தரும்படி கூவும் என்ற நம்பிக்கை மலையாளத்தில் உள்ளது. இந்தக் காலன்கோழியே (Mottled wood owl) கூகைக் கோழி யாக இருக்கலாம். காட்டுக்கோழியைப் போலவே கூவும் வேறொரு வகை ஆந்தையும் உள்ளது. இந்த ஆந்தை காட்டுக்கோழி கூவுவது போலக் கூவும். இந்த வகை ஆந்தை காட்டுக்கோழி வாழும் சூழலில் இயற்கை யில் காணப்படும். இதைப் பறவை நூலார் (Barred Jungle Owlet) என்றழைப்பர். இந்த ஆந்தையையே பெரும்பாலும் கூகைக் கோழி என்று அதனுடைய குரலில் காணப்படும் ஒப்புமை நோக்கிச் சங்க காலத்தில் அழைத் திருக்கலாம். இந்த ஆந்தையைத் தமிழில் சின்ன ஆந்தை யென்றும், தெலுங்கில் 'அடவிப் பகடிகண்டெ' என்றும் அழைப்பர். இந்தி மொழியில் காட்டு ஆந்தை என்ற பொருளில் பெயரிட்டு அழைக்கின்றனர். காட்டில் கோழி போல் கூவுவதால் கூகைக் கோழி யென்றனர்.

பகண்டை :

காரைக்காலம்மையார் பகண்டை என்றோர் ஆந்தை யைக் குறிப்பிட்டுள்ளார். தமிழிலக்கியத்தில் வேறெந்தப் பாட்டிலும் இப்பெயரைக் காணோம். காரைக்காலம்மையார் பாடல்களில் ஊமன், கூகை, ஆந்தை, பகண்டை, சிறுகூகை என்று ஐந்து வகை ஆந்தையினப் பறவைகள் கூறப்பட்டுள்ளன.

"பருந்தொடு கூகை பகண்டை யாந்தை
குட்டியிட முட்டை கூகை பேய்கள்"
—திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம். ௬

இப் பாட்டில் கூகை, ஆந்தை, பகண்டை என்று மூன்று வகை ஆந்தைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. பகண்டை எந்த வகை ஆந்தை என்பது புரியவில்லை. பகண்டை என்ற பெயர் வேறு எந்த நூல்களிலும் வரவில்லை.

திவாகர நிகண்டில் பகண்டை என்பதற்குப் பொருள் சிவல் என்று கூறப்பட்டுள்ளது. ஆனல், காரைக்கால் அம்மையார் கவுதாரியை மூத்த திருப்பதிகத்தில் கூற வில்லை என்பது தெளிவாகும். தெலுங்கு மொழியில் 'பகடிகண்டெ' என்று ஒரு வகை ஆந்தைக்குப் பெயர் வழங்குகின்றது. தமிழ் நாட்டில் ஆந்தை யென்று குறிப்பிடும் பறவையைத் (Spotted Owlet) தெலுங்கில் 'பகடி கண்டெ' என்று அழைக்கின்றனர். அதுபோல் காட்டில் வாழும் ஒரு வகை ஆந்தையை (Barred Jungle owlet) 'அடவிபகடிகண்டெ' என்று அழைக்கின்றனர். மற்ருெரு வகை காட்டு ஆந்தையை (Brown Hawk Owl) தெலுங்கில் 'பகடி கண்டெ வெஷ்டம்' என்றழைக்கின்றனர். இந்த ஆந்தைகள் சிறியவை. ஆகையால் மூன்று வகை ஆந்தைகளையும் சின்ன ஆந்தை என்று தமிழிலும் புள்ளு நத்து என்று மலையாளத்திலும் அழைக்கின்றனர். பகடிகண்டெ என்ற பெயர் சுருங்கினல் பகண்டை என்று வரும்.

தமிழில் பகண்டை என்ற ஆந்தைப் பெயர் அவ்வாறு வந்திருக்கலாம். பகடிகண்டெ என்பதற்குத் தெலுங்கில் பொருள் பகலில் காண்பது என்பதாகும். பொதுவாக ஆந்தை இனப்பறவைகளைப் பகற்குருடு என்பர். கூகை 'கடும்பகல் வழங்கா தாஅங்கு' என்று அகநானூற்றில் (122) வருகின்றது. ஆனுல், சில வகை சின்ன ஆந்தைகள் பகலில் பார்த்திடும் சக்தி வாய்ந்தவை. பகலிலேகூட வெளியே வரும். ஆதலின் பகலில் காண்பது என்ற பொருளில் பகடிகண்டெ என்ற தெலுங்குப் பெயரும் பகண்டை என்ற தமிழ்ப் பெயரும் தோன்றியிருக்கலாம். பகண்டை என்ற தமிழ்ப் பெயர் பகடி என்ற சொல்லடிப் படையாகவும் தோன்றியிருக்கலாம். பகண்டி என்பது பகடி என்று வரும். பகடி என்பதற்குச் சிரிப்பை மூட்டுவது, வேடம் போடுபவன், பரிகாசம் செய்பவன் என்பன பொருளாகும். சில வகை சிறிய ஆந்தை பொந்தில் இருந்து எட்டிப் பார்த்து முகத்தைத் திருப்பிச் செய்யும்

செயல்கள் நகைப்பையும் சிரிப்பையும் தரும் என்று பறவை நூலார் கூறுவர்.

ஆதலின் இதே பொருளின் அடிப்படையில் பகண்டை என்ற பெயர் தோன்றியிருக்கலாம். 'பப்பினை இட்டு பகண்டை பாட' என்று மூத்த திருப்பதிகத்தில் காரைக்காலம்மையார் கூறியுள்ளார். இங்குப் பகண்டை என்பதற்கு விகடப்பாடல் என்று சிலர் பொருள் கொண் டனர். ஆனால், பகண்டை என்று காரைக்காலம்மையார் கூறியது விகடத்தையும் வேடத்தையும் பரிகாசத்தையும் தரும் ஒருவகை ஆந்தையையே என்பதை உணர வேண்டும். 'பப்பினை இட்டு' என்ற தொடரில் பப்பு என்பது இகழ்ச்சிக் குறிப்பாக வரும். பப்பு என்பது ஒப்பு என்ற பொருளில் திருவாசகத்திலும் வருகின்றது. பகண்டை வேடம் போடுவதாகவும் இகழ்ச்சிக் குறிப்பைத் தருவதாகவும் அம்மையார் குறிப்பிட்டுள்ளார். வேறு யாரும் கூறாத ஒருவகைக் காட்டு ஆந்தையை அம்மையார் கூறியதைக் கவனிக்க வேண்டும். ஒரு வகைக் காட்டு ஆந்தையையே 'கூகைக் கோழி' என்று குறுந்தொகையும் கூறியதைக் காணலாம். 'சிறு கூகை உட்க விழிக்க' என்றும் அமையார் கூறியது சின்ன ஆந்தையைக் குறித்த தாகக் கருதலாம்.

ஆந்தை :

முற்பட்ட சங்க இலக்கியத்தில் ஆந்தையைப் பற்றி யாதொரு பாடலும் கூறவில்லை. பொதுவாக எளிதிலே நாம் காணும் பறவைகள், பழகிய விலங்குகளைப் பற்றிச் சங்க நூல்கள் விளக்கமாகப் பேசுவதில்லை. வீட்டில் வளர்க்கும் விலங்குகள், பறவைகளைப் பற்றிய விளக்கம் சங்க நூல்களில் மிகவும் குறைவே. அதனால் வீடுகளின் அருகில் எளிதில் கண்டு தெரிந்த ஆந்தையைப் பற்றிய செய்தியும் சங்க நூல்களில் சொல்லப்படவில்லை.

"மன்ற முதுமரத் தாந்தை குரலியம்பக்
குன்றக நண்ணிக் குறும்பிறந்து—சென்றவர்

கள்ளிய தன்மையர் போலு மடுத்தடுத்
தொள்ளிய தும்மல் வரும்'' —ஐந்திணை எழுபது - 33

''ஆந்தை குறுங்கலி கொள்ளநம் மாடவர்''
—கைந்நிலை. 21

ஐந்திணை எழுபதிலும் காரைக்காலம்மையார் பாடல்களிலும் பிற்கால நூல்களிலும் ஆந்தையைப் பற்றிச் சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம். இந்த ஆந்தை



ஆந்தை

முதிய மரங்களில் பொந்துகளில் வாழும் என்று பறவை நூலார் கூறுவர். ஐந்திணை எழுபதும் அகநானூறும் மன்றத்திலிருந்த முதுமரத்தில் ஆந்தை இருந்ததாகக் கூறியுள்ளதைக் காணலாம். 'ஆந்தை பாந்தியிருப்ப' என்று கலிங்கத்துப்பரணி ஆந்தை பதுங்கி வாழும் இயல்பைக் குறிப்பிடுகின்றது. இந்த ஆந்தையைப் புள்ளி ஆந்தையென்று நாட்டு மக்கள் அழைப்பர். நிகண்டுகளில் ஆந்தையைக் கோட்டானிலிருந்தும் கூகை

யிலிருந்தும் வேறாகக் கூறுவதைக் காணலாம். ஆந்தை யின் பெயர் இருடி, பிங்கலே, கின்னரம் என்று எல்லா நிகண்டுகளும் கூறியுள்ளன. ஆந்தையை முக்காலம் உணர்ந்த ஞானியாகக் கருதி இருடி என்றழைத்தனர். மேல் நாடுகளிலும் ஆந்தையை ஞானம் நிறைந்த பறவை (Bird of wisdom) என்று கருதுவதுண்டு. அகநானூற் றில் 260 ஆம் பாடலில் 'முதுபுள்' என்று ஆந்தை அழைக் கப்படுவதைக் காணலாம்.

ஆந்தையை முதிய மரத்தில் வாழும் பேரறிவுடைய பறவை என்று சங்க காலத்தில் கருதினர். ஆந்தையைப் பற்றி இத்தகைய உயர்ந்த கருத்து சங்க காலத்தில் இருந்திருக்கலாம். சிறைக்குடி ஆந்தையார், கொட்டி யூர் நல்லாந்தையார், பிசிராந்தையார், மன்னெயில் ஆந்தை என்ற பெயர்களுடைய புலவர்களும் தலைவர் களும் சங்க காலத்தில் இருந்தனர். பிசிராந்தையார் என்ற பெயரில் ஆந்தை என்ற சொல் ஆதன் தந்தை என்ற இருசொற்கள் சேர்ந்ததால் பிறந்தது என்று உரையாசிரியர்கள் கருதினர். ஆனல் ஐராவதம் மகா தேவன் அவர்கள் செய்த பழங்காலக் கல்வெட்டு ஆராய்ச் சியின்படி ஆதன் + அந்தை யென்பதே ஆந்தை யென்று வருமென்று கொள்ளவேண்டியுள்ளது. அந்தை என்பது தனியே உருபாகக் கொற்றனந்தை என்ற பெயர்களில் கல்வெட்டுகளில் காணப்படுவதை அவர் எடுத்துக் காட்டி யுள்ளார்.

ஆந்தையை இருடி என்றும் ஞானி என்றும் கருதின தால் புலவர்கள் ஆந்தை யென்ற பெயரைச் சூட்டிக் கொண்டார்கள் என்று கருதலாம். ஓதல் ஆந்தையார் என்ற புலவர் குறுந்தொகையிலும் ஐங்குறு நூற்றிலும் சில பாடல்கள் பாடியுள்ளார். ஓதஞானி என்ற புலவர் குறுந்தொகையில் ஒரு பாடல் பாடியுள்ளார். இந்த இரு புலவர்களும் ஓதி உணர்ந்த ஞானிகளாயிருப்பர். ஆந்தை யென்ற பெயர் ஆதன் + ஆந்தை என்ற இரு

சொற்களைச் சேர்த்தும் உண்டாகி யிருக்கலாம். ஆதன் என்ற சொல் சங்க காலத்தில் சேர அரசரும் பிறரும் சூடிக்கொண்ட இயற் பெயராகும். ஆதன் என்ற சொல் பிற்காலத்தில் அறிவிலி எனற பொருள் பெற்றிருந்தாலும் சங்க காலத்தில் உயர்ந்த பொருளுடன் வழங்கியிருக்க வேண்டும். இல்லையேல் சேர மன்னர்கள் இப்பெயரைச் சூட்டிக்கொண்டிருக்கமாட்டார்கள்.

ஆதன் என்ற சொல் அறிவுடையவன் என்ற பொருளில் சங்ககாலத்தில் வழங்கியிருக்கலாம். பிறகு இந்தப் பறவையின் பெயரையே புலவர்களும் பூண்டிருக்கலாம். கடுவன், மந்தி என்ற குரங்கின் பெயர்களை மனிதர்கள் சூடிக்கொண்டதைச் சங்ககாலத்தில் காணலாம். காரியென்ற பறவையின் பெயரைச் சூடிக் கொண்ட புலவர்களையும் மன்னர்களையும் காணலாம். ஆதலின் ஆந்தையின் பெயரைப் பூண்டதில் ஐயப்பட வேண்டியதில்லை. நாட்டு ஆந்தையை The Spotted owlet என்று ஆங்கிலத்திலும் Athene brama என்று பறவை நூலிலும் கூறுவர்.

கலித்தொகையில் 'ஆண்டலைக் கீன்ற பறழ் மகனே' என்று கூனி குள்ளனை அழைத்ததைக் காணலாம். ஆண்டலைக்குப் பெற்ற மகனே என்று கூறுவதன் காரணம் ஆராய்தற்குரியது. ஐரோப்பாவில் கூகையை அறிவு சான்ற ஞானியாகக் கருதும்போது இந்தியாவில் அதே பறவையை முட்டாளாகக் கருதுவதும் முட்டாளைக் கூகையின் மகன் என்று இழித்துக் கூறுவதும் வியப்புக்குரியதாகும் என்று ஒரு வெளிநாட்டுப் பறவைநூலறிஞர்* எழுதியிருக்கின்றார். ஆண்டலைக்கீன்ற பறழ்மகனே என்று கலித்தொகையில் கூறியது குள்ளனை முட்டாளென்று குறிக்கவே என்பதை அறிந்துகொள்ள வேண்டும். ஞான சம்பந்தர் சமணரைத் திட்டிப் பாடியபோது 'கூகை அம் மாக்கள்' என்று கூறியுள்ளார். சமணரைக் கூகைபெற்ற

* E. H. N. Lowther - A Bird Photographer in India.

மாக்களாக, முட்டாள்களாக வசை பாடியுள்ளார். காரைக் காலம்மையார் மூத்த திருப்பதிகத்தில் 'முட்டைக்கூகை' என்று முட்டாள் கூகையாகக் கூறியுள்ளார். ஆனால், ஆந்தையை ஞானியென்று கருதும் எண்ணமும் தமிழிலக் கியத்தில் காண்கிறோம்.

ஆந்தையின் பெயர் இருடி என்று பிங்கலந்தை, சூடாமணி நிகண்டுகள் கூறுவதைக் காணலாம். மற்றும் சங்ககாலத்துப் புலவர்களின் பெயர்களாக ஓதலாந்தையார் என்ற பெயர் காணப்படுகின்றது. ஓதஞானியார் என்ற பெயரைக் கவனிக்கும்போது ஓதலாந்தையார் என்ற பெயர் ஆந்தையைப்போல ஞானியைக் குறித்தாகக் கருத லாம். ஓதியும் அறிவும் கல்வியின் நாமம் என்று பிங் கலந்தை கூறுவதைக் கவனிக்க வேண்டும். ஆந்தையை ஞானியென்றும் கூகையை முட்டாள் என்றும் பிரித்துக் கருதினர் என்றும் கொள்ளலாம். "மரம்பயில் கூகையைக் கோட்டான் என்றலும்" என்று தொல்காப்பிய மரபியல் 622 ஆம் சூத்திரம் கூறும். கோட்டான் என்ற பெயர் சங்க நூல்களில் வழங்கவில்லை. மரக்கோட்டை விடாமையான் கோட்டான் என்று பெயர் பெற்றதாகப் பேராசிரியர் கூறி யுள்ளார். கோட்டான் என்ற பெயர் இன்று பாமர மக்களிடையே ஆந்தையினப் பறவைகளுக்குப் பெயராக வழங்குகின்றது. 'கோட்டானை மடியில் வைத்துக் கொண்டு சகுனம் பார்ப்பதுபோல' என்றொரு பழமொழி வழங்குகின்றது.

நிகண்டுகளில் ஆந்தையைத் தனிப்பறவையாகவே குறிப்பிட்டிருக்கும்போது கூகை, குடிஞை, குரால் ஆகிய வற்றைக் கோட்டான் என்றே ஒரே பறவையாகக் கருதினர். இப் பறவைகள் ஆந்தையினத்தில் வெவ்வேறு பறவைகள் என்பதை நிகண்டாசிரியர்கள் கருதவில்லை. தொல்காப்பிய மரபியலில் (613) 'மரம்பயில் கூகையைக் கோட்டான்' என்று மாறுபட்டு உலகத்தார் வழங்குதலின் அது வழு வென்று கடியப்படாது என்று கூறியுள்ளதைக் காணலாம். ஆதலின் தலையில் கோடு அற்ற கூகையையும் கோட்டான்

என்று மாறுபட்டு உலகத்தோர் வழங்கிவதைக் காணலாம். கோழிக்கும் கூகைக்கும் பெண்பால் அள கெனப்படும் என்று தொல்காப்பிய மரபியல் (600) கூறியுள்ளது. பேராந்தை யின் பெயராகச் சகோரம், நிலாமுகி என்ற பெயர்கள் கூறப் பட்டுள்ளன. மலையாளத்திலும் ஊமன் எனப்படும் ஊமைக் கோட்டான் நிலாவின் கதிர்களை உண்பதாகக் கூறுவ துண்டு. ஆதலின் பேராந்தையான சகோரமும் நிலா முகியும் ஊமனுகும்.

பிங்கலந்தை நிகண்டில் பெருங்கோட்டான் பெயர் கௌசிகம், ஊமன், குடிஞை, கூகை, பெரும்புள் என்று கூறப்பட்டுள்ளது. ஆனல், இவற்றில் கூகையைப் பெருங் கோட்டான் என்றே பேராந்தை என்றே கொள்ள முடி யாது. கூகை யென்பது சாக்குருவி என்பதைப் புற நானூறு தெளிவாகக் குறிப்பிட்டுள்ளது. பெரும்புள் என்ற பெயர் பேராந்தைக்குப் பெயராகக் காணப்படுகின்றது. ஆந்தைக்குப் பிங்கலை என்ற பெயர் உள்ளதாக நிகண் டுகள் கூறும். ஆந்தையின் பிங்கல நிறம் காரணமாக (Brown) பிங்கலை என்ற பெயர் வழங்கியுள்ளது. மராத்தி மொழியில் பிங்கலா என்றழைக்கின்றனர். ஆந்தைக்குத் தலையில் கொம்புகள் கிடையா. பிற்காலத்து நிகண்டுகள் ஆந்தையைக் 'கூன்' என்றழைக்கின்றன. ஆந்தையினப் பறவைகளில் ஆறுவகை சங்க நூல்களிலும் பிற நூல் களிலும் சொல்லப்பட்டுள்ளன என்று கருதலாம்.

---

## ௩௪. எழால்

## (FALCON)

சங்க நூல்களில் மூன்று பாட்டுகளில் எழால் என்றொரு பறவை சொல்லப்பட்டுள்ளது. இதற்கு வல்லூறு என்று பொருள் கூறப்பட்டுள்ளது. இது பிற பறவைகளை அடித்துக்கொன்று தின்னும் இயல்புடையது. மற்றப் பறவைகளுக்கு வலிய ஊறுக இருப்பதால் வல்லூறு எனப் பட்டது.

### 1. எழால் :

தொல்காப்பியர் எழாலை மரபியலில் குறிப்பிட்டுள்ளார். 'மயிலும் எழாலும் பயிலத் தோன்றும்' என்று மரபியலில் (சூ. 44) கூறப்பட்டுள்ளது. மயிலிற்கும் எழாலிற்கும் போத்து என்ற சொல் ஆண்பறவைக்குப் பயிலும் என்று கூறப்பட்டுள்ளது. ஆனால், சங்க நூல்களில் எழாலுக்குப் போத்து என்ற பெயர் வழங்கிய பாட்டைக் காண முடியவில்லை.

*''நிழலறு நனந்தலை யெழிலேறு குறித்த*
*கதிர்த்த சென்னி நுணங்கு செந்நாவின்*
*விதிர்த்த போலும் அந்நுண் பல்பொறிக்*
*காமர் சேவல் ஏமஞ் சேப்ப*
*முளியரில் புலம்பப் போகி முனைஅது*
*முரம்படைந் திருந்த மூரி மன்றத்*
*ததர்பார்த் தல்கும் ஆகெழு சிறுகுடி*
*யுறையுநர் போகிய வோங்குநிலை வியன்மனை*
*யிறைநிழ லொருசிறைப் புலம்பயா வுயிர்க்கும்''*

—அகம். 103

*''வங்காக் கடந்த செங்காற் பேடை*
*எழாலுற வீழ்ந்தெனக் கணவற் காணாது*

குழலிசைக் குரல குறும்பல வகவும்
குன்றுகெழு சிறுநெறி யரிய வென்னுது''
—குறுந்தொகை. 151

"சிறுபுன் புறவொடு சிற்றெழால் சீறு
நெறியரு நீள்சுரத்து'' — திணைமொழி ஐம்பது 15



எழால்

எழாலால் எற்றுதல் குறிக்கப்பட்ட கதிர்போன்ற தலையுச்சியும் விதிர்த்து விட்டாற்போன்று நுண்ணிய பொறியும் உடைய காட்டுக் கோழிச்சேவல் பாதுகாப்பைத் தேடித் தூறில் தனியாக ஓடிப்போகி வன்னிலத்தினைச் சார்ந்திருந்த பழைய அம்பலத்திலே ஆக்கள் நிறைந்திருந்த சிறுகுடிக் கண்ணே வசிப்போர் துறந்த பெரிய மனையின் இறப்பில் ஒருபுறம் தனிமையாக நெட்டுயிர்க்கும் என்று அகநானூறு 103ஆம் பாடல் படம்பிடித்தாற்போன்று ஒரு

நிகழ்ச்சியைக் கூறுகின்றது. அகநானூறு பழைய பதிப்பில் 'எழாலேறு' என்பதற்கு 'எழிலேறு' என்று கொண்டு பொருத்தமில்லாப் பொருள் கூறப்பட்டுள்ளது. காமர் சேவல் என்பதற்குக் குறும்பூழ்ச்சேவல் என்று பொருள் கூறப்பட்டுள்ளது. காடைக்கு 'கதிர்த்த சென்னி' கிடையாது. விதிர்த்த போல நுண்பொறியும் உடலில் கிடையாது. ஆதலின் கதிர்த்த சென்னியும் விதிர்த்த புள்ளியும் உடையது காட்டுக்கோழிச்சேவலே என்பதில் ஐயமில்லை.

சங்கநூல்கள் இதைக் கானவாரணம் என்று அழைக்கின்றன. இந்தக் காட்டுச் சேவலையும் அடித்துத்தாக்கும் வல்லூறு உள்ளது. குன்றுகளிலும் மலைகளிலும் குறுங்காடுகளிலும் இந்த வல்லூறு காணப்படும். வானத்தில் வட்டமிட்டுப் பறந்துகொண்டிருக்கும்போது இரையாகும் பறவையைக் கண்டால் மேலேயிருந்து சடுதியில் செங்குத்தாக விழுந்து அடித்துமோதிக் கவர்ந்துசென்றுவிடும். மின்னல் வேகத்தில் விழுந்து அடித்துத் தூக்கிச் செல்வது இடைநொடியில் நடப்பதுபோலத் தோன்றும் என்று பறவை நூலார் கூறுவர். இந்த வல்லூறுனது புறு, கவுதாரி, காடை, கிளி முதலியவற்றை அடித்துக் கொன்று தின்னும். இந்த வல்லூறை ஆங்கிலத்தில் (Shaheen Falcon) என்றழைப்பர். தமிழில் வல்லூறு என்றும் சிவப்பு லகுடு என்றும், மலையாளத்தில் கரிம்புள்ளு என்றும் அழைப்பர். இதன் உடல் மேல்புறம் கருமையாக இருக்கும். இந்த வல்லூறுகள் இரையை வவ்வுதலைக் குறித்துவிட்டால் இரை தப்பித்தாலும் தொடர்ந்து பிடிக்கப் பார்க்கும் என்று பறவை நூலார் கூறுவர். வல்லூறின் குறியிலிருந்து தப்பிய காட்டுச்சேவல் ஓடிப் பதுங்கிக் களைத்துப்போய் நெட்டுயிர்ப்பு விட்டதாக அகநானூறு கூறியுள்ளதைக் காணலாம். குறுந்தொகையில் வங்கா என்ற பறவையின் ஆண் எழாலுற வீழ்ந்துவிட்டதால் அதனுடைய பேடை பல தடவை குறுகிய குரல்விட்டுக் கத்தியதாகக் கூறப்பட்டுள்ளது. எழாலுக்குப் புறுவே பெரும்பாலாக உணவாகின்றது என்று கூறுவர். அதனல்

வல்லூறுக்குப் பொதுப்பெயராகப் புருப்பிடியன் என்ற பெயரை மலையாளத்தில் வழங்குகின்றனர். எழால் 'உற' வீழ்ந்தென என்று கூறப்பட்டுள்ளதைக் கவனிக்க வேண்டும். உறு என்பதே பின்னர் ஊறு ஆகி இப் பறவையைக் குறித்ததாகக் கொள்ளலாம்.

2. சிற்றெழால் :

திணைமொழி ஐம்பதில் சிறுபுன் புறவொடு சிற்றெழால் சிறிய தாகக் கூறப்பட்டதைக் காணலாம். தமிழ்நாட்டில் வாழும் சிற்றெழால் சின்ன வல்லூறு என்றழைக்கப்படு



சிற்றெழால்

கின்றது. இந்த வல்லூறு சிறுபறவைகளை அடித்துத் தின்னும் சக்தியுடையது. ஓணான்களையும், பல்லிகளையும், வெள்ளெலிகளையும் பிடித்துத் தின்னும். சிறுபுன்

சிற்றெழால் என்பது காடை முதலிய சிறு பறவைகளையும் எலி, வெட்டுக்கிளி முதலியவற்றையும் பிடித்துத் தின்னும். இதற்குச் சிறு புறாவைப் பிடித்துத் தின்பது அவ்வளவு எளிதன்று. அதனால்தான் சிற்றெழால் சிறுபுன் புறவொடு சீறியதாகக் கூறியுள்ளனர். அடித்துக் கொன்றதாகத் திணைமொழி ஐம்பது கூறவில்லை. சிற்றெழாலை மலையாளத்தில் சிறுபுள்ளு என்றழைக்கின்றதைக் கவனிக்க வேண்டும். இந்தச் சிற்றெழால் வேட்டையாடுவது தனிப்பட்ட முறையோடு கூடியதாகும். வானத்தில் வட்டமடித்து இறங்கிவந்து ஆராய்ந்து திரும்பவும் இறங்கிவந்து கடைசியில் துடுமெனப் பாய்ந்து இரையைப் பிடித்துத் தூக்கிச்செல்லும். இந்த முறையாகப் பறந்து வேட்டையாடுவதன் காரணமாகவே எழால் என்ற பெயர் இந்தப் பறவைக்கும் இதன் இனத்திற்கும் வந்தது. சிற்றெழாலை ஆங்கிலத்தில் Kestrel என்றழைப்பர். பறவை நூலில் (Falco Tinnunculus) அல்லது (Objugatus) என்றழைப்பர். வெளிநாட்டிலிருந்து வருவது ஒருவகை சிற்றெழால். மற்றொருவகை இந்தியாவிலேயே வாழ்வது. சின்ன வல்லூறு என்று பிறிதொரு பறவையையும் தமிழ் நாட்டில் அழைப்பர். இதை ஆங்கிலத்தில் (Sparrow-Hawk) என்பர். இதுவும் சிற்றெழாலாகும்.

### 3. குடுமி எழால்:

பதிற்றுப்பத்தில் 'குடுமி எழால்' என்ற ஒருவகை வல்லூறு கூறப்பட்டுள்ளது.

> "மாவு மாக்களும் படுபிண முணீஇயர்
> பொறித்த போலும் புள்ளி யெருத்திற்
> புன்புற வெருவைப் படைபுணர் சேவல்
> குடுமி யெழாலொடு கொண்டுகிழக் கிழிய
> நிலமிழி நிவப்பி னீணிரை பலசுயந்த"
>
> —பதிற்றுப்பத்து 36 : 7-11

போர்க்களத்தில் இறந்த மாவும் மாக்களுமாகிய பிணங்களை உண்ணப்போன பொறிந்த புள்ளியோடே கூடிய

கழுத்தையுடைய புல்லிய புறத்தையுடைய எருவைப் பெடையின் சேவலைக் குடுமி எழால் கொண்டு கீழே இழிந்ததாகப் பதிற்றுப்பத்துக் கூறுகின்றது. எருவை என்பது பிணந்தின்னிக்கழுகு. பெரிய பறவையான எருவைச் சேவலைக் குடுமி எழால் அடித்துச் சென்றதென்றால் அந்த எழால் மிகுந்த வலிமையுடையதாக இருக்க வேண்டும். அத்தகைய வலிமையுடைய ஒருவகைக் கழுகு போன்ற வல்லூறு காடுகளில் வாழ்கின்றது. கழுகும் வல்லூறும் கலந்ததுபோல் உருவில் காணப்படும். இதற்குக் கொண்டை உண்டு. காட்டுக்கோழி, முயல் முதலிய பெரிய



குடுமி எழால்

பறவைகளையும், விலங்குகளையும் வெகுவேகத்துடன் விழுந்து தாக்கித் தூக்கிச் செல்லும் இந்தக் கழுகைப் போன்ற எழாலையே பதிற்றுப்பத்துக் கூறுவதாகக் கருத வேண்டும்.

வல்லூறு பொதுவாக மிக்க வலிமையுடைய பறவையாகும். மழையில் நனைந்த கழுகை அதைவிட உருவில் சிறியதான வல்லூறு தலையில் அடித்துக் கொன்று தூக்கிச் சென்றதை நான் பார்த்திருக்கிறேன். இதே போன்றதொரு நிகழ்ச்சியை ஓர் அறிஞர் எழுதியுள்ளார். (A huge shape moved in the sky out over the tundra, a smaller shape curvetting about it. The large bird dropped lower, nearer, and we could see that it was a golden eagle. The smaller was a peregring, and he was attacking. He went up high, high on those sharp strong wings, rolled, and

power-dived. When he struck the eagle he sent it wobbling, feathers flying. The eagle, terrorized, dropped to a small ledge on a cliff face and hunched down. The hawk, a gunmetal-blue adult, dived on him again and again, not hitting him now but rocketing past inches away, curving up again, powering up five hundred feet, diving, a lossed arrow of a bird. He had the eagle hopelessly out classed. He was having sport. He was a bully. He was magnificient.—by Don Moses in 'Life', January 22, 1971). ஆதலின் குடுமி எழால் பிணந்தின்னிக் கழுகை அடித்துச் சென்றதாகப் பதிற்றுப்பத்து கூறிய செய்தி உண்மையானதாகவே இருக்கலாம். இங்குப் பதிற்றுப் பத்து வரிகளுக்குக் கூறிய உரை பொருத்தமற்று இருப் பதைக் காணலாம்.

உச்சிக் கொண்டையையுடைய வல்லூறு என்னும் பறவையை உடன்கொண்டு கீழே இறங்க என்றும், இறங்கியது உண்ணுதற் பொருட்டு என்றும் கூறப் பட்டுள்ளது. குடுமி எழால் இறந்த பிணத்தைத் தின்ப தாகக் கூறியது இயற்கைச் செய்தியன்று. குடுமி எழால் உயிருடைய விலங்குகளையோ பறவைகளையோ அடித்துத் தின்னும் பழக்கமுடையதாகும்; பிணங்களைத் தின்னாது. ஆதலின் எருவைச் சேவல் ஊன் தின்பதற்காகக் குடுமி எழாலை உடன் கொண்டு கீழே இறங்கியதாகக் கூறிய உரை தவறானதாகும். மற்றும் கொண்டு என்ற சொல் கவர்ந்து என்ற பொருள் தருதலைக் கவனிக்க வேண்டும். பெரிய திருமொழியில் இப் பொருளில் கொண்டு என்ற சொல் வழங்கியுள்ளது. எருவைச் சேவலைக் குடுமி எழால் கவர்ந்து கீழே இழிந்தது என்பதே சரியான பொருளாகும். குடுமி எழாலை ஆங்கிலத்தில் (The Indian Crested Hawk - Eagle) என்பர். பறவை நூலார் (Spizactus Cirrhatus) என்றழைப்பர். தெலுங்கு மொழி யில் ஜுட்டு பைரி என்றும் நமலி புரிகட்டு என்றும் அழைப்பர். பைரி என்பது தமிழில் இக் காலத்தில்

வல்லூறுக்கு வழங்கும் சொல்லாகும். சூட்டுடைய பைரி என்பதே தெலுங்குப் பெயரின் பொருள்.

மயிலை உண்ணும் கழுகு என்பது மற்றொரு தெலுங்குப் பெயரின் பொருள். இதைக் கொண்டை ராஜாளி என்றும் முசல் ராஜாளி என்றும் தமிழ்நாட்டில் சில இடங்களில் அழைப்பர். குடுமி எழாலைப் போன்று பாம்பைத் தின்னும் குடுமியுடைய கழுகும் தமிழ்நாட்டில் இருக்கின்றது. இதைக் குடுமியான் என்று தமிழ்நாட்டில் அழைப்பர். இதை யாழ்ப்பாணத்தில் கொண்டைச் சான், கொண்டைச்சி என்றும் தமிழ் நாட்டில் கொண்டையன் என்றும் அழைப்பர். இது பாம்பையே பெரும் பாலும் தின்னும். தமிழ்நாட்டில் உள்ள குடுமியான் மலை இந்தக் கழுகு அங்கு மிகுந்திருந்ததன் காரணமாக வந்தது. பிற்காலத்தில் குடுமியான் என்பதைச் சிகா நாதர் என்று மொழி பெயர்த்து அதற்கொரு புராணக் கதை படைத்தனர்.

பிற்காலத்துத் தனிப் பாடலில் 'கொக்கு வல்லூறு கண்டென்ன விலவிலத்து' என்று ஒரு வரி காணப்படு கின்றது. கொக்கு முதலிய நீர்ப் பறவைகளை அடிக்கும் வல்லூறு தமிழ்நாட்டில் உண்டு. இதைப் 'பைரி' என்றும், 'பொரிலகுடு' என்றும் தமிழில் அழைப்பர். மலையாளத் தில் 'காயல்புள்ளு' என்றழைப்பர். பைரி என்ற சொல் அராபியப் பெயராகும். இதைப் பிற்காலத்தில் ஒழுவி லொழுக்கம் என்ற நூலில் வைரி என்று சொல்லப் பட்டுள்ளது. வைரியின் கழுத்து கருக்கும் என்று கூறி யுள்ளது. பைரியின் கழுத்து, மார்பு கறுத்துக் காணப் படும். இந்தப் பைரியை (Peregrine Falcon) என்ற ழைப்பர். தமிழ்நாட்டில் வேறொரு வல்லூறும் காணப் படுகின்றது. இதை 'வெள்ளை லகுடு' என்றும் தமிழி லும் தெலுங்கிலும் அழைப்பர். இந்தப் பெயர் இந்தி மொழியிலிருந்து வந்தது. இதை (Laggar Falcon) என்று ஆங்கிலத்தில் அழைப்பர். இவை இரண்டுமே எழால் என்று அழைக்கப்பட்டிருக்கலாம்.

எழால் என்ற பெயர் வல்லூறுக்குச் சங்க நூல்களிலே மூன்று பாட்டுகளில் வழங்கியதைக் கவனித்தோம். பிற்கால நூல்களில் இப் பெயர் வழங்கக் காணேம். ஆனல், அருமையாகப் புதுவை மாநிலத்தில் நெட்டப்பாக்கம் கிராமத்தில் எழால் என்ற பெயர் வல்லூறுக்கு வழங்கினதைக் கேட்டிருக்கிறேன். வயலில் நான் சென்று கொண்டிருக்கும்போது ஒரு குடியானவன் 'புருவை எடால் அடித்துக் கொண்டு போவதைப் பாருங்கோ' என்று சொன்னன். எடால், எடால் என்று என்வாய் முணுமுணுத்தது. எடால் என்ருல் வல்லூறு என்று சொன்னன். கல்லாதவர்கள் வாயில் நல்ல தமிழ் துள்ளுவதைக் கண்டு வியப்படைந்தேன். எழால் என்ற சங்க காலப் பெயரே எடால் எனப் பாமரனின் வாயில் மாறியது என்பதை உணர்ந்தேன். ழகரம் டகரமாவது தெலுங்கு மொழியில் காணக் கூடியது. கோழி கோடியாகிற்று.

தெலுங்கு மொழியின் சாரல் அடித்த காரணத்தினல் எழால் எடால் ஆயிற்று என்று கருதலாம். ழகரம் யகரமாகவும் ளகரமாகவும் லகரமாகவும் மாறுவது தமிழின் கிளை மொழிகளில் காணப்படுவதே. எழால் என்ற பெயர் வரலாறு தமிழிலக்கியத்திலிருந்து தெரிய வருகின்றது. எழால் என்ற சொல் எழுதல் என்ற பொருளடிப்படையில் தோன்றியது. எழிலி, எழினி, எழுத்து என்ற சொற்களும் இதே அடிப்படையில் தோன்றியவையே. எழுத்து என்ற சொல் செவிப்புலனும் பொருள் பற்றியதே யன்றி வரைவது என்ற பொருளில் கட்புலனும் பொருள் பற்றிய தன்று என இலக்கண ஆசிரியர்கள் கூறுவர். சாத்தன் யாழ் எழூஉம் என்று கூறுங்கால் ஒலி எழுவதையே குறிப்பிட்டுள்ளனர். 'யாழின் எழாலொடு ஒன்ருகிய மிடற்ருல் பாடுவாள்' என்று அடியார்க்குநல்லார் உரை கூறியதில் எழால் யாழின் இசை யொலி பற்றி வழங்கியுள்ளது. ஏழு வகை எழால் என்று ஏழு சுரங்களையே அடியார்க்கு நல்லார் கூறியுள்ளார். பிற்காலத்தில் இசைப்பாட்டையே

குறித்துத் திருவிளையாடற் புராணம் இச் சொல்லைப் பயன் படுத்தியது. 'பருந்தும் நிழலும்போல் பாட்டும் எழாலும்' என்று சிந்தாமணி (730) கூறியுள்ளது. நச்சினார்க் கினியர் இந்த வரிக்கு உரை கூறுவதைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். 'அந் நிலத்தின்கண் நின்று ஆய்ந்து பின்னும் மேன்மேல் உயர்கின்றுரைப்போலப் பாடுகின்றுராதலின்' பருந்து உவமையாயிற்று என்றார். பருந்து பறக்கும் முறையை எப்படி ஆலாபனத்திற்கு ஒப்பிட்டுக் கூறினர்களோ அதேபோல் எழால் பறக்கும் முறைக்கும் ஒப்பிடலாம்.

நச்சினார்க்கினியர் ஒரு நிலத்தின்கண் நின்று ஆய்ந்து பின்னும் மேன்மேல் உயர்கின்றுரைப் போலப் பாடுகின்றதை எழால் என்று சிந்தாமணி கூறுவதாகக் கொண்டார். அதேபோல ஒரு நிலத்தின்கண் நின்று ஆய்ந்து பின்னும் மேன்மேல் உயர்கின்ற பருந்து என்று கொண்டார். ஆனல், இச் செய்கை எழால் என்ற வல்லூறுக்கும் மிகவும் பொருந்தும். இசையில் எழாலின் தன்மை பறவையில் எழாலின் செய்கைக்கு ஒத்துள்ளதைக் கவனிக்க வேண்டும். சலீம் அலி என்ற தலைசிறந்த பறவை நூலறிஞர் சிறிய எழால் பறப்பதை விளக்கியுள்ளார். மெதுவாக இப் பறவை வானில் ஏறும், பறக்கும், போகும். ஒரு மட்டத்தில் வட்டமடித்துப் பின் தன் இறக்கைகள் அடிப்பதை நிறுத்திக்கொண்டு கீழே உள்ள இரையைப் பார்க்கும். ஏதாவது கண்ணுக்குப் பட்டால் செங்குத்தாகக் கீழே யிறங்கும். அந்த மட்டத்தில் வட்டமடித்துப் பார்க்கும். இரையென்று தெரிந்தால் துடுமெனச் செங்குத்தாகப் பாய்ந்து தூக்கிச் செல்லும். இதில் கவனிக்க வேண்டிய செய்தி என்ன வென்றல் மேலே மெதுவாக ஏறுவதும் இரைதேட இறங்கி வானில் ஓரிரு உயர மட்டங்களில் வட்டமடித்துப் பறப்பதும் இறங்குவதுமாகியன எழாலின் செய்கையாகும். இஃது இராக ஆலாபனை போலிருக்கின்றது என்று கருதினரென்று தெரிகின்றது. சங்க நூலான பொருந

ராற்றுப்படையிலேயே எழால் என்ற சொல் இசையில் பயின்று வருகின்றது.

> "முரசு முழங்குதானை மூவருங் கூடி
> யரசவை யிருந்த தோற்றம் போல
> பாடல் பற்றிய பயனுடை யெழால்"

மூன்று அரசர் அரசவையிலிருந்த தோற்றம்போல வலிவும் மெலிவும் சமனுமாகச் சேர்ந்த எழால் போன்றது என்று பொருள் கூறப்பட்டுள்ளது. இஃது இராக ஆலாபனையைப் பற்றியதென்று தெரிகின்றது. கர்நாடக இசையைப் பற்றி எழுதிய ஓர் அறிஞர் கூறியுள்ளதை இங்குக் கவனிக்கலாம். கர்நாடக இசை முறையில் இராக ஆலாபனம் பறவைகள் இயற்கையாக வானில் பறப்பதை ஒத்தது. பறவை மேலே பறப்பதும், இறகுகளை அடிக்காமல் காற்றில் மிதப்பதும், சுற்றிச் சுற்றி வட்டமிடுவதும், கடைசியில் இறங்கிக் கிளையில் உட்காருவதும் கர்நாடக முறைக்கு ஒத்ததாகும். ஆனால் வடநாட்டு இசையில் அடிப்படையாக ஓர் இடத்தை வைத்துக்கொண்டு மேலும் கீழேயும் சுரவட்டம் அடித்தாலும் ஒவ்வொரு வட்டத்திற்கு ஒவ்வொரு தடவையும் அடிப்படைக்கு வருகிறார்கள் என்று கர்நாடக இசைக்கும், வடநாட்டு இசைக்கும் உள்ள வேற்றுமையைக் காட்டியுள்ளார். வடநாட்டு இசையில் ஆலாபனம் பையன் கையில் பட்டம் வட்டமிடுவது போல உள்ளதென்றும் கூறுகின்றார். ஆங்கிலேயர் இசையில் இராக மட்டத்திற்கு Pitch என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர். இஃது உயர்வாகவும் சமனாகவும் தாழ்வாகவும் இருக்கலாம். அதே சொல்லை வேட்டையாடப் பழக்கப்பட்ட வல்லூறு பறக்கும் உயர மட்டத்திற்கும் வழங்குகின்றார்கள். தமிழிற்கும் ஆங்கிலத்திற்கும் உள்ள இசை மரபுச் சொல்லில் ஒற்றுமை காண்கின்றோம். இங்கிலாந்து, ஐரோப்பா போன்ற நாடுகளில் வல்லூறை வளர்த்து வேட்டையாடுவது வழக்கம். இஃது ஒரு கலையாகவே (Falconry) போற்றப் பட்டது. பழந்தமிழிலக்கியத்தில் வல்லூறைப் பழக்கி

வேட்டையாடினது கூறப்படவில்லை. ஆனால், மிகப் பிற்காலத்தில் எழுதப்பட்ட கருணீகர் புராணத்தில் சென்னியச் சோழன் என்ற அரசன் வல்லூறு கொண்டு வேட்டையாடினதாகக் கூறப்பட்டுள்ளது.

*"காட்டிலே வலையொ ழுங்காய்க் கயிறதாம் கண்ணி சேர்த்தும்*
*வெட்டியே முட்க டன்னை வெளிதெரி வழிய டைத்தும்*
*மட்டிலா பதங்க மான மாளவே வேட்டைக் காரன்*
*விட்டனர் வல்லூறு தன்னை வீழ்ந்திடப் பறவை தானே."*

வல்லூறு கொண்டு வேட்டையாடுவதை மிகப் பிற்காலத்திய கருணீகர் புராணம் குறிப்பிட்டுள்ளது. இந்தப் புராணத்தில் பல்லவர்கள் போரிட்ட ஊர்களின் பெயர்கள் கூறப்பட்டிருப்பது பல்லவர் வரலாற்றோடு ஒத்துக் காணப்படுகின்றது. ஆயினும் இந்த நூல் மொகலாயர் ஆட்சிக்குப் பின்னரே தோன்றியது என்பதில் ஐயமில்லை. சங்க காலத்திலேயே எழால் என்ற சொல் தமிழ் இசையில் ஆலாபனைக்கும் பறவையில் வல்லூறுக்கும் பெயராக வழங்கியிருப்பதைக் கவனிக்கவேண்டும். இவற்றிற்கு இருந்த நெருங்கிய ஒப்புமை காரணமாகவே ஒரே சொல் இரண்டிற்கும் பெயராக வழங்கிற்று என்று கொள்ளலாம்.

வல்லூறைத் தற்காலத்தில் இராசாளி என்றும் பைரி என்றும் லகுடு என்றும் நாட்டு மக்கள் அழைக்கின்றனர். இராசாளி என்ற பெயர் பொதுவாக எல்லா வல்லூறுகளுக்கும், சில வல்லூறு போன்ற கழுகுகளுக்கும் வழங்குகின்றது. விலங்குகளில் வலிமை மிகுந்ததை ஆளி என்று அழைத்ததை யொட்டியே பறவைகளில் வலிமை மிகுந்த ஒருவகைக் கழுகை ஆளி என்றும் அதை விட வலிமை மிகுந்ததாகக் கருதிய வல்லூறை இராச ஆளி என்றும் அழைத்தனர். பாம்புகளில் நஞ்சு மிகுந்ததை 'அரசு அரா' என்று சங்க நூல்கள் கூறுவது போன்று இப் பெயர் அமைந்துள்ளது. திணைமாலை நூற்றைம்பதின் பழைய உரையிலும் வேறு உரையிலும்

'புல்லூறு' என்று வல்லூறு அழைக்கப்படுகின்றது. வல்லூறைப் புல்லிய ஊறு என்பது பொருத்தமற்றது. ஆதலின் இது புள்ளூறு என்று வழங்கியிருக்கலாம். கரிம்புள்ளு, செம்புள்ளு, சிறுபுள்ளு என்ற மலையாள வழக்குகளில் புள்ளுப் பெயர் வழங்குவதைக் காட்டு கின்றது. புட்களுக்கு ஊறு செய்யும் பறவையைப் 'புள்ளூறு' என்று வழங்கியது பொருத்தமேயாகும். வல்லூறுக்குப் பெயராக 'ஊறு' என்ற பெயரே கம்ப ராமாயணத்தில் வழங்கியுள்ளதைக் காணலாம். 'உரற் றின பறவையை ஊறு கொண்டு எழ, சிரற்றின பார்ப் பினிற் சிந்தை சிந்திட' என்று கும்பகர்ணன் வதைப் படலத்தில் (268) கூறப்பட்டுள்ளது. பறவைகளுக்கு ஊறு செய்வதை 'ஊறு' என்றழைத்தனர். எகிப்து நாட்டில் வல்லூறை அரசின் அடையாளப் பறவையாகக் கருதினர். தமிழில் இராசாளி என்ற பெயர் ஓரளவு இக் கருத்தோடு ஒத்துள்ளது.

---

## ௩௫. கழுகும் பருந்தும்
## (TAWNY EAGLE AND BLACK - WINGED KITE)

**கழுகு :**

கழுகும் பருந்தும் ஒரே இனத்தைச் சேர்ந்த பறவைகளாகும். மக்களுக்கு நன்கு தெரிந்த விலங்குகள் பறவைகளைப் பற்றிச் சங்க நூல்கள் பொதுவாகச் செய்திகள் கூறுவதில்லை. சங்க நூல்களில் கழுகைப் பற்றியும் செய்திகள் மிகக் குறைவாகவே உள்ளன. நகரங்களிலும் கிராமங்களிலும் காணப்படும் கழுகைப் பற்றியோ பருந்தைப் பற்றியோ சங்க நூல்களில் செய்திகள் காணப்படவில்லை. இவை யாவருக்கும் தெரிந்த பறவைகளாதலால் கூறப்படவில்லை என்று கருதலாம்.



கழுகு

"கருங்கட் காக்கையொடு கழுகுவிசும் பகவச்"
—ஐங்குறு நூறு - 314

"அழுகுரற் பேய்மகளயரக் கழுகொடு
செஞ்செவி யெருவை திரிதரும்"
—புறம் 370

"இலையில வோங்கிய நிலையுயர் யாஅத்து
மேற்கவட் டிருந்த பார்ப்பினங் கட்குக்
கல்லுடைக் குறும்பின் வயவர் வில்லிட

*பிணவரிக் குறைந்த சிறத்த வதர்தொறுங்*
*கணவிர மாலை யிடூஉக்கழிந் தன்ன*
*புண்ணுமிழ் குருதி பரிப்பக் கிடந்தோர்*
*கண்ணுமிழ் கழுகின் கான நீந்திச்*
*சென்றோ ரென்பிலர் தோழி வென்றியோடு''—அகம். 31*

*''கலைப்புற வல்குல் கழுகுகுடைந் துண்டு''*
*—மணிமேகலை. 6 : 112*

சங்க நூற்பாடல்களில் கழுகுகள் காக்கையோடும் பிணந்தின்னிக் கழுகோடும் கூறப்பட்டுள்ளன. கழுகு இறந்த விலங்குகளையும், கழிவுப் பொருள்களையும் தின்னும் குணமுடையது. அகநானூறு 31ஆம் பாட்டில் கழுகைப் பற்றிய ஒரு விளக்கம் உள்ளது. இலையில்லாத யாமரத்தின் கவட்டில் இருந்த குஞ்சுகளுக்கு வயவர் கொன்று போட்ட மனிதர்களின் கண்களைக் கொண்டு சென்று உமிழ்ந்து ஊட்டும் என்று அகநானூறு கூறியுள்ளது. கழுகு இறந்தவர் உடலைத் தின்னுவது இயற்கையே. குஞ்சு பொரித்த காலத்தில் உணவுக்காகக் கோழிக் குஞ்சுகளையும் கழுகு தூக்கிச் செல்லும். கோல்ப் (Golf) என்ற விளையாட்டில் பயன்படுத்தும் பந்துகளைக்கூட இந்தச் சமயத்தில் உணவென்று நினைத்துத் தூக்கிச் செல்லும் என்று பறவை நூலார் கூறியுள்ளனர்.

அதனால் இறந்தோரின் கண்ணை எடுத்துச்சென்று குஞ்சுகளுக்கு ஊட்டியதாக அகநானூறு கூறியுள்ள செய்தி உண்மையானதாகவே இருக்கலாம். இந்தக் கழுகு சுரத்தில் கூறப்பட்டிருப்பதால் இது கூளிக்கழுகாகவே இருக்க முடியும். வீடுகளினருகில் காணப்படும் கழுகாக இருக்க முடியாது. கூளிக்கழுகு பிற பருந்துகளும், இராசாளிகளும் பிடித்த இரையைக்கவரும் குணமுடையதென்று பறவை நூலார் கண்டு பிடித்துள்ளனர். பிற பறவைகளைத் துரத்தி அவற்றின் காலில் இருக்கும் ஊன் உணவைத் தட்டிப் பறிப்பதால் இந்தக் கழுகைக் கூளி என்றழைத்தனர். வழிப்போக்கருடைய பொருளைக் கவர்ந்து செல்லும்

கள்வரைக் கூளி என்ற பெயரால் அழைப்பதுண்டு. இது போன்ற தொழிலைச் செய்த கழுகையும் கூளி என்றழைத்தது பொருத்தமேயாகும். இவ்வாறு உணவைத் தட்டிப் பறிக்கும் கழுகைப் பற்றிக் கல்லாடமும் கூறியுள்ளது.

> "ஓட்டுவிட் டுலறிய பராரைநெட் டாக்கோட்
> டுதிர்பறை யெருவை யுணவுன் றட்டி
> வளைவாய்க் கரும்பருந் திடைபறித் துண்ணக்
> கண்டுநின் றுவந்த காட்சியு மிதுவே"
>
> —கல்லாடம். 6 : 25-27

யாமரத்தின் கிளையிலிருந்து கழுகின் ஊனுகிய இரையைத் தட்டிப் பறித்துக் கரும்பருந்து உண்ணும் காட்சியைக் கல்லாடம் கூறியுள்ளது. எருவை, பருந்து என்ற பெயர் கல்லாடத்தில் கழுகினங்களின் பெயராகப் பொதுவாக வழங்கினதைக் காண்கிறோம். சங்க காலத்தில் எருவை, கழுகு, பருந்து என்ற பெயர்கள் குறிப்பிட்ட கழுகினப் பறவைகளுக்கே வழங்கின. ஆதலின் கல்லாடத்தில் எருவை என்பதற்குக் கழுகு என்று பொருள் கூறப்பட்டுள்ளது. கரும்பருந்து என்பது கூளிக்கழுகாகவே இருக்கும். இக் கழுகே உணவைத் தட்டிப் பறிக்கும் பழக்கமுடையதாகும். கூளி என்ற பெயர் வந்ததன் காரணம் கல்லாடத்திலிருந்தும் தெரிந்துகொள்ளலாம்.

பருந்து :

கழுகைவிடப் பருந்தைப் பற்றிப் பல பாடல்கள் சங்க நூல்களில் உள்ளன. சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள பருந்து நாம் இப்போது நீர்நிலையருகிலும் கழனிகளிலும் காணும் கருடன் என்றழைக்கப்படும் பருந்து அன்று. இந்தப் பருந்து நீர்நிலையருகில் மனிதர் வாழ்கின்ற இடங்களில் காணப்படும். இதைச் செம்பருந்து என்று அழைப்பர். உடல் இளஞ்சிவப்பாகவும், கழுத்தும் தலையும் வெண்மையாகவும் இருக்கும். வைணவர்கள் வணங்கும்

இந்தக் கழுகை ஆழ்வார் என்றும் கூறுவர். சங்க நூல்களில் வரும் பருந்து சுரத்திலும், பாலை நிலத்திலும் கூறப்பட்டுள்ளதால் நீரருகே வாழும் கருடப் பருந்தாக இருக்கமுடியாது. சங்க நூல்களில் பருந்தைப் பற்றிக் கூறிய வருணனை நாம் எளிதில் பார்க்கும் கருடப் பருந்திற்குப் பொருந்தாது என்பதை உணரவேண்டும். இக்கால உரைகளில் கருடப் பருந்தாகக் கொண்டு பொருள் கூறினது தவறாகும். புறநானூறு பருந்திற்குக் கரிய சிறகு இருப்பதாகக் கூறியுள்ளது.



பருந்து

"கூதிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன
பாறிய சிதாரேன் பலவுமுதற் பொருந்தித்"
—புறம். 150

"நீர்ப்படு பருந்தி னிருஞ்சிற கன்ன
நிலந்தின் சிதாஅர் களைந்த பின்றை"
—பதிற்றுப்பத்து. 12 : 19-20

"வருந்தினை வாழியென் னெஞ்சே யிருஞ்சிறை
வளைவாய்ப் பருந்தின் வான்கட் பேடை
யாடுதொறு கனையும் மவ்வாய்க் கடுந்துடிக்"
—அகம். 79

புறநானூற்றுப் பழைய உரையில் 'இருஞ்சிறகு' என்பதற்குக் கரிய சிறகு என்று பொருள் கூறப்பட்டுள்ளது. கரிய சிறகுடையதாகப் புறநானூறும் பதிற்றுப்பத்தும் கூறுவதால் இப் பருந்து சிவந்த சிறகுடைய கருடப் பருந்தாக இருக்க முடியாது என்பது உறுதியாகின்றது. இத்தகைய

கருஞ்சிறகையுடைய பருந்து இயற்கையில் உள்ளது. இதைப் பறவை நூலார் 'கருஞ்சிறகுப் பருந்து' (Black-winged kite) என்று ஆங்கிலத்தில் அழைப்பர். வெண்மையும் சாம்பல் நிறமும் உடைய இப் பருந்துக்கு இறக்கைகள் கரிய நிறமாயுள்ளதைப் பறவை நூலார் குறிப்பிட்டுச் சொல்லியுள்ளனர். சங்க நூல்களில் சுரத்திலும் பாலையிலும் கூறப்பட்டதைப் பறவை நூலாரும் குறிப்பிட்டுள்ளனர். (affects deciduous biotope, secondary scrub country and semi-desert areas) மழைக் காலத்தில் நனைந்த சிறகும், கூதிர்காலத்துச் சிறகும் கலந்து கிடக்கும் என்றும் அதனால் கிழிந்த துணிபோல, மண்தின்ற ஆடைபோல இருக்கும் என்றும் சங்க நூல்கள் கூறியுள்ளன. வெண்டலைப் பருந்து என்று அகநானூறு (117) கூறுகின்றது. இதன் தலையில் ஒரு பகுதி வெண்மையாகவும் மறு பகுதி சாம்பல் நிறமாகவும் இருக்குமென்பர். 'புன்புறச்சேவல்' (147) என்று மலைபடுகடாம் கூறுவதால் இதன் மேற்புறம் புல்லிய நிறமுடையது என்பது தெரிகின்றது. பறவை நூலார் சாம்பல் நிறமாக இதன் மேல்புறம் இருக்குமென்பர். செம்பருந்திற்கு இந்தவருணனைகள் பொருந்தா.

இந்தப் பருந்து ஈனும் காலத்தில் உயவுவதாகவும் விளிப்பதாகவும் கூறியுள்ளனர்.

> "ஈன்பருந் துயவும் வான்பொரு நெடுஞ்சினைப்
> பொரியரை வேம்பின் புள்ளி நீழல்" —நற்றிணை. 3

> "அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கைத்
> திருந்துசிறை வளைவாய்ப் பருந்திருந் துயவும்
> உன்ன மரத்த துன்னருங் கவலை" —புறம். 3

> "கொடுஞ்சிறைக் குரூஉப்பருந் தார்ப்பத்
> தடிந்துமாறு பெயர்த்தவிக் கருங்கை வாளே"
> —புறம். 269

> "அத்தக் குடிஞைத் துடிமரு டீங்குரல்
> உழுஞ்சிலங் கவட்டிடை யிருந்த பருந்தின்
> பெடைபயிர் குரலொ டிசைக்கு மாங்கட்" —புறம். 370

"உலறுதலைப் பருந்தி னுளிவாய்ப் பேடை
அலறுதலை யோமை யங்கவட் டேறிப்
புலம்புகொள விளிக்கு நிலங்காய் கானத்து"
—ஐங்குறுநூறு. 321

"அத்த வோமை யங்கவட் டிருந்த
இனந்திர் பருந்தின் புலம்புகொள் தெள்விளி
சுரஞ்சென் மாக்கட் குயவுத்துணை யாகும்"
—குறுந்தொகை. 207

"வளைவாய்ப் பருந்தின் வள்ளுகிர்ச் சேவல்
கிளைதரு தெள்விளி கெழுமுடைப் பயிரும்"
—அகம். 363

"பருந்திளைப் படூஉம் பாறுதலை யோமை" —அகம். 21

"கருங்கா லோமை யேறி வெண்டலைப்
பருந்துபெடை பயிரும் பாழ்நாட் டாங்கட்"
—அகம். 117

"ஆற்றிருந் தல்கி வழங்குநர்ச் செகுத்த
படுமுடை பருந்துபார்த் திருக்கும்
நெடுமூ திடைய நீரி லாறே" —குறுந்தொகை. 283

"வருந்திளை வாழியெ னெஞ்சே பருந்திருந்
துயாவிளி பயிற்று மியாவுயர் நனந்தலை" —அகம். 19

"என்றாழ் நின்ற புன்றலை வைப்பிற்
பருந்திளைப் படூஉம் பாறுதலை யோமை" —அகம். 21

"ஒன்றேறுங் குயர்சினை யிருந்த வன்பறை
வீளைப் பருந்தின் கோள்வல் சேவல்
வளைவாய்ப் பேடை வருதிறம் பயிரு
மிளிதேர் தீங்குர லிசைக்கு மத்தஞ்" —அகம். 33

"கடுவளி யெடுத்த கால்கழி தேக்கிலை
நெடுவிளிப் பருந்தின் வெறியெழூந் தாங்கு
விசும்புகண் புதையப் பாஅய்ப் பலவுடன்" —அகம். 299

பருந்து உன்னமரத்திலும், உழிஞ்சில் மரத்திலும், ஓமை மரத்திலும் உயவுவதாகவும் விளிப்பதாகவும் பேடையைப்

பயிர்வதாகவும் கூறப்பட்டுள்ளது. தனிமையில் விளிப்பதும் பேடையை அழைப்பதும் கூறப்பட்டுள்ளது. ஓமை மரத்தில் இந்தப் பருந்து இருந்ததாகப் பல பாடல்களில் குறிப்பிடப் பட்டுள்ளது. ஓமை மரத்தின் கவட்டிலும் உழிஞ்சில் மரக் கவட்டிலும் பேடைப்பருந்து இருந்ததாகக் கூறப்பட் டுள்ளது. இந்த மரங்களில் கூடுகட்டுவதால் 'ஈன்பருந்து' 'இனந்தீர் பருந்து' என்று கூறப்படுவதால் முட்டையிட்ட பருந்தும் இணைசேர்ந்து தீர்ந்த பருந்தும் கூறப்பட் டுள்ளதைக் காணலாம். இந்தப் பருந்தின் குரலை வீளை யென்றும் சங்க நூல்கள் குறிப்பிட்டுள்ளன. சில சமயங் களில் இந்தக் கழுகு ஒருவகைக் குரலோசை தருவது தொலைவில் கேட்குமென்பர். மனிதன் சீட்டி அடிப்பது போல் சில சமயங்களில் ஓசை செய்யும் என்பர்.

பருந்து செய்யும் ஓசையே சுரத்தில் செல்லும் வழிப் போக்கர்களுக்கு உசாவும் துணையாக இருந்ததென்று சங்க நூல்கள் கூறுகின்றன. நெடுவீளை என்றும் இதன் ஓசை கூறப்பட்டுள்ளது. இப் பருந்து தனியாகவும் துணை யுடனும் காணப்படுமென்று பறவை நூலார் கூறுவர். தனி யாக இருந்து ஓசையிடுவதையும் துணையை அழைப்பதை யும் சில பாடல்கள் சொல்லியிருக்கின்றன. இளியென்னும் பண்ணென்று கேட்டார் விசாரிக்கும் அளவு குரல் மெத் தெனப் பெடையை அழைத்தலால் இளிபோன்ற குரல் என்று அகநானூற்றின் பழைய உரை கூறுகின்றது. இது போன்றே மயிலின் குரலை விளரிப் பண்ணிற்கு ஒப்பிட்டு ஏங்கும் குரல் என்று கூறியுள்ளனர்.

இந்தப் பருந்து ஏதாவது ஒரு மரத்தின் கிளையில் பழக்கமாக உட்கார்ந்துகொண்டு கீழே பார்த்துக் கொண் டிருக்கும். மேலே வானில் சுற்றிச் சுற்றிப் பறந்துகொண்டு தரையைக் கவனித்துக் கொண்டுமிருக்கும். ஏதாவது இரை தரையில் இருப்பதாக ஐயப்பட்டால் பறக்கின்ற உயரத்திலிருந்து சிறிது கீழே செங்குத்தாக இறங்கித் திரும்பவும் அந் நிலையிலிருந்து சுற்றிச் சுற்றிக் கவனிக்கும். இம் முறையாக இறங்கிவந்து இறங்கிவந்து 'கடைசியில்

இரையை அடித்துச் செல்லக்கூடிய மட்டம் வந்ததும் ஒரேயடியாகப் பாய்ந்து பிடித்துச் சென்றுவிடும். இப் பழக்கம் இந்தப் பருந்துக்குரிய தனித்த வேட்டையாடும் முறையாகும். இதையும் சங்கப் புலவர்கள் ஓரளவு தெரிந்து கொண்டிருந்தனர் என்று கருதலாம்.

*"மறங்கெழு போந்தை வெண்டோடு புனைந்து*
*நிறம்பெயர் கண்ணிப் பருந்தூ றளப்பத்"*
*—பதிற்றுப் பத்து. 51 : 31-32*

*"சூடு நிலையுற்றுச் சுடர்விடு தோற்றம்*
*விசும்பாடு மரபிற் பருந்தூ றளப்ப"*
*—பதிற்றுப் பத்து. 74 : 14-15*

போர்க்களத்தில் கிடந்த உதிரம் தோய்ந்த நிறம்பெயர்ந்த மாலையைத் தனக்கு இரையென்று கருதிப் பருந்து ஆராய்ந்ததாகப் பதிற்றுப் பத்துக் கூறியுள்ளது. 'பருந்து ஊறளப்ப' என்றவரிக்குப் பருந்து உறுதற்கு ஆராய்தல் என்று பழைய வுரை கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். உறுதற்கு என்பது எடுத்துச் செல்வதற்கு, அடைதற்கு என்று பொருள்படும்.

இங்குப் பழைய உரை இல்லையேல் இந்த அருமையான நுண்பொருள் விளக்கம் நமக்குத் தெரிந்திருக்காது. இந்தப் பருந்து பறந்துகொண்டே இறங்கி வந்து ஆராய்தலைக் குறிப்பிட்டுப் பறவை நூலார் கூறிய செய்தியோடு பதிற்றுப்பத்துச் செய்தி ஒத்து வருவது வியப்பை அளிக்கின்றது. (More usually quarters the territory flying and sailing in wide circles 30 metres or so above turning every now and then to face the wind and hover like a kestrel to scan the ground. On suspicion of movement parachutes obliquely down a few metres to investigate more closely. The parachute descent is often interrupted with bouts of stationary hovering to make sure. Finally when within striking range the bird stoops on the quarry with a rush bearing it away on its

claws). பருந்து 'ஊறளத்தல்' என்ற சொல் அருமையான அறிவியற்கலைச் சொல்லாகும். பருந்து வானில் வட்டமடித்துச் சிறிது சிறிதாக இறங்கி வந்து இரையை ஆராய்ந்து கொண்டு இறுதியில் பாய்ந்து இரையைத் தூக்கிச் செல்லும் அளவு உயரத்திற்கு வந்து ஆராய்ந்து வட்டமடிப்பதையே பருந்து 'ஊறளப்ப என்ற சொல் குறிப்பிடுகின்றது. உறுவதை அளப்ப என்று விரித்துக் கூறலாம். பருந்து ஊறளப்பதையே பருந்தின் விழுக்காடு என்றும் கூறினர். இறையனார் அகப்பொருளுரையில் பருந்தின் விழுக்காடு என்பதற்குக் கூறிய விளக்கம் தெளிவாக உள்ளது. பருந்து நடுவே நடுவே வீழ்ந்து கருதும் பொருளைக் கொண்டுபோதல் போல இயைபு இன்றிக் கருதும் பொருளை முடிப்பது என்று விளக்கப்பட்டுள்ளது. பருந்து இரையை எப்படிக் கவருகின்றது என்பதை நுட்பமாகத் தமிழ்ப்புலவர்கள் ஆராய்ந்து கண்டறிந்தனர் என்பதைத் தெளிந்துகொள்ளலாம்.

இரத்தந்தோய்ந்த மாலையை ஊன் என்று மயங்கிப் பருந்து எடுத்துச் சென்றதைப் புறநானூறும் கூறியுள்ளது.

> "வெருவரு குருதியொடு மயங்கி உருவுகரந்
> தொறுவாய்ப் பட்ட தெரிய லூன்செத்துப்
> பருந்து கொண் டுகப்பயாங் கண்டனம்
> மறம்புகன் மைந்தன் மலைந்த மாறே" —புறம். 271

> "தீயி னன்ன வொண்செங் காந்தட்
> டுவற் கலித்த புதுமுகை யூன்செத்
> தறியா தெடுத்த புன்புறச் சேவ
> லூட னன்மையி னுண்ணா துகுத்தென"
> —மலைபடுகடாம். 145-148

> "போழ்புண் படுத்த பொரியரை யோமைப்
> பெரும்பொளிச் சேயரை நோக்கி யூன்செத்துக்
> கருங்கால் யாத்துப் பருந்துவந் திறுக்குஞ்" — அகம். 397

மழைத்தூறலில் பூத்த செங்காந்தட் பூவை ஊன் என்று கருதியெடுத்துச்சென்று பின்னர் அது ஊன் இல்லையென்று

தெரிந்து கீழே போட்டதை மலைபடுகடாம் கூறியுள்ளது. யானை ஓமை மரத்தைக் குத்தியதால் புண்போன்றிருந்த சிவந்த அடிமரத்தை ஊன் என்று கருதி அதற்குப் பருந்து வந்ததாக அகநானூறு கூறியுள்ளது. ஆதலின் இந்தப் பருந்து ஊன் உணவு என்று, இறைச்சி என்று அது போன்ற சிவந்த பொருள்களைக் கண்டு ஏமாறுவது வழக்கமென்று தெரிகின்றது. இதைச் சங்கப் புலவர்கள் நன்கு பார்த்தே கூறியுள்ளனர் என்று கருதலாம். இந்த அருமையான செய்தியைப் பறவை நூலார் ஆராய வேண்டும். பிணந்தின்னிக் கழுகுகள் வானில் வட்டமடித்துப் பறக்கும் போது எப்படி இறந்துபோன இரையைத் தரையில் கண்டு பிடிக்கின்றது என்பதை ஆராய்ந்த ஒரு வேட்டையாளர் (Augustus Somerville) ஓர் அரிய ஆராய்ச்சிச் செய்தியைக் கூறியுள்ளார். இறந்துபோன இரையின் அசையாத தன்மையைக் கண்டுமட்டும் இக் கழுகு தனது இரையென்று கண்டுகொள்வதில்லை. சிவப்பு நிறம்தான் முக்கியம் என்று அவர் கூறுகின்றார்.

இறந்த விலங்குகளின் உள் ஊனை எடுத்துவிட்டுத் தோலிற்குள் வேறு பொருளைத் துறுத்துப் போட்டால் இக் கழுகுகள் அணுகுவதில்லை. ஆனால், சிவப்பு நிறத்தையோ, சிவப்புத் துணியையோ அந்த இறந்த விலங்கின் தோலோடு சேர்த்தபோது இக் கழுகுகள் உடனே இரையென்று கருதி அணுகின. ஆதலின் சிவந்த நிறத்தைக் கொண்டுதான் பிணந்தின்னிக் கழுகுகள் பிணமான இரைகளை முதலில் கண்டு கொள்ளுகின்றன என்று கூறியுள்ளார். இந்த வேட்டையாளர் கூறினது பருந்திற்கும் பொருந்துவதே. (When a vulture detects an animal lying in the fields, he will immediately circle closer, watching intently for any signs of life. Immobility is lowerer not only the criterion by which he judges the death of the animal. Red is a colour that has a deep significant to the vulture but not as a colour. Experiments made with stuffed animals laid

in the field were ignored by the vultures but no sooner had a little red paint or even a strip of red flannel been added to the corpse, the vultures immediately alighted.) இந்த வேட்டையாளர் கூறிய செய்தியையே புறநானூறும், அகநானூறும், மலைபடுகடாமும், பதிற்றுப்பத்தும் கூறியிருப்பதாகக் கருதலாம். சிவந்த மாலையையும், சிவந்த சாந்தள் பூவையும் சிவந்த ஓமையின் பொளிந்த மரத்தையும் ஊன் என்று கருதிப் பருந்து ஆராய்ந்ததாகச் சங்க நூல்கள் கூறியுள்ள செய்தி இந்த வேட்டையாளர் கூறிய செய்தியோடு ஒத்திருப்பதைக் காணலாம். ஆகையால் சங்க நூல் கூறிய இந்த அரிய, நுண்ணிய செய்தி உண்மையான செய்தியாகவே இருக்கலாம்.

கழுகை ஆங்கிலத்தில் (Tawny Eagle) என்றழைப்பர். பறவை நூலில் (Aquila rapax) என்றழைப்பர். சங்க நூல்களில் கூறப்பட்டுள்ள பருந்தை ஆங்கிலத்தில் (Black - winged kite) என்றழைப்பர். பறவை நூலார் (Elanus caeruleaus) என்று கூறுவர். செம்பருந்து எனப்படும் கருடனை (Brahminy kite) என்றழைப்பர். பிராமணப் பருந்து என்றழைக்கும் வழக்கு வடநாட்டுப் பழக்கமென்று தெரிகின்றது. பருந்தில் பிராமண சாதி வகுத்துக் கொண்டதும் கரும்பழுப்பு நிறமான கழுகைப் பறைப்பருந்து என்று தமிழில் அழைத்தனர். கழுகு என்ற பெயர் அதன் நிறம் காரணமாக வந்தது. கழுது எனும்பேயும், கழுதையும், நிறம் காரணமாகவே பெயர் பெற்றிருக்கலாம். கழுதை நிறம் என்று இக் காலத்தில் இந்த நிறத்தைப் பேச்சு வழக்கில் அழைப்பதுண்டு. சங்க நூல்களில் கூறப்பட்டுள்ள கழுகு தற்காலம் கூளி என்றழைக்கப்படும் கழுகாகும். இது பிணந்தின்னும் அண்டங் காக்கைகளுடனும், பிணந்தின்னிக் கழுகுடனும் கூறப்படுவதால், அரிய வழிகளையுடைய இடத்தில் கூடுகட்டிக் காணப்படுவதால் கூளிக்கழுகாகவே இருக்கும். கூளிக் கழுகை (Tawny Eagle) என்று ஆங்கிலத்திலும், (Aquila rapax) என்று பறவை நூலிலும் அழைப்பர். சங்க

நூல்களில் பிணந்தின்னிக் கழுகுகளில் இருவகை சொல்லப்பட்டுள்ளன. ஆனால், பருந்தினத்திலே பாம்பைத் தின்னும் பருந்து, கொண்டை ராஜாளி எனப்படும் பருந்து ஆகியவை சங்க நூல்களில் கூறப்படவில்லை. ஆங்கிலத்தில் (Eagle) என்றழைக்கப்படும் பருந்துகளைத் தமிழில் ஆளி என்றழைப்பது வழக்கமென்று தெரிகின்றது. கூளியும் ஆளியும் சில வகைப் பருந்துகளைக் குறித்துத் தற்காலம் வழங்கும் பெயர்களாகும். கூளி என்ற சொல் சங்க காலத்தில் கூளிப்படையினரையும் ஒரு வகைப் பேயையும் குறித்து வழங்கித் தற்காலத்தில் ஒருவகைப் பருந்திற்கு வழங்குகின்றது.

தமிழ் நாட்டில் 'தேன் குடிச்சான்' என்றொரு பருந்து உள்ளது. தேன் பருந்து என்றும் இதை அழைப்பதுண்டு. இந்தப் பருந்து தேன் கூடுகளைத் தன் அலகால் தாக்கி எடுத்துச் சென்று விழுங்கும். பெரிய மலைத் தேன் அடைகளைக் கூடத் தாக்கிக் கீழே விழுந்த பகுதிகளைத் தின்பதுண்டு. நற்றிணையில் இப் பறவையைப் பற்றி ஒரு குறிப்பு உள்ளதாகத் தெரிகின்றது.

> "சுரும்புண விரிந்த கருங்கால் வேங்கைப்
> பெருஞ்சினைத் தொடுத்த கொழுங்கண் இருஅல்
> புள்ளுற்றுக் கசிந்த தீந்தேன் கல்லளைக்
> குறக்குறு மாக்கள் உண்ட மிச்சிலைப்
> புன்றலை மந்தி வன்பறழ் நக்கும்" —நற்றிணை. 168

'புள்ளுற்றுக் கசிந்த தீந்தேன்' என்ற வரிக்கு உரையெழுதிய ஆசிரியர்கள் 'புள்' என்பதற்குத் தேனீக்கள் நெருங்குதலால் கிழிந்து கசிந்த தேன் என்று எழுதினார்கள். தேன் கூடு தேனீக்கள் நெருங்கினதால் கிழிந்துவிடும் என்பது இயற்கையில் காணக்கூடாத செய்தியாகும். தேனீ தான் கட்டும் தேன் கூட்டைக் கிழிக்கும் என்பதிலும் உண்மையில்லை. சுரும்புகள் தொடுத்த தேன் கூடு புள் உற்றதால் கசிந்தது என்றதற்குப் பறவையானது தேன் கூட்டைத் தீண்டினதால்,

அடைந்ததால் தேன் கூடு கசிந்தது என்றே பொருள் கொள்ள வேண்டும். தேன் கூட்டைத் தீண்டும் பறவை, ஊறு செய்யும் பறவை தேன் பருந்தாதலால் இப் பறவையையே 'புள்' என்று நற்றிணை கூறுகின்றது. இத்தகைய பறவை இயற்கையில் இருப்பது உரையாசிரி யர்களுக்குத் தெரியாததலால் புள் என்பதற்குத் தேனீ என்று இயற்கைக்கு ஒவ்வாத பொருள் கூறினர். ஆதலின் நற்றிணையில் தேன் கூட்டை 'உறுவதாகக்' கூறிய புள் தேன் பருந்து என்றே கொள்ளவேண்டும். உறு என்ற சொல் ஊறு என்று நீளும். புள்ளினத்தில் ஊறு செய்யும் பறவையைப் புள்ளுறு (புல்லூறு) என்றழைப்பர். தேன் கூட்டை ஊறு செய்யும் பறவையையும் புள்ளுறு என்று சொல்லலாம். புள் உற்று, புள் ஊறு செய்து தேன் கூடு கலைந்து தேன் கசிந்ததை நற்றிணை கூறுவதால் இந்தப் புள் தேன் குடிச்சான் என்றழைக்கப்படும் பருந்தே என்பது தெளிவாகின்றது. இந்தப் பருந்தை ஆங்கிலத்தில் (Honey Buzzard) என்றும் பறவை நூலில் (Pernis Ruficollis) என்றும் அழைப்பர்.



## ந௲. எருவையும் பாறும்
## (THE BLACK VULTURE AND THE WHITE BACKED VULTURE)

பிணத்தையே தின்று வாழும் கழுகுகளில் நான்கு வகைக் கழுகுகள் தமிழ்நாட்டில் உள்ளன. அவற்றில் இரண்டு வகைகள் முக்கியமானவை. இந்த இரண்டு வகை கழுகிற்கும் கழுத்திலும் தலையிலும் மயிர்களோ, தூவிகளோ கிடையாது. தலை மொட்டையாகத் தெரியும். இந்த இரண்டு வகையில் ஒரு வகைக் கழுகிற்குத் தலையும் கழுத்தும் சிவப்பாக இருக்கும். மற்றொரு வகைக் கழுகிற்குத் தலையும் கழுத்தும் காரீய நிறமாக இருக்கும். சிவந்த தலையுடைய பிணந்தினிக்கழுகை எருவையென்றும், காரீய நிறத் தலையுடைய பிணந்தின்னிக்கழுகைப்பாறு என்றும் சங்க நூல்கள்



எருவை

கூறுகின்றன. எருவை என்ற பிணந்தின்னிக் கழுகைப் பற்றிப் பல சங்கப் பாடல்கள் கூறுவது குறிப்பிடத்தக்க

தாகும். எருவையின் சிவந்த காதையும், எருவை பிணந் தின்னுவதைப் பற்றியும் பல பாடல்கள் கூறுகின்றன. எருவையின் சிவந்த செவியை வருணித்துள்ள பாடல் களைக் கொண்டு பிணந்தின்னிக் கழுகுகளில் இக் கழுகு எது என்று தெளிவாக அறிந்துகொள்ளலாம்.

"அத்தக் கேழல் அட்ட நற்கோள்
செந்நாய் ஏற்றை கம்மென ஈர்ப்பக்
குருதி யாரும் எருவைச் செஞ்செவி
மண்டம ரழுவத் தெல்லிக் கொண்ட
புண்தேர் விளக்கின் தோன்றும்
விண்தோய் பிறங்கல் மலையிறந் தோரே" —அகம். 111

"நீளெரி பரந்த நெடுந்தா ளியாத்துப்
போழ்வளி முழங்கும் புல்லென் உயர்சினை
முடைநசை இருக்கைப் பெடைமுகம் நோக்கி
ஊன்பதித் தன்ன வெருவரு செஞ்செவி
எருவைச் சேவல் கரிபுசிறை தீய
வேனில் நீடிய வேயுயர் நனந்தலை" —அகம். 51

"பொருகளத் தொழிந்த குருதிச் செவ்வாய்ப்
பொறித்த போலும் வானிற எருத்தின்
அணிந்த போலுஞ் செஞ்செவி எருவை
குறும்பொறை எழுந்த நெடுந்தாள் யாஅத்து
அருங்கவட் டுயர்சினைப் பிள்ளை யூட்ட
விரைந்துவாய் வழுக்கிய கொழுங்கண் ஊன்தடி
கொல்பசி முதுநரி வல்சி யாகும்" —அகம். 193

"எருவை யிருஞ்சிறை யிரீஇய விரியிணர்
தாதுண் தும்பி முரலிசை கடுப்பப்" —அகம். 291

"சிறுகுடி மறவர் சேக்கோள் தண்ணுமைக்கு
எருவைச் சேவல் இருஞ்சிறை பெயர்க்கும்"
—அகம். 297

"இருசிறக ரீர்க்குப் பரப்பி யெருவை
குருதி பிணங்கவருந் தோற்றம்" —களவழி. 20

"உலறுகுடை வம்பல ருயர்மர மேறி
யேறு வேட் டெழுந்த வினந்தீ ரெருவை
யாடுசெவி நோக்கு மத்தம் பணைத்தோட்" —அகம். 285

"நெய்த்தோ ரன்ன செவிய வெருவை
கற்புடை மருங்கிற் கடுமுடை பார்க்கும்
காடுகனி கடிய வென்ப" —ஐங்குறுநூறு. 335

"மாவு மாக்களும் படுபிண முணீஇயர்
பொறித்த போலும் புள்ளி யெருத்திற்
புன்புற வெருவைப் பெடைபுணர் சேவல்"
— பதிற்றுப்பத்து. 36 : 7-9

எருவையின் சிவந்த காதையும் கரிய சிறகையும் வெண்மை கலந்த கழுத்தையும் மேலே காட்டிய சங்கப் பாடல்கள் விளக்கியுள்ளன. எருவையின் சிவந்த செவி போர்க் களத்திலே வீரரது புண்ணை ஆராய்தற்கு இரவிலே வைத்த விளக்குபோல் தோன்றும் என்று கூறப்பட்டுள்ளது. எருவை என்ற பிணந்தின்னிக் கழுகின் காது சிவப்பாக இலை போலத் தொங்கும். இது அகல் விளக்கின் சிவந்த சுடருக்கு உருவத்தையும் நிறத்தையும் கருதி ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது. நெருப்புப் போன்ற செவி என்று நற்றிணை கூறுகின்றது. ஊன்துண்டைத் தலையில் பதித்தாற்போல இருக்கும் பயத்தைத் தரும் செஞ்செவி என்று அகநானூறு (51) கூறுகின்றது. இந்த விளக்கம் மிக அழகான பொருத்தமான விளக்கமாகும். அகநானூறு 193 ஆம் பாடலில் "பொறிந்த போலும் வானிற எருத்தின் அணிந்த போலும் செஞ்செவி யெருவை" என்று எருவையின் கழுத்தும் செவியும் வருணிக்கப்பட்டுள்ளன.

எருவையின் தலையும் கழுத்தும் இறகுகள் இல்லாமல் வழுக்கையாய்ப் புதிதாக வெட்டப்பட்ட விலங்கின் இறைச்சியைப் போலக் காணப்படும். அதிலும் காது மிகச் சிவப்பாக ஊன்போலக் காணப்படும். அதனால் ஊன் பதித்தது போல இருக்கும் என்று அகநானூறு கூறியுள்ளது. ஒரு வேட்டையாளர் இதை மாட்டிறைச்சியின் நிறம் (Beaf

steak red) என்று வர்ணித்துள்ளார். இதன் சிவந்த கழுத்தடியில் வெள்ளைப் பொறிகள் காணப்படும். இதையே 'பொறித்த போலும் வால் நிற எருத்து' என்று அகநானூறு கூறியுள்ளது. பொறித்த போலும் புள்ளியெருத்து என்று பதிற்றுப்பத்துக் கூறியுள்ளது. இந்த எருத்தில் சிவந்து தொங்கும் காது அணிந்தது போல இருந்ததாகக் கூறியுள்ளது நல்ல விளக்கமாகும். தொங்கிய காது ஆடுவதை மறவர்கள் மரத்திலிருந்து பார்த்ததாக அகநானூறு கூறியுள்ளது. இரத்தம் போன்ற சிவந்த செவியுடைய எருவை என்று ஐங்குறுநூறு கூறியுள்ளது. செஞ்செவியெருவை என்ற வழக்கு பல பாடல்களில் பயில்கின்றது. பறவையினத்தில் இலை போன்று தொங்கும் காது காண்பதரிதாகையால் இதன் காதையே பல பாடல்களில் வருணித்துள்ளனர்.

இலையைப் போலக் காது தொங்குவதால் எருவையைக் காதிலைக்காரன் என்று மலையாளத்தில் அழைக்கின்றனர். இத்தகைய காது போன்ற தோல் வான்கோழிக்கு இருப்பதைக் காணலாம். தலை சிவந்து மயிரற்ற பிணந்தின்னிக் கழுகை நன்கு அறிந்த சங்கப் புலவர்கள் பல பாடல்களில் வருணித்துள்ளனர். இதன் உடல் கரியதாய் இருக்கும். சிறகும் கருமையாய் இருக்கும். 'கரிபு சிறை' உடைய எருவை என்றும், 'இருஞ் சிறை', 'இருசிறகர்' என்றும் இதன் கருமையான இறக்கையைக் குறிப்பிட்டுப் பாடியுள்ளனர். இதன் சிறகின் ஈர்க்கு ஓரத்தில் நன்கு தெரியுமாதலால் 'இருசிறக ரீர்க்குப் பரப்பி' என்று களவழி நாற்பது தெளிவாகக் கூறியுள்ளது. எருவை மற்றப் பறவைகளைப் பார்க்கிலும் மிகப் பெரிய பறவையாகும். அகநானூற்றில் (97) 'பெருந்தலை எருவை' என்று கூறியிருப்பதைக் காணலாம். காது என்று சொல்லப்படுவது காதுத் துளைக்குக் கீழ் உள்ள சிவந்த தோலே (Wattles) யாகும். (A huge vulture identified by its deep yellowish red naked head and neck, thighs and legs. White patches at base of neck-Bare skin of head and neck deep

yellowish red and wattles redder) இந்தக் காதுத் தோல் எருவையின் கழுத்து, தலை முதலியவற்றைவிட மிகச் சிவப் பாக இருக்கும். சங்க நூல்களில் கூறப்பட்ட எருவை பிணந்தின்னிக் கழுகு என்பதை இடைக்காலத்து உரை யாசிரியர்கள் உணரவில்லை. புறநானூற்றிற்கு உரை எழுதியவர் தலை வெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து என்று எழுதினர். தக்கயாகப்பரணி உரையாசிரியர் கழுகு என்று கூறினர்.

அகநானூற்று உரையாசிரியர் பருந்தின் விசேட மென்றும் வெள்ளிய தலையையுடையது என்றும் எழு தினர். இந்த உரைகள் தவறானவையாகும். தலை வெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து கருடனேயாகும். கருடனுக்குச் சிவந்த செவியில்லை. கரிய சிறகுகளில்லை. சங்க நூல்கள் கூறும் வருணனை கருடனுக்குச் சிறிதும் பொருந்தாது. எருவை வேறு, கருடன் வேறு என்பதை நன்குணர்ந்த களவழி இரண்டையும் வேறுபடுத்திக் கூறி யுள்ளது.

> "எவ்வாயு மோடி வயவர் துணித்திட்ட
> கைவாயிற் கொண்டெழுந்த செஞ்செவிப் புன்சேவல்
> ஐவாய் வயநாகங் கவ்வி விசும்பிவரும்
> செவ்வா யுவணத்திற் றோன்றும் புனல்நாடன்
> தெவ்வரை யட்ட களத்து." —களவழி 26

வீரர்கள் துணித்த கைகளை வாயில் கொண்டு போகும் செஞ்செவியுடைய புல்லிய எருவைச் சேவல் ஐந்து தலை நாகத்தை எடுத்துச் சென்ற கருடன் போலத் தோன் றிற்று என்று களவழி கூறுவதைக் காணலாம். எருவை யுடன் பருந்தும் கழுகும் தனித்தனியே ஒரே புறப்பாட்டில் கூறப்பட்டுள்ளதையும் காணலாம்.

> "உழுஞ்சிலங் கவட்டிடை யிருந்த பருந்தின்
> பெடைபயிர் குரலொ டிசைக்கு மாங்கட்
> ... ... ... ... ... ... ... ... ...
> ... ... ... ... ... ... ... ... ...

... ... ... ... ... ... ... ... ...
இனத்தடி விராய வரிக்குட ரடைச்சி
அழுகுரல் பேய்மக ளயரக் கழுகொடு
செஞ்செவி யெருவை திரிதரும்
அஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே.''—புறம். 370

ஒரே புறநானூற்றுப் பாடலில் பருந்தும் கழுகும் எருவையும் தனித்தனியே கூறப்பட்டிருப்பதால் எருவையானது பருந்தோ கழுகோ அன்று என்பது தெளிவாகும். எருவை பிணத்தையே தின்று வாழும். பருந்தும் கழுகும் பிணத்தைத் தின்னுமாயினும் அவற்றின் முக்கிய உணவு கழிவுப் பொருள்களும் சில சிறு விலங்குகளும், பறவைகளுமாகும். மற்றும் சங்க நூல்களில் எருவையைக் கரிய வழியுடைய காடுகளிலும் பாலையிலும், வறட்சியான இடங்களிலும்; கூறியிருப்பது கருடப் பருந்துக்குப் பொருந்தாது. கருடப் பருந்துக்கு நீர் நிலைகள் அருகில் இருக்க வேண்டும். சங்க நூல்களில் எருவை பிணந் தின்னுவதைப் பல பாடல்கள் கூறி யிருந்தும் பிணந் தின்னிக்கழுகை மறந்து கருடப் பருந்து என்று எப்படி உரை கூறினரென்று தெரியவில்லை. சங்கப் பாடல்கள் பெரும்பாலும் எருவை பிணந்தின்னுவதையே கூறி யுள்ளன.

''கொடுமரம் பிடித்த கோடா வன்கண்
வடிநவில் அம்பின் ஏவ லாடவர்
ஆளழித் துயர்த்த அஞ்சுவரு பதுக்கைக்
கூர்நுதிச் செவ்வாய் எருவைச் சேவல்
படுபிணப் பைந்தலை தொடுவன குழீஇ
மல்லன் மொசிவிரல் ஒற்றி மணிகொண்டு
வல்வாய்ப் பேடைக்குச் சொரியும் ஆங்கண்''
—அகம். 215

''குருதி யாடிய புலவுநா றிருஞ்சிறை
எருவைச் சேவல் ஈண்டுகிளைத் தொழுதி
பச்சூன் கொள்ளை சாற்றிப் பறைநிவந்து

செக்கர் வானின் விசும்பணி கொள்ளும்
அருஞ்சுரம் நீந்திய நம்மினும் பொருந்தார்''
—அகம். 381

''உயிர்திறம் பெயர நல்லமர்க் கடந்த
தறுகணாளர் குடர்தரீஇத் தெறுவரச்
செஞ்செவி யெருவை அஞ்சுவர விகுக்கும்'' —அகம். 77

''கருங்கா லோமைக் காண்பின் பெருஞ்சினைக்
கடியுடை நனந்தலை யீன்றிளைப் பட்ட
கொடுவாய்ப் பேடைக் கல்கிரை தரீஇய
மான்றுவேட் டெழுந்த செஞ்செவி யெருவை
வான்றோய் சிமைய விறல்வரைக் கவாஅற்
துளங்குநடை மரையா வலம்படத் தொலைச்சி
யொண்செங் குருதி யுவறியுண் டருந்துபு
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
கொள்ளை மாந்தரி னுறைது கவரும்
புல்விலை மராஅத்த வகன்சே ணத்தங்'' —அகம். 3

''புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
யிரவுக்குறும் பலற நூறி நிரைபகுத்
திருங்கன் முடுக்கர்த் திற்றி கெண்டுங்
கொலைவி லாடவர் போலப் பலவுடன்
பெருந்தலை யெருவையொடு பருந்துவந் திருக்கு
மருஞ்சுர மிறந்த கொடியோர்க் கல்கலும்.''—அகம். 97

கொன்று போட்ட ஆளின் பிணத்தைத் தின்னும் எருவையைப் பற்றி அகநானூறு கூறியுள்ளது. பிணத்தின் தலையைத் தோண்டி உண்ணக் குழுமிக் கண்ணை எடுத்துப் பேடைக்குச் சொரிந்ததாக அகநானூறு கூறியுள்ளது. பிணந்தின்னிக் கழுகுகள் பிணத்தைத் தின்னும்போது தோண்டித் தசையையும் தின்னும் வழக்கத்தை வேட்டையாளர் எழுதியுள்ளனர். எருவை கூட்டமாகப் பிணத்தைச் சுற்றி இருப்பதையும் கூறியுள்ளனர். எருவைகள் குழுமியும் கிளைத்தொழுதியாகவும் பச்சை ஊனைக் கொள்ளையடிப்பதை அகநானூறு கூறியுள்ளது. எருவைகள் உருவில் பெரிதாயிருந்-

தாலும், வயிறு நிறைய உண்டாலும், உண்டதும் பறக்கக் கூடியவை என்று பறவை நூலார் கூறுவர். எருவையின் கூட்டம் ஊனைத் தின்று "பறை நிவந்து" சென்றதாகவும் அப்போது செக்கர் வானம் போல விசும்பு அணி கொண்ட தாகவும் கூறியதைக் காணலாம். எருவையின் தலை, கழுத்து, கால் ஆகியவை சிவப்பாக இருப்பதால் எருவைக் கூட்டம் வானில் செல்வது செக்கர் வானம் போலிருந்த தாகப் புலவர் ஒருவர் மிக அழகாகக் கூறியுள்ளார். போர்க் களத்தில் இறந்தவருடைய குடலை எருவை இழுத்துத் தின்பதாகவும் கூறியுள்ளனர். முட்டையிட்டுக் குஞ்சு பொரித்த தன்னுடைய பெட்டைக்கு உணவு தருவ தற்காகப் புலி கொன்று போட்டுத் தின்று விட்டுச் சென்ற மரையாவின் கெடுநாற்றமடிக்கும் தசையைக் கொள்ளை யடிக்கும் மாந்தரைப்போல் ஓயாது கவர்ந்து செல்லும் எருவை என்று அகநானூற்று மூன்றும் பாட்டு கூறி யுள்ளது. புலி விட்டுச் சென்ற முடை நாற்றம் அடிக்கும் விடக் கூனைப் பெருந்தலை எருவை பருந்துடன் உண்ண விருக்கும் என்று மற்றோர் அகநானூற்றுச் செய்யுள் கூறி யுள்ளது. புலிகள் அடித்துப் பதுக்கிய ஊனைப் பிணந் தின்னிக் கழுகுகள் வானில் உயரப்பறக்கும்போது கண்டு பிடித்து இறங்கி உண்பதை வேட்டையாளர் எழுதி யுள்ளனர். புலி இந்தக் கழுகுகளை விரட்டுவதையும் கண்டுள்ளனர். வேட்டையாளர் சுட்டுப் போட்ட விலங்கு களையும் பாதுகாக்கா விட்டால் நொடியில் உண்டு தீர்த்து விடும் பிணந்தின்னிக் கழுகுகளைப் பற்றிப் பலர் எழுதி யுள்ளனர். இக் கழுகுகள் வானிலிருந்து இறங்குவது கொண்டு காட்டில் எங்கே பிணம் கிடக்கின்றது என்று கண்டு கொள்ளலாம். பிணத்தையே தின்று வாழும் பறவைகளில் எருவை ஒன்றாகும். முடைநடை இருக்கை என்று அகநானூறு கூறியுள்ளது.

"படுமுடை நசைஇய வாழ்க்கைச் செஞ்செவி
யெருவைச் சேவ லிண்டுகிளை பயிரும்
வெருவரு கான நீந்திப் பொருள்புரிந்து —அகம். 161

*"ஆர்த்த அறிவினர் ஆண்டிளைய ராயினுங்*
*காத்தோம்பித் தம்மை அடக்குப —மூத்தொறூஉந்*
*தீத்தொழிலே கன்றித் திரிதந் தெருவைபோற்*
*போத்தறார் புல்லறி வினர்".* —நாலடியார். 351

படு முடை நசையுடன் கூடிய வாழ்க்கையுடைய எருவை என்று அகநானூறு கூறுவதைக் கவனிக்க வேண்டும். முதுமை அடையுந்தோறும் தீத்தொழிலான பிணத்தைத் தின்னும் தொழிலிலேயே கன்றித் திரியும் எருவை என்று நாலடியார் கூறியுள்ளது. இந்த இடத்தில் எருவை என்பதற்கு வேழம் என்றும் நாணல் என்றும் கொண்டு உள்ளே புரையுடையவர் என்று சில உரையாசிரியர் பொருள் கூறியுள்ளனர். இந்தப் பொருள் தவறு. எருவை என்பது இந்தப் பாட்டில் பிணந்தின்னிக் கழுகையே குறிக்கும். பதிற்றுப்பத்தில் 'தீதுகளைந் தெஞ்சி' (74 : 12) என்று வரும் வரிக்கு உரையெழுதுங்கால் தீய பாகத்தைக் களைந்து என்று எழுதியதைக் காணலாம். அதையே பருந்தூறளப்பதாகவும் கூறியுள்ளதைக் காணலாம். கலைமானின் ஊனை உதிர்த்து மீதியிருந்ததைத் தீது என்று சொல்லியிருப்பது விடக் கூனையேயாகும். தீதைத் தின்னும் தொழிலுடையதால் எருவை தீத்தொழிலைக்கன்றி வாழ்வதாக நாலடியார் கூறிற்று. தீயதைத் தின்னும் கழுதைப் புலியை மணிமேகலை தீ நாய் என்றழைப்பதையும் காணலாம். தீ என்பது பிணம், விடக்கூன் என்பவற்றைக் குறிப்பதை உணர வேண்டும். பிணத்தைத் தின்னும் கழுதைப் புலியைத் தீ நாய் என்று அழைத்தது மிகவும் பொருத்தமானது. பிணத்தை நரிகளுடனும் காக்கைகளுடனும் சேர்ந்து எருவை தின்பதை வேட்டையாளர் கண்டு கூறியுள்ளனர்.

இக் கழுகு பிணத்தைத் தின்பதற்காக நரிகளுடன் சண்டையிடுவதுண்டு. எருவை தன் பிள்ளைக்கு ஊட்டும் போது வழுக்கி விழுந்த ஊன் தடியை முது நரி உணவாகக் கொள்ளும் என்று அகநானூறு கூறியுள்ளது.

"கணநரி யினனொடு குழீஇ நிணனருந்து
நெய்த்தோ ராடிய மல்லன் மொசிவிர
லத்த வெருவைச் சேவல் சேர்ந்த
வரைசேர் யாத்த வெண்டிரள் வினைவிறல்"
—அகம். 375

"கணநரி திரிதரு மாங்க ணிணனருந்து
செஞ்செவி யெருவை குழீஇ
அஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே."
—புறம். 373

"வம்பலர் தொலைந்த அருஞ்சுரக் கவலை
.....................................
அழல்போல் செவிய சேவல் ஆட்டி
கிழவொடு கதிக்கும் நிணம்புரி முதுநரி
பச்சூன் கொள்ளை மாந்திவெய்து உற்று
தேர்திகழ் வறும்புலந் துழைஇ நீர்நயந்து
பதுக்கை நீழல் ஒதுக்கிடம் பெறாஅ
அஞ்சுவரு கவலை வருதலின் வருந்திய" —நற்றிணை. 352

கணநரியொடு நிணத்தை (கொழுப்பை) அருந்தும் செஞ்செவி யெருவை குழுமி யிருந்ததாகப் புறநானூறும் அகநானூறும் கூறியுள்ளன. நெருப்புப் போன்ற செவியை யுடைய எருவைச் சேவலை ஆட்டிய நிணத்தை விரும்பும் முதுநரியை நற்றிணை கூறியுள்ளது. கணநரி எருவையுடன் பிணத்தைத் தின்பதையும் எருவையை விரட்டுவதையும் வேட்டையாளர் கூறியுள்ளனர். (Vultures will feed in company of Hyaenas, dogs and Jackals. The Jackal will contest with the vulture for carrion or rotting corpses - Augustus Somerville - passing of the Forest Gods) இன்றைய வேட்டையாளர் கூறும் செய்தியைக்கூடச் சங்கப் புலவர்கள் கண்டு கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். 'எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்' என்று புறநானூறு (224) கூறியுள்ளது. இதற்குப் பழைய உரை பருந்து வழங்குவதாகச் செய்யப்பட்ட யூபத்தூண் என்று கூறுகின்றது. இதற்கு அடிக்குறிப்பாகப் பருந்து வடிவம் செய்தற்குக் கருடசயனம்

என்று பெயர் என்று கூறப்பட்டுள்ளது. இதை வைத்துக் கொண்டு சிலர் பருந்துருவில் செய்யப்பட்ட யாகத்தூண் என்று விளக்கங் கூறினர்கள். வேள்விச்சாலையில் பலி யிட்ட விலங்கின் இறைச்சியை நுகரும் எருவை என்பதே பொருத்தமாகும். இங்குக் கூறப்பட்ட எருவை பருந்து அன்று, பிணந்தின்னிக் கழுகு என்பதை உரை யெழுதின வர்கள் உணரவில்லை.

எருவையின் அலகைச் 'செவ்வாய்' என்றழைத் துள்ளனர். குருதி படிந்த வாயையும், குருதி ஆடிய நாற்றமடிக்கும் இநுஞ்சிறகையும் கூறியுள்ளனர். இதன் அலகின் நுனி கூர்மையாயிருத்தலைக் கூர்நுதிச் செவ் வாய் என்று சொல்லப்பட்டுள்ளது. வானத்தில் பறக்கும் போது ஊனைக் கீழே கண்டால் உடனே இறங்கும் என்பதை வேட்டையாளர் கூறியுள்ளனர்.

> ''களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
> விசும்பா டெருவை பசுந்தடி தடுப்பப்''

போர்க் களத்தில் கிடந்த புதிய ஊன்தடி விசும்பில் பறந்து கொண்டிருந்த எருவையைத் தடுத்ததாகப் புற நானூறு கூறுவதைக் கவனிக்கலாம். கடு முடையைக் காட்டில் பார்க்கும் எருவை என்று ஐங்குறுநூறு கூறு கின்றது. எருவையைத் தற்காலத்தில் தமிழில் 'பிணந் தின்னிக் கழுகு' என்றழைக்கின்றனர். இதை மலைப் போரவை என்றும் சில விடங்களில் அழைப்பர். மலைப் பேர் எருவை என்பதே மலைப் போரவை என்று மாறியிருக் கலாம். தெலுங்கு மொழியில் 'நல்ல போரவா' என் றழைக்கின்றனர். போர்க் களத்தில் காணப்படும் எருவை என்று குறிப்பிடுவதற்குப் போர் எருவை என் றழைத்தனர் என்றும் அதுவே போரவை என்று தமிழிலும் தெலுங்கிலும் மாறி வழங்கிற்று என்றும் கொள்ளலாம். மலையிலிருந்து எருவை வருவதாகக் கருதினர். ஆனல், இந்தக் கழுகு பெரும்பாலும் இலையுதிர் காடுகளிலும், அரைப்பாலையான குறுங்காடுகளிலும் காணப்

படும். எருவை என்ற பெயரும் இதன் சிவப்பு நிறத்தால் வந்தது என்பதில் ஐயமில்லை. எருமணம் என்ற சொல் குறுந்தொகையில் சிவந்த கழுநீர்ப் பூவைக் குறிப்பிடுகின்றது. எரு என்ற சொல் தெலுங்கிலும் சிவந்த நிறத்தைக் குறிக்கும் சிவப்பு நிறமான கழுகையும் ஒரு வகை நாணலையும் எருவை என்ற சொல் சங்க நூல்களில் குறிப்பிடுகின்றது. எருவை என்ற பெயரே சிவந்த நிறமுடைய பறவைஎன்பதையே குறிப்பிடுகின்றது. எருவையை ஆங்கிலத்தில் ('Black or King vulture') என்று அழைப்பர். பறவை நூலார் (Targos Calvus) என்றழைப்பர்.



பாறு

சிவந்த பிணந்தின்னிக் கழுகைப் போலத் தமிழ் நாட்டில் வேறு சில பிணந்தின்னிக் கழுகுகளும் உண்டு. அவற்றில் கழுத்திலே மயிரற்ற, காரீய நிறமான கழுத்தையுடைய கழுகு முக்கியமானது. இதன் தலையும் கழுத்தும் உரித்துவிட்டது போன்று வெறும் தோலோடு தோற்றமளிக்கும். எருவைக்கு இறகின்றிச் சிவந்து காணப்படுமிடத்தில் இந்தக் கழுகிற்கு மயிரற்றுக் கருமை நிறமாக உள்ளது. இந்தக் கழுகையும் சங்கப் புலவர்கள் அறிந்திருந்தனரென்று தெரிகின்றது. இந்தக் கழுகைப் பாறு என்று சங்கப் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

"ஊறுபடு கவலைய ஆறுபல நீந்திப்
படுமுடை நசைஇய பறைநெடுங் கழுத்திற்
பாறுகிளை சேக்குஞ் சேட்சிமைக்
கோடுயர் பிறங்கல் மலையிறந் தோரே" —அகம்-247

"பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின்
வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு
பிணந்தின் குறுநரி நிணந்திகழ் பல்ல
பேஎய் மகளிர் பிணந்தழூஉப் பற்றி" —புறம்-359

"நச்சுவர ரிரப்ப லோம்புமதி யச்சுவரப்
பாறிறை கொண்ட பயந்தலை மாறுதகக்
கள்ளி போகிய களரி மருங்கின்" —புறம் - 360

"கொன்றுற்றுத் துறந்த யாக்களின் அடுபிணன்
இடுமுடை மருங்கில் தொடுமிடம் பெருஅது
புனிற்றுவிரை கதித்த பொறிய முதுபாறு
இறகுபுடைத் திற்ற பறைப்புள் தாவி
செங்கணைச் செறித்த வன்கண் ஆடவர்'
—நற்றிணை - 329

"பாகும் பறையும் பருந்தின் பந்தரும்"
—மணிமேகலை, 4 : 41

"பாறொடு நாய்க ளிசிப்பப் பறிப்பறிப் பற்றிய போழ்தின்"
—குண்டலகேசி-12

"பாற்றின மார்ப்பப் பருந்து வழிப்படர
நாற்றிசையு மோடி நரிகதிப்ப—ஆற்ற"
—புறத்திரட்டு - 1394

"அடுதிறன் முன்பின் ஞற்ற முருக்கிப்
படுதலை பாறண்ண நாறி—வடியிலைவேல்"
—புறத்திரட்டு - 1382

"என்செயப் பாவி காளிங்
கிருப்பதுஅங் கிருப்பமுன்னே
வன்சிறைக் கழுகும் பாறும்
வயிறுகள் பீறிப்போன"
—கலிங்கத்துப்பரணி, 304

''பாற்றின மார்ப்பப் பருந்து வழிப்படர''
—முத்தொள்ளாயிரம். 74

சங்க நூல்களில் கூறிய இரு செய்திகள் இந்தப் பிணந் தின்னிக் கழுகு எது வென்பதை அறிய உதவுகின்றன. இதற்குப் 'பறை நெடுங்கழுத்து' இருப்பதாக அகநானூற் றுப்பாடல் (214) கூறுகின்றது. பறை யென்பதற்குச் சங்க காலத்திலேயே 'நீங்கின' என்ற பொருள் உண்டு. அக நானூற்றிலும் (67) புறநானூற்றிலும் (359) இந்தப் பொருளில் வழங்கியுள்ளது. பறந்தலை என்ற சொல் சுடு காட்டையும் போர்க்களத்தையும் குறிப்பிடுங்கால் இதே அடிப்படைப் பொருளைத் தாங்கியுள்ளது. ஆதலின் 'பறை நெடுங்கழுத்து' என்பதற்கு மயிர் நீங்கின ஒழிந்த நெடிய கழுத்துடைய பாறு என்று பொருள் கொள்ள வேண்டும். இத்தகைய கழுத்தையுடைய கழுகை 'gyps bengalensis' என்று பறவை நூலார் கூறியுள்ளனர். இறகுகள் இல்லாத நீண்ட கழுத்தையுடைய முடையை விரும்பும் கழுகு, எருவையின் வேறான பிணந்தின்னிக் கழுகு, எளிதில் காணக்கூடிய கழுகு தமிழ் நாட்டில் ஒரு வகை உள்ளது. அதை ஆங்கிலத்தில் 'Indian white-backed vulture' என்றழைப்பர். பெங்கால் கழுகு என்றும் அழைப்பர். இந்தக் கழுகையே பாறு என்று சங்க நூல் களிலும் பிற்கால நூல்களிலும் அழைத்தனர். பாறு என்ற சொல் நிகண்டுகளில் உலர்த்தல், வற்றுதல் என்று பொருள்படும். வற்றிய தோலுடைய தலையையும் கழுத் தையும் கொண்டுள்ளதால் பாறு என்று அழைத்தனர் என்று கருதலாம். இதன் கழுத்து மயிர் நீங்கின, பாடம் செய்யாத உலர்ந்த, வற்றிய தோல்போல் இருக்கும்.

இந்தப் பிணந்தின்னிக் கழுகு தமிழ்நாட்டில் எங்கும் ஊர்கள், கிராமங்கள் அருகில் பிணம் வீழ்ந்திருக்கும் இடத்தில் கும்பலாகக் காணப்படும். இந்தக் கழுகு சில குறிப்பிட்ட மரங்களில் பழக்கமாக உட்காரும் என்று பறவை நூலார் கூறுவர். இவ்வாறு தங்கும் மரங்களிலும் இடங்களிலும் இந்தக் கழுகு நெடுங்காலம் எச்சமிட்டு

வந்தால் மரங்கள் மடிந்து போய்விடும். மாந்தோப்பு, தென்னந்தோப்பு. புதுக்காடுகள் ஆகியவற்றில் இந்தக் கழுகுகள் தங்கினால் அவை அழிந்துவிடும். (Favourite roosts and the ground underneath become besmirched and reeking with birds' acrid excreta, presenting a sepulchral white washed appearance which kills off the trees if too long patronised. And in this way vultures sometimes become a serious local nuisance in coconut groves, mango orchards, forest plantations etc.) புறநானூறு 359 பாடல் இதே செய்தியைக் கூறுவதாகத் தெரிகின்றது. "பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின்.......காடு" என்று கூறுவதால் பாறு சேரப் பறைந்த, அதாவது இலைகளை இழந்து வற்றிய மாறுபட்ட காடு எனக் கூறப்பட்டுள்ளதைக் கவனிக்கலாம். ஆதலின் பாறு சேர்ந்தால் பறைந்த நிலையில் காடுகளும் மாறும் என்று சங்கப்புலவர் கூறினது உண்மைச் செய்தியே யாகும். இச் செய்தியிலிருந்தும் பாறு எது என்பதைக் கண்டு கொள்ளலாம். கண்டார்க்கு அச்சம் தரும்படி பாறு இறங்கினதால் கேடு பொருந்தியிருத்தலால் பாழிடமாகி என்று புறநானூறு (360) கூறுகின்றது. பாறு இறை கொண்ட இடம் அதாவது தங்கிய இடம் பறந்தலையாகும் பாழிடமாகும் என்று புறநானூறு குறிப்பிட்டதைக் கவனிக்கவேண்டும்.

பாறு கூட்டமாகவே பிணத்தைத் தின்னுமென்று பறவை நூலார் கூறுவர். வானத்தில், ஒரு பாறு பிணத்தைக் கண்டு கீழே இறங்கினால் ஒன்றின் பின் ஒன்றாக இந்த இனப்பறவைகள் பிணத்தைச் சுற்றிச் சேர்ந்துவிடும். 'பாறுகிளை சேக்கும்' என்று அகநானூறு இதைக் குறிப்பிட்டுள்ளது. கொல்லப்பட்ட முடைநாற்றம் அடிக்கும் மனிதனின் பிணத்தின் பக்கத்தில் தோண்டுவதற்கு இடம் இல்லாது முதிய பாறு ஒன்று இருந்ததாக நற்றிணை கூறியுள்ளது. பாறுகள் பிணத்தைத் தின்னும் போது கடைசியில் மிஞ்சுவது வெறும் எலும்புக்கூடு

மட்டுந்தான். பாறுகள் குறுநரியொடு பிணத்தைப் பற்றி யிழுப்பதைப் புறநானூறு (359) கூறியுள்ளது. முட்டை யிட்ட முதிய பாறு புனிற்றுக் காலச்சிறகைக் கழித்த தாகவும் அவ்வாறு சிறகைப் புடைத்து நீக்கிய தூவியை ஆடவர் அம்பில் செறித்ததாகவும் நற்றிணை (329) கூறி யுள்ளது. முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கச் செய்யும் பாறு புனிற்றுகாலச் சிறகைக் கழிக்கின்றதா என்பதைப் பறவை நூலார் ஆராயவேண்டும். பாறுகள் வானத்தில் வெகுநேரம் அழகாக வட்டமிட்டுக்கொண்டே தரையில் இரையைப் பார்க்கும். பருந்துகளுடன் வானில் சுற்று வதைப் 'பந்தர்' என்று மணிமேகலை குறிப்பிட்டுள்ளது.

பாறுகள் பிணத்தை நாய்களுடன் இழுப்பதைக் குண்டலகேசி கூறியுள்ளது. பாற்றினமும் பருந்தும், நரியும், நாயும் பிணத்தைச் சுற்றி இருப்பது புறத்திரட்டில் (1394) கூறப்பட்டுள்ளது. நாய்களும், நரிகளும் பிணத்தை நாடுவதைப் பாறு வானில் பறந்து கொண்டே உற்றுப் பார்த்து இறங்கிப் பிணத்தைப் உண்ணும் போது அளவுக்கு மீறி வயிற்றை நிரப்பிக்கொள்ளும். அதனல் பறக்க முடியாது தரையிலே இரவு நேரத்தில் உட்கார்ந் திருக்குமென்று கூறுவர். கலிங்கத்துப் பரணியில் கழுகும் பாறும் வயிறுகள் பீறிப்போயின என்று கூறியது. அளவுக்கு மீறித் தின்னுவதைக் குறித்து என்று கொள்ள லாம். பாற்றினம் என்று பிற்கால நூல்கள் குறிப்பிடுவது இவை கூட்டமாகக் காணப்பட்டதைக் குறித்தேயாகும். பாறு என்பதற்குப் பொருள் கூறுங்கால் உரையாசிரியர்கள் பருந்து என்றும், கழுகு என்றும் கூறினர். பிணந் தின்னிக் கழுகு என்பதை அறிந்து கூறவில்லை. தேவா ரத்தில் 'பாறேறிய படுவெண்டலை', 'பாறு சேர்தலைக் கையர்' என்று குறிப்பிட்டது பாறு தின்று வெறும் எலும் பாகப் போட்ட மண்டையோட்டைக் குறித்ததாகும்.

சங்க நூல்களில் ஒரே ஒரு பாட்டில் "பொகுவல்" என்றொரு பறவை கூறப்பட்டுள்ளது.

"கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா
வாய்வன் காக்கையும் கூகையுங் கூடிப்"
—புறநானூறு-238.

பிணத்தைப் புதைக்கும் தாழியின் குவிந்த புறத்தில் சிவந்த செவியையுடைய பிணந்தின்னிக் கழுகும் பொகு .



பொகுவல்

வலும் காக்கையும் இருந்ததாகப் புறநானூறு கூறுகிறது. எருவையும், காக்கையும் பிணத்தைத் தின்னும் பறவை

களே. இவையுடன் கூறப்பட்ட 'பொகுவல்' யாதாவ தொரு பிணந்தின்னிக் கழுகாகவே இருக்கும். எருவை, பாறு ஆகியவற்றைத் தவிர்த்துந் தமிழ்நாட்டில் அரிதாக மற்ருெரு பிணந்தின்னிக் கழுகும் காணப்படுகின்றது. இது பாறு போலவே உருவிலும் தோற்றத்திலும் காணப் படும். கழுத்திலும் தலையிலும் மயிர் போன்ற சிறிய தூவிகள் உண்டு. பிணந்தின்னிக் கழுகுகளில் எருவையும் பாறும் கூறப்பட்டிருப்பதால் பொகுவல் என்பது மூன்ருவ தாகக் கூறப்படுகின்ற பிணந்தின்னிக் கழுகான 'Indian longbilled vulture' ஆகலாம். பொகுவல் என்பது ஒரு வகைப் பிணந்தின்னிக் கழுகு என்பதில் ஐயமில்லை. பொகு என்ற சொல்லின் அடிப்படையாக இப்பெயர் தோன்றி யிருக்கலாம். பொகு என்ற சொல் கன்னடம் முதலிய திராவிட மொழிகளில் உள்ளே செலுத்துவது, புகுவது என்ற பொருள் தருகின்றது. தமிழில் இது 'புகு' என்ற சொல்லாகப் பயில்கின்றது. பொக்கம் என்ற சொல்லும் தமிழில் உள்ளது. தமிழ் நாட்டில் இவை மூன்றினும் வேருன பிணந்தின்னிக் கழுகும் உள்ளது. இதை மஞ்சள் திருடி என்று தற்காலத்தில் அழைப்பர். இதன் அலகு மஞ்சளாய் இருக்கும். குளிக்கும்போது மஞ்சளைத் திருடி மூக்கில் பூசிக் கொண்டதாகக் கற்பனை செய்து பெயர் இட்டனர்.

மஞ்சள் களவாணி என்றும் இதை அழைப்பதுண்டு. பொகுவல் என்பது இதுவுமாகலாம், ஆனல், மஞ்சள் திருடி பிணத்தை மட்டுமின்றி, கழிவுப் பொருள்களையும் மனிதரின் மலத்தையும், தவளை முதலிய சிறிய உயிர் களையும் தின்னும் வழக்கமுடையது. மலையாளத்தில் இதைத் 'தோட்டிக்கழுகன்' என்று அழைப்பர். தெலுங்கில் 'தெள்ள போரவா' (வெள்ளைப்போரவை) என்று வழங் குவர். இந்தக் கழுகுதான் திருக்கழுக்குன்றத்தில் நடுப் பகலில் வருகின்றதாகும். எகிப்தியர்களும் இந்தக் கழுகைத் தெய்வமாகக் கருதிப் போற்றி வந்தனர். ஆகவே சங்க நூல்களில் மூன்று வகைப் பிணந்தின்னிக்

கழுகுகள் கூறப்பட்டனவாகக் கருதலாம். எருவையும் பாறும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. பொகுவல் என்பதும் ஒரு வகைப் பிணந்தின்னிக் கழுகாகும்.

தமிழ்நாட்டில் உள்ள நான்கு வகைப் பிணந்தின்னிக் கழுகுகளில் மூன்று வகைகளைக் கூறினது சங்கப் புலவர்களின் அறிவுத்திறமையைக் காட்டுகின்றது. பாறு என்ற பிணந்தின்னிக் கழுகை ஆங்கிலத்தில் (The white - Backed vulture) என்றும் பறவை நூலில் (gyps bengalensis) என்றும் அழைப்பர். இதை மலையாளத்தில் கழுகன் என்றழைப்பர். எருகாலி (Yerukali) என்ற திராவிட மொழியில் 'வாலோர்யா' (Walhorya) என்றழைக்கின்றனர். வெள்ளை எருவை என்பது மாறி இப்படி வழங்கிற்று என்பது ஆராயத்தக்கது. பொகுவல் என்பது (The longbilled vulture) ஆகலாம் அல்லது (The Indian Scavengen vulture) ஆகவுமிருக்கலாம்.

---

## ௧௭. புலம்பெயர் புள்

## (MIGRATORY BIRDS)

தமிழ் நாட்டிற்கும் இந்தியாவிற்கும் வெளி நாட்டிலிருந்து சில பறவைகள் வருகின்றன. வெளி நாட்டிலிருந்து வரும் பறவைகள் குளிர் காலத்தில் நம் நாட்டிற்கு வருகின்றன. வெயிற்காலத்தில் திரும்பிச் சென்று விடுகின்றன. நீர்ப் பறவைகளில் சில விருந்தினராக வருவதாகச் சங்க நூல்கள் கூறியுள்ளன. அவற்றை 'வம்பப்புள்' என்றும் அழைத்துள்ளனர்.

> "கருங்கோட்டுப் புன்னைக் குடக்குவாங்கு பெருஞ்சினை
> விருந்தின் வெண்குருகு ஆர்ப்பின் ஆஅய்
> வண்மகிழ் நாளவைப் பரிசில் பெற்ற
> பண்ணமை நெடுந்தேர்ப் பாணியின் ஒலிக்கும்"
>
> —நற்றிணை. 167

> "குன்றத் தன்ன குவவுமண லடைகரை
> நின்ற புன்னை நிலந்தோய் படுசினை
> வம்ப நாரை சேக்கும்
> தண்கடற் சேர்ப்பனீ யுண்டவென் னலனே"
>
> —குறுந்தொகை. 236

> "பரியுடை நற்றேர்ப் பெரியன் விரியிணர்ப்
> புன்னையங் கானற் புறந்தை முன்றுறை
> வம்ப நாரை யினனொலித் தன்ன
> அம்பல் வாய்த்த தெய்ய தண்புலர்" —அகம். 100

விருந்தின் வெண்குருகு மேற்குப் பக்கம் வாங்கிய புன்னையின் பெருங்கொம்பில் ஓசை செய்துகொண்டிருந்தாக நற்றிணை கூறியுள்ளது. வம்பநாரை கடற்கரைப் புன்னையில் சேர்ந்திருந்ததாகக் குறுந்தொகை கூறியுள்ளது. பொறையாற்றில் கடற்கரை முற்றத்திலிருந்து

புன்னைக் கானலில் வம்பநாரை இனமாக இருந்து ஒலித்த தாக அகநானூறு கூறியுள்ளது. விருந்து என்ற சொல் புதுமை என்ற பொருளைக் குறிக்கும். வம்பு என்ற சொல் நிலையின்மையைக் குறிக்கும் என்று தொல்காப்பியம் கூறுகின்றது. புதியதாக வந்த பறவை உள் நாட்டி லிருந்தும் வரலாம். வெளி நாட்டிலிருந்தும் வரலாம். வந்த பறவை நிலையின்றிச் சென்றால் அது வம்பப் பறவை யாகும். காட்டு வாத்து போன்ற கிளுவை, சிறவி ஆகிய பறவைகள் பல்லாயிரக்கணக்கான மைல்கள் பறந்து வருகின்றன. இந்தியாவிலேயே தமிழ் நாட்டுக்கு வரும் சில வகை வாத்து போன்ற பறவைகள் இமயமலைக்கு வெயில் காலத்தில் போகின்றன.

வாத்து போன்ற இப் பறவைகளை அன்னம் என்று சங்க நூல்கள் அழைப்பதை ஏற்கனவே விளக்கியுள்ளேன். நற்றிணை 356-ஆம் பாட்டில் 'நிலந்தாழ் மருங்கில் தெண் கடல் மேய்ந்த செங்கால் அன்னம் பொன்படு நெடுங் கோட்டு இமயத்து' உச்சிக்குப் போனதாகக் கூறியிருப் பதைக் காணலாம். இங்குத் தெண்கடல் என்பது 'தென் கடல்' என்றிருக்க வேண்டும். புறநானூறு 67ஆம் பாடலில் அன்னச் சேவல் குமரிப் பெருந்துறையில் ஆடி வடமலைப் பெயர்குவதாகக் கூறப்பட்டதைக் காணலாம். ஒரு வகைக் காட்டு வாத்து (Wild Duck) இமயமலைக்கு வெயில் காலத்தில் செல்வதைப் பறவை நூலார் கண்டுள்ளனர். இந்தியாவிலே இவ்வளவு தொலைவு செல்லும் காட்டு வாத்தைப்போல சைபீரியா, ஐரோப்பா முதலிய நாடுகளுக்குச் செல்லும் காட்டு வாத்துகளும் பிற பறவைகளும் உண்டு. கிளுவை, சிறவி ஆகியவை சைபீரியா முதலிய நாடுகளுக்கு வெயில் காலத்தில் செல்லுகின்றன. கடற்காக்கையும் வெளி நாடு செல்லும் பறவையேயாகும். இத்தகைய பறவைகள் வெளிநாடு செல்வதைச் சங்க காலத்திலேயே தெரிந்திருந்தனர் என்று கருதலாம். இவற்றைப் புலம்பெயர்புள் என்று சங்க காலத்தில் அழைத்தனர்.

"அழாஅம் உறைதலும் உரியம் பராரை
அலங்கல் அஞ்சினைக் குடம்பை புல்லெனப்
புலம்பெயர் மருங்கில் புள்ளெழுந் தாங்கு
மெய்யிவ ணொழியப் போகி அவர்
செய்வினை மருங்கில் செலீஇயரென் உயிரே"

—அகம். 113

புலம் பெயர் மருங்கில் புள்ளெழுந்தாங்கு என்று அகநானூறு கூறுவதைக் கவனிக்க வேண்டும். சிலப்பதிகாரத்தில் 'கலந்தரு திருவில் புலம்பெயர் மாக்கள்' என்று வரும் வரியில் புலம் பெயர் மாக்கள் என்ற சொற்குக் கடலோடிகள் என்றும் பல்வேறு நாட்டினர் என்றும் பொருள் கூறியிருப்பதைக் காணலாம். புலம் பெயர் புதுவன் என்பதற்கு பரதேசி, வேறொரு தேசத்தினின்றும் வந்தவன் என்று அரும்பத வுரையாசிரியர் பொருள் கூறியுள்ளார்.

ஆதலின் புலம் பெயர்தல் என்பது பல்வேறு நாட்டுக்குச் செல்லுதல் என்று பொருள்படும். பெரிய கிளையில் கட்டியிருந்த கூடுகள் புல்லெனப் போகும்படி வெளிநாடுகள் சென்ற பறவைகள் என்று அகநானூறு கூறுவது அரிய செய்தியாகும். அவ்வாறு கூட்டைத் தனியே விட்டு வெளிநாடு செல்வதை உடலை இங்கே விட்டு உயிர்போவதற்கு அகநானூறு ஒப்பிட்டுள்ளது. தலைவியை உடலாகவும், தலைவனை உயிராகவும் உருவகித்துள்ளதைக் காணலாம். வெளிநாடு செல்லும் பறவைகளைச் (Migratory Birds) சங்க காலத்திலேயே தெரிந்திருந்தனர் என்பதில் ஐயமில்லை. நாலடியாரும் வெளிநாடு செல்லும் புட்களைக் கூறியுள்ளது;

"சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து"

—நாலடியார் : 30

கூடுமரத்தில் ஒழிந்து கிடக்க நெடுந்தொலைவு செல்லும் புள் போல யாக்கையை நீத்து உயிர் சென்றதாக நாலடி

யார் கூறியதைக் காண்க. அகநானூற்றுப் பாடலில் வரும் கூடும் புள்ளும்பற்றிய உவமையைப் படித்தோர்,

> "குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
> யுடம்போ டுயிரிடை நட்பு"

என்று வரும் குறளில் குடம்பை என்ற சொல் முட்டையைக் குறிக்குமென்று பரிமேலழகர் கூறுவதை உடன்படார். குடம்பை என்பதற்கு முட்டை என்று பொருள் கொண்டு தனியாக முட்டை கிடப்ப அதனுள்ளிலிருந்த புள்ளுப் பருவம் வந்துழிப் பறந்துபோன தன்மைத்து உடம்பிற்கும் உயிர்க்குமுளதாய நட்பு என்று பரிமேலழகர் கூறினர். வள்ளுவர் கூறும்புள் 'புலம்பெயர் புள்' என்பதைக் கவனிக் காது பரிமேலழகர் பொருள் கூறினர் என்று கருதலாம். அகநானூறும் நாலடியாரும் புலம்பெயர் புள்ளேயே உயிர்க்கு உவமித்திருப்பதாலும், கூட்டை உடலுக்கு உவமித்திருத்தலாலும், இக் கருத்து ஒரு தொன்றுபட்ட மரபில் வந்தது எனக் கொள்ள வேண்டும். ஆதலின் வள்ளுவர் கூறிய குடம்பை முட்டையன்று, கூடேயாகும் என்று கொள்ள வேண்டும். பிறப்பிற்குப் பிறப்பு கூடு மாறும் உயிரை ஒவ்வொரு தடவையும் வலசை சென்று கூடுகட்டிக் குஞ்சுபொரிக்கும் புலம்பெயர் புள்ளோடு வள்ளுவர் ஒப்பிட்டது நுண்ணிய உவமையாகும். வம்பு நிலையின்மை என்று பொருள் தருதலால் நிலையில்லாது சென்று கொண்டிருக்கும் உயிர்க்குப் புலம்பெயரும் வம்பப் புள்ளை வள்ளுவர் ஒப்பிட்டது மிகமிகப் பொருத்தமே. வம்பு என்ற சொல் தற்காலத்தில் தொல்காப்பியர் கூறிய பொருளைத் தராவிடினும் புதுவைப் பகுதியில் நிலையின்மை என்ற பொருளில் வழங்குவது வியப்பைத் தருகின்றது. கடற்கரையில் புதியதாகக் காற்றால் மாறிமாறி உண்டாகும் மணல் திட்டுகளை 'வம்பா' என்று அழைக்கின்றனர். 'வம்பாக்கீரைப்பாளையம்' என்ற ஊர் இத்தகைய மணல் திட்டில் கட்டப்பட்ட ஊராகும். நிலையின்மை உடைய கடற்கரை மணல்திட்டை 'வம்பா' என்று பேச்சு வழக்கில் அழைப்பது தொல்காப்பியப் பொருளைத் தருவதைக் காண

லாம். சங்க காலத்தில் புதுப்புள் வருவதனையும் பழம்புள் போவதனையும் கவனித்து வந்தனர்.

> "புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
> விதுப்புற வறியா வேமக் காப்பினை" —புறம்: 20

வெளிநாடுகளிலிருந்து புதுப்புள் வந்தாலும் உள்நாட்டிலிருந்து பழைய புள் வெளிநாடுபோயினும் அரசருக்குக் கேடுவருமென்று நினைத்தனர். நாட்டில் தங்கியிருக்கும் பறவையை 'வதிகுருகு' என்று குறுந்தொகை (5) கூறுகின்றது. வதியும் பறவை (Resident Birds) புலம் பெயர் பறவை (Migratory Birds) என்ற கலைச் சொற்களைச் சங்க நூல் மரபுப்படி, படைத்துக்கொள்ளலாம். தமிழ்நாட்டிற்கு வெளிநாட்டிலிருந்து வரும் வலசைப் பறவைகள் ஆகஃச்டு, செப்டம்பர் திங்களில் வரத் தொடங்குகின்றன. குளிர் காலத்திலும் மழைக் காலத்திலும் இங்கு வருகின்றன. வெயில் காலம் துவங்கியதும் வெளிநாடு சென்று விடுகின்றன. வெளிநாட்டிலிருந்து வலசை வருகின்ற பறவைகள் வரும் நாளைக்கூடத் திட்டமாகச் சொல்லலாம் என்று பறவை நூலார் கூறுவர்.

சிலப்பதிகாரத்திலும் சீவக சிந்தாமணியிலும் 'ஓசனித்தல்' என்றொரு சொல் பயில்கின்றது. இந்தச் சொல் வேறு எந்தத் தமிழ் நூல்களிலோ, பிற எந்தத் திராவிட மொழிகளிலோ வழங்கியதாகத் தெரியவில்லை. இந்தச் சொல்லை ஆழமாக ஆராய்ந்து பார்த்தால் இச் சொல் அரியதோர் அறிவியல் கலைச்சொல்லாகவே (Scientific terminology) காணப்படுகிறது.

> "என்றாழ் நின்ற குன்றுகெழு நன்னாட்டுக்
> காடுதீப் பிறப்பக் கனையெரி பொத்திக்
> கோடையொடு புகுந்து கூட லூண்ட
> வேனில் வேந்தன் வேற்றுப் புலம் படர
> ஓசனிக் கின்ற வுறுவெயிற் கடைநாள்"
> —சிலப்பதிகாரம்-ஊர்காண் காதை. 121-125

"ஓசனித்தல் - வெக்கையாற் றலையெடுத்தல்; கடைநாள் - வேனிற் பின்னுல் கழிகிற நாளிலே; சிந்தாமணியிலும் 'ஓசனிக்கின்ற அன்னம்' என்றூர்" என்று சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர் விளக்கம் கூறியுள்ளார். அடியார்க்கு நல்லார், "கடைநாள் - பருவத்தின் கடைநாள், ஓசனித்தல் போதற்கு ஒருப்பட்டு முயறல்; ஓரோர் தேயத்திற்கு ஓரொரு காலம் மாறி நிகழ்தலின் வேற்றுப் புலம் படரவென்றூர்" என்று விளக்கம் கூறியுள்ளார். ஒவ்வொரு தேசத்திற்கு ஒவ்வொரு காலம் மாறி நிகழும் என்று கூறியதால் இங்குக் கோடையாயிருக்கும்போது வெளி நாட்டில் குளிர்காலமாயிருக்குமென்பதை அக் காலத்திலே தெரிந்திருந்தனர். அரும்பத உரையாசிரியர் குறிப்பிட்ட சிந்தாமணிப் பாட்டில் அன்னம் ஓசனிக்கின்றதாகக் கூறப்பட்டுள்ளது.

> "உடைதிரை முத்தஞ் சிந்த வோசனிக் கின்ற வன்னம்
> படர்கதிர்த் திங்க ளாகப் பரந்துவான் பூத்த தென்னு
> அடர்பிணி யவிழு மாம்ப லல்லகடற் கானற் சேர்ப்பன்
> குடைகெழு வேந்தற் கிப்பா லுற்றது கூற லுற்றேன்"
>
> —சிந்தாமணி-முத்தியிலம்பகம். 54

"முரிகின்ற திரை முத்தைச் சிந்துகையாலே அதற்கு வெருவிச் சிறையடித்துக் கொள்கின்ற அன்னம்" என்று நச்சினர்க்கினியர் இப் பாட்டின் முதல் வரிக்குப் பொருள் கூறியுள்ளார். அரும்பத உரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் சிலப்பதிகாரத்தில் கூறிய அரிய சிறந்த உரையை மறந்து 'ஓசனிக்கின்ற அன்னம்' என்ற தொடர்க்கு நச்சினர்க்கினியர் பொதுவாகப் பொருள் கூறியுள்ளார். ஆனுல், ஓசனிக்கின்ற அன்னம் என்பதற்கு வெக்கையால் தலையெடுக்கின்ற அன்னம், பருவத்தின் கடைநாள் போதற்கு ஒருப்பட்டு முயலும் அன்னம் என்று பொருள் கூறவேண்டும். வெக்கையென்பது கடும் வெயிலைக் குறிக்கும், கடுமையான வெயிலால் வரும் வேனல் கட்டியை வெக்கை என்று கூறுவது இன்றும் கொங்கு நாட்டு வழக்கமாகும்.

இவ்வாறு வெக்கையால் தலையெடுக்கின்ற அன்னம் வேற்றுப்புலம் படர்தற்காக அவ்வாறு செய்கின்றது என் பதும் அரும்பத உரையாசிரியர் கூறிய விளக்கத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம். இந்த விளக்கம் சிந்தாமணியில் வரும் ஓசனிக்கின்ற அன்னத்திற்கும் பொருந்துமாதலால் அரும்பத உரையாசிரியரே சிந்தாமணிப் பாட்டு வரியை மேற்கோள் காட்டியுள்ளார். அரும்பத உரையாசிரியர் சிந்தாமணிப் பாட்டு வரிகளையும் விளக்கத்தையும் தமது உரையில் பயன் படுத்தியிருப்பதை உரையில் காண்கிறோம். சிந்தாமணிப் பாட்டுகளை நன்கு படித்தறிந்தே சிலப்பதி காரத்தின் உரையிலும் ஓசனித்தல் என்ற சொற்கு அரும்பத உரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் உரை யெழுதியுள்ளனர். அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்தில் கூறிய உரையைச் சிந்தாமணியில் வரும் ஓசனிக்கின்ற அன்னம் என்ற தொடர்க்குப் பொருத்தினால் விளக்கம் இன்னும் சிறப்பாகத் தெளிவாகின்றது. அன்னம் பருவத்தின் கடைநாள் தனக்குப் புகலிடமாக வேற்றுப் புலம் படரப்போதற்கு ஒருப்பட்டு முயறலையே 'ஓசனிக் கின்ற அன்னம்' என்ற வரி குறிப்பிடுகின்றதை அடி யார்க்கு நல்லார் உரை விளக்கத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம். அடியார்க்கு நல்லார் கூறினதுபோல ஓரோர் தேயத்திற்கு, ஒரோரு காலம் மாறி நிகழ்தலின் வேனில் காலத்தில் இங்கிருந்து குளிர்காலமுடைய வேறொரு தேயத்திற்குச் செல்லவே அன்னம் வேற்றுப்புலம் படர்வதாகக் கொண்டால் விளக்கம் தெளிவாகின்றது.

சிலப்பதிகார உரையாசிரியர்கள் கூறிய உரையை ஒட்டிச் சிந்தாமணியில் கூறிய 'ஓசனிக்கின்ற அன்னம்' என்ற தொடர்க்கு விளக்கம் கூறுங்கால் வியப்பிற்குரிய அரியதோர் அறிவியல் விளக்கம் கிடைக்கின்றது. ஓசனித்தல் என்ற சொல் பறவைகள் நிலம் பெயர்ந்து செல் வதையே, வலசை போவதையே (Migration) குறிக்கும் சொல்லாகும் என்பது தெளிவாகின்றது. வெளிநாட்டி லிருந்து தமிழ்நாட்டிற்குக் குளிர்காலத்தில் வரும்

பறவைகள் வெயிற்காலம் தொடங்கியதும் வந்த நாடு களுக்கே திரும்புகின்றன. அடியார்க்கு நல்லார் கூறுவது போன்று தமிழ்நாட்டில் வெயில் காலம் ஆனதும் வேற்றுப் புலமே அப் பறவைகளுக்குப் புகலிடமாகின்றன. திரும்பிப் போகும்போது ஆயிரக்கணக்கான பறவைகள் இனம் இன மாக ஒன்ருகவே கிளம்புகின்றன. அப்படிக் கிளம்பும் போது சிறையடித்துக்கொண்டு ஒன்ருகப் பறக்க முயல் வதையே 'ஓசனித்தல்' என்ற சொல் குறிப்பிடுகின்றது. அரும்பத உரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் பறவைகள் புலம்பெயர்தலையே நினைவில் வைத்துக் கொண்டு 'ஓசனிக்கின்ற வுறுவெயிற் கடைநாள்' என்ற சிலப்பதிகார வரிக்கு உரையெழுதினுர்களென்று கருத வேண்டியுள்ளது.

சிந்தாமணியில் ஓசனிக்கின்ற அன்னம் என்று கூறப் பட்டிருப்பதிலிருந்து அன்னப் பறவை வெளிநாட்டிற்கு வலசைபோகும் என்று கருதினது தெரிகின்றது. அன்னம் என்ற பெயர் ஒருவகை பறக்கும் காட்டு வாத்துகளுக்கு (Wild Ducks) இனப் பெயராகத் தமிழில் வழங்குகின்றது. இந்தக் காட்டுவாத்துஇனத்தில் பல பிரிவுகள் உண்டு. பெரும்பாலான காட்டுவாத்து இனங்கள் வெளிநாட்டி லிருந்து வலசையாகத் தமிழ்நாட்டிற்கு வருகின்றன. போகின்றன. நற்றிணை 356 ஆம் பாடலிலும் புறநானூறு 67 ஆம் பாடலிலும் அன்னங்கள் தென்னுட்டிலிருந்து வட நாட்டில் இமயமலைக்குச் செல்வதாகக் கூறப்பட் டுள்ளதைக் காணலாம். இமயமலையைத் தாண்டிச் சென்று சைபீரியா நாட்டில் தங்கும் அன்னப் பறவைகளும் உள்ளன. சிலவகை அன்னப் பறவைகள் வலசை போவதைச் சங்க காலத்திலேயே தெரிந்திருந்தனர். ஆதலின் சிந்தாமணியில் பொருத்தமாகவே அன்னம் ஓசனித்ததாகக் கூறினர். மற்றும் நம் நாட்டிற்கு வலசை வரும் சில இனப் பறவைகள் வெளிநாட்டிற்கு ஒரு குறிப் பிட்ட நாளில் எழுந்து செல்வதாகவும் பறவை நூலார் ஆராய்ந்து கண்டுள்ளனர். சில இனப் பறவைகள் வலசை

செல்லும் முன்னுல் ஒன்ருகக் கூடிப் பின்னர்ச் சிறகடித்துக் கிளம்புவதாகவும் கண்டுள்ளனர். தகைவிலான் குருவி (தரையில்லாக் குருவி, தலையில்லாக் குருவி) என்ற சிறு பறவை தந்திக் கம்பிகளில் வரிசையாக அமர்ந்து ஒன்ருகச் சேர்ந்து பிற நாடுகளுக்கு வலசை போவதாகக் கண்டறிந் துள்ளனர். ஆதலின் பருவத்தில் கடைநாள் வேற்றுப் புலம் படர்தற்கு எடுத்துப் பார்க்கின்ற, போதற்கு ஒருப் பட்டு முயல்கின்ற - அஃதாவது ஓசனிக்கின்ற அன்னம் என்று கூறியது பறவை நூலார் கண்டறிந்தபடி ஓர் உண்மையான செய்தியேயாகும். ஓசனிக்கின்ற அன்னத் தைப் பார்த்துத் திங்களாகக் கருதி ஆம்பல் பூத்ததாகச் சிந்தாமணியில் கற்பனையாகக் கூறப்பட்டுள்ளது. கடலை ஆகாயமாகவும், அன்னத்தைத் திங்களாகவும், முத்துக் களை உடுக்களாகவும். உவமித்துக் கூறினர் என்று நச்சினுர்க்கினியர் கூறியுள்ளார். ஆனுல் வலசை போகும் அன்னப் பறவைகள் ஆகாயத்தில் உள்ள திங்களின் வெளிச்சத்தையும், உடுக்களின் கதிரொளியையும் பார்த்தே வழி தெரிந்து வெளிநாடுகளுக்கு வலசை போவதாகப் பறவை நூலார் ஆராய்ந்து கூறியுள்ளனர். ஆதலின் சிந்தாமணியில் வரும் ஓசனிக்கின்ற அன்னம் என்பதற்கு வெறும் கற்பனையாகப் பொருள் கூறுவது பொருத்தமன்று என்பது விளங்குகின்றது. இவ்விடத்தில் சிலப்பதி காரத்தில் அரும்பத உரையாசிரியரும், அடியார்க்கு நல் லாரும் கூறிய உரை விளக்கங்களைப் பொருத்தி விளக்கம் காணலே சிறப்பாகும்.

> "அலையல் வாழிவேண்டு அன்னை உயர்சிமைப்
> பொதும்பிற் புன்னைச் சினைசேர்பு இருந்த
> வம்ப நாரை இரிய ஒருநாள்
> பொங்குவரல் ஊதையொடு புணரி அலைப்பவும்"
>
> —அகம். 190

வம்பநாரை ஒருநாளில் புன்னைச் சோலையை விட்டுச் சென் றதாகக் குறிப்பிட்டு அகநானூறு கூறுவதைக் காணலாம். நாரையென்ற பெயர் பொதுப்பெயராக வழங்கும்போது

சிலவகைப் பறவைகளைக் குறிப்பிடும். செங்கால் நாரை யென்பது (White stork) வலசை செல்லும் பறவையாகும். வம்பநாரை இந்தச் செங்கால் நாரையாக இருக்கலாம். இவை ஒரு குறிப்பிட்ட நாளில் புன்னைச் சோலையை விட்டுச் சென்றதாகக் கூறியிருக்கலாம். புலம் பெயர்ந்து வரும் பறவைகளை இன்றும் வேடந்தாங்கலிலும், கோடிக்கரை யிலும் காணலாம். தமிழ்நாட்டுக் கடற்கரைக்கும் கோடிக் கரைக்கும் இருபதுக்கும் மேற்பட்ட வெளிநாட்டுப் பறவை இனங்கள் வருவதாக பம்பாய் இயற்கை வரலாற்றுக்கழக ஆராய்ச்சியாளர் கண்டுபிடித்துள்ளனர்.

கடற்காக்கை இனங்களும், காட்டுவாத்து இனங் களும் உள்ளான் இனங்களும் வெகு தொலைவிலிருந்து வலசையாகத் தமிழ்நாட்டுக்கு வருகின்றன. சைபீரியா விலிருந்து 4800 கிலோமீட்டர் கடந்து இமயமலையையும் தாண்டித் தமிழ் நாட்டிற்குச் சில காட்டு வாத்து இனங்கள் வருவதை ஆராய்ச்சியாளர் கண்டறிந்துள்ளனர். வெளி நாட்டிலிருந்துவரும் பறவைகளை வலையில் பிடித்து காலில் எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட வளையங்களைப் பொருத்தி விட்டு விடுகின்றனர். இந்த வளையங்கள் பின்னர் சைபீரியா முதலிய வெளிநாடுகளில் கிடைக்கப்பெற்று வந்துள்ளன. கோடிக்கரை சங்க காலத்திலிருந்தே உள் நாட்டுப் பறவைகளும், வெளிநாடுகளிலிருந்து வரும் பறவைகளும் தங்கி வாழ்ந்த இடமாயிருந்திருக்கும். கோடிக்கரையில் இன்றும் இராமர்பாதம் என்று ஓர் இடத்தைக் காட்டுவர். அதில் இராமருடைய சுவட்டைக் கல்லில் காட்டுவர்.

"வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவ மிரங்கு முன்றுறை
வெல்போர் இராமன் அருமறைக் கவித்த
பல்வீழ் ஆலம் போல
ஒலியவிந் தன்றிவ் வழுங்கல் ஊரே" —அகம். 70

கோடிக்கரையில் அருமறைக்கு இராமன் பல விழுதுகளையுடைய ஆலமரங்களில் இருந்த பறவைகளை ஒலியவித்தான் என்று அகநானூறு 70ஆம் பாட்டு கூறுவதைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். ஆல மரத்தில் பல பறவைகள் இருந்து மிகுந்த ஓசை செய்த தால் அவற்றை வெல்போர் இராமன் இரைச்சலிடாத படி செய்தான் என்று கூறப்பட்டுள்ளது. இதற்கு ஒரு பொருத்தமான விளக்கம் கூறலாம். ஆலமரத்தில் இருந்த பறவைகள் புலம்பெயர் பறவைகளாக இருந் திருக்கலாம். அவை ஒரு நாள் புலம்பெயர்ந்து சென் றிருக்கலாம். இந்த நிகழ்ச்சியையே இராமன் பறவைகள் ஓசையை அவித்ததாகக் கற்பனை செய்து கூறியிருக்க லாம். இதே போன்றதொரு கற்பனைச் செய்தி ஆய் எயினன் இறந்தபோது நடந்ததாக அகநானூறு 142, 181, 208ஆம் பாடல்கள் கூறியுள்ளன.

> "வண்மை யெயினன் வீழ்ந்தென ஞாயிற்று
> ஒண்கதிர் உருப்பம் புதைய ஓராங்கு
> வம்பப் புள்ளின் கம்பலைப் பெருந்தோடு
> விசும்பிடை தூர ஆடி மொசிந்துடன்." —அகம். 181

ஆய் எயினன் இறந்தபோது அவன் உடல் மேல் ஞாயிற்றின் வெப்பம் படாதபடி 'வம்பப்புள்ளின் கம்பலைப் பெருந்தோடு' வானில் வட்டமிட்டுத் தடுத்ததாகக் கூறி யுள்ளதைக் காணலாம். பறவைகள் ஒருங்குகூடி நிழல் தந்தன என்று வேறொரு அகப்பாடலும் கூறியுள்ளது. வம்பப் புள்ளின் பெருந்தோடு என்று கூறியிருப்பதால் இந்தப் பறவைக் கூட்டம் புலம் பெயர் பறவையாகவும் இருக்கலாம். வேட்டையாடாது பறவைகள் நன்கு பாது காக்கப்படும் நாடுகளில் வலசை செல்லும் பறவைகள் கூட்டமாகப் போகும்போது இருள் கவிந்தாற்போல் ஞாயிற்றொளி மறைபடுவதுண்டு என்று பறவை நூலார் கூறியுள்ளனர். இது மிக அரிதாக நடக்கக் கூடிய நிகழ்ச்சியே. இது போன்றதொரு நிகழ்ச்சியை அடிப் படையாகக் கொண்டு ஆய் எயினனைப் பற்றிய கற்பனைச்

செய்தி தோன்றியிருக்கலாம். இயற்கையில் தோன்றும் அரிய நிகழ்ச்சிகளைப் புரிந்து கொள்ள முடியாது மக்கள் அவற்றைப் புராணச் செய்திகளாகத் தங்கள் கற்பனையை ஏற்றி மாற்றுவது வழக்கமான தாகும்.

இன்று வேடந்தாங்கலில் உள்ள ஏரியில் பல பறவைகள் வந்து தங்குகின்றன. உயர்ந்த கரைகளை உடைய இந்த ஏரியில் நீர் ஆண்டு முழுவதும் இருப்பதாலும், வேட்டையாடாவண்ணம் பாதுகாக்கப்படுவதாலும் பறவைகளுக்கு வேடந்தாங்கல் புகலிடம் ஆக உள்ளது. இத்தகையதொரு பறவைகள் புகலிடத்தைப் பற்றி அகநானூறு 42ஆம் பாடல் கூறுவதைக் கவனிக்க வேண்டும்.

> "நாடுவறம் கூர நாஞ்சில் துஞ்சக்
> கோடை நீடிய பைதறு காலைக்
> குன்றுகண் டன்ன கோட்ட யாவையும்
> சென்றுசேக் கல்லாப் புள்ள உள்ளில்
> என்றூழ் வியன்குளம் நிறைய வீசிப்
> பெரும்பெயல் பொழிந்த ஏம வைகறைப்
> பல்லோர் உவந்த உவகை எல்லாம்
> என்னுட் பெய்தந் தற்றே சேணிடை."          —அகம். 42

நாடு வறட்சியுற்றதால் உழவு மறந்து, கோடை நீடித்த போது குன்றுபோல இருந்த கரையுடன் கூடிய அகன்ற குளத்தில் 'சென்று சேக்கல்லாப் புள்ள உள்ளில்' நிறைய மழை பொழிந்து பல்லோரும் உவந்தனர் என்று கபிலர் கூறியுள்ளார். குன்றுபோல உயர்ந்த கரையுடன் கூடிய குளத்தின் உள்ளில் புட்கள் சென்று சேருவது வழக்கமாயிருந்தது. மழை பெய்யாது வறட்சியுள்ளதால் குளத்தில் சென்று சேர்ந்து தங்கும் புட்கள் இல்லை. கபிலர் கூறிய இந்தக் குளம் வேடந்தாங்கல் போன்ற பறவைகள் புகலிடம் என்று கருதவேண்டும். 'சென்று சேக்கல்லாப் புள்ளையுடைய உள்ளில்' என்று சொல்லப்பட்டதைக் கவனிக்கவேண்டும். சேக்கை என்றசொல் சங்கநூல்களில்

பறவைகள் விலங்குகள் வழக்கமாகத் தங்கும் இடத்தைக் குறித்து வழங்கியுள்ளதைக் காணலாம். 'இரலை சேக்கும் பரலுயர் பதுக்கை' என்று அகநானூறு (91) கூறுவதைக் காண்க. 'சேக்கை' என்ற சொல் விலங்குகள், பறவைகள், சென்று தங்குமிடத்தைக் குறித்து, சங்க நூல்களில் வழங்கி யுள்ளது. மலையாள மொழியில் இன்றும் பேச்சு வழக்கில் இச்சொல் இதே பொருளில் வருகின்றது. பறவைகள் சேக்கிருக்குன்னு, செக்கேருவான் இடம் முதலிய பேச்சு வழக்குகளை மலையாளத்தில் கேட்கலாம். பறவைகள் பழக்கமாக ஓர் இடத்தில் சென்று தங்குவதையே 'சேக்கும்' என்ற சொல் சங்ககாலத்தில் உணர்த்திற்று. சேக்கை என்பது படுக்கை, அணை என்ற பொருளிலும் வந்துள்ளது. வேடந்தாங்கல் ஏரியில் பறவைகள் 'சேக்கும் உள்ளில்' மரங்கள் நிறைந்து உள்ளன. அதனாலே அப்பகுதி பறவைகள் புகலிடமாக உள்ளது.



## ௩௮. வீட்டுப் பறவைகள்

சங்க இலக்கியத்தில் வீட்டுப் பறவைகள், வளர்க்கப் பட்ட பறவைகள் ஆகியவை பற்றிப் பல செய்திகள் இல்லை. சங்க காலத்தில் யாவருக்கும் அவை தெரிந்தவையா யிருந்ததனுல் பல செய்திகள் கூறப்படவில்லையென்று கருதலாம். சங்க காலத்தில் வீட்டில் வளர்க்கப்பட்ட பறவைகள் கோழி, கிளி, மயில் ஆகியவையாம். குறும் பூழும், பூழும் (காடையும், கவுதாரியும்) போர் விளையாட் டிற்காக வளர்க்கப்பட்டிருக்கலாம். சங்க நூல்களில் வீடு களில் மைனவை வளர்த்ததாக யாதொரு செய்தியும் காணேம். மைனவைப்பற்றி, சங்க நூல்களில் ஒரு சிறு குறிப்பும் காணேம். இது வியப்புக்குரியதாகும். சங்க காலத்தில் மைன என்ற பறவை தமிழ் நாட்டில் இல்லையா என்ற ஐயம் எழும்புகின்றது. பிற்காலத்தில் மைனவைப் 'பூவை' என்றழைத்துள்ளனர். பரிபாடல் 'பறவாப் பூவைப் பூவினேயே' (3 : 73) என்று திருமாலை அழைக் கின்றது. இதிலிருந்து பறக்கும் பூவை மைன என்று தெரிகின்றது. காயா மரத்திற்கும் பூவையென்ற பெயர் இருந்ததால் அதைப் 'பறவாப் பூவை' என்றனர். ஐங்குறு நூற்றுப் பாடலுக்குப் (375) பாடமாற்றமாக வேறு ஒரு பாடல் அடிக்குறிப்பில் தரப்பட்டுள்ளது. இந்தப் பாடலில் 'இதுவென் பூவைக் கினிய சொற்பூவை' என்றவொரு புதிய வரியே காட்டப்பட்டுள்ளது. இந்தப் பாட மாற்றம் உண்மையாயிருந்தால் பூவை என்கிற மைன சங்க காலத் தில் வளர்க்கப்பட்டது என்று கருதலாம். ஆனல் வேறு எந்தச் சங்க நூலிலும் பூவை என்ற பறவை குறிப்பிடப் படாதிருப்பதால் ஐங்குறுநூற்றுப் பாடமாற்றம் உண்மை என்று கருதலாம். பிற்காலத்து நூலான புறப்பொருள் வெண்பா மாலையில் கிளியையும் பூவையையும் பேச்சு

வென்றியில் பொருத்துவது கூறப்பட்டுள்ளது. பூவைக்குப் பேசக் கற்றுத் தந்தனரென்று தெரிகின்றது. சங்க காலத்தில் கிளிக்குப் பேசக் கற்றுத்தந்த செய்தி சங்க நூல்களில் வருகின்றது. பூவையைப் பிற்காலத்தில் நாகணவாய்ப்புள் என்றழைத்தனர். நங்கணம் என்று பேச்சு வழக்கில் அழைக்கின்றனர். இன்று மைனு என்ற இந்தப் பெயரே இதற்குப் பெரிதும் வழங்குகின்றது. சங்க நூல்களில் பூவை என்ற மைனு கூறப்படாதது போலவே வீட்டில் வளர்க்கும் பூனையும் கூறப்படாததைக் கவனிக்க வேண்டும். வீட்டில் வளர்த்த கிளி, மயில் ஆகியவை பற்றி அவைக்குரிய கட்டுரையில் விளக்கியுள்ளேன்.

சங்க நூல்களில் கோழியைப் பற்றிச் சில பாடல்கள் கூறியுள்ளன. காட்டுக் கோழியிலிருந்து வீட்டுக் கோழியைப் பிரித்துணரவே மனைக்கோழி, மனைவாழளகு என்று அழைத்துள்ளனர். மனையுறை கோழி என்றும் மனைச் செறிகோழி என்றும் அகநானூறு கூறுகின்றது. மனையில் வாழும் கோழிச்சேவலைத் தெளிவாக விளக்கியுள்ளனர்.

''வாரா வளவை யாயிழை கூர்வா
யழலகைந் தன்ன காமர் துதைமயிர்
மனையுறை கோழி மறனுடைச் சேவற்
போர்புரி யெருத்தம் போலக் கஞலிய
பொங்கழன் முருக்கி னொண்குரல் மாந்திச்
சிதர்சிதர்ந் துகுத்த செவ்வி வேனில்'' —அகம். 277

''மனையுறை கோழி யணற்றும் பன்ன
கவையொண் டளிர கருங்கால் யாஅத்து''
—அகம். 187

''தளிர்புரை கொடிற்றிற் செறிமயி ரெருத்திற்
கதிர்த்த சென்னிக் கவிர்ப்பூ வன்ன
நெற்றிச் சேவ லற்றம் பார்க்கும்'' —அகம். 367

''குவியிணர்த் தோன்றி யொண்பூ வன்ன
தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்''
—குறுந்தொகை. 107

நெருப்பு எரிவது போன்ற நெருங்கிய மயிரை உடைய கோழி என்று இதன் கழுத்து மயிர் குறிப்பிடப்பட்டுள்ளது. அகநானூற்றுப் பாடலில் (277) 'மறனுடைச் சேவல்' என்றும் அதற்குப் 'போர்புரி எருத்தம்' இருப்பதாகவும் கூறப்பட்டிருப்பதால் இந்தச் சேவல் போர்ச் சேவலாக இருக்கலாம். கழுத்து மயிர் இந்தச் சேவலுக்கு நெருப்பு. எரிவது போலச் சிவந்து காணப்படுவது இயற்கையே. இதன் கழுத்து போர்புரியும்போது சிலிர்த்துப் பொங்கித் தோன்றும். அது பொங்கியெழும் நெருப்புக் கதிர்போன்ற, முருக்கின் பூப்போல இருக்கும் என்று அகநானூறு கூறியுள்ளது. சேவல் கோழியின் கழுத்து சிவந்த நெருப்புக் கதிர்போல இடை இடையே மஞ்சள் நிறத்தில் தூவல்களுடன் (Male glossy deep orange with long yellowish neck hackles) இருப்பதைப் பறவை நூலார் கூறியுள்ளனர். கோழியின் தாடையின் கீழ் இலைபோன்று, இரு தோல்கள் சிவப்பு நிறத்தில் தொங்கும். இதை 'அணல் தாழ்பு' என்று அகநானூறு 187 ம் பாடல் கூறுகின்றது. இந்தச் சொல்லையே சில பறவைகளுக்குக் காணப்படும் இத்தகைய உறுப்பிற்கு (Wattles) பெயரிட்டழைக்கலாம். அணல் என்றால் தாடையாகும். தாடையிலிருந்து தாழ்ந்து இருப்பது 'அணல் தாழ்பு' என்று அழைக்கப்பட்டது. இந்த உறுப்பைக்குறிக்க மாமூலனாரே புதியதாகப் படைத்த கலைச் சொல்போல இந்தப் பெயர் தோன்றுகின்றது. அகநானூறு 367 ம் பாடலில் பரணர் கோழியின் இந்த உறுப்பையே கொடிறு என்று சொல்லுகிறார். கோழியின் கன்னத்திலிருந்து தொங்குவதால் கொடிறு என்றார்போலும். கோழியின் 'அணல் தாழ்பு' ஆச்சா மரத்தின் கவையான தளிர்போல இருந்ததாகக் கூறியுள்ளது அழகிய பொருத்தமான உவமையாகும். ஆச்சாவின் கவையான தளிர் போலக் கோழியின் அணல் தாழ்பு இரண்டு பிளவாக உள்ளது. வடிவிலும் இரண்டும் ஒத்தேயுள்ளன. கோழியின் அணல் தாழ்பு ஆட்டின் கழுத்திற்கடியில் தொங்கும் இரு சதைப்பாகம் போன்றது.

ஆட்டிற்குள்ளதை 'அதர்' என்றும் 'ஊமணி' என்றும் இலக்கியத்தில் அழைப்பர். ஊ என்பது தசையைக் குறிக்கும். தசையால் ஆன மணி ஊமணி எனப்பட்டது. சேவலின் தலையில் காணப்படும் கொண்டையைக் 'கதிர்த்தசென்னி' என்றும் அது கவிர்ப்பூ போல இருப்பதாகவும் அகநானூறு கூறியுள்ளது. கலியாண முருக்க மரத்தில் பூ (கவிர்) கோழிக்கொண்டை போலச் சிவந்து உருவிலும் ஒத்துக் காணப்படுகின்றது. காந்தளின் குவிந்த பூப்போலவும் சேவலின் கொண்டை இருந்ததாகக் குறுந்தொகை கூறியுள்ளது.

சங்க காலத்தில் கோழியைக் கூட்டில் வளர்த்து வந்தனர். 'கோழி சேக்கும் கூடுடைப்புதவு' என்று பெரும்பாணாற்றுப்படை கூறியுள்ளது. கோழியைக் காட்டுப் பூனை பிடித்துத் தின்னுதலைப்பற்றி, சங்க நூல்கள் கூறியுள்ளன.

> "மனையுறை கோழிக் குறுங்காற் பேடை
> வேலி வெருகின மாலை யுற்றெனப்
> புகுமிட னறியாது தொகுபுடன் குழீஇய
> பைதற் பிள்ளைக் கிளைபயிர்ந் தாஅங்"
> — குறுந்தொகை. 139

> "ஊர் முது வேலிப் பார்நடை வெருகின்
> இருட்பகை வெரீஇய நாகிளம் பேடை
> உயிர் நடுக் குற்றுப் புலாவிட் டரற்ற" —புறம். 326

பெட்டைக் கோழி வேலியில் பதுங்கி வந்த காட்டுப் பூனையைக் கண்டு தன் குஞ்சுகளைத் தொகுத்துக் கத்தியதையும், கோழியின் நாகிளம் பேடை வேலியில் காட்டுப் பூனையைக் கண்டு உயிர் நடுங்கி அரற்றியதையும் சங்க நூல்கள் கூறுவதைக் காணலாம். இச் செய்திகள் இயற்கையோடு இயைந்த உண்மைச் செய்திகளாகும். கோழியைப் போரிடப் பழக்கி வெற்றி விளையாட்டு நிகழ்த்துவது சங்க காலத்திலேயே இருந்திருக்கலாம்.

"உய்த்தனர் விடாஅர் பிரித்திடை களையார்
குப்பைக் கோழித் தனிப்போர் போல
விளிவாங்கு விளியி னல்லது
களைவோ ரிலையா னுற்ற நோயே''
—குறுந்தொகை. 305

குப்பைக் கோழியின் தனிப்போரைப்பற்றிப் பாடிய குறுந் தொகைப் பாட்டிலிருந்து கோழிப்போர் விளையாட்டு சங்க காலத்தில் இருந்திருப்பது தெரிகின்றது. கோழிப் போரில் உய்த்தலும், விடுதலும் பிரித்திடைக் களைதலும் ஆகிய நிகழ்ச்சிகள் இருந்தன. கோழிப் போரில் தானகப் போர் புரிவதும் தானக விலகுவதும் கிடையாது என்பதைச் சுட்டிக்காட்டியுள்ளார். ஆதலின் சங்க காலத்தில் கோழிப் போர் தமிழ் நாட்டில் இருந்திருக்க வேண்டும். பிற்கால நூலான புறப்பொருள் வெண்பாமாலை கோழிவென்றி யைப்பற்றிக் கூறியுள்ளது. கோழிப்போர் வித்தகர் ஆராய்ந்து நிறங்கண்டு விடுவர் என்று கூறப்பட்டிருக் கிறது. சொல்லுக்குச் சொல் வெல்லும், ஆமைக்கு ஆமை வெல்லும், தெங்குக்குத்தெங்கு வெல்லும் என்று நிறமறிந்து விடுதல் என விளக்கம் கூறப்பட்டுள்ளது. சொல், ஆமை, தெங்கு என்பன கோழிகளின் வகையைக் குறிக்கும் கோழி நூல் பரிபாடை என்று சொல்வர். 13 ஆம் நூற்ருண்டில் கன்னட ஆசிரியர் சோமேஸ்வரர் இயற்றியதாகக் கூறப் படும் வடமொழி நூலான 'மானசொல்லோசம்' என்ற (Manasollasa) நூலில் கோழி வகைகளும் கோழிப்போரும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இந்த நூலில் கூறப் பட்ட கோழிவகைகளில் ஆமையும் ஒன்று. மற்றவகை களாக சங்கு, குரு, நாரை, கழுகு, பாம்பு முதலிய சாதிப் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. இந்த நூலில் ரசம், அரம், ஆடி, ஐப்பசி, நாழி, ஆழாக்கு என்ற தமிழ் வழக்குச் சொற்கள் காணப்படுவதால் இது ஏதோ தமிழ் நூலின் மொழி பெயர்ப்போ என்று தோன்றுகின்றது. இக்காலத் திலும் திரண்டு பருமனை பெரிய சாதிக் கோழியை பொந் தாக் கோழியென்றும் மெலிந்து உயரமாக இருக்கும் கோழி

வகையைச் சிலுவைக் கோழியென்றும் அழைக்கின்றனர். சீவக சிந்தாமணியில் 'தோணிக்கோழி' (73) என்றொரு கோழி கூறப்பட்டுள்ளது. இது பிற நாட்டிலிருந்து கப்பலில் வந்த கோழியென்று உரை கூறப்பட்டுள்ளதைக் கவனிக்க வேண்டும். ஆதலால் சீவக சிந்தாமணி எழுதப்பட்ட காலத்திற்குமுன் தமிழ் நாட்டிற்குப் பிற நாட்டிலிருந்து கோழிகள் வந்து இறங்கின என்று தெரிகின்றது. தமிழ் நாட்டில் காணப்படும் வீட்டுக் கோழிகள் வட நாட்டில் மிகுதியாகக் காணப்படும் சிவப்பு காட்டுக்கோழியின் (Red Jungle fowl) வழியாக வந்தவை என்று கருதுகின்றனர். தமிழ் நாட்டில் காணப்படும் காட்டுக்கோழி (Grey Jungle fowl) வளர்ப்புக் கோழியாக மாறவில்லை என்று கருதுகின்றனர். உலகம் முழுவதும் உள்ள கோழியினங்களுக்குத் தாயினம் இந்தச் சிவப்புக் காட்டுக் கோழி என்று சில அறிவியல் அறிஞர்கள் கருதுகின்றனர். கி. மு. இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னரே அரப்பா நாகரிகத்தை நிலைநாட்டிய மக்கள் கோழியை வீட்டில் வளர்த்திருக்கிறார்கள் என்பதைக் கவனிக்க வேண்டும்.

சோழ அரசரின் தலைநகரான உறையூருக்குக் கோழி என்ற பெயர் உண்டு. இப் பெயர் தோன்றிய காரணத்தைச் சிலப்பதிகாரம் நாடுகாண் காதையில் சொல்லியுள்ளது. முறஞ்செவிவாரணமான யானையைப் புறஞ்சிறை வாரணமான கோழிவென்ற இடம் உறையூர் என்று சொல்லியுள்ளது. யானையை வென்ற கோழி தோன்றின விடம் வலிபுடைத்தென்று கருதி அவ் விடத்து அதன் பெயராலே சோழன் ஊர் காண்கின்றபொழுது சிறையும் கழுத்துமாக ஆக்கியவதனால் புறம்பே சிறையையுடைய கோழியென்றாயிற்று என அரும்பத உரையாசிரியர் பொருள் கூறியுள்ளார். சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ள செய்தி புராணச் செய்தி போலத் தோன்றினும் ஆராய்ந்து பார்த்தால் யானையைக் கோழி விரட்டிய செய்தி நம்பக்கூடியதேயாகும். வலிமையற்ற விலங்குகளும்

பறவைகளும்கூட சில சூழ்நிலைகளில் சில நேரங்களில் தங்களுக்கு உரிமையான நிலத்தைப் (Territory) பாது காக்கவும் தங்களுடைய குட்டி, குஞ்சுகளைப் பாதுகாக்கவும் வலிய எதிரிகளைத் தாக்கி விரட்டுவதுண்டு என்பதைச் சில ஆராய்ச்சியாளர் கண்டுள்ளனர். தாங்கள் வாழும் உரிமை நிலத்திற்குப் போரிடும் எளிய விலங்குகள் வலிய விலங்கு களைச் சில நேரங்களில் விரட்டுவதைக் கண்டு கூறி யுள்ளனர். இக்கருத்து தமிழ் இலக்கியத்திலும் மறைமுக மாகக் காணப்படுகின்றது. 'நெடும்புனலுள் வெல்லும் முதலை' என்றுவரும் குறள் வரிக்கு உரையெழுதிய பரிமே லழகர் 'எல்லாருந்தந்நிலத்து வலியரென்பது கூறப் பட்டது' என்று கூறினார். மாந்தர் உறை நிலத்தோடு ஒட்டல் அரிது (499) என்று வள்ளுவர் கூறி இருப்பதையும் காணலாம். உரிய உறை நிலத்தில் பிறர் வெல்லுவதரிது என்ற கருத்தை விலங்கு, பறவைகளுக்கும் ஓரளவு பொருத்தலாம்.

• சதுர்வேதி என்ற இந்தியத் தலைமை வனத்துறை அதிகாரி ஒரு முறை (M. D. Chaturvedi, Retired Chief Conservator of Forests) ஒரு காட்டில் கோழி யானையைத் துரத்திய காட்சியைக் கண்டதைக் கூறியுள்ளார். பிலிபிட் காட்டில் ஒரு கோழி தன்னுடைய குஞ்சுகளை வளர்த்த இடத்தில் வந்த யானையைத் திடீரெனத் தாக்கி விரட்டியது என்று கூறியுள்ளது. (of course all animals even the tiniest of God's creation will attack intruders in defence of their dear ones. At bifurcation in the Pilibhit forest once a mere hen suddenly charged at my elephant who had unknowingly transgressed the sacred precints of the chicks it was rearing) இதுபோன்று புலியைத் துரத்திக் குஞ்சுகளைப் பாதுகாத்த கோழியைப் பற்றியும் கூறியுள்ளார். இதுபோன்ற உண்மை நிகழ்ச்சியை அடிப் படையாகக் கொண்டுதான் கோழி என்ற ஊர்ப்பெயர் ஏற்பட்டிருக்கலாம். இத்தகையதொரு நிகழ்ச்சியைக் கண்ட சேரழ மன்னன் யானையைக் கோழி துரத்திய நிலம்

வலிமையுடைத்தென்று தான் உறைவதற்கேற்ற உறை யூரைத் தோற்றுவித்திருக்கலாம். சோழர் என்ற பெயரே கோழியர் என்ற பெயரின் மாற்றம் என்று கருத இட முண்டு. சோழியன் என்ற பெயரும் உள்ளது. பண்டைக் காலத்தில் மக்களினங்கள் பறவைகளையும் விலங்குகளையும் தங்களுக்குரிய சின்னங்களாக (Totems) வைத்துக்கொள் வது மரபாகும். சோழர்களுக்குக் கோழி அத்தகைய சின்னமாயிருந்தது. அதன் காரணமாக அவர்களுடைய குடிப்பெயர் வந்திருக்க வேண்டும். தென்னமெரிக்காவின் பழங்குடி மக்களான அசெட்டுக்கள் (Azetecs) ஒரு கழுகு கொடிய நச்சுப் பாம்பைத் தூக்கிச் சென்றவிடத்தைப் பார்த்து அது வலிமையுடைத்தென்று தங்கள் தலை நகரை அந்த இடத்தில் தோற்றினர் என்று வரலாறு கூறுகிறது. வேட்டை நாய் முயலைத் துரத்திச் சென்றுகொண்டிருக்கும் போது ஓரிடத்தில் முயல் அதை எதிர்த்து விரட்டிற்று. அந்த இடம் வலிமையுடைத்து என்று வேலூர் கோட் டையை அங்குக் கட்டினார்கள் என்று செவிவழிச் செய்தி வழங்குவதைக் கவனிக்க வேண்டும். இவற்றையெல் லாம் கவனிக்கும்போது கோழி என்ற உறையூர் தோன்றிய வரலாறு அரிதாக நடந்த ஓர் உண்மை நிகழ்ச்சி அடிப்படையாகவே இருக்கும் என்று கருதலாம்.

———

## பறவைகளின் வரிசை

| | தமிழ்ப் பெயர் | ஆங்கிலப் பெயர் | அறிவியற் பெயர் |
|---|---|---|---|
| 1. | நாரை | Grey Heron | Ardea cinerea (Linnaeus) |
| 2. | கொக்கு | Pond Heron | Ardeola grayii (Skyes) |
| 3. | குருகு | Grey Pelican | Pelicanus philippensis (Gmelin) |
| 4. | கருங்கால் வெண்குருகு | Large Egret | Egretta alba (Linnaeus) |
| 5. | வெள்ளாங்குருகு | Medium Egret | Egretta indermedia (Linnaeus) |
| 6. | சிறு வெள்ளாங்குருகு | Little Egret | Egretta garzetta (Linnaeus) |
| 7. | அன்றில் | Night Heron | Nycticorax nycticorax (Linnaeus) |
| 8. | பெருநாரை(அ)போதா | Lesser Adjutant Stork | Leptoptilos lubius (Gmelin) |
| 9. | பெருங்குருகு | Blacknecked Stork | Xenorhynchus asiaticus (Latham) |
| 10. | நத்துநாரை | Open-billed Stork | Anastomus oscitans (Boddaert) |
| 11. | செவ்வரி நாரை | Painted Stork | Ibis leucocephalus (Pennant) |
| 12. | செங்கால் நாரை | The white Stork | Ciconia ciconia (Linnaeus) |
| 13. | பூநாரை | Flamingo | Phoenicopterus roseus (Pallas) |
| 14. | அன்னம் | Wild Ducks | Anatidae |
| 15. | சில்லை | Whistling Teal | Dendrogyna Javanica (Horsefield) |
| 16. | பூணி | Comb Duck | Sarkidiormis melanotos (Pennant) |
| 17. | கோகம் | Brahminy Duck | Tadorna ferruginea (Pallas) |
| 18. | நீர்க்கோழி | The Indian Moorhen | Gallinula chloropus (Linnaeus) |
| 19. | கம்புள் | The white-breasted waterhen | Amaurornis phoenicurus (Pennant) |
| 20. | நீலக்கோழி | The purple Moorhen | Propyrio propyrio (Linnaeus) |
| 21. | தாமரைக்கோழி | Pheasant-tailed Jacana | Hydrophasianus chirurgus (Scopoli) |
| 22. | உள்ளு | The Common Snipe | Capella gallinago (Linnaeus) |

| தமிழ்ப் பெயர் | ஆங்கிலப் பெயர் | அறிவியற் பெயர் |
|---|---|---|
| 23. ஊரல் (அ) குளிவை | Little Grebe | Podiceps ruficollis (Pallas) |
| 24. சிறுவெண்காக்கை | Seagull | Larus brunnicephalus or ridibundus (Jerdon) |
| 25. நீர்க்காக்கை | The little Cormorant | Phalacrocorax niger (Vieillot) |
| 26. சிரல் | The Common Kingfisher | Alcedo atthis (Linnaeus) |
| 27. கணந்துள் | The Red wattled or yellow wattled Lapwing | Vanellus indicus or malabaricus (Boddaert) |
| 28. மனையுறைப்புறவு (அ) மாடப்புறா | Blue Rock Pigeon | Columba livia (Gmelin) |
| 29. மணிப்புறா | The spotted Dove | Streptopelia chinensis (Scopoli) |
| 30. பொறிவரிப்புறா | The little Brown Dove | Streptopelia Senegalensis (Linnaeus) |
| 31. புன்புறா (அ) கானப்புறா | The Indian Ring Dove | Streptopelia lecaocto (Frvialdoszky) |
| 32. போகில் | Southern Imperial green Pigeon | Ducula aenea pussilla (Blyth) |
| 33. கானக்கோழி | Grey Jungle Fowl | Gallus sonneratii (Temminck) |
| 34. இதல் | The Red Spurfowl | Galloperdix spadicea (Gmelin) |
| 35. குறும்பூழ் | The common or grey Quail | Coturnix coturnix (Linnaeus) |
| 36, சிவல் | Grey Partridge | Francolinus pondicerianus (Gmelin) |
| 37. மயில் | The common Peafowl | Pavo cristatus (Linnaeus) |
| 38. குயில் | Indian Koel | Eduynamys scolopacea (Linnaeus) |
| 39. குக்கில் | The crow pheasant | Centropus sinensis (Stephens) |
| 40. காரி | The Black Drongo or king crow | Dicrurus adsmilis (Bechstein) |
| 41. செந்தார்க்கிளி | Lose-ringed Parrot | Psittacula krameri (Scopoli) |
| 42. வானம்பாடி | The small Indian Sky Lark | Alauda gulgula (Franklin) |

| தமிழ்ப் பெயர் | ஆங்கிலப் பெயர் | அறிவியற் பெயர் |
|---|---|---|
| 43. முதுக்குறை குருவி | The common Weaver Bird | Ploceus philippinus (Linnaeus) |
| 44. மனையுறை குருவி | The house Sparrow | Passer domesticus (Linnaeus) |
| 45. மலையுறை குருவி | The Alpine swift and the Munia | Apus melba (Linnaeus) and Lonchura (Linnaeus) |
| 46. காக்கை | The House Crow | Corvus splendens (Vieillot) |
| 47. கானக்காக்கை | The Jungle crow | Corvus macrorhynchos (Wagles) |
| 48. கூகை | The Barn or Screech Owl | Tyto alba (Scopoli) |
| 49. குராஅ | The collared scops Owl | Otus bakkamoena (Pennant) |
| 50. குடிஞை | The Indian great horned Owl | Bubo bubo (Linnaeus) |
| 51. [illegible]மன் | The Brown Fish Owl | Bubo zeylensis (Gmelin) |
| 52. ஆண்டலை | South Indian Brown Hawk-Owl | Ninox scutulata hirsuta (Temminck) |
| 53. ஆந்தை | The spotted Owlet | Athene brama (Temminck) |
| 54. எழால் | Shaheen Falcon | Falco peregrinator (Sundvall) |
| 55. சிற்றெழால் | Kestrel | Falco tinnunculus or objugatus (Linnaeus) |
| 56. குடுமி எழால் | The Indian crested Hawk-Eagle | Spizaetus cirrhatus (Gmelin) |
| 57. கழுகு | The Tawny-Eagle | Aquila rapax (Temminck) |
| 58. பருந்து | Black-winged Kite | Elanus caeruleus (Desfontaines) |
| 59. எருவை | The Black Vulture | Torgos calvus (Scopoli) |
| 60. பாறு | The white-backed Vulture | Gyps bengalensis (Gmelin) |
| 61. பொகுவல் | Indian long-billed Vulture | Gyps indicus (Scopoli) |
| 62. மனைக்கோழி | The Common Fowl | Gallus gallus murghi (Temminck) |

# மேற்கோள் நூல்கள்

## (தமிழ்)

1. அகநானூறு (இராஜகோபாலய்யர் உரை, கழக உரை)
2. புறநானூறு (பழைய உரை, கழக உரை)
3. குறுந்தொகை
4. நற்றிணை (பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரை)
5. நற்றிணை (ஔவை துரைசாமிப் பிள்ளை உரை)
6. ஐங்குறு நூறு
7. பதிற்றுப்பத்து
8. சிறுபாணாற்றுப்படை
9. பெரும்பாணாற்றுப்படை
10. பொருநராற்றுப்படை
11. பட்டினப்பாலை
12. மதுரைக்காஞ்சி
13. நெடுநல்வாடை
14. மலைபடுகடாம்
15. திருமுருகாற்றுப்படை
16. கலித்தொகை (அனந்தராமய்யர் பதிப்பு)
17. தொல்காப்பியம் : சொல்லதிகாரம் : சேனாவரையர் உரை
18. தொல்காப்பியம் : சொல்லதிகாரம் : நச்சினார்க்கினியர் ,,
19. தொல்காப்பியம் : சொல்லதிகாரம் : இளம்பூரணர் உரை
20. தொல்காப்பியம் : பொருளதிகாரம் : பேராசிரியர் உரை
21. தொல்காப்பியம் : பொருளதிகாரம் : இளம்பூரணர் உரை
22. ஐந்திணை எழுபது
23. ஐந்திணை ஐம்பது
24. திணைமொழி ஐம்பது
25. திணைமாலை நூற்றைம்பது
26. கைந்நிலை
27. சிலப்பதிகாரம் (அரும்பதவுரை, அடியார்க்கு நல்லார் உரை)
28. மணிமேகலை
29. பெருங்கதை

30. நாலடியார்
31. பழமொழி நானூறு
32. சிறுபஞ்சமூலம்
33. திரிகடுகம்
34. முத்தொள்ளாயிரம்
35. இறையனார் அகப்பொருள்
36. தேவாரம் (சம்பந்தர், அப்பர்)
37. கல்லாடம்
38. நன்னூல் : மயிலைநாதர் உரை
39. நன்னூல் : சங்கரநமச்சிவாயர் உரை
40. சேந்தன் திவாகரம்
41. பிங்கலந்தை
42. சூடாமணி
43. திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகம் (காரைக்காலம்மையார்)
44. கலிங்கத்துப்பரணி
45. திருவாய்மொழி ஈடு
46. திருப்பாவை
47. பெரிய திருமொழி
48. நீலகேசி
49. கம்பராமாயணம்
50. மேருமந்தரபுராணம்
51. தகடூர் யாத்திரை
52. திருவிளையாடற்புராணம்
53. புறத்திரட்டு
54. பெருந்தொகை
55. புறப்பொருள் வெண்பாமாலை
56. பரதசாத்திரம் (தமிழ்)
57. இரகுவம்சம் (தமிழ்)
58. பஞ்சதந்திரம் (தமிழ்)
59. கருணீகர் புராணம்
60. பல்லவர் செப்பேடுகள் முப்பது : தமிழ் வரலாற்றுக் கழகம்
61. முன்னூர் நாட்டுப்பாடல்கள் : வித்தியானந்தன்

# BIBLIOGRAPHY

## (ENGLISH)


1. Birds of South India —H. R. Baker and C. M. Inglis
2. A popular Handbook of Indian Birds —Hugh Whistle.
3. Birds of Travancore and Cochin—Salim Ali
4. Indian Hill Birds —Salim Ali
5. Common Birds —Salim Ali and Lacoeq Futehally
6. Handbook of the Birds of India and Pakistan —Salim Ali S. Dillon Ripley O. U. P. 1969- Volumes 1 to 6
7. The Book of Indian Birds --Salim Ali
8. A Guide to the Birds of Ceylon—G. M. Henry
9. Birds in Indian Garden —Sir Malcolm Macdonald
10. A Bird Photographer in India —E. H. Lowther
11. Birds of the World —Oliver L. Austin
12. Dravidian Etymological Dictionary—T. Burrow and M. B. Emeneau
13. Collected papers of Dravidian Linguistics. —T. Burrow
14. Malayalam-English Dictionary —Dr. Gundert

15. Kittel's Kannada-English Dictionary (Four Volumes) —Madras University
16. Tulu-English Dictionary —Madras University
17. Tamil Lexicon (6 volumes)—Madras University
18. Myths of Middle India —Dr. Verrier Elwin
19. Sema Nagas —I. H. Hutton
20. Tamil-Brahmi Inscriptions —Iravatham Mahadevan
21. Manasollasa (English translation)
22. Jungle Lore —Jim Corbett
23. Rural Science —T. Subramaniyam
24. The passing of the Forest Gods —Augustus Somerville
25. This is the Jungle —Kenneth Anderson
26. Hundred Beautiful trees of India —Charles Mecann.

